# ஆவடுதுறை அரனார்

திருவாவடுதுறை

அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய

அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

## திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா மலர்



அருள்மிகு அணைத்தெழுந்தநாயகர்


திருவாவடுதுறை ஆதீனம்

வெளியீடு எண்: 617

26.01.2011

சலுகை விலை ரூ.100/-

உ

சிவமயம்

# ஆவடுதுறை அரனார்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்
திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான

**திருவாவடுதுறை**

**அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய**

**அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்**

## திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா மலர்







திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குருமகாசன்னிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**
அருளாணையின்வண்ணம் வெளியிடப்பெற்றது.

**திருவாவடுதுறை ஆதீனம்**

26.01.2011

## நூல் விபரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஆவடுதுறை அரனார் |
| பொருள் | : | விழா மலர் - கட்டுரைத் தொகுப்பு |
| வெளியீடு | : | திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை |
| வெளியீட்டு எண் | : | 617 |
| வெளியீட்டு நாள் | : | 26.01.2011 |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| பிரதிகள் | : | 500 |
| பக்கம் | : | 240 + 32 |
| மலர் அளவு | : | டிம்மி 1/4 |
| தாள் | : | 13.7 சேசாயி |
| சலுகை விலை | : | ரூ.100/- |
| பைண்டிங் | : | பகுதித் தையல் |
| அச்சகம் | : | கல்யாணி கம்ப்யூட்டர் பிரஸ்,<br>236, காமராஜ் சாலை, கும்பகோணம். |

உ
சிவமயம்



## சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின்வண்ணம் இந்நூலைத் தயாரித்தளித்த மலர்க்குழுவினர்

*மேலாய்வு*

சீர்மன்னு **சுப்பிரமணியத் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள்,
திருவாவடுதுறை ஆதீனம்.

*பதிப்பாசிரியர்*

சிவஞான சுவாமிகள் அடிப்பொடி
ஆதீனப்புலவர் **சு.குஞ்சிதபாதம்** எம்.எஸ்ஸி.,பி.எட்.,அவர்கள், திருவாவடுதுறை.

*துணைப் பதிப்பாசிரியர்*

முனைவர் **ப.சுவாமிநாதன்** எம்.ஏ.,பிஎச்.டி., அவர்கள்,
தமிழாசிரியர் தி.ஆ.மேனிலைப்பள்ளி, திருவிடைமருதூர்

*உறுப்பினர்கள்*

திரு. **மு. ஞானமூர்த்தி** எம்.ஏ.,பி.எட்., தலைமையாசிரியர்.
திரு. **தி.செந்தில் குமார்** பி.ஏ.,பி.எட்., தலைமையாசிரியர்.
திரு. **தே. சுடலைமுத்து** பி.ஏ.,பி.எட்., தலைமையாசிரியர்.
திரு. **ப.மகாலிங்கம்** எம்.ஏ.,பி.எட்.,
திரு. **தியாக. கனகசபை** எம்.ஏ.,எம்.எட்.,
திரு. **சே. ஜெயசெல்வன்** எம்.ஏ.,பி.எட்.,

*ஆலோசகர்கள்*

ஆதீனமுதுபுலவர், **ஆதி.முருகவேள்** எம்.ஏ., அவர்கள், திருச் சிராப்பள்ளி.
**புலவர் சி. மகாலிங்கம்** எம்.ஏ., பி.எட்., அவர்கள், திருவிடைமருதூர்.
ஆகம சிற்பக் களஞ்சிய கலைமணி. **சு.நாராயணசுவாமி** எம்.ஏ., எம்.எட்., அவர்கள், திருவிடைமருதூர்.

# குருமரபு வாழ்த்து



கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குரு நமச்சிவாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– காஞ்சிப்புராணம்
**மாதவச் சிவஞான சுவாமிகள்**



திருவாவடுதுறை ஆதீன குருமுதல்வர்

அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

# பொருளடக்கம்



# அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள் வரலாறு



உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புற வேண்டும் என்ற பரந்தமனம் படைத்தது ஆசாரியப் பரம்பரை. திருக் கயிலையில் உண்டாகிய இப்பரம்பரை காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப் பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆசாரியர்களில் அருள்திரு உமாபதி சிவாசாரியரிடம் உபதேசம் பெற்ற அருள்திரு அருள்நமச்சிவாயரிடம் தீக்கை பெற்றவர் அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிடேகமும், உபதேசமும், ஆசாரிய பரம்பரையைப் பாதுகாத்துவரத் திருஆணையும் பெற்று, திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் அருள்திரு நமச்சிவாயமூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் நாகை மாவட்டம் மயிலாடுதுறைக்கு மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மூவலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பது. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்குவேளூரில் (வைத்தீசுவரன் கோயில்) அருள்மிகு வைத்தியநாதப் பெருமானை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஒரு சிவாசாரியார் திருமேனி தாங்கி வந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய பேறுடையவர்கள்.

தல யாத்திரையாகத் தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த அருள்திரு சித்தர்சிவப்பிரகாசர், சிறிய பெருந்தகையாக விளங்கிய வைத்தியநாதரைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளையும் திருவருட்குறிப்பையும் உணர்ந்து, பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞானதீக்கை புரிந்து நமசிவாயம் என தீக்கை பெயர் அருளி குரு பரம்பரையில் தாம் பெற்ற சிவஞான உபதேசத்தை அருளிச் சிவஞான ஆனந்த அனுபவம் கைவருமாறு அனுக்கிரகம் செய்தார்கள். குருமரபில் தாம் பெற்ற அருள்திரு உமாபதி சிவாசாரியர் பூசை செய்த அருள்மிகு ஞான மாநடராசப் பெருமானையும், தம்முடைய ஆன்மார்த்த மூர்த்தியையும் பூசித்து வரும் அதிகாரத்தையும் வழங்கினார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகீறி அமைக்கப்பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபு தழைக்கச் சிவஞான உபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளினார்கள்.

அருள்திரு நமச்சிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின்வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து கொண்டு, தம்பால் வரும் பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் அருளி சுத்தாத்துவிதச் சைவ சித்தாந்தப் பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக வீற்றிருந்து சுத்தாத்துவிதச் சித்தாந்த நன்மரபு தழைக்கச் செய்த அருள்திரு நமச்சிவாயமூர்த்திகள், தங்கள் குரு சந்தானம் வளர்ந்தோங்கி வர, அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிடேகம் செய்து துவிதீய ஆசாரியராக (இளைய சன்னிதானம்) அமைத்து, ஒரு தை மாதம் அசுவதி நன்னாளில் சித்தாந்த சுத்தாத்துவித முத்தி அடைந்தருளினார்கள். ஆதீனக் குருமுதல்வர் ஞான சமாதித் திருக்கோயிலில் நாள்தோறும் காலை அபிடேக ஆராதனைகளும் இரவு தீபாராதனையும் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் அசுவதி நட்சத்திரத்தில் குரு மூர்த்திகளுக்குச் சிறப்பு வழிபாடுகளும் தோத்திர நூல்கள் பாராயணமும் செய்யப்பட்டு வருகின்றன.

ஆண்டு தோறும் தை மாதம் அசுவதி நன்னாளில் (மகரத்தலைநாள்) ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கும் **அருள்திரு நமசிவாய மூர்த்திகளின்** குருபூசை விழாக் கொடியேற்றத்துடன் துவங்கி தினமும் காலை, இரவு இருவேளைகளிலும் அபிடேக ஆராதனைகளோடு பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

மேலும் அருள்திரு நமச்சிவாயமூர்த்திகளின் திருமேனியானது அவதாரத் தலமாகிய மூவலூர் (அவதார இல்லம்), காசி கண்ணப்பசாமி மடம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில், திருநெல்வேலி சந்தி விநாயகர் கோயில், சுசீந்திரம், மதுரை கிளை மடங்கள், பொதிகையடி குருபூசை மடம், காசிதர்மம் ஆகிய தலங்களில் பிரதிட்டை செய்யப் பெற்று, பூசைகளும் நடைபெற்று வருகின்றன. தை அசுவதி நன்னாளில் மேற்கூறிய தலங்களில் சிறப்பு ஆராதனைகளும் மாகேசுவர பூசைகளும் நடைபெறுகின்றன.

இவ்வாறாக அருள்திரு நமச்சிவாயமூர்த்திகளின் வழிவழி வருகின்ற, அபிடேக பரம்பரையில், இந்நாளில் இவ்வாதீனத்து 23ஆவது குரு மகாசன்னிதானமாகச் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் சித்ராசன சிவஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்து வருகின்றார்கள்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குரு மகாசன்னிதானம்
சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக
பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்
திருவாவடுதுறை - 609 803. நாகை மாவட்டம்.
தொலைபேசி எண்: 04364 - 232021

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்





# அருள் வாழ்த்துரை

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க! கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க!

விடைதரு கொடியர் போலும் வெண்புரி நூலர் போலும்
படைதரு மழுவ ர் போலும் பாய்புலித் தோலர் போலும்
உடைதரு கீளர் போலும் உலகமும் ஆவர் போலும்
அடைபவர் இடர்கள் தீர்க்கும் ஆவடு துறையனாரே. -நான்காந்திருமுறை

திருவருட் பாரம்பரியம் மிக்கதும், குருவருட் பாரம்பரியம் மிக்க நமது ஆதீனத் தலைமை மடம் வீற்றிருக்கும் சிறப்புப் பெற்றதுமான திருவாவடுதுறைத் திருத்தலத்தில் விளங்குவதும், நமது ஆதீனத் திருக்கோயிலுமாகிய அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலுக்குத் திருவருளாலும், குருவருளாலும் நிகழும் விக்ருதி ஆண்டு தைத் திங்கள் 12-ஆம் நாள் (26.1.2011) அன்று திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழாவானது சிறப்பாக நடைபெற உள்ளது.

அநாதி முத்திச் சேத்திரம் என்று போற்றப்பெறும் நமது ஆவடுதுறைத் தலமானது சிவஞானப் பேற்றுக்குரிய சிறப்பான தலமாகும். மேலும் உலவாக்கிழிப் பதிகம் பாடிய கழுமலவூரர்க்கு அம்பொன் ஆயிரம் வழங்கிய அற்புதத் தலம். இப்பதிகத்தினை ஈடுபாட்டுடன் ஓதுவோர் பொருட்செல்வம் பெற்றுவருதலை இக்காலத்திலும் அறியமுடிகின்றது. மேலும் அணைத்தெழுந்த நாதரை வழிபடுவோர் குடும்பப் பிரச்சனைகள் தீர்ந்து இனிதான இல்லற வாழ்வைப் பெறுவர். புத்திரத் தியாகேசரைப் போற்றுவோர் நன்மக்கட்பேறு பெற்று நாடுபோற்ற வாழ்வர். இவ்வாறு முத்தித் தலமாக விளங்கியே இம்மை வாழ்வுக்குத் தேவையான எல்லாப் பேறுகளையும் நமது திருத்தலம் வழங்கி வருதல் நினைந்து போற்றுதற்குரியது.

திருவாவடுதுறைத் திருத்தலத்தின் பெருமைகளை எவ்வளவு அறிந்திருந்தாலும் அதனுடைய மாட்சிமையினை உள்ளவாறு உணரவேண்டுமென்றால் அஃது அந்தரங்க பக்தியுடையோருக்கே இயலும் என்று திருவாவடுதுறைப் புராணம் கூறுகின்றது. (பாடல் : 62) ஒரு தாவரம் நன்கு வளர அதன் வேருக்கு நீரூற்ற வேண்டும். அதுபோல உலகம் செழிக்க வேண்டுமாயின் உலகிற்கு ஆதாரமாக விளங்கும் திருக்கோயில்கள் நன்முறையில் பேணப்பெற வேண்டும். திருக்கோயில்களில் நாள்வழிபாடும் சிறப்பு வழிபாடும் நியமமாக நடைபெற்று வருவதன் மூலம் ஊரும் உலகமும் செழிப்படையும். திருக்கோயில் திருப்பணிகளில் பங்குபெற்றுத் தம்மால் இயன்ற கைங்கர்யங்கள் செய்வோர் வாழ்வில் எல்லாவகையான வளங்களையும் பெறுவர். ஆகையால் திருப்பணிகளில் பங்கு பெறுதலை பெறற்கரிய பேறாகக் கருத வேண்டும். **ஈசனார் விழவு காண்டற்(கு) இப்பதி தன்னில் வந்து தேசுற இயன்ற மட்டும் செய்பணி செய்து போற்றி ஆசையாற் களித்து வாழ்வோர் அநேகசன் மத்திற் செய்த காசுறு பாவம் முற்றும் கனலுறும் விறகாம் அன்றே** என்று திருவாவடுதுறைப் புராணம் கூறுதல் அறியத்தக்கது. (209) திருக்குடப் புனித நன்னீராட்டு விழா சிறக்கத் திருத்தொண்டுகள் புரிந்துள்ள அன்பர்களுக்கும், விழாவைத் தரிசித்துப் பயன்பெறும் மக்கள் யாவருக்கும் இருமை வளங்களும், சிவபக்தி சிவஞானமும் சித்திக்க வேண்டுமென நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடிமலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

உ
குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26வது குருமகா சன்னிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**
**பரமாசாரிய சுவாமிகள்**



தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) - 609 001.

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

# ஆசியுரை

சமய உலகில் புகழ்மிக்க திருத்தலம் திருஆவடுதுறை. திருமூலதேவர் படர் அரசின் கீழ் சிவயோகத்தில் இருந்து திருமந்திரம் அருளிய தலம். திருஞான சம்பந்தர் தமது தந்தையார் வேள்வி செய்யும் பொருட்டு இறைவனைப்பாடி ஆயிரம் பொற்காசு பெற்று அளித்தார் என்பதை அப்பர் தாம் அருளிய தேவாரத்தில்,

*"மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்*
*பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்*
*காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கம் பொன்*
*ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே"*

எனக் குறிப்பிடுகின்றார். சமய உலகில் திருஞான சம்பந்தர் பொன் பெற்று தமது தந்தையார்க்களித்தற் பொருட்டு அருளிய "இடரினும் தளரினும்" என்ற திருப்பதிகம் இத்தலத்தில் அருளப் பெற்றது. பல்லாயிரவர் இத்திருப்பதிகத்தை ஓதிப் பயனுறுமாறு விளங்குகின்றது. இவ்வரலாற்றை ஞானசம்பந்தர் புராணத்தில் தெய்வச் சேக்கிழார்,

*"நச்சியின்தமிழ் பாடிய ஞானசம்பந்தர்*
*இச்சையே புரிந்து அருளிய இறைவரின் அருளால்*
*அச்சிறப்பருள் பூதம்முன் விரைந்தகல் பீடத்து*
*உச்சி வைத்தது பசும்பொன் ஆயிரக்கிழி ஒன்று"*

என்று அருளிச் செய்கின்றார். அதனால் இத்தலத்தில் விளங்கும் தியாகராஜ மூர்த்திக்கு சுவர்ணத் தியாகர் எனப் பெயர் வழங்குகிறது.

ஒருமுறை அம்பிகை சிவபெருமான் ஆணையால் பசுவடிவம் பெற்றார் என்றும், அவர் பசு வடிவத்துடன் வந்து இங்குள்ள தீர்த்தத்தில் நீராடி அப்பசு வடிவம் நீங்கப் பெற்றமையால் இத்தலத்திற்கு கோமுத்தி, கோகழி என்னும் பெயர்கள் வழங்கலாயிற்று என்றும் தலபுராணம் கூறுகிறது. அம்பிகை தன் சுயரூபம் பெற்ற காலத்து அப்பிராட்டியைச் சிவபெருமான் அணைத்தெழுந்தார் என்பதும் புராண வரலாறு. அதற்கு அடையாளமான அணைத்தெழுந்த நாயகர் என்ற திருப்பெயரோடு ஒரு மூர்த்தி திருஉருவம் இத்திருக்கோயிலில் விளங்குகின்றது. அத்திரு உருவம் பெற்ற மூர்த்தி உற்சவத்தில் தீர்த்தம் கொடுக்க எழுந்தருளுகின்றார்.

இத்திருத்தலத்தில் அரச மரங்கள் பல உள்ளன. அரசு தான் இத்தலத்தின் தல விருட்சம். இத்தல மரக்கிளைகள் படர்ந்து வளர்ந்து நிழல் தருவதால் படர்அரசு, மரங்களின் ராஜா எனக் கூறப்படும். அதன்கீழ் இருந்து தவம் செய்பவர் எளிதில் சிவஞானம் பெறுவர் எனக் கூறப்படுவதுண்டு. அதனால் திருமூலர் இத்தலத்தை அடைந்து அதன்கீழ் தவம் இயற்றி திருமந்திரம் அருளினார் என அறிகின்றோம். ஆலயத்தினுள் திருமூலர் கோயில் ஒரு குகையைப் போன்ற அமைப்பில் மேற்குப் பிரகாரத்தில் விளங்குகிறது. இத்தலத்தில் விளங்கும் நந்தி மிகப்பெரியது. கருங்கற்கள் பலவற்றால் ஆனது.

திருமூலர் குருபூஜை நாளில் இவ்வாலயத்தில் விசேஷ பூஜை நிகழ்ந்து வருகிறது. ஆதீனத் திருமடத்தில் போகமுனிவரின் சீடரும் திருவிசைப்பா ஆசிரியருமான திருமாளிகைத்தேவர் ஆலயம் ஸ்ரீநமச்சிவாயமூர்த்தி ஆலயத்திற்கு அருகில் வடபால் விளங்குகின்றது.

இத்தலத்தில் சிவபிரான் நிகழ்த்தியருளிய விசேடங்கள் பலவாகும். அவற்றை இத்தல வரலாறு விரிவாகக் கூறுகிறது.

போகர் முதலிய சித்தர்களுக்கும் நவகோடி சித்தர்களுக்கும் அவர்கள் விரும்பிய வண்ணம் அட்டமா சித்திகளையும் பிறவற்றையும் இங்குள்ள இறைவன் அருளினார் எனவும் அதனால் இத்தலம் நவகோடி சித்தர்புரம் என வழங்கப்படுகிறது எனவும் இத்தல வர்லாறு கூறுகிறது.

திருவிடைமருதூரை மூலத்தான மகாலிங்கத் தலமாகவைத்து அதனைச் சுற்றிப் பரிவாரத் தலங்களாக ஒன்பது உள்ளன என்றும் கூறுவதுண்டு. அவை :-

1. விநாயகர் - திருவலஞ்சுழி
2. முருக்ன் - சுவாமிமலை
3. நடராஜர் - தில்லை
4. நவக்கிரகம் - சூரியனார்கோயில்
5. தக்ஷிணாமூர்த்தி - ஆலங்குடி
6. பைரவர் - சீகாழி
7. நந்தி - திருவாவடுதுறை
9. சோமஸ்கந்தர் - திருவாரூர்
10. சண்டேசுவரர் - திருவாப்பாடி

இவ்வரிசையில் நந்தித்தலமாக திருவாவடுதுறையைக் கூறுவர். திருவாவடுதுறை ஆலய மதிற்சுவர்களில் நந்தி உருவங்கள் இல்லை. இங்கு வாழ்ந்த திருமாளிகைத்தேவர் மதில் நந்திகளையெல்லாம் உயிர்ப்பெற்று எழச்செய்து பகையரசர்மேல் ஏவினார் என தலவரலாறு கூறுகிறது. இன்னோரன்ன பல அற்புத வரலாறுகளைக் கொண்டு விளங்கும் திருவாவடுதுறை திருக்கோயிலை மீண்டும் புதுப்பித்தும் தேவையான திருப்பணிகளைச் செய்வித்தும் அழகுறுத்தி மகாகும்பாபிஷேகம் செய்விக்கும் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களை சைவநன்மக்கள் போற்றக் கடமைப்பட்டவர்கள் ஆவர்.

காலமறிந்து ஆலய நற்பணிகளைப் பலரும் போற்ற உடனுக்குடன் செய்துவந்து மகாகும்பாபிஷேகம் செய்விக்கும் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாச் சன்னிதானம் அவர்கள் திருவாவடுதுறை திருக்கோயில் பணிகளை நிறைவுபெறப் புதுப்பித்து மகாகும்பாபிஷேகம் செய்விப்பது மிக்க மகிழ்வைத் தருகிறது. சைவ உலகம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கட்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது.

மகாகும்பாபிஷேகம் இனிதே நடைபெறவும் மகாகும்பாபிஷேகம் பணிகளில் ஈடுபடும் பக்தர்கள், வந்து தரிசிக்கும் அன்பர்கள் எல்லா நலங்களோடு நீடு வாழவும் நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீசெந்தமிழ்ச் சொக்கன் திருவருளையும் அருள்மிகு ஒப்பிலா முலையம்மையையும், அருள்மிகு மாசிலாமணியீசர் திருவருளையும் சிந்திக்கின்றோம்.

62 – 2

திருக்கயிலாய பரம்பரை ஸ்ரீ கந்த பரம்பரை ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் ஆதீனம்
27ஆவது குருமகாசன்னிதானம்

**ஸ்ரீ ல ஸ்ரீ சங்கரலிங்க தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

சூரியனார்கோயில்.

# ஆசியுரை



சிவமயம்

*உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை ஆவர் போலும்*
*செற்றவர் புரங்கள் மூன்றும் தீழைச் செறுவர் போலும்*
*கற்றவர் பரவிஏத்தக் கலந்து வந்து அலந்து பாடும்*
*அற்றவர்க்கு அன்பர் போலும் ஆவடுதுறை யனாரே*

*- திருநாவுக்கரசு நாயனார்*

இவ்வுலகில் தோன்றிய ஆன்மாக்கள் இன்பத்தையே அவாவுகின்றன. இவ்வின்பம் நிலைத்த இன்பம், நிலையா இன்பம் என இருவகைப்படும். நிலைத்த இன்பம் என்பது பிறவாப் பேரின்பமாகும். நிலையா இன்பம் என்பது இவ்வுலகில் காணப்படும் பொருள்களால் வரும் இன்பம். இவ்வின்பம் நிலையா இன்பமாக அமையும். எல்லாம் வல்ல பரம்பொருள் ஆன்மாக்கள் வினைவழிபட்டே இன்ப துன்பங்களை நுகரச் செய்கின்றார். இவ்இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதி, பரம்பொருளே மெய்பொருள் என்று சிந்தித்து ஒழுகும் ஆன்மாக்கள் நிலைத்த இன்பத்தைப் பெற முடியும்.

ஆலயம் என்பது ஆ+லயம் ஆன்மா லயித்திருப்பது என்பது பொருள். ஆன்மா லயித்திருக்கும் இடம் திருக்கோயில் ஆகும். அதனால் தான் நம் முன்னோர் திருக்கோயில் வழிபாட்டை முதன்மையாகக் கருதினர். திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபட்டு இறைவனை அடைகின்றவர்களுக்கு அன்பராய் விளங்குகின்றார் அதனால் நாவுக்கரசர் பெருமான்,

*"அடைந்தவர்க்கு அன்பர் போலும் ஆவடுதுறை யனாரே*
*அற்றவர்க்கு அன்பர்போலும் ஆவடுதுறை யனாரே"* என்றருளுகின்றார்.

பசு - உயிர், பதி - இறை, பாசம் - தளை இறையை வணங்கி வழிபட உயிர்கள் முக்தியடையும் என்றும் பொருள் பட கோமுத்தி என்றும் இறைவி பசு உருவெடுத்து வழிபட்டு முக்தி பெற்றதால் கோமுத்தி என்றும் திருவாவடுதுறைத் திருத்தலம் பெயர் பெறும். திருவாவடுதுறை ஆதீனம் 22-ஆவது குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் இத்திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்று குடமுழுக்கு நடந்துள்ளது.

தற்பொழுது திருவாவடுதுறை ஆதீனத்தில் 23ஆவது சீர்-வளர்-சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் திருப்பணிகள் செவ்வனே நிறைவேற்றப்பெற்று 26.01.2010 அன்று குடமுழுக்கு விழா நடைபெறவுள்ளது இக்குடமுழுக்குவிழா நாளில் விழாமலர் வெளியிடயிருப்பது மகிழ்ச்சிக்குரியது விழாமலர் பக்தி மணம் பரப்ப நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு காளத்தியெம்பெருமான் திருவடிமலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சிவபெருமான் பேரருள்



தொலைபேசி : 0452 : 4377116
4381005



புனித மிக்க

**மதுரை ஆதீனம்**

**292 ஆவது குருமகாசன்னிதானம்**

**& ஆதீனகர்த்தர்**

# ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்




**தெற்காவணி மூல வீதி,**
**மதுரை - 625 001.**

---

## அருள்முக ஆசியுரை



நமது ஆதீன குரு மூலவர், திருஞானசம்பந்தப் பெருமான், தமது தந்தையாரின் வேள்விக்காக, பொற்கிழி பெற்ற தலமான, திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவர சுவாமி - ஒப்பிலா முலையம்மை திருக்கோயிலின் திருக்குடமுழுக்கு விழா 26.01.2011 ஆம் நாள் சிறப்புற நடக்கட்டும்.

பண்பாடும், மனிதத் தன்மையும் கொண்டு, இச்சமுதாயம், எல்லாம் வல்ல நமது நிரந்தர தாய் தந்தையாகிய சிவபெருமான் - பார்வதி தேவியின் பேரருளால், இம்மண்ணில் நல்ல வண்ணம் வாழட்டும் ! எல்லார்க்கும் ஆசீர்வாதம்!

**- ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்**

62-2


உ

சிவ சிவ

அழகிய திருச்சிற்றம்பலமுடையார் துணை



**திருக்கயிலாய பரம்பரை, செங்கோல் ஆதீனம்**

102வது குருமகா சந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தர சத்தியஞான தேசிக பரமாச்சார்ய சுவாமிகள்**

ஆதீன கர்த்தர் செங்கோல் ஆதீனம்

**பெருங்குளம் - 628 752,** தூத்துக்குடி மாவட்டம்



செல் : **9488406093** போன் : **04630-271411**


# அருள் வாழ்த்துரை

மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிரும் கங்கையாளைப் படர்சடைவைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க் கம்பொன்
ஆயிரங்கொடுப்பர் போலும் ஆவடுதுறை யனாரே

மகப்பேறு வேண்டி வந்த முசுகுந்த மாமன்னனுக்குப் புத்திரப்பேறு அளித்தருளியது. தேவர்கள் படர் அரசமரமாக விளங்க அதன் கீழ் இறைவன் திரு நடனம் செய்தருளியதும், தர்மதேவதை இறைவனை வழிபட்டு அவர்க்கு வாகனமாகப் பேறுபெற்ற பெரிய நந்தியாக எழுந்தருளியதும் திருமாலுக்குத் துளசி மாலை அளித்து பிருந்திமயல் தீர்த்தருளிய புராணத் திருத்தலமும் அழகிய விநாயகர் அகத்திய முனிவருக்கு ஞான உபதேசம் செய்தருளியதும், திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் யோகிருந்து மூவாயிரம் பாடல்களாகிய திருமந்திரத்தை அருளியதும், திருமாளிகைத் தேவர்,போகர்,கரூர் தேவர்,கொங்கண சித்தர் முதலிய நவகோடி சித்தர்கள் இத்தலத்து இறைவனை வழிபட்டு அட்டமாசித்தியைப் பெற்றதும், கோச்செங்கட் சோழன், சேரமான் பெருமாள் நாயனார், வரகுண பாண்டியன் ஆகிய மூவேந்தர்களாலும் தனித்தனி லிங்கங்கள் பிரதிஷ்டை செய்து வழிபட்டுப் பேறு பெற்றதும் திருஞான சம்பந்தர் தன் தந்தையின் வேள்விக்காக, இத்தலத்து இறைவனிடமிருந்து பூதம் வாயிலாக ஆயிரம் பொற்காசுகள் பலிபீடத்தில் பெற்றதும், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் இவர்களால் பாடப்பெற்றதும் இப்புண்ணிய திருத்தலமாகும்.மேலும் இத்தலத்து இறைவன் அருளால் சித்தர் சிவப்பிரகாசர் நமச்சிவாய மூர்த்திகளைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீனம் தோற்றுவித்தருளியதும் இத்திருத்தலமேயாகும்.

இத்தலத்தில் வாழ்ந்தருளிய திருமாளிகைத் தேவர் மீது படையெடுத்து வந்த நரசிங்க மன்னனின் படைகளை அழித்தருள இத்தலத்து இறைவியானவள் திருக்கோவில் மதில்களில் இருந்த நந்திகளை எல்லாம் ஏக நந்தியாக்கி அனுப்பியதும், பசு வடிவில் வந்த உமை அன்னைக்கு விநாயகர் துணை வந்ததும், சேந்தனார், அருணகிரியார் பாடிப் பரவியுள்ளதும் இத்திருத்தலமாகும். திருவாவடுதுறைக்குச் சொந்தமான இத்திருக்கோயில் சுமார் 38 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளதாக அறிகிறோம்.

தற்போது திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஞான பீடத்தில் எழுந்தருளியுள்ள 23வது குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாட்சி காலத்தில் திருப்பணிகள் பல செய்தும் புராணசிறப்பும் வரலாற்றுப் பெருமையும் கொண்ட இத்திருக்கோயில் தைத்திங்கள் 12ஆம் நாள் (26-01-2011) புதன் கிழமை அன்று குருமகா சந்நிதானம் சீர்வளர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் மற்றும் சைவ ஆதீன குருமகா சந்நிதானங்கள், சைவத்திருமட அதிபர்கள் ஆகியோர் முன்னிலையில் திருவருளும், குருவருளும் முன்னின்று மகா கும்பாபிஷேகம் வெகுசிறப்பாக நடைபெற நம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய அழகிய திருச்சிற்றம்பலமுடையான் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம். கும்பாபிஷேக மலர் நன்கு மலர்ந்து சிவமணம் கமழ்ந்து திக்கெட்டும் பரவட்டும்.

திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழி
கயிலைக்குருமணி சீர்வளர்சீர்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர்,
கோயமுத்தூர்-641 010,தமிழ்நாடு
தொலைபேசி : 0422-2607995,,2608678, நகலி : 2607994
webpage: www.sivasiva.in,
peruratheenam.blogsopt.com

உ




Holy Kailasa heritage Meikandar
heritary - Kailai Guru Mani - Seervalarseer
**Santhalinga Ramasamy Adigal**
Peruraatheenam, Perur,
Coimbatore -641 010, Tamilnadu.
Telephone:0422-2607995,2608678, Fax : 2607994
Email : peruradigal@yahoo.com
: perumutt@yahoo.com

# வாழ்த்துப்பா



செந்தமிழ் ஆகமம் சேர் திருவாவடுதுறை ஆதீனத்தின்
முந்து நூல்கண்ட மூலர்அருள் திருமந்திரத்தில்
வந்த நற்பாடல் ஆகமங்களை வகுத்துத் தந்தார்
சிந்தனை வளஞ்சேர் சைவசித்தாந்த நெறியே வாழி!

என்னை நன்றாக ஈசன்படைத்தனன் தமிழ்செயற்கு என்று
பொன்மொழியாகக் கூறும்திருமூலர்பொருந்தும் கோயில்
மன்னிய ஆதீனத்தின் வழிவழி பேணும் ஞான
அன்னை ஒப்பிலா முலையார் கோகழிநாதா போற்றி!

இருபத்து மூன்றாம் பட்டத்தினிதிருந்து உலகு போற்ற
அருமைசேர்சித்தாந்தத்தை அனைவருக்கும்வழங்கும் வள்ளல்
பெருமைசேர் குடநீராட்டு பீடுறச் செய்து மக்கள்
அருள்பெற நெறிகள் நற்பணிகள் வழிவழி வாழி!

எளிமையும் இனிமையோடு இருபத்துமூன்றாம் பட்டம்
வழிவழி திருமுறைக்கு வளமிகு பணிகள் செய்தே
செழித்து செந்தமிழால் போற்றும் தெய்வநற்பணிகள் வாழி
விழித்து மானுடம் சிறக்க வேண்டுவ செய்வார் வாழி!

வேண்டுந் தங்களன்பு
இப்படிக்கு,
**சாந்தலிங்க இராமசாமியடிகள்.**

தொலைபேசி: 0435 - 2456655.
மின் அஞ்சல்: srikasimutt @ rediffmail.com.

உ
சிவ சிவ

கயிலை மாமுனிவர்
## திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அதிபர்
## ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள் - 612 504,
தஞ்சாவூர் மாவட்டம், தமிழ்நாடு.

---

# வாழ்த்துரை

இன்பம் என்பது எல்லா உயிர்க்கும் தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும் ஆதலின் வினைப்படி வரும் இன்பங்கள்

மனத்தின் அளவுகோலாலேயே சிறியதும் பெரியதுமாக வருணிக்கப்படுகின்றன என உணரலாம்.

மூவாத் தமிழ்கொண்டு,முதிர்பெரும் சமயமாம் சைவத்தின் அளப்பரும் ஆற்றல்களை அறிவித்தருளிய நம் திருமுறையாசிரியர்கள், மானுட வாழ்க்கையினர் , இறையருள் வாழ்தலுக்கான வழிகோலும் பனுவல்களை அருளிச் செய்தார்கள். இறையருளால் வரும் இன்பங்களை வினையால் வருவன எனக் கூறலாகாது.

இறையருளால் பெறும் இன்பங்களே நிலையானவை. இறையருள் துணை நிற்க நம் முயற்சியும் சேர வேண்டும். அங்ஙனம் ஆராத விதிவழிப்பட்டனவற்றை ஊட்டுவானும் இறைவனே. விதிவழிப்பட்ட அவ்வின்பங்களையே நம் அருளாளர்கள் நீரலைகள் போன்றவை என்பர்; நிலையில்லாதன என்பர். நிறைசெல்வம் என வினைத் தொகையால் குறிப்பிட்டு அது வினையால் வரும் செல்வம் என உணருமாறு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளுதலை உணர்தல் தகும்.

துன்பமின்றி இருப்பதே மானுடவர்க்கு இன்பம் என்பது மற்றொரு சீரிய கோட்பாடாகும். பசி, பிணி, பகைஇன்றி வாழ்வதான இன்பத்திற்கு ஈடானதாக வேறெதனையும் சொல்வதற்கில்லை.

நம் ஆசார்யப் பெருமக்களுள் முதலாமவராகிய ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகள் பிணியின்றி வாழ விரும்பினால் சிவபெருமானை மிகவும் ஏத்துங்கள் என மானுடவர்க்கு ஒரு பனுவலால் அறிவுறுத்தினார். திருவாவடுதுறையில் ஸ்ரீ கோமுக்தீஸ்வரரைத் துதித்த பதிகம் முழுவதும், அதன் விரிவாகத், தன் கூற்றாக, தன்னுணர்ச்சிப் பதிகமாக அமைந்துள்ளது.

பல வகையான மானுடப் பிறப்புத் துன்பங்களை சிவசிந்தனையும், சிவநாம உச்சாடனமும் நீக்கி ஆட்கொள்ளும். திக்குத் தெரியாமல் தவிக்கும் ஒட்டுமொத்த மானுட சமுதாயத்துக்கும் உபாயம் சொல்வது இடரினும் எனத் தொடங்கும் விலையுடைய அருந்தமிழ்ப் பதிப்பாகும்.

ஸ்ரீ ஞானசம்பந்தர் திருவாக்கால் இப்பதிகம் உபதேசித்தருளிய பெருமான், திருவாவடுதுறையுள் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ கோமுக்தீஸ்வரராவார். அப்பெருமான் எழுந்தருளிய திருக்கோயில் கும்பாபிஷேகம் வெகு விமரிசையாக நிகழவிருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறோம்.

திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமான ஸ்ரீ ஒப்பிலாமுலையம்மை உடனாய ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயில் கும்பாபிஷேகப் பெருவிழா சிறப்புடன் நிகழவும்,அதனைத் தரிசிக்கும் நற்பேறுபெறும் பக்தர்கள் வாழ்வில் எல்லா வளங்களும் பல்கிப் பெருகவும், யாவர்க்கும் துறைசை ஆதீனம் சீர்வளர்சீர் மகா சன்னிதானத்தின் நல்லாசிகள் சித்திக்கவும், இவ்வைபவத்தையொட்டி வெளிவரும் மலர், ஆத்திக உலகினர் என்றும் போற்றிடத்தக்க மணம்மிகு பொன்மலராய் மலர்ந்து துலங்கவும், எல்லாம்வல்ல நம் செந்திநகர் மேய வள்ளி மணாளன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம். சுபம்.

சிவ சிவ

வாழ்க தமிழ் | உ சிவமயம் | வளர்க சைவம்

அருள்தரு மங்களாம்பிகை உடனாய அருள்மிகு வாஞ்சிநாதசுவாமி துணை

Ph: 04577 - 264446



HIS HOLINESS

**Sri La Sri Niramba Alagiya Gnanaprakasa Desika Paramachariya Swamigal**

MADATHIPATHI - THULAVUR MADAM

KUNNAKKADI - Via (Sivaganga Dt.) Pin : 630 206. Tamilnadu. India.

ஸ்ரீலஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகராகிய ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

மடாதிபதி, துலாவூர் மடம்.

விக்ருதிஆண்டு மார்கழித் திங்கள் 21. ஆவது நாள் Date: 5-01-2011

# அருள்வாழ்த்துரை



திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா அழைப்புக் கிடைக்கப்பெற்றோம். மிக்க மகிழ்ச்சி.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலில், 23ஆவது குருமகா சன்னிதானம் அவர்களால் சேக்கிழார் திருஉருவம் 15.09.1989ல் பிரதிட்டை செய்தருளப்பெற்றது.

இப்பொழுது இத்திருக்கோயிலின் வடக்குப்புற நுழைவாயிலில் கோபுரம் இல்லாதிருந்த நிலையில், 23ஆவது குருமகா சன்னிதானம் அவர்களின், அருளாணையின் வண்ணம் புதிதாக மூன்று நிலை கோபுரம் எழுப்பப் பெற்று மேல்தளம் முழுவதும் தட்டோடுகள் பதிக்கப் பெற்றும், இக்கோயிலின் திருப்பணிகள் யாவும் நிறைவு பெற்றுப் புதுப்பொலிவுடன் மிளிர்கிறது.

குருமகா சன்னிதானம் அவர்களால் 26.01.2011 அன்று திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடைபெறவிருக்கிறது. இவ்விழா சிறப்பாக நடைபெறத் திருவருளைச் சிந்திக்கிறோம். விழா மலர் சிறப்பாக அமையக் குருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

நலமே தழைக!

ஸ்ரீ நிரம்ப அழகிய ஞானப்பிரகாச தேசிய சுவாமிகள்



உ
குருவே துணை




www.Kaumaramutt.org

**தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்**
மடாதிபதி
சிரவணபுரம்
**கௌமார மடாலயம்**
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 006. தமிழ்நாடு

05.01.2011

# வாழ்த்து



*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசு வண்டறை பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே.*

சிவம் என்ற சொல்லுக்கு, மங்களம்-மகிழ்ச்சி என்பன போன்று பல பொருள் உண்டு. சிவன் என்றால் அதனை உடையவன் என்பது தானே போதரும், சிவன் என்ற சொல், சிவபிரான் ஒருவனையே குறிக்கும். சிவன் எனும் நாமம் தனக்கே உரிய செம்மேனியெம்மான் என்பது தமிழ் மறை, அவனே ஆதி முதல்வன் ஆகும். ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலை நடத்தும் அப்பெருமானே தலைவன்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி வடிவுடையவன். உலக ஒடுக்கத்துக்குரிய சங்காரக் கடவுள் அவனேயாம். ஆகவே, தோற்றத்துக்கும் அவனே கடவுள் என்பதை அந்தம் ஆதி என்மனார் புலவர் என்றது சிவஞான போதநூல்.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குட்பட்ட இவ்வூரில் இறைவன் அருள்மிகு கோமுத்தீஸ்சுவரர் பெருமான் வடிவில் எழுந்தருளி வேண்டுவார்க்கு வேண்டியது அருள்பாலித்துவருகின்றார். அத்திருக்கோயில் முழுமையான திருப்பணிகள் செய்யப்பெற்று திருக்குட நீராட்டு நடைபெறுவது குறித்து மகிழ்ந்தோம். விழா இனிதே நடைபெற தண்டமிழ்க் கடவுள் முருகப்பெருமானின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம் நீராட்டு விழா நினைவாக மலரும் மலர் தமிழ் மணம் கமழும், அருந்தமிழ் கமழும் சிவமலராக வெளிவர வாழ்த்துகிறோம்.

# குருவருள் சிறக்க

மன்னுயிர் அளிக்கும் மாணுறு பெருமான்
தன்னின் நீங்காத் தகவுடை அன்னை
உலகுயிர் உறுபிணி ஒழிப்பான் தானே
மகவுறு பிணிக்கு மருந்துண் டாங்கு
தன்ஒரு கூற்றின் வெளிபட் டிறைவன்
வழிபாடு ஆற்றி வயங்குறு முத்தி
வழிகாட் டருளும் வன்மையிற் சிறந்த
ஒப்பில் முலையாள் உடனுறை மாசில்
மணியன், வண்டமிழ் ஞானசம் பந்தர்க்கு
ஆயிரம் பொற்கா சளித்த வள்ளல்
மூவா யிரமாண்டு முதுதவத் திருந்து
மூவா யிரர்தமிழ் மூவர் தமிழோடு
உலகோர் உய்ய உறுவழி வகுத்த
கோமுத் தீசுரன் குவலயம் விளங்க
வீற்றிருந் தருளும் மிகுபுகழ்க் கோயிலின்
பழமையிற் புதுமை பாங்குறப் பணித்துத்
திருக்குட நன்னீர் சிறப்புற ஆற்றும்
திருவிழா காணும் சீர்வளர் சீராம்
சிவப்பிர காசத் திருமிகும் ஆசான்,
ஆவடு துறையின் அருள்திரு மடத்தின்
இருபதின் மூன்றாய் எழில்மிக விளங்கும்
குருவருள் மலிந்து பெருக.
துறைசைப் பெருமான் துணைமலர் போற்றே.

ஆதீன முதுபுலவர்
பேராசிரியர் **ஆதி.முருகவேள்** எம்.ஏ.,
திருச் சிராப்பள்ளி.



பீடாரோகண வெள்ளி விழா, மணிவிழா கண்டருளிய
திருக்கயிலாய பரம்பரை - மெய்கண்ட சந்தானம்
திருவாவடுதுறை ஆதீனம், இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்

உ

சிவமயம்

# பதிப்புரை

திருவே என் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர் நற்சோதி மிக்க
உருவேஎன் உறவே என்ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே என் கற்பகமே கண்ணே கண்ணின்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே!

- ஆறாந்திருமுறை

திருவருட் சிறப்பும் குருவருட் சிறப்பும் ஒருங்கே பெற்றுள்ள ஒப்புயர்வற்ற திருத்தலம் திருவாவடுதுறையாகும். சிவத்தலங்கள் யாவும் ஆன்மாக்களைப் பந்தித்துள்ள ஆணவக் கட்டினை நீக்கி முத்திதர வல்லவை. ஆவடுதுறைத் தலமோ அந்த முத்தி இன்ப உருவாய் விளங்கும் அம்மைக்கே முத்தி கொடுத்துள்ளது எனில் இத்தலத்தின் பெருமையினை யாரால் எடுத்துரைக்க முடியும்? உள்ளன்போடு இமைப்பொழுது இத்தலத்தை யார் நினைத்தாலும் அவர்களுடைய பிறவிப்பிணி நீங்கும் என்பது உறுதி. தேவர், முனிவர், அருளாளர், அரசர், எளியோர் என அனைத்து வகையினரும் இத்தலத்தை வழிபட்டு அருள்பெற்று உய்ந்துள்ளனர்.

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர், திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், திருமூலர், சேரமான்பெருமாள் நாயனார் எனத்திருமுறை ஆசிரியர்கள் பலராலும் போற்றப் பெற்றச் சிறப்புடைய இத்திருத்தலமே சித்தாந்தத்திற்கும் ஒரு பெரும் கருவூலமாகத் திகழ்கின்றது. ஆம்! திருக்கயிலாய பரம்பரையில் வந்து செந்தமிழ்ச் சித்தாந்த சாத்திரங்கள் அருளிய மெய்கண்ட சந்தானத்தில் தோன்றியுள்ள திருவாவடுதுறை ஆதீனத்தைத் தன்னகத்தே பெற்றுள்ள திருத்தலமன்றோ இது. இவ்வாதீனத்து ஆசாரியர்களும், திருக்கூட்டத்து அருளாளர்களும் இயற்றியுள்ள நூல்கள், உரைகளின் துணைக்கொண்டே மெய்கண்ட சாத்திரங்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

இவ்வாறு திருமுறைகளோடும், சித்தாந்த சாத்திரங்களோடும் தொன்று தொட்டுத் தொடர்புடைய இத்திருத்தலத்து ஆதீனத்தின் மூலமாகச் சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையங்களும், சைவத்திருமுறை நேர்முகப்பயிற்சி மையங்களும் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களுடைய அருளாட்சியில் தமிழகத்திலும், கடல்கடந்து ஈழத் திருநாட்டிலும் இயங்கிவருதல் குருவருள் திறமுணர்ந்து போற்றற்குரியதாகும். முற்காலத்தில் நாடிவருவோர்க்கு வழங்கப் பெற்ற சித்தாந்த பாடம் இக்காலத்தில் அவரவர் இடங்களிலேயே வழங்கப்பெறுகிறது. திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கப் பெருமானுக்குரிய நந்தித்தலமாக விளங்கும் இத்திருத்தலத்தில் நந்திமரபில் வந்த குருபரம்பரையிற் சிறந்த ஆதீனம் விளங்கும் அருள்மாட்சியினைப் போற்றாதாரில்லை.

அம்முறையில் திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கப் பெருமான் திருக்கோயிலுக்கு உலகம் போற்றும் முறையில் உன்னதமாகத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா கண்ட சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள், இப்போது அநாதிமுக்திச் சேத்திரமாகிய திருவாவடுதுறையில் விளங்கும் அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாகிய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலுக்கும் திருக்குடநன்னீராட்டுப் பெருவிழா கண்டு உலக உய்வுக்கு வழிவகுத்து அருளியுள்ளார்கள். தெய்வப்புலமைத் திருவள்ளுவனதேவ நாயனாருக்குக் குருபூசை கண்டுவரும் தனிச்சிறப்புக்கு ஏற்ப இத்திருக்குட நீராட்டுவிழாவில் திருக்கோயிலில் திருவள்ளுவர் பிரதிட்டையும் செய்தருளியுள்ளார்கள்.

வைணவ சமயத்தில் தோன்றி, சைவ சமயஞ்சார்ந்து சிவபெருமானின் முழுமுதன்மையினை நிலைநாட்டிய சிறப்புக்குரியவர் ஸ்ரீ அரதத்த சிவாச்சாரியார் ஆவார். அவர் நாள்தோறும் வழிபட்டுவந்த ஏழு சிவாலயங்களில் ஆதீனத்துக்குரிய ஆலயங்கள் திருவாவடுதுறை ஆலயம் உட்பட நான்கு ஆகும். அவற்றுள் கும்பாபிடேகத்தை முன்னிட்டுத் திருவாவடுதுறை ஆலயத்தில் அவருடைய திருவுருவச்சிலை பிரதிட்டை செய்யப்பெற உள்ளது. ஏனைய ஆலயங்களில் தை 24 (7.2.2011) அன்று பிரதிட்டை நடைபெற உள்ளது. ஸ்ரீ அரதத்தருக்கு நாள் வழிபாடு நடைபெறவும் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாணை வழங்கி உள்ளார்கள்.

“பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் - தொகுத்தவற்றுளெல்லாந்தலை” என்னும் குறளுக்கு ஏற்பத் திருக்கோயில்கள் கிளைமடங்கள் என எழுபத்தேழு தலங்களில் மதியம் அன்னதானம், காலைச் சிற்றுண்டி என அன்னம்பாலிப்புச் செம்மையாக நடந்துவரச் சீர்வளர் சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருள்பாலித்து வருகின்றார்கள். ஆதீனத்தலைமை மடத்திலும்,திருவண்ணாமலை, சிதம்பரம், திருவெண்ணெய்நல்லூர், திருவானைக்கா, இராமேஸ்வரம், ஆகிய தலங்களில் உள்ள கிளைமடங்களிலும் மூன்று வேளையும் உணவு வழங்கப்பெற்று வருதல் குறிப்பிடத்தக்கது. ஆதீனக் கோயில்கள் அல்லாத பிறகோயில்களாக விளங்கும் எட்டுக் கோயில்களில் இந்த உணவு வழங்கும் திட்டம் செயல்படுத்தப் பெற்றுவருகின்றது. நாயன்மார்கள் திருத்தொண்டு இயற்றியதை நினைவுகூரும் பொருட்டு இளையான்குடி, திருச்செங்காட்டங்குடி, திருஆக்கூர் ஆகிய தலத்துக் கோயில்களில் அன்னம் பாலிப்பு நடைபெற்றுவருகின்றது. காரைக்கால் அம்மையார் திருக்கோயிலில் நாள்தோறும் நூறு பேர் மதிய உணவு அருந்திவருதல் குறிப்பிடத்தக்கது. ஆதீனப் பள்ளிகளிலும் மாணவர்களுக்குக் காலைச் சிற்றுண்டி வழங்கப்பெற்று வருகின்றது. இந்த அன்னம் பாலிப்புத் திட்டத்தை மேலும் விரிவாக்கம் செய்திடவும் திருவுள்ளம் கொண்டுள்ளார்கள்.

குருமகாசன்னிதானம் அவர்களின் மணிவிழாவினைப் பெரும்விழாவாக நடத்தவும், கனகாபிஷேகம் செய்யவும் அன்பர்கள் பலர் விருப்பம் தெரிவித்தனர். குருமகாசன்னிதானம் அவர்கள் தம் பொருட்டு விழா நடத்த இசையாமல் தமது ஆதீனபாரம்பரியத்துக்கேற்ப அன்னம்பாலிப்புப் பணிகளை விரிவாக நடத்த அருளாணை பிறப்பித்து நடத்திவருகின்றார்கள். குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாட்சியில் ஆதீனத் திருக்கோயில்கள் யாவற்றுக்கும் திருக்குடநன்னீராட்டு விழாக்கள் சிறப்பான முறையில் நடைபெற்றுள்ளன. அவற்றுள் திருப்பெருந்துறை (ஆவுடையார்கோயில்) மயிலாடுதுறை திருக்கோயில்களுக்குக் குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாட்சியில் இரண்டுமுறை திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் கிளைமடங்கள் யாவும் திருப்பணி செய்யப்பெற்றுள்ளன. திருவிடைமருதூர்,

மயிலாடுதுறை, திருப்பெருந்துறை ஆகிய தலங்களில் இடையே நடைபெறாதிருந்த திருத்தேரோட்டத்தினை நடைபெற வைத்துள்ளார்கள்.

திருமுறைவாணர்களையும், வேதசிவாகம விற்பன்னர்களையும், சித்தாந்த அறிஞர்களையும்,தமிழ்ப்புலவர்களையும், ஸ்தபதிகளையும், திருக்கோயில் கலைஞர்களையும், தொண்டர்களையும் தத்தம் துறைகளில் ஊக்கத்துடன் அன்னோர் மேன்மேலும் சிறந்தோங்கும் பொருட்டு அவர்களுக்கு விருதுகளும்,பொற்கிழியும், பாராட்டுகளும் அருளி இவ்வாறு சைவ உலகிலும்,தமிழுலகிலும் பரிபாலனம் செய்தருளிவருகின்ற குருவருட்சீலம் யாவரும் வணங்கிப் பாராட்டும் மாண்புடையதாகும்.

அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலைப் புதிய முறையில் பெரிதாக்கிய திருப்பணியானது பதினொன்றாம் குருமகாசன்னிதானமாகிய அருள்திரு பின் வேலப்பதேசிகர் அவர்களின் அருளாட்சியில் நடைபெற்றது. இவ்வுண்மை, "கோமுத்தி ஈசர்க்கு 'என்னென்று புகல்வேம்' என்றிங்கு யாவரும் வியப்பக் கோயில் - பொன்னென்றும் பிரியா வாறு புதிதாகப் பிரித்துண்டாக்கும் - பன்னொன்றாம் குருவேலப்பர் பதமலர் பணிந்து வாழ்வாம்" என்னும் திருவாவடுதுறைப் புராணத்தால் (32) அறியத்தகும். பின்னர் அவ்வக்காலங்களில் திருக்குடநன்னீராட்டு விழாக்கள் நிகழ்ந்துள்ளன.

இருபத்திரெண்டாம் குருமகாசன்னிதானம்அவர்களின் அருளாட்சியில் 27.08.1972 அன்று திருக்கோயிலுக்குத் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றுள்ளது. இப்போது இருபத்து மூன்றாம் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாட்சியில் திருப்பணிகள் விரிவாக இயற்றப்பெற்ற நிலையில் விக்ருதி ஆண்டு தைத் திங்கள் 12-ஆம் நாள் (26.01.2011) அன்று திருக்குடப் புனித நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெறுகின்றது.

சீர்வளர் ஆவடுதண்துறை (2249) என்று துறைசைத் திருத்தலமானது தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதற்கு இணங்கச் சீர்வளர்சீர் எனச் செந்தமிழ் மணம் கமழத் தமக்கு அடைமொழி கொண்டுள்ள சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் திருவுள்ளப் பாங்கின் வண்ணம் இவ்விழா மலரானது பல நல்லறிஞர்களின் சீரிய சிந்தனை வண்ணத்தில் உருவான திருத்தலக் கட்டுரைகள், திருத்தலப் பதிகக் கட்டுரைகள், வேதாகமக் கட்டுரைகள், ஆகியவற்றையும், துறைசைத்தலத்திற்குரிய திருமந்திரம், சிவஞானபாடியம் சார்ந்த கட்டுரைகளையும், சிற்றிலக்கியக் கட்டுரைகளையும், பிற கட்டுரைகளையும் உள்ளடக்கிப் பல வண்ணப் படங்களையும் ஆங்காங்கு பெற்று அடியார்களும், பொதுமக்களும் கண்குளிர உளங்குளிரக் கண்டும், படித்தும் மகிழ்ந்தும் உய்யும் வண்ணம் விளங்குகின்றது. ஆதலால் இவ்விழா மலரினை வாங்கிப் பயன் கொள்ளவேண்டியது அவசியமாகும்.

சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் தம்முடைய பேரருள்மயமான பரிபாலனப் பணிக்கு எளியேனையும் ஒரு கருவியாகக் கொண்டு ஆண்டருளிவரும் கருணைத் திறத்திற்கு அவர்களுடைய திருவடிகளைப் போற்றி வணங்குதலே அன்றி வேறு கைம்மாறு அறியேன்.

இங்ஙனம்
சிவஞான சுவாமிகள் அடிப்பொடி
**சு.குஞ்சிதபாதம்,** ஆதீனப்புலவர்.

திருவாவடுதுறை
*20.01.2011*

உ
சிவமயம்

# திருக்குடமுழுக்குப் பெருவிழா அழைப்பிதழ்

**திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான**

**திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய**

**அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்**

## திருக்குடப் புனிதநன்னீராட்டுப் பெருவிழா அழைப்பிதழ்

**நாள் : விக்ருதி ஆண்டு தைத் திங்கள் 12ஆம் நாள்**

**(26-01-2011) புதன்கிழமை, காலை மணி 9-00 - 10-30**

அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் ஏறுவர் நிலமிசை நிலையிலரே.

- திருஞான சம்பந்தர்.

ஒப்பிலா முலையாள் ஒருபாகா!
உத்தமா! மத்தம் ஆர்தரு சடையாய்!
முப்புரங்களைத் தீ வளைத்து அங்கே
மூவருக்கு அருள் செய்ய வல்லானே!
செப்ப ஆல் நிழல்கீழ் இருந்து அருளும்
செல்வனே! திருவா வடுதுறையுள்
அப்பனே! எனை அஞ்சல் என்று அருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே!

- சுந்தரமூர்த்திசுவாமிகள்.

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப் புகழாளர் ஆயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர் மிகுகா விரிக்கரை மேய
ஐயா! திருவா வடுதுறை அமுதே! என்றுன்னை அழைத்தக்கால்
மையார் தடங்கண் மடந்தைக் கொன்று அருளாது
ஒழிவது மாதிமையே.

- திருவிசைப்பா.

மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிரும் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கு அம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே.

- திருநாவுக்கரசர்.

இன்பம் தருவன் குயிலே! ஏழுலகும் முழுது ஆளி,
அன்பன் அமுது அளித்து ஊறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச் சுவடு ஒத்த நல் பரிமேல் வருவானைக்
கொம்பின் மிழற்றும் குயிலே! கோகழி நாதனைக் கூவாய்!

- திருவாசகம்.

சீரும் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன்; பெற்றது ஆர்பெறுவார் உலகில்
ஊரும் உலகும் கழற உழறி உமை மணவாளனுக்கு ஆள்
பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

- திருப்பல்லாண்டு.

நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம்பந்தர்
இச்சையே புரிந்தருளிய இறைவர் இன்அருளால்
அச்சிறப்பு அருள்பூதம் முன்விரைந்து அகல்பீடத்து
உச்சிவைத்தது பசும்பொன் ஆயிரக்கிழி ஒன்று.

-பெரிய புராணம்.

நீர்கொண்ட செம்பொன் கமலமும் நீலமும் நீங்கரிய
வார்கொண்ட முல்லையும் கோங்கும் மென்காந்தளும் மல்கி ஓல்கிச்
சீர்கொண்ட ஆவடுதண்துறைச் செம்பொன் தியாகர் வெற்பில்
ஏர்கொண்ட தெய்வமலர்ப் பூங்கொடி ஒன்று எதிர்உற்றதே.

- திருவாவடுதுறைக் கோவை.

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே
- திருமூலர் திருமந்திரம்.

வாதி னால்வரு காளியை வென்றிடு
வாதி நாயகர் விறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்
வாச மாமல ரானொடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள் பெருமாளே
- அருணகிரிநாதர் திருப்புகழ்.

தேவாதி தேவன்சொல் வேதாக மங்களைத் திருமந்த்ர மாலையென்றே
திகழ்சமா தியிலிருந் துலகத்து ளருள்விழி திறந்தாண்
டினுக்கொன்றெனும்
பாவாக வேசொன்ன பரமசிவ னானகுரு பணியோக அட்டாங்கமும்
பகவர்வரிய சித்தியும் திரிகால ஞானமும் பரிபக்கு
வர்க்கருளுவோன்
சேவேறு மொருவனே பரமதத் துவமெனும் திருமூல நாதன்மகிழ்
திருவிசைப் பாவெண்ணும் அதிமதுர கவிபாடு திருமாளிகைத்தேவர்வாழ்
காவேரி சூழ்ந்ததிரு வாவடுதுறை றைக்குமர கனிவாயின் முத்தமருளே
கங்கா நதிச்சரவ ணைத்துவணர் காங்கேய கனிவாயின் முத்தமருளே.
- ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனாகிய சிவபெருமான், வானநாடனாய் வழித்துணை மருந்தாய் மாசிலாமணி எனும் திருநாமம் கொண்டு திருவாவடுதுறை திருத்தலத்திலே எழுந்தருளுகின்றார். 'கோ' உருவினளாகிய உமையன்னைக்கு முத்தி கொடுத்தருளியதால் 'கோமுத்தீசுவரர்' எனும் திருப்பெயரும் கொண்டருளுகின்றார். இத்தலத்து இறைவனுக்கு அணைத்தெழுந்த நாயகர், புத்திரத் தியாகேசர், போதியம் பலவாணர், கோகழிநாதர், ஸ்வயம் வியக்தேசுவரர், பூ கைலாசே சுவரர், மகாதாண்டவேசுரர் போன்ற வேறு திருப்பெயர்களும் உண்டு.

இத்திருக்கோயிலின் தனிச் சிறப்புகள் :

மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றாலும் புகழ்பெற்றுப் பொலிவுறும் இத்திருவாவடுதுறை திருத்தலம் பல பெருஞ்சிறப்புகளை உடையது. அவற்றுள் சில :

1. திருஞான சம்பந்தர் தம் தந்தையின் வேள்விக்காக இத்தலத்து இறைவனிடமிருந்து பூதம் வாயிலாக 1000 பொற்காசுகள் பலிபீடத்தில் பெற்று மகிழ்ந்த தங்கத் திருத்தலம்.
2. திருநாவுக்கரசராலும் சுந்தர மூர்த்தி சுவாமிகளாலும் மாணிக்கவாசகராலும் பாடல் பெற்ற திருத்தலம்.
3. மகப்பேறு வேண்டிவந்த முசுகுந்த மாமன்னனுக்குத் தம்மைத் தியாகேசராகவும் இத்தலத்தைத் திருவாரூராகவும் காட்டிப் புத்திரப்பேறு அளித்தருளிய புனிதத் திருத்தலம்.
4. இல்லறத்தார் இடர்களைக் களைய அணைத்தெழுந்த நாயகராய் தனிச் சன்னிதி கொண்டு அருள்பாலிக்கும் திருத்தலம்.
5. தேவர்கள் படர் அரசமரமாக விளங்க அதன் கீழ் (போதியம்பலம்) இறைவன் திருநடனம் செய்தருளிய தலம்.
6. தருமதேவதை இறைவனை வழிபட்டு அவருக்கு வாகனமாகும் பேறு பெற்று பெரியநந்தியாக (14 அடி 9 அங்குலம்) எழுந்தருளிய நந்தித்திருத்தலம்.
7. இறைவன் திருமாலுக்குத் துளசி மாலை அளித்து பிருந்திமயல் தீர்த்தருளிய புராணத் திருத்தலம்.
8. அழகிய விநாயகர் அகத்தியமாமுனிவருக்கு ஞானோபதேசம் செய்தருளிய ஞானத் திருத்தலம்.
9. குருத்துரோகம் புரிந்த அக்னி தேவனுக்கும், வெண்குட்ட நோய் பற்றிய அகத்தியருக்கும் சாபவிமோசனம் அளித்தருளிய பரிகாரத் திருத்தலம். செவ்வாய், கிரகப்பதம் பெற்று,
10. செவ்வாய்க் கிழமையில் அன்னதானம் செய்து பேறுபெற்ற திருத்தலம்.
11. சுந்தரமூர்த்தி நாயனார் தம் உடற்பிணி தீர உளமுருகி இறைவனைப் பாடியருளிய தேவாரத் திருத்தலம்.
12. திருமூலர் அரச மரத்தின் கீழ் 3000 ஆண்டுகள் யோகிருந்து 3000 பாடல்களைக் கொண்ட திருமந்திர ஞானப் பெருநூலை அருளிய திருமந்திரத் திருத்தலம்.
13. திருமாளிகைத் தேவர் இறைவனை நாள்தோறும் வழிபட்டு பல அற்புதங்களை நிகழ்த்தியருளிய தலம்.

14. அகத்தியர், திருமூலர், திருமாளிகைத் தேவர், போகர், கருவூர்த் தேவர், கொங்கணச் சித்தர் முதலான நவகோடி சித்தர்கள் இத்தலத்து இறைவனை வழிபட்டு அட்டமா சித்திகளைப் பெற்றுவந்த சித்தர் வாழ் திருத்தலம்.

15. கோங்செங்கட்சோழன், சேரமான் பெருமாள் நாயனார், வரகுண பாண்டியன் என மூவேந்தர்களாலும் தனித்தனி லிங்கங்கள் பிரதிட்டை செய்து வழிபட்டு பேறு பெற்ற அன்னதானத் தலம்.

16. இத்தலத்து இறைவன் அருளால் சித்தர் சிவப்பிரகாசர் நமசிவாய மூர்த்திகளைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீனம் ஸ்தாபிதம் செய்தருளிய திருத்தலம்.

மேலும் திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கப் பெருமான் திருக்கோயிலின் பரிவாரத்தலங்களில் நந்தித் திருத்தலமாக இத்தலம் விளங்குகிறது. சோழ மன்னர்கள் கல்வெட்டுக்களும், பாண்டிய மன்னர்கள் கல்வெட்டுக்களுமாகப் பல கல்வெட்டுக்களும் இத்தலப் பெருமையையும், திருவிழாவின் சிறப்பினையும் அறிவிக்கின்றன.

இத்தலத்தில் வாழ்ந்தருளிய திருமாளிகைத் தேவர் மீது படையெடுத்து வந்த நரசிங்க மன்னனின் (கி.பி.825 - 850) படைகளை அழித்தருள, இத்தலத்து இறைவியானவள் இத்திருக்கோயிலின் மதில்களில் இருந்த நந்திகளையெல்லாம் ஏகநந்தியாக்கி (விஸ்வரூப நந்தி) அனுப்பினாள் என்பதால், இன்றும் இக்கோயிலின் மதில்கள் மீது நந்திகள் இல்லை. 'சர்வதோஷ நிவாரணராக' அருள்மிகு கோமுத்தீசுவரர் அருள்பாலிப்பதனால், இத்திருக்கோயிலில் "நவக்கிரக தனிச் சன்னிதி" கிடையாது.

பசு வடிவில் வந்த உமையன்னைக்கு 'துணைவந்த விநாயகர்' இத்திருக்கோயிலின் கிழக்குக் கோபுர வாயிலில் தனிக்கோயிலில் அருள்பாலிப்பதும், கோயிலுள்ளே கொடிமரத்தருகே வன்னி மரத்தடியில் 'வரசித்தி விநாயகர்' அருளுவதும், தெற்குத் திருச்சுற்றில் வடக்கு நோக்கியருளும் 'திருமுறை கண்ட விநாயகரும்', இரண்டாவது கோபுர வாயிலில் திருமுறை மற்றும் சாத்திரக் கோயில்கள் அமைக்கப்பட்டிருப்பதும்,

தியாகேசர் திருமுன்னர் (மேற்கு நோக்கி) கூப்பியக் கரங்களுடன் சுந்தர மூர்த்தி நாயனார் அருளுவதும், ராஜகோபுரம் அருகே நால்வர் பெருமக்களுக்குத் தனிக்கோயிலும், சந்தானக் குரவர்களுக்குத் தியாகேசர் சன்னதியில் தனிச்சன்னதியும் அமைந்திருப்பதும் இத்திருக்கோயிலின் தனிச் சிறப்புகளில் சிலவாம்.

இத்தலத்து இறைவன் - இறைவியைத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர், திருமூலர், அருணகிரியார், சேந்தனார் முதலானோர் பாடிப் பரவியுள்ளனர். திருமாளிகைத் தேவர் முத்தி பெற்றத் தலம் இது. இத்தலத்துப் பெருமையினை ஸ்காந்தபுராணம் - உருத்திர சம்ஹிதை, ஆக்நேயபுராணம், அகத்திய பக்த விலாசம், உபமன்யு பக்த விலாசம் முதலான கிரந்தங்களிலும், திருமந்திரம், பெரியபுராணம், திருப்புகழ் 10ஆவது பட்டம் காலத்து சாத்திரம் சாமிநாத முனிவரின் துறைசைப் புராணம், திருவாவடுதுறைக் கோவை, துறைசை யமக அந்தாதி, துறைசைச் சிலேடை வெண்பா, துறைசை வெண்பா அந்தாதி, ஒப்பிலா முலையம்மைப் பிள்ளைத் தமிழ் முதலான தமிழ் இலக்கியங்களிலும் காணலாம்.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இத்திருக்கோயிலில் ஆதீனக் குரு மகா சன்னிதானங்கள் பல்வேறு காலங்களில் பல்வேறு திருப்பணிகளைச் செய்துள்ளார்கள். இத்திருக்கோயிலில் 22ஆவது குரு மகா சன்னிதானம் அவர்கள் அருளாட்சிக் காலத்தில் 27.8.1972ல் திருக்குடமுழுக்குப் பெருவிழா நடைபெற்றுள்ளது.

தற்போது 'திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை 'ஆதீனத்து ஞான பீடத்தில் எழுந்தருளியுள்ள 23ஆவது குரு மகாசன்னிதானம் அவர்களின் அருளாட்சிக் காலத்தில் புராணச் சிறப்பும் வரலாற்றுப் பெருமையும் கொண்ட, இத்திருக்கோயிலில் செய்தருளிய திருப்பணிகள் பலஉள. அவற்றுள் சில :

15-9-1989ல் புதிதாகச் சேக்கிழார் திருவுருவம் பிரதிட்டைச் செய்யப் பெற்று வழிபாட்டிலுள்ளது. திருமூலர் குருபூசைத் திருநாளாகிய (ஐப்பசி - அசுவதி) நன்னாளில் திருமூலருக்குச் சிறப்பு வழிபாடுகளும் 'திருமந்திர முற்றோதலும்' நடைபெறுகிறது.

தை ரதசப்தமிப் பெருவிழாவின் இரண்டாம் திருநாளில் (திருமூலர்த் திருநாள்) நடைபெறும் திருமூலர் ஐதீக விழாவில் திருமந்திரத்தில் சிறந்தார் ஒருவருக்கு விருதும் பொற்கிழியும் வழங்கிச் சிறப்பித்தருளுகின்றார்கள். ஐந்தாம் திருநாளில் திருஞானசம்பந்தர் பஞ்சமூர்த்திகளுடன் பல்லக்கில் திருவுலாக் கொண்டருளிய பின், இறைவன் சன்னிதியில் திருப்பதிகம் ஓதி, பலிபீடத்தில் பூதம் வாயிலாக பொன் உலவாக் கிழிபெறும் ஐதீக விழாவில் திருமுறைவாணர் (ஓதுவார் மூர்த்திகள்) ஒருவர்க்கு விருதும் பொற்கிழியும் வழங்கிச் சிறப்பித்தருளுகின்றார்கள். தமிழ் மாதப் பிறப்பு நாட்களில் உருத்திராபிடேகம் நடைபெறுகிறது. மாதந்தோறும் அமாவாசை நாளில் அகத்தியருக்கு நடைபெறும் சிறப்பு வழிபாட்டில் "அகத்தியர் தேவாரத் திரட்டு" பாராயணமும் நடைபெறுகிறது.

இத்திருக்கோயிலின் வடக்குப்புற நுழைவு வாயிலில் கோபுரம் இல்லாதிருந்த நிலையில் மகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் புதிதாக மூன்று நிலை கோபுரம் எழுப்பப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகிறது. வசந்த மண்டபம் உட்பட

திருக்கோயிலின் மேல்தளமும் முழுவதும் தட்டோடுகள் பதிக்கப் பெற்றும் மூன்றாவது கோபுரத்தில் சுதைகளாலான கலசங்கள் செப்புக் கலசங்களாக மாற்றப்பட்டும் திருப்பணிகள் நடைபெற்றுள்ளன. மேலும் திருமூலர் சன்னிதியில் புதிதாக முன்மண்டபம் அமைத்திடவும் திருவுளம் கொண்டுள்ளார்கள்.

மகா சன்னிதானம் அவர்கள் அருளாணையின் வண்ணம் இத்திருக்கோயிலின் திருப்பணிகள் யாவும் சிவநேயச் செல்வர்கள் மற்றும் திருவாவடுதுறை திருக்கோயில் 'திருமூலர் நற்பணி மன்றத்தினரின்' பேராதரவுடன் நிறைவு பெற்றுள்ள நிலையில்

**நிகழும் மங்களரமான விக்ருதி ஆண்டு தைத் திங்கள் 12 ஆம் நாள் (26.01.2011) புதன்கிழமை, உத்திராயணம், ஹேமந்த ருது, கிருஷ்ண பட்சம், சப்தமி திதி, சித்திரை நட்சத்திரம், சித்தயோகம், பவகரணம், த்ருதியோகம், நேத்திரம் 2, ஜீவன் 1/2 கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 9.00 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் மீன லக்னத்தில் விமானங்கள், ராஜகோபுரங்கள் மற்றும் பிரதான மூர்த்திகளுக்கு திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா**

**பீடாரோகண வெள்ளி விழா, மணிவிழா கண்டருளும்**
**திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனம்**
**இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம்**
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்,**

மற்றும் சைவ ஆதீனக் குரு மகா சன்னிதானங்கள், பிறமடங்களின் தலைவர்கள், சைவத் திருமடத்து அதிபர்கள், அருளாளர்கள், ஆன்மீக அமைப்புகள் மற்றும் சிவநெறிச் சான்றோர்கள் ஆகியோர் முன்னிலையில் மிகச் சிறப்பாக நடைபெறவுள்ளது. விழா நாள்களில் வேத பாராயணம், திருமுறைப் பாராயணம், சமயச் சொற்பொழிவுகள், கலைநிகழ்ச்சிகள், விருதுகள் வழங்கியருளல், விழாமலர் வெளியீடு பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா முதலியன நடைபெறும். அன்பர்கள் வருகை புரிந்து யாகசாலைப் பூசையையும், திருக்குட நன்னீராட்டு விழாவினையும் தெரிசித்து இருமை நலன்களையும் எய்தி இன்புற்றிட விரும்புகிறோம்.

திருமூலர் நற்பணி மன்றம்,
திருவாவடுதுறை.
29.11.2010

அருளாணையின் வண்ணம்
**காறுபாறு வைத்தியநாதத் தம்பிரான்**
திருவாவடுதுறை ஆதீனம்.

**கண்காணிப்பாளர்**
அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்,
திருவாவடுதுறை, குத்தாலம் வட்டம்,
நாகை மாவட்டம் - 609 803.
போன் : 04364 - 232055.

| ல / குரு | | | கேது |
|---|---|---|---|
| | இராசி | | |
| செவ் சூரி | | | |
| புத இராகு | சுக் | சந் | சனி |

# யாகசாலை நிகழ்ச்சி நிரல்

| விக்ருதி, தை தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி கிழமை | மணி | நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|
| 05 | 9-01-11 புதன் | காலை 9.40 - 10.40 | யஜமான அனுக்ஞை, சுவாமி அனுக்ஞை, விக்னேசுவர பூசை, தன பூசை, கோ பூசை, கஜபூசை, கணபதி ஹோமம். |
| | | மாலை 6.00 - 9.00 | பிரவேச பலி, ரக்ஷோக்ன ஹோமம். |
| 06 | 20-01-11 வியாழன் | காலை 8.00 -11.00 | நவக்கிரக ஹோமம், இலக்குமி ஹோமம். |
| | | மாலை 6.00 - 9.00 | வாஸ்து சாந்தி, கிராம சாந்தி. |
| 07 | 21-01-11 வெள்ளி | காலை 9.00 - 12.00 | சாந்தி ஹோமம், மூர்த்தி ஹோமம். |
| | | மாலை 6.00 - 9.00 | ஸம்ஹிதா ஹோமம், திசா ஹோமம். |
| 08 | 22-01-11 சனி | காலை 8.00 - 9.00 | காவிரியிலிருந்து புனித நீர் கொண்டு வருதல், ஆசார்ய தசவித ஸ்நானம். |
| | | மாலை 6.00 - 7.00 | யாகசாலை தானிய ஸ்தாபனம், அலங்காரம். |
| 09 | 23-01-11 ஞாயிறு | காலை 9.00 - 12.00 | அருள்மிகு கோமுத்தீசுவரர் சுவாமிக்கு மஹன்யாஸ ருத்ர பூர்வ ப்ரஸன்னா பிடேகம், பரிகார கலாகர்ஷணம். |
| | | மாலை 6.00 | கும்பாலங்காரம், கலாகர்க்ஷணம். |
| | | இரவு 7.00 | யாகசாலை ப்ரவேசம் - முதற் காலம். |
| | | இரவு 8.00 | பரிவாரமூர்த்திகள் அட்டபந்தன மருந்து சாத்தத் தொடங்குதல். |
| | | இரவு 9.00 | முதற்கால பூர்ணாகுதி, தீபாரதனை. |
| 10 | 24-01-11 திங்கள் | காலை 9.00 | ஆச்சாரிய விசேஷ சந்தி, பாவனா அபிடேகம், கால சாந்தி பூசை - இரண்டாம் கால யாகம் துவக்கம். |
| | | காலை 9.40 - 10.30 | மீன லக்னத்தில் விமான கலச ஸ்தாபனம். |
| | | காலை 12.00 | பூர்ணாகுதி, தீபாராதனை. |
| | | மாலை 5.00 | ஆச்சாரிய விசேஷ சந்தி, பாவனா அபிடேகம், சாயரட்சை பூசை - மூன்றாம் கால யாகம் துவக்கம். |
| | | இரவு 7.40 - 8.40 | சிம்மலக்னத்தில் பிரதான மூர்த்திகளுக்கு அட்டபந்தன மருந்து சாத்துதல். |
| | | இரவு 9.00 | பூர்ணாகுதி, தீபாராதனை. |
| 11 | 25-01-11 செவ்வாய் | காலை 8.30 | ஆச்சாரிய விசேஷ சந்தி, பாவனா அபிடேகம், கால சந்தி பூசை - நான்காம் கால யாகம். |

| | | | |
|---|---|---|---|
| | | நண்பகல் 12.00 | பூர்ணாகுதி, தீபாராதனை. |
| | | மாலை 5.30 | ஆச்சாரிய விசேஷ சந்தி, பாவனாபிடேகம், சாயரட்சை பூசை - ஐந்தாம் கால யாகம் துவக்கம். |
| | | இரவு 7.30 | சுவாசினீ - கன்னியா - வடுக பிரமசாரிய பூசைகள். |
| | | இரவு 9.00 | பூர்ணாகுதி, தீபாராதனை. |
| 12 | 26-01-11 புதன் | அதிகாலை 5.00 | ஆச்சாரிய விசேஷ சந்தி, பாவனா அபிடேகம், கால சந்தி பூசை - ஆறாம் கால யாகம் துவக்கம், பிம்பசுத்தி, ரக்ஷாபந்தனம். |
| | | காலை 6.00 | பரிவார யாகசாலை பூர்ணாகுதி, கடம் புறப்பாடு. |
| | | காலை 6.20 - 7.20 | பரிவார மூர்த்திகள் திருக்குட முழுக்கு விழா. |
| | | காலை 7.25 ஸ்பரிசாஹுதி. | பிரதானமூர்த்திகள் நாடீசந்தானம், |
| | | காலை 9.00 | பிரதான யாகசாலை பூர்ணாகுதி. |
| | | காலை 9.40 | கடம் புறப்பாடு. |
| | | காலை 10.00 | விமானம், ராஜகோபுர கலசங்கள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா. |
| | | காலை 10.20 | மூலஸ்தான மூர்த்திகள் மகா கும்பாபிடேகம், மகா தீபாராதனை, பிரசாதம் வழங்குதல். |
| | | மாலை 6.00 | மகா அபிடேகம். |
| | | இரவு 9.00 | பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாத் திருக்காட்சி |

குறிப்பு : யாகசாலை பூசை காலங்களில் 100 வேத விற்பன்னர்களைக் கொண்டு வேத பாராயணமும், 50 திருமுறைவாணர்களைக் கொண்டு திருமுறை பாராயணமும், சமயச் சொற்பொழிவுகளும் நிகழும்.

சர்வசாதகம் :

சிவாகமச் செல்வர். சைவ சித்தாந்த சரபம்,
சிவஸ்ரீ ஏ.வி. சுவாமிநாத சிவாசாரியார் அவர்கள்,
முதல்வர், சிவபுரம் வேதசிவாகம பாடசாலை, மயிலாடுதுறை.

உபசாதகம் :

ஆகம விசாரக சித்தாந்த ரத்தினம், சிவஸ்ரீ கே.தண்டபாணி சிவாசாரியர் அவர்கள்,
அருள்மிகு மகாலிங்க சுவாமி திருக்கோயில், திருவிடைமருதூர்.

தல சிவாசாரியர்கள் :

1. சிவஸ்ரீ. கே. தண்டபாணி சிவாசாரியார், திருவாவடுதுறை.
2. சிவஸ்ரீ. த. ஜெயக்குமார் சிவாசாரியார், திருவாவடுதுறை.
3. சிவஸ்ரீ. எஸ். உமாபதி சிவாசாரியார், திருவாவடுதுறை.

இத்தலம், கும்பகோணம் - மயிலாடுதுறை பிரதான சாலையிலுள்ள திருவாலங்காட்டிற்குத் தெற்கே 2 கி.மீ. தொலைவிலுள்ளது.



# ஆவடுதுறை ஆதிஎம்மான்

(சிவஞானசுவாமிகள் அடிப்பொடி சூ. குஞ்சிதபாதம்,
திருவாவடுதுறை ஆதீனப்புலவர், திருவாவடுதுறை)



(இக்கட்டுரையாசிரியர் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் திருவுள்ளப் பாங்கின்வண்ணம் ஆதீனப் பண்டார சாத்திரங்கள் பதினான்கிற்கும் உரையெழுதியுள்ளார். குருமகாசன்னிதானம் அவர்களிடம் சமயதீக்கை பெற்றுள்ளார். ஆதீனத்திலும், ஆதீன சைவத்திருமுறை நேர்முகப் பயிற்சி மையங்களிலும், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் சொற்பொழிவுகள் ஆற்றிவருகின்றார். இலங்கை, மலேசியா ஆகிய நாடுகளிலும் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.)

உலகுயிர் யாவும் ஈன்ற அன்னையும், ஞானமெய்ப் பயனாகிய முதல்வியும், நின்மலதுரியமாய் நிறைந்த விமலையும், ஆதிச் சிற்பரையுமாகிய உமையன்னை ஆவுரு நீங்கிப் பரமேசுவரனிடத்தில் சேர்ந்த திருத்தலம் திருவாவடுதுறையாகும். பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்தினின்று திருவருளால் உயிர்கள் விடுபட்டு ஞானமும் வீடு பேறும் பெறுதற்கு மிகவும் பொருத்தமான தலமாக இத்தலம் விளங்குகின்றது. இவ்வுண்மையினை உணர்த்தவே சிவபெருமான் தன் தாதன்மியச் சத்தியாகிய தேவியைப் பசுஉருவங் கொள்ளச்செய்து பின்னர் இத்திருத்தலத்தில் அதனை நீக்கித் தொன்மை வடிவங்கொள்ளச் செய்தார்.

> அருளது சத்தியாகும் அரன்தனக்(கு) அருளை இன்றித்
> தெருள்சிவம் இல்லை அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை

என்று சிவஞான சித்தியார் (239) உரைப்பதால் சத்தியாகிய தேவியார் சிவபிரானின் வேறல்லர் என்பது தெளிவாகும். ஆகையால் துறைசைத் திருத்தலத்தின் பெருமையினை யாவரும் உணர்ந்து உய்யும் பொருட்டு எம்பிரான் நிகழ்த்திய அருள்விளையாடலே அன்னையைப் பசுவடிவாக்கிப் பின் அவ்வடிவினை நீக்கியருளிய செய்கை என்பது உணரத்தக்கது.

உமையன்னை ஆவுரு நீங்கியதன் மூலம் இத்தலம் ஞானமாகிய அருட்செல்வத்திற்குரியது என்று அறிகின்றோம். மேலும் இத்தலம் பொருட் செல்வப்பேற்றுக்கும் உரியது என்ற உண்மையினை அந்த உமையன்னையிடம் ஞானப்பால் பெற்று உண்ட ஆளுடையபிள்ளையார் அருளிய உலவாக்கிழிப் பதிகத்தின் வரலாற்றின் மூலம் அறியமுடிகின்றது. திருவருளின் எளிவந்த ஒன்றாகிய குருவருள் மயமாக விளங்கக் கூடிய நம் திருவாவடுதுறை ஆதீனத்தின் மூலம் மாந்தர் பலரும் பொருட் செல்வமும், அருட்செல்வமும் ஒருங்கே பெற்று உய்ந்துவருதலையும் வரலாறு நமக்குக் காட்டிக் கொண்டிருக்கின்றது.

நாம் வாழும் உலகம் அசுத்தமாயா புவனமே ஆகும். ஆனாலும் நமது உலகத்தின் ஒருபகுதியாக உள்ள துறைசைத் திருத்தலம் சுத்தமாயையாக மதித்துப் போற்றத்தக்கது. இத்தகைய சிறப்பு நமது துறைசை நகருக்குத் தொன்றுதொட்டு இருந்து வருவதால் இதனை அநாதிமுத்திச் சேத்திரம் என்பர் என்று திருவாவடுதுறைப் புராணம் (191) கூறுகின்றது. ஆவடுதண்துறை நகரெங்கும் பசுவுருவில் வந்த அன்னையின் திருவடி பொருந்தியிருப்பதால் இத்தலம் மிகப்புனிதமானதாகும். திருமூலதேவர் இத்திருத்தலத்தில் தடுத்தாட்கொள்ளப் பெற்று மிகுந்த விருப்பத்துடன் போதியின் கீழ் எண்ணிலாக்கோடியுகமிருந்து இன்னும் ஆனந்தமுறுகின்றார். ஆதலால் தவவேட்கையுடையோர்

இத்தலத்திலே தவஞ் செய்தல் சிறந்தது. (தலபுராணம் :198) ஆகையினால் இத்திருத்தலத்தில் தவம், செபம், தியானம், பூசை, ஞானநூல் கற்றல், குருவருளைச் சார்ந்து சமய விசேடாதி தீக்கைகளைப் பெறுதல், விரதம், வேள்வி இயற்றுதல், தானம் கொடுத்தல் முதலானவற்றைச் செய்வோர் வேதாகமங்கள் விதித்த பயன்களை முழுமையாகப் பெறுவர். மேலும் இத்தலத்தில் ஆலயத் திருப்பணிகள், அடியார் தொண்டுகள் செய்வோர் தம் வினைகள் யாவும் நீங்கப் பெற்று எளிதாகச் சிவபதம் பெற்று உய்வர். ( தலபுராணம் : 200 -210)

சிவபிரான் தம்முடைய இச்சை ஞானக் கிரியைகளை உலகில் மூர்த்தி, தலம், தீர்த்தங்களாகப் பிரித்து அவற்றுள் உறைகின்றார். அம்முறையில் நோக்கும் போது ஆவடுதுறையில் அநாதியே தம்முடைய ஞானத்தை மூர்த்தியாகவும், கிரியையைத் தலமாகவும், இச்சையைத் தீர்த்தமாகவும் அமைத்துப் பொருந்தி அருளியுள்ளார். ஆதலால் இத்தீர்த்தம் இச்சாசத்தி வடிவாகும். கோமுத்தித் தீர்த்தம், அநாதிமுத்தித் தீர்த்தம், பவநாசதீர்த்தம், அருட் தீர்த்தம் என்று பலபெயர்கள் பெற்று விளங்கும் இப்புண்ணிய தீர்த்தம்.(தலபுராணம்: 216 - 217). இதனில் நீராடி அனுஷ்டானம், பூசை முதலானவற்றை இயற்றுவோருக்கே சிவகிருபை எளிதில் கைகூடும். அநேக சன்மங்களில் தொடர்ந்து வரும் பாவங்கள்யாவும் தொலையும். அமாவாசை, பிரதோஷம் முதலான புண்ணிய காலங்களில் நீராடினோர் எமனுலகம் எங்குள்ளது என்பதே அறியாமல் உயர்வானுலகு அடைவர். தை மாதத்து இரதசப்தமி நாளில் நீராடி, நீறுபூசி, அம்மையோடு அப்பன் இடபத்தில் எழுந்தருளும் அருட்கோலம் கண்டு வணங்கினோர் சிவமாம் தன்மைப் பெருவாழ்வு பெறுவர்.(218 -220) மாசி மகத்தில் நீராடி, ஆல நிழலில் இருந்து அஞ்செழுத்தோதி, தேவர்தொழும் துறைசை நாதனைப் பணிந்தால் பிரயாகையில் நூறு மகத்திற்குச் சென்று நீராடிய பயன்பெறுவர்.(223)இனி மூர்த்தியின் பெருமைகளைக் காண்போம்.

ஆவடுதுறையின் அளவற்ற சிறப்புகளுக்கெல்லாம் மூலகாரணமாய் திருக்கோயில் உள்ளே திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் மாசிலாமணி ஈசரின் மகத்துவம் எடுத்துரைக்கற்பாலதோ? நித்தமாய், அருவுருவங் கடந்த நின்மலத் தனிமுதலாய், சுத்தமாய், தனக்குவமை இல்லாத சொரூபமாய் விளங்கும் பரசிவம் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூவகைத் திருமேனிகளைக் கொள்ளும். அருவம் ஒன்றும், அருவுருவம் ஐந்தும், உருவம் இருபத்தைந்துமான இவையாவும் ஒன்றாகி நல்ல ஆறு குணங்கள் பெறுகின்ற கன்மசாதாக்கியம் என்னும் சதாசிவத்தன்மை கொள்ளும்.

தேவர்கள், மனிதர்கள் முதலிய உயிர்கள் செய்யும் வழிபாட்டினை ஏற்று அவர்களுக்கு விரும்புகின்ற சித்தி முத்திகளை அருளும் பொருட்டுச் சோதிலிங்க நற்குறியாகி உலகில் எண்ணிலாத தலங்களில் எழுந்தருளும் முன்னரே, பல்வேறு கிளைகளுக்கும் ஆதாரமான வேர்போல உலகத்துச் சிவலிங்கங்கள் யாவும் தன்பால் எழ நல்கும் மாசிலாமணியாகச் சிவலிங்கமாகி அநாதி முத்திச்சேத்திரத்தில் ஆலமுண்ட பெருமான் உயிர்களுக்கு அருள் செய்ய எழுந்தருளியுள்ளார்.

இந்த மாசிலாமணி ஈசரைத் தரிசித்தல் எப்படிப்பட்ட அனுபவமாக இருக்கும். நம்மைப் பிணித்துள்ள மலங்களெல்லாம் நடுக்கம் கொள்ளும் அனுபவமாக, நம் உள்ளத்தில் தெளிவும், இன்பமும் ஊற்றெடுக்கும் அனுபவமாக இருக்கும்.

அளவற்ற உயிர்களில் மொய்த்துக் கொண்டிருக்கும் ஆணவ இருளுக்கு ஒளிர்கதிர்த் திரளாகவும், வினையாகிய கடலையே உணவாகப்பெறும் வடவை நெருப்பாகவும், நாம் தளர்ந்து வருந்தும்படி எழ இருக்கின்ற அளவற்ற பிறவிகளாகிய காடுகளுக்குக் கனலாகவும் இருப்பது புகழ்வளரும் துறைசையில் முளைத்தெழுந்துள்ள மாசிலாமணி ஈசர் தரிசனம்.

அளவ தற்றபல் உயிரில் மொய்த்திடும்
ஆணவத்திமி ரத்தினுக் (கு)
ஒளிர்க திர்த்திர ளாம்வினைக்கடல்
உணவு பெற்றிடு வடவையாம்
தளர்வு றப்புணர் பவவனத்தொகை
தனையெரித்திடு கனலதாம்
வளர்பு கழ்த்துறை சையின்முளைத்தெழு
மாசிலாமணி தரிசனம்

காந்தம் இரும்பை ஈர்த்துத் தன்வசமாக்குதல் போல் தன்னையே வழிபடும் ஆன்மாவை ஈர்த்துத் தன்வசமாக்குவதும், நெருப்புத் தன்பால் அணுகிய இரும்பினை தன்மயமாக்கும்போது அவ்வாறு தன்மயமாக்குதற்குத் தடையாக அந்த இரும்பினிடத்துள்ள கறையை எரித்துப்போக்குமன்றோ அதுபோல ஆன்மாவை தன்மயமாக ஆக்கும்போது அவ்வாறு தன்மயமாதற்குத் தடையாக அந்த ஆன்மாவிடத்துள்ள மலத்தை ஒடுக்கி அதன் சக்தியைக் கெடுத்தருளுவதும், அவ்வாறு மலநீக்கம் பெற்ற ஆன்மாவைத் தன் அருளில் அடங்குமாறு ஒளித்து அவ்வான்மாவுக்குக் கரும்பு,முக்கனி, அமுது முதலிய பல சுவையான பொருள்களும் கலந்தவழித் தோன்றும் சுவை இச்சுவை எனச் சுட்டி அறியவாராமைபோல, சுட்டறிவுக்கு அதீதமான ஆனந்தத்தை அருள்வதுமாக இருப்பது வரம் கொடுத்து ஒளிரும் துறைசையில் எழுந்தருளியுள்ள மாசிலாமணி ஈசர் தரிசனம்.

இரும்பை ஈர்த்திடும் காந்தம் ஒத்தெணும்
உயிரை ஈர்த்(து) இரும் பினைஅனல்
ஒருங்கு வைப்பது போல்ம லத்தைஒ
ழித்(து)அ ருட்குள்ஒளித்(து) உயிர்க்(கு)
அருந்து நற்கரும்(பு) இனிய முக்கனி
அமுதை ஒத்தகம் மேவுமால்
வரங்கொடுத்தொளிர் துறைசை உற்றிடும்
மாசிலாமணி தரிசனம்

திருவும் மிக்கசெல் வமுமி குத்திடு
தேசு நற்புகழுந்திகழ்
அருளும் நட்புள துணையும் வித்தையும்
அரிய சித்தியும் முத்தியும்
பெருமை யுற்றுள பொருளும் புத்தியும்
பெருகு நற்றவ முந்தரு
மரகதத்திர(ள்) எனமுளைத்தொளிர்
மாசிலாமணி தரிசனம்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளுள் தத்தமக்குரிய நெறிகளில் நின்று வழிபடுவோர் தமக்குரிய பதமுத்திகளையும், பரமுத்தியினையும் பெற்று உய்யுமாறு அருள்வார் மாசிலாமணியீசர். சிவாலயத்திற்கு உபகாரமான பொருள்களை வழங்கி, “அத்தனே! எமை ஆளும் ஐயனே! பிறவிப்பிணியினைப் போக்கி அருள்வாய்” என்று தினம் சந்நிதியில் நின்று பக்தியோடு நினைந்து போற்றித் தம் சித்தமயல் அகன்று விண்ணோர் எதிர்கொள்ளச் சிவலோகம் சென்று வளமுடன் வாழ்வர் பலர்.

அவ்வக்காலங்களில் தரிசிப்போர் அந்தக் காலவிசேடத்திற்கு ஏற்ற பலன்களைப் பெறுவர். பிரதோஷ வேளையில் தரிசிப்போர் முன்னைப் பிறவிகளில் ஈட்டியுள்ள பாவங்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டு உய்வர். சோமாவாரத்தினில் கோமுத்தீசர் ஆலயத்தைச் சுற்றிவந்து நியமமுடன் பூமாலைகள் சாத்தி, நெய்த்தீபம் நிறைய ஏற்றி, "சேம நிதியே! அரனே! சிவனே!" என்று ஏத்திநின்று சேவிப்பவர்கள் அயன், திருமால் பதம் பெறுவர். அரனுருவும் பொருந்துவர்.சிவராத்திரியில் விரதமுடன் உபவாசமாய் இருந்து, துறைசைச் சிவனுக்கு அன்பாய்ப் பூசனைகள் புரிவித்து, இரவு முழுவதும் விழித்திருந்து, நான்கு சாமங்களிலும் உவகையோடு தரிசனம் செய்வோர்கள் கயிலாய மலையினை அடைந்து உலகமெல்லாம் போற்றும் சிவ கணநாதர் ஆவார்கள். பின்னர் உலகில் பிறக்கமாட்டார்கள். இன்னும் பலவாறு பணி செய்து வழிபடுவோர் பெறும் பேறுகளைத் தலபுராணத்தில் விளக்கமாகக் காணலாம்.

இவ்வாறு புத்தி பூர்வமாக வழிபடும் பக்குவ ஆன்மாக்களுக்கு மட்டுமா அருள்புரிகின்றார் கோமுத்தீசுவரர்.அவருடைய பரங்கருணைக்கு ஓர் எல்லையே கிடையாது. ஆம் திருக்கோயிலில் நடைபெறும் நாட்டியத்தைக் காணவோ, சங்கீதக் கச்சேரியைக் கேட்கவோ, சித்திரக் தொகுதியைக் காணும் விருப்பமுற்றோ, தன்னினும் வலியவன் துரத்துவதால் அவனுக்கு அஞ்சி ஒளிந்து கொள்ளவோ அல்லது மழைக்கு அஞ்சியோ கூட ஒருவன் ஆலயத்திற்குள் வந்து ஈடுபாட்டுடன் காணாமல் பராமுகமாய்த் தன்னைக் கண்டாலும் கூட மாசிலாமணியீசர் அவன்பால் திருநோக்கம் செய்வார். எப்படி? பசுவானது தான் ஈன்ற கன்றினைக் கருத்தோடு நோக்குதல் போலக் கருணை நோக்கம் செய்வார். அருளைப் பொழிவார். என்னே மாசிலாமணி ஈசரின் மாண்புறு கருணைத்திறம்!

நிருத்தமா டுதல்காண மழைக்கொதுங்கச்
சங்கீத நிலையைக் கேட்கத்
துரத்துமொரு வலியனுக்காய்ப் புகுந்தொளிக்கச்
சித்திரத்தின் தொகுதி காண
விருப்பொடுங்கோ யிற்குள்வந்தே பராமுகமாய்க்
கண்டிடினும் மிகும்ஆன் கன்றைக்
கருத்துறநேர் நோக்குதல்போல் மாசிலா
மணிநோக்கிக் கருணை கூரும்.

இவ்வாறு மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறந்து விளங்கும் ஆவடுதுறையில் குருவருள் பெருக்கும் திருவாவடுதுறை ஆதீனம் விளங்குதல் எத்துணைப் பொருத்தமாய் உள்ளது.

மூர்த்திதலம் தீர்த்தம் முறையாற் தொடங்கினர்க் கோர்
வார்த்தைச்சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே!

என்னும் தாயுமானசுவாமிகள் திருவாக்கிற்கு ஏற்ப அன்றோ இந்த அமைப்பு விளங்குகின்றது.

---

# THIRUVAVADUTHURAI GOMUKTHISVARAR TEMPLE

- Charithira Chemmal S. KRISHNAMOORTHY, Chennai.



Thiruvavaduthurai (alias Thurasai) is on the state highway in between Mayiladuthurai and Kumbakonam. It is 15 K.M. from Mayiladuthurai and 20 K.M. away from Kumbakonam in Nagapattinam District. Narasinganpettai is the nearest Railway Station to Thiruvavaduthurai Village.

***Nayanmars :***

This place is sung by the Thevaram hymnists of Pallava period. Saint Thirugnana Sambandar is said to have got a gift of gold (1000 gold coins or porkizhi) from Lord Siva of this place. Thirunavukkarasar alias Appar and Sundarar alias Vanthondar had also sung in praise of this holy place. Saint Thirumular did his penance for many years here and composed 3000 verses. They are called Thirumandram songs. The shrine for the celebrated Saint Thirumullar lies in the western end at the second prakaram projecting into the third prakara.

Thirumaligai Thevar also dwelled here and sang Thiruvisaippas. His Gurumurtham (samadhi) is located in the Thiruvavaduthurai Mutt north east of Namasivaya Murthy's (Samadhi) Shrine. Manickavasaga Swamigal alias Thiruvaadavur Adigal mentions about this place in his Thiruvasagam as Kogazhi. Kogazhi means Avaduthurai. The prefix Thiru is added in Avaduthurai. So Lord Siva is called Thiruvavaduthurai Udaiyar. Most of the inscriptions mention the above name.

**Goddess :**

Tradition has it that Goddess Parvathi Devi as ordained by her husband Lord Siva assumed the form of a cow and sanctified this place. She rigorously did penance towards Him. Answering Her penance. He restored Parvathi Devi the original form and glory.

**Oppilamulai Amman :**

The Lord's consort here is known as Oppilamulai Amman (Adhula Gujambal). Thiruvavaduthurai Udaiyar is known as Gomukthiswarar. This place is called Navakodi Siddharpuram because of its association with the Navakodi Siddhar.

The Gomukthiswarar temple is said to have been built before periods of Appar and Sambanda Nayanmars. That is 1400 years ago.

***Katralipiran :***

During the period of Paranthaga Cholan I one Katrali Pichan renovated this temple as Katrali (Granite stone temple). There are number of inscriptions in this temple. Some of them can be assigned to Parandaga I. In an inscription of the 2nd year of Parakesarivarma the assembly of Sathanur, in whose jurisdiction the temple was situated, makes a sale of land taxfree to make provision for the maintanance of a coconut and flower-garden for the temple for the merit of the donor, a member of Adhitya "Panmatherinja" Kaikolar. It has to be assigned to either "Arinjaya" or "Uththamachola". (S.R. Balasubramanyan mentioned he is Parantaka I. "The Early Chola Temples") In an inscription of the third year of parakesari varman one Katrali Pichan purchased some lands in the neighbouring

village of Sirtaraichur and alloted the same among the singers of hymns, those bringing water for the sacred bath of the God and the pipers of the temple. Another endowment of Thirukkatrali Pichan was make in the 345th year of Parandaka, for the maintenance of servants who blow the "conch" and horn, of the "parasol" and for those who looked after the flower garden. (125 of 1925)

**Potrait scultures :**

An equaliy signification feature of this temple is the carving of momenclature potrait sculpture of danors on the walls of the temple. Here are a few of them.

1. Figure of Ktrali Pichan worshipping a linga, on the eastern side of the south wall of the garbhargriha next to Dakshninamoorthi (132 of 1925) ghosta.
2. Ghosta figures of Ambalavanan, Thiruvisalur alias Thirunavukkaraiyan, a devotee of Thiruvavaduthurai Alwar.
3. Figure of Ilaya Thirunavukkaraiyan, the devotee of Katrali Piranar, a standing figure with palms held up in adoration. (131 of 1925).
4. Figure of Daman Ambalavanan alias Namasivayam of Sitrodai in Thiraimoor nadu and two standing figures, one of Eluvanchandra of Vamampusai who constructed a tier (padai) of the temple, and other Nakkan Vannathodigal, a maid servant of the place. Nakkan inscription is on the northern wall of the first parkara next to Durgai Amman Statue.

**Bronzes**

Another interesting feature about this temple is that its inscriptions (104-117 of 1925) furnish a list of the gold and silver vessels and of the metallic images with deities and their measurement similar to the descriptions found inscribed in laterdays in the Thanjavur temple built by Rajaraja I. The bronze icrons listed below are said to have been installed here.

1. The Lord of Dancing with Nambirattiyar.
2. Chandrasekare Devar with his Nambirattiyar.
3. Tribhuvana Sundarar.
4. Ganapathi.
5. Chandrasekara Devar.
6. Kshetra Pala Devar.
7. Rishabhavahana Deavr and his consort.
8. Pichcha Devar.
9. Ardharani Devar.
10. Dakshinamoorthi.
11. Astra- Devar.
12. Chandeswarar.
13. Thirunavukkarasar.
14. Sambandar.
15. Nambi Arurar.
16. Thirukkatrali - Pichan.

(Early Chola Temples pages 50-53 S.R. Balasubramaniyam Orient Longman Limited.)

**Parantaka I**

King Parantaka I is said to have donated 500 Kalanji of gold for completing the construction of temple from Kudappadai upwards. The only section below the extrapolate, which simulates Kudam (ie.) pot is the base moulding above jagati. This moulding is called in sanskrit as kumudam. So it is evident that Kudappadai is meant to indicated Kumudam.

**Temple architecture**

The adhistana of this temple shows some features, which were not present in the earlier temples. It consists of the jagati which itself rests on lotus designed inter section bound again 1) a padma 2) a kampa course 3) Kudapadai, a convex shaped tier clasped by lotus designed course above and below 4) The kanta recess 5) Pattika also bound by lotus desigined courses and 6 ) a Vari from which raises the wall. The clasping of Jagati, Kudam, pattiga by the lotus desiged course is a new feature.

The plain of the Vimana stones slightly projecting central bay on all the three walls. The base tier (jagati) the central convex tier (kudam) and plain rectangular moulding pattiga are all not only bound by lotus designs above and below each of the three items but also divided by a thin rectangular moulding forming the nex tier (kanta). This arrangement is repeated on all the bases of each wall. The plaster of the wall of the ninches and also on the cornices contail floral decorations below the kalasa. Besides the plasters of the false ninches contain clearly carved friezes depicting various mythothological seenes placed below the kalasa and above the floral decoration. The ninches on the walls are occupied respectively by Dakshinamoorthi on the south; Lingodhbava on the west and Brahma on the north, a typical placement of the King's times. The ardhamandapa contains in the ninches on the south wall the images of Vinayaka and Agastya; and Durga is on the north wall. The insertion of the image Agastya is notable new feature. The pillars and plasters in the Ardhamandapa show roll corbels throated and with median band. (S.Swaminathan. The Early Cholas history. Art and Culture)

The presiding deity of this temple Komukthiswara (or) Masilamani Iswarar, is a three feet high Linga installed facing east. In a separate sanctum facing souch, stands His divine consort, Oppilamulai Amman, whose images is really a master piece of art. There are many sub deities in the temple complex. Somaskandar idol is kept in a separate shrine. Number of bronzes are kept in the temple. Nataraja idol is a very big one.

The temple which covers on an area of about 9.70 acres has a big tower (Rajagopuram) in the front. Pipal tree is the Sidhala Viruksham of this temple. In the Later Chola period some of the Saiva mutts were functioning in the Thiruvavaduthurai according to some inscriptions. Some of them will be mentioned later.

The Garbhagraha is a square (5.94 m.wide) There is one gigantic Nandi in front the sanctum. This temple subsequently had several additions and renovations made by the successive pontiffs of Thiruvavaduthurai Mutt. The figures of Pontiffs are also seen in the temple. This temple has three gateways. Eastern gateway is the main entrance, while the southern entrance is adjourning to number of nomenclatured sculptures are installed on both the sides. Nourthern gateway is also a big one. There is a big arch in the main road. Between temple and arch, we can see some of the Samadhi temples called Gurumurthams of past pontiffs.

One of the Thiruvavaduthurai temple inscriptions speaks about ten mutts including a drama theatre. The following madams (mutts) are mentioned in Chola inscriptions.

Munnutru Irupathu Naavalar Madam - In this mutt, medical students stayed and studies. Sarvasiva Pandithar Madam - Sarvasiva Pandithar was the guru of Gangai Konda Cholan alias Rajendra Cholan, Thirunila Vidangan Madam, Thiruveethi Madam, Sivaloganayaga Madam. Naarpathennayiravar Madam, Perunthiruvatti Arasalai (Madam), Snakaradevan Arasalai Madam, Sarvadevan Madam, Naanaavidha Natana Saalai - Aryakuthu and Thirumalar drama had been performed in this drama theatre. One of the inscription of Thirukkodikaval mentions about a sage namely Thiruvenkada udaiyar, who styed in Thiruvavaduthurai mutt and worshipped the Lord in Thirukkodikaval temple. This place is very near Thiruvavaduthurai Village.

Thirumaligai Devar, who was the author of first Thiru Visaippa lived in the Thiruvavaduthurai mutt. He was called Jayandan in Thiruvizhimizhalai inscription. He built Maligai madams in three places (Thillai, Thiruvidaimaruthur and Thiruvavaduthurai). He belongs to 10th Century A.D. Siddar Sivaprakasar guru of Namasivaya Desikar might have been dwelled in Thiruvavaduthurai Maligai Madam. Namasivaya Desikar who was the first pontiff of Thiruvavaduthurai Adheenam, might have renovated this Maligai madam. There was a Maligaimadam in a Nallur also it belongs to 13th C.A.D.

# திருவாவடுதுறைத் திருப்பதிகங்கள்



## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

நாலடி மேல்வைப்பு.
பண் - காந்தாரப் பஞ்சமம்
திருச்சிற்றம்பலம்

இடரினும் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழுதெழு வேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்று எமக்கு இல்லையேல்
அதுவோஉனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 1

வாழினும் சாவினும் வருந்தினும் போய்
வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 2

நனவினும் கனவினும் நம்பாஉன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனல்எரி அனல்புல்கு கையவனே.
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 3

தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்றாதென் நாக்
கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதில் எரிஎழ முனிந்தவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 4

கையது வீழினும் கழிவுறினும்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 5

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாய்உன்னடியலால் ஏத்தாதென்நா
ஐந்தலை யரவுகொண்டரைக்கசைத்த சங்கரனே
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 6

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா
ஒப்புடை ஒருவனை உருவழிய
அப்படி அழலெழ விழித்தவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 7

பேரிடர் பெருகியோர் பிணிவரினும்
சீருடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி யிராவணனை
ஆரிடவம் படவரை அடர்த்தனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மல ரடியலால் உரையாதென்நா
கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 9

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் னடியலால் அரற்றாதென்நா
புத்தரும் சமணரும் புறன்உரைக்கப்
பத்தர்கட் கருள் செய்து பயின்றவனே.
இதுவோஎமை ஆளுமாறு ஈவதுஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்அருள் ஆவடுதுறை அரனே. 10

அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் ஏறுவர் நிலமிசை நிலையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியவை

**திருநேரிசை**

திருச்சிற்றம்பலம்

மாயிரு ஞாலமெல்லா மலரடி வணங்கும்போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க்கம்பொன்
ஆயிரங் கொடுப்பர்போலும் ஆவடு துறையனாரே. 1

மடந்தைபா கத்தர்போலு மான்மறிக் கையர்போலும்
குடந்தையிற் குழகர்போலுங் கொல்புலித் தோலர்போலும்
கடைந்தநஞ் சுண்பர்போலுங் காலனைக் காய்வர்போலும்
அடைந்தவர்க் கன்பர்போலும் ஆவடு துறையனாரே. 2

உற்றநோய் தீர்ப்பர்போலு முறுதுணை யாவர்போலும்
செற்றவர் புரங்கண்மூன்றுந் தீயெழச் செறுவர்போலும்
கற்றவர் பரவியேத்தக் கலந்துலந் தலந்துபாடும்
அற்றவர்க் கன்பர்போலும் ஆவடு துறையனாரே. 3

மழுவமர் கையர்போலும் மாதவள் பாகர்போலும்
எழுநுனை வேலர்போலும் என்புகொண் டணிவர்போலும்
தொழுதெழுந் தாடிப்பாடித் தோத்திரம் பலவுஞ்சொல்லி
அழுமவர்க் கன்பர்போலும் ஆவடு துறையனாரே. 4

பொடியணி மெய்யர்போலும் பொங்குவெண் ணூலர்போலும்
கடியதோர் விடையர்போலுங் காமனைக் காய்வர்போலும்
வெடிபடு தலையர்போலும் வேட்கையாற் பரவுந்தொண்டர்
அடிமையை அளப்பர்போலும் ஆவடு துறையனாரே. 5

வக்கர னுயிரைவவ்வக் கண்மலர் கொண்டுபோற்றச்
சக்கரங் கொடுப்பர்போலுந் தானவர் தலைவர்போலும்
துக்கமா மூடர்தம்மைத் துயரிலே வீழ்ப்பர்போலும்
அக்கரை யார்ப்பர்போலும் ஆவடு துறையனாரே. 6

விடைதரு கொடியர்போலும் வெண்புரி நூலர்போலும்
படைதரு மழுவர்போலும் பாய்புலித் தோலர்போலும்
உடைதரு கீளர்போலு முலகமு மாவர்போலும்
அடைபவ ரிடர்கள்தீர்க்கும் ஆவடு துறையனாரே. 7

முந்திவா னோர்கள்வந்து முறைமையால் வணங்கியேத்த
நந்திமா காளரென்பார் நடுவுடை யார்கணிற்பச்
சிந்தியா தேயொழிந்தார் திரிபுர மெரிப்பர் போலும்
அந்திவான் மதியஞ்சூடும் ஆவடு துறையனாரே. 8

பானம ரேனமாகிப் பாரிடந் திட்டமாலும்
தேனமர்ந் தேறுமல்லித் திசைமுக முடையகோவும்
தீனரைத் தியக்கறுத்த திருவுரு வுடையர்போலும்
ஆனரை யேற்றர்போலும் ஆவடு துறையனாரே. 9

பார்த்தனுக் கருள்வர்போலும் படர்சடை முடியர்போலும்
ஏத்துவா ரிடர்கள்தீர இன்பங்கள் கொடுப்பர்போலும்
கூத்தராய்ப் பாடியாடிக் கொடுவலி யரக்கன்றன்னை
ஆர்த்தவா யலறுவிப்பார் ஆவடு துறையனாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

**திருநேரிசை**

திருச்சிற்றம்பலம்

மஞ்சனே மணியுமானாய் மரகதத் திரளுமானாய்
நெஞ்சுளே புகுந்துநின்று நினைதரு நிகழ்வினானே
துஞ்சும்போ தாகவந்து துணையெனக் காகிநின்று
அஞ்சலென்று அருளவேண்டும் ஆவடுதுறை உளானே. 1

நானுகந் துன்னைநாளும் நணுகுமா கருதியேயும்
ஊனுகந் தோம்புநாயே னுள்ளுற வைவர்நின்றார்
தானுகந் தேயுகந்த தகவிலாத் தொண்டனேனான்
ஆனுகந் தேறுவானே ஆவடு துறையுளானே. 2

கட்டமே வினைகளான காத்திவை நோக்கியாளாய்
ஒட்டவே யொட்டிநாளு முன்னையுள் வைக்கமாட்டேன்
பட்டவான் றலைகையேந்திப் பலிதிரிந் தூர்கடோறும்
அட்டமா வுருவினானே ஆவடு துறையுளானே. 3

பெருமைநன் றுடையதில்லை யென்றுநான் பேசமாட்டேன்
ஒருமையா லுன்னையுள்கி யுகந்துவா னேறமாட்டேன்
கருமையிட் டாயவூனைக் கட்டமே கழிக்கின்றேனான்
அருமையா நஞ்சமுண்ட ஆவடு துறையுளானே. 4

துட்டனாய் வினையதென்னுஞ் சுழித்தலை யகப்பட்டேனைக்
கட்டனா ரைவர்வந்து கலக்காமைக் காத்துக்கொள்வாய்
மட்டவிழ் கோதைதன்னை மகிழ்ந்தொரு பாகம்வைத்து
அட்டமா நாகமாட்டும் ஆவடு துறையுளானே. 5

காரழல் கண்டமேயாய் கடிமதிற் புரங்கள்மூன்றும்
ஓரழ லம்பினாலே யுகைத்துத்தீ யெரியமூட்டி
நீரழற் சடையுளானே நினைப்பவர் வினைகள்தீர்ப்பாய்
ஆரழ லேந்தியாடும் ஆவடு துறையுளானே. 6

செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி தெரியமாட்டேன்
குறியிலேன் குணமொன்றில்லேன் கூறுமா கூறமாட்டேன்

நெறிபடு மதியொன்றில்லேன் நினையுமா நினையமாட்டேன்
அறிவிலே னயர்த்துப்போனேன் ஆவடு துறையுளானே. 7

கோலமா மங்கைதன்னைக் கொண்டொரு கோலமாய
சீலமே யறியமாட்டேன் செய்வினை மூடிநின்று
ஞாலமா மிதனுளென்னை நைவியா வண்ணம்நல்காய்
ஆலமா நஞ்சமுண்ட ஆவடு துறையுளானே. 8

நெடியவன் மலரினானுந் நேர்ந்திரு பாலுநேடக்
கடியதோ ருருவமாகிக் கனலெரி யாகிநின்ற
வடிவின வண்ணமென்றே யென்றுதாம் பேசலாகார்
அடியனே னெஞ்சினுள்ளார் ஆவடு துறையுளானே. 9

மலைக்குநே ராயரக்கன் சென்றுற மங்கையஞ்சத்
தலைக்குமேற் கைகளாலே தாங்கினான் வலியைமாள
உலப்பிலா விரலாலுன்றி யொறுத்தவற் கருள்கள் செய்து
அலைத்தவான் கங்கைசூடும் ஆவடு துறையுளானே. 10

திருச்சிற்றம்பலம்

## திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நிறைக்க வாலிய ளல்லளிந் நேரிழை
மறைக்க வாலிய ளல்லளிம் மாதராள்
பிறைக்க வாலப் பெரும்புன லாவடு
துறைக்க வாலியோ டாடிய சுண்ணமே. 1

தவள மாமதிச் சாயலோர் சந்திரன்
பிளவு சூடிய பிஞ்ஞக னெம்மிறை
அளவு கண்டல ளாவடு தண்டுறைக்
களவு கண்டன ளொத்தனள் கன்னியே. 2

பாதிப் பெண்ணொரு பாகத்தன் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி ஆவடு தண்டுறை மேவிய
சோதி யேசுட ரேயென்று சொல்லுமே. 3

கார்க்கொண் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொண் மென் முலை சேர்ந்திறு மாந்திவள்
ஆர்க்கொள் கொன்றைய னாவடு தண்டுறைத்
தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே. 4

கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேயெனும் பண்பினன்
அருகு சென்றில ளாவடு தண்டுறை
ஒருவ னென்னை யுடையகோ வென்னுமே. 5

குழலுங் கொன்றையுங் கூவிள மத்தமும்
தழலுந் தையலோர் பாகமாத் தாங்கினான்
அழக னாவடு தண்டுறை யாவெனக்
கழலுங் கைவளை காரிகை யாளுக்கே. 6

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சு வாளல்ல ளாவடு தண்டுறை
மஞ்ச னோடிவ ளாடிய மையலே. 7

பிறையுஞ் சூடிநற் பெண்ணொ டாணாகிய
நிறையும் நெஞ்சமும் நீர்மையும் கொண்டவன்
அறையும் பூம்பொழி லாவடு தண்டுறை
இறைவ னென்னை யுடையவ னென்னுமே. 8

வையந் தானளந் தானும் அயனுமாய்
மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினான்
ஐய னாவடு தண்டுறை யாவெனக்
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. 9

பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்
மிக்க வாளரக் கன்வலி வீட்டினான்
அக்க ணிந்தவ னாவடு தண்டுறை
நக்க னென்னுமிந் நாணிலி காண்மினே. 10

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

நம்பனை நால்வேதங் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் றன்னைக்
கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை யாவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 1

மின்னானை மின்னிடைச்சே ருருமி னானை
வெண்முகிலாய் எழுந்துமழை பொழிவான் றன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி
என்னானை யெந்தை பெருமான் றன்னை
இருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே
அன்னானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 2

பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின்
தொத்தினைத் தூநெறியாய் நின்றான் றன்னைச்
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும்
அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 3

பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை யிடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
கிளைக்கின்றேற் கக்கரைக்கே யேற வாங்குந்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 4

ஒருமணியை உலகுக்கோ ருறுதி தன்னை
உதயத்தி னுச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப்
பவித்திரனைப் பசுபதியைப் பவளக் குன்றைத்
திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பி னின்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 5

ஏற்றானை யெண்டோ ளுடையான் றன்னை
யெல்லி நடமாட வல்லான் றன்னைக்
கூற்றானைக் கூற்ற முதைத்தான் றன்னைக்
குரைகடல்வாய் நஞ்சுண்ட கண்டன் றன்னை
நீற்றானை நீளரவொன் றார்த்தான் றன்னை
நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை
ஆற்றானை ஆவடுதண்டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 6

கைம்மான மதகளிற்றை உரித்தான் றன்னைக்
கடல்வரைவா னாகாச மானான் றன்னைச்
செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயா னானை
எம்மானை என்மனமே கோயி லாக
இருந்தானை என்புருகும் அடியார் தங்கள்
அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 7

மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை
வெள்ளிடையைத் தண்ணிழலை வெந்தீ யேந்துங்
கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த
கண்ணானைக் கண்மூன் றுடையான் றன்னை
பையா டரவமதி யுடனே வைத்த
சடையானைப் பாய்புலித்தோ லுடையான் றன்னை
ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 8

வேண்டாமை வேண்டுவது மில்லான் றன்னை
விசயனைமுன் னசைவித்த வேடன் றன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட வுதைசெய்த மைந்தன் றன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 9

பந்தணவு மெல்விரலாள் பாகன் றன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் றன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் றன்னைச்
செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பிற் புரிவெண்ணூல் திகழப் பூண்ட
அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 10

தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் றன்னைத்
தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான் றன்னைப்
பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பெருவலியால் மலையெடுத்த அரக்கன் றன்னை
நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை
நீசனேன் உடலுறுநோ யான தீர
அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. 11

திருச்சிற்றம்பலம்

**திருத்தாண்டகம்**

திருச்சிற்றம்பலம்

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதீ மிக்க
உருவேஎன் னுறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 1

மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவின்
மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன்
எம்பெருமான் திருவடியே எண்ணி னல்லால்
மேற்றான் நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே யிடங்கொடுத்து நாளும் நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 2

வரையார் மடந்தை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம்
உரையா உயிர்போகப் பெறுவே னாகில்
உறுநோய்வந் தெத்தனையு முற்றா லென்னே
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே யேத்து மன்பர்க்
கரையா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 3

சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச்
சிலைவளைவித் துமையவளை யஞ்ச நோக்கிக்
கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடுங்
களிறுரித்த கங்காளா எங்கள் கோவே
நிலத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்
நில்லா வுயிரோம்பு நீத னேநான்
அலுத்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 4

நறுமா மலர்கொய்து நீரில் மூழ்கி
நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித்
துறவாத துன்பந் துறந்தேன் றன்னைச்
சூழுலகில் ஊழ்வினைவந் துற்றா லென்னே
உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரைநீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 5

கோன்நா ரணன் அங்கந் தோள்மேற் கொண்டு
கொழுமலரான் தன்சிரத்தைக் கையி லேந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கங்காள வேடராய் எங்குஞ் செல்வீர்
நானார் உமக்கோர் வினைக்கே டனே
நல்வினையுந் தீவினையு மெல்லாம் முன்னே
ஆனாய் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 6

உழையுரித்த மானுரிதோ லாடை யானே
உமையவள்தம் பெருமானே இமையோர் ஏறே
கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா
கயிலாய மலையானே உன்பா லன்பர்
பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன்
கடனன்றே பேரருளுன் பால தன்றே
அழையுறுத்து மாமயில்க ளாலுஞ் சோலை
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 7

உலந்தார் தலைகலனொன் றேந்தி வானோ
ருலகம் பலிதிரிவாய் உன்பா லன்பு
கலந்தார் மனங்கவருங் காத லானே
கனலாடுங் கையவனே ஐயா மெய்யே
மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காய
மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்
அலந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 8

பல்லார்ந்த வெண்டலை கையி லேந்திப்
பசுவேறி யூருரன் பலிகொள் வானே
கல்லார்ந்த மலைமகளும் நீயு மெல்லாங்
கரிகாட்டி லாட்டுகந்தீர் கருதீ ராகில்
எல்லாரு மென்றன்னை யிகழ்வர் போலும்
ஏழையமண் குண்டர்சாக் கியர்க ளொன்றுக்
கல்லாதார் திறத்தொழிந்தேன் அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 9

துறந்தார்தந் தூநெறிக்கண் சென்றே னல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயே னல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லாற்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் றன்னைச்
செறுவரைக்கீ ழடர்த்தருளிச் செய்கை யெல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சே லென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. 10

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

**பண் - தக்கேசி**

திருச்சிற்றம்பலம்

மறைய வன்ஒரு மாணிவந் தடைய
வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவன் எம்பெரு மான்என் றெப்போதும்
ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 1

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 2

திகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வான்ஒரு நீள்மலர் குறையப்
புகழி னால்அவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன்
திகழு நின்திருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 3

வீரத் தால்ஒரு வேடுவ னாகி
விசைத்தொர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தால்உன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 4

ஒக்க முப்புரமும் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னால்அருள் ஈந்தமை யறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதியா ஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மானுனை யடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 5

கங்கை வார்சடை யாய்கண நாதா
கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சலென்று அருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 1

மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்லடு நோயாற்
கருத்த ழிந்துனக் கேபொறை யானேன்
தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 2

ஒப்பி லாமுலை யாள்ஒரு பாகா
உத்தமா மத்தம் ஆர்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்ய வல்லானே
செப்ப ஆல்நிழற் கீழ்இருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 3

கொதியி னால்வரு காளிதன் கோபங்
குறைய ஆடிய கூத்துடை யானே
மதியி லேன்உடம் பில்லடு நோயான்
மயங்கி னேன்மணி யேமண வாளா
விதியி னால்இமை யோர்தொழு தேத்தும்
விகிர்த னேதிரு வாவடு துறையுள்
அதிப னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 4

வந்த வாள்அரக் கன்வலி தொலைத்து
வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே

வெந்த வெண்பொடிப் பூசவல் லானே
வேட னாய்விச யற்கருள் புரிந்த
இந்து சேகர னேஇமை யோர்சீர்
ஈச னேதிரு வாவடு துறையுள்
அந்த ணாஎனை அஞ்சல் என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 5

குறைவி லாநிறை வேகுணக் குன்றே
கூத்த னேகுழைக் காதுடை யானே
உறவி லேன்உனை யன்றிமற் றடியேன்
ஒருபி ழைபொறுத் தால்இழி வுண்டே
சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்
செம்பொ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 6

வெய்ய மாகரி ஈருரி யானே
வேங்கை யாடையி னாய்விதி முதலே
மெய்ய னேஅட லாழியன் றரிதான்
வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா
செய்ய மேனிய னேதிக ழொளியே
செங்க ணாதிரு வாவடு துறையுள்
ஐய னேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 7

கோதி லாஅமு தேஅருள் பெருகு
கோல மேஇமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே
பசுப தீபர மாபர மேட்டீ
தீதி லாமலை யேதிரு வருள்சேர்
சேவ காதிரு வாவடு துறையுள்
ஆதி யேஎனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 8

வான நாட னேவழித் துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாஎயி றாமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயிர் ஆட் டுகந் தானே
தேவ னேதிரு வ[illegible]டு துறையுள்
ஆனை யேஎனை அஞ்ச[illegible]என் றருளாய்
ஆர்எனக்கு உறவு அமரர்கள் ஏறே. 9

வெண்ட லைப்பிறை கொன்றையும் அரவும்
வேரி மத்தமும் விரவிமுன் முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை
ஈச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்பன்
அணுக்கவன்றொண் டன்ஆர்வத்தால் உரைத்த
தண்ட மிழ்மலர் பத்தும்வல் லார்கள்
சாத லும்பிறப் புமறுப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

## சேந்தனார் திருவிசைப்பா - திருவாவடுதுறை

**பண் - பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப்
புகழாளர் ஆயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர்
மிகுகா விரிக்கரை மேய
ஐயா திருவாவடுதுறை
அமுதேயென் றுன்னை அழைத்தக்கால்
மையார் தடங்கண் மடந்தைக்கொன்று
அருளா தொழிவது மாதிமையே. 1

மாதி மணங்கம ழும்பொழில்
மணிமாட மாளிகை வீதிசூழ்
சோதி மதிலணி சாந்தைமெய்ச்
சுருதி விதிவழி யோர்தொழும்
ஆதி அமரர் புராணனாம்
அணிஆ வடுதுறை நம்பிநின்ற
நீதி அறிகிலள் பொன்னெடுந்
திண்தோள் புணர நினைக்குமே. 2

நினைக்கும் நிரந்த னேயென்றும்
நிலாக்கோலச் செஞ்சடைக் கங்கைநீர்
நனைக்கும் நலங்கிளர் கொன்றைமேல்
நயம்பேசும் நன்னுதல் நங்கைமீர்
மனக்கின்ப வெள்ள மலைமக்கள்
மணவாள நம்பிவண் சாந்தையூர்

தனக்கின்பன் ஆவடு தண்டுறைத்
தருணேந்து சேகரன் என்னுமே. 3

தருணேந்து சேகர னேயெனுந்
தடம்பொன்னித் தென்கரைச் சாந்தையூர்ப்
பொருணேர்ந்த சிந்தை யவர்தொழப்
புகழ்செல்வ மல்குபொற் கோயிலுள்
அருணேர்ந் தமர்திரு வாவடு
துறையாண்ட ஆண்டகை யம்மானே
தெருணேர்ந்த சித்தம் வலியவா
திலக நுதலி திறத்திலே. 4

திலக நுதல்உமை நங்கைக்கும்
திருவாவடுதுறை நம்பிக்கும்
குலக அடியவர்க் கென்னையாட்
கொடுத்தாண்டு கொண்ட குணக்கடல்
அலதொன் றறிகின்றி லேமெனும்
அணியும்வெண் ணீறஞ் செழுத்தலால்
வலதொன் றிலர்இதற் கென்செய்கேன்
வயல் அந்தகண் சாந்தையர் வேந்தனே. 5

வேந்தன் வளைத்தது மேருவில்
அரவுநாண் வெங்கணை செங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப்புர வித்தேர்ச்
சாந்தை முதல் அயன் சாரதி
கதிஅருள் என்னுமித் தையலை
ஆந்தண் திருவா வடுதுறை
யான்செய்கை யார் அறி கிற்பாரே. 6

கிற்போம் எனத்தக்கன் வேள்விபுக்கு
எடுத்தோடிக் கெட்ட அத் தேவர்கள்
சொற்போலும் மெய்ப்பயன் பாவிகாள்
என்சொல்லிச் சொல்லுமித் தூமொழி
கற்போல் மனங்கனி வித்தஎம்
கருணாலயா வந்திடாய் என்றால்
பெற்போ பெருந்திரு வாவடு
துறையாளி பேசாது ஒழிவதே. 7

ஒழிவொன்று இலா உண்மை வண்ணமும்
உலப்பிலன் ஊறின்ப வெள்ளமும்
மொழிவொன்றி லாப்பொன்னித் தீர்த்தமும்
முனிகோடி கோடியா மூர்த்தியும்
அழிவொன்றி லாச்செல்வச் சாந்தையூர்
அணிஆ வடுதுறை ஆடினாள்
இழிவொன்றி லாவகை யெய்திநின்று
இறுமாக்கும் என்இள மானளே. 8

மானேர் கலைவளை யுங்கவர்ந்து
உளங்கொள்ளை கொள்ள வழக்குண்டே
தேனே அமுதேஎன் சித்தமே
சிவ்லோக நாயகச் செல்வமே
ஆனேஅ லம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை அன்பர்தம்
கோனேநின் மெய்யடி யார்மனக்
கருத்தை முடித்திடுங் குன்றமே. 9

குன்றேந்தி கோகன கத்தயன்
அறியா நெறியென்னைக் கூட்டினாய்
என்றேங்கி ஏங்கி அழைக்கின்றாள்
இளவல்லி எல்லைக டந்தனள்
அன்றே அலம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை யாடினாள்
நன்றே இவள்நம் பரமல்லள்
நவலோக நாயகன் பாலளே. 10

பாலும் அமுதமும் தேனுமாய்
ஆனந்தந் தந்துள்ளே பாலிப்பான்
போலும்என் ஆருயிர்ப் போகமாம்
புரகால காம புராந்தகன்
சேலுங் கயலுந் திளைக்கும் நீர்த்
திருவா வடுதுறை வேந்தனோ (டு)
ஆலு மதற்கே முதலுமாம்
அறிந்தோம் அரிவைபொய் யாததே. 11

திருச்சிற்றம்பலம்

## இத்தலம் தொடர்பான திருமந்திரப் பாடல்களில் சில ...

மாலாங்க னேஇங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. 77

நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவன் ஆவடு தண்டுறை
சீருடை யாள்பதம் சேர்ந்திருந் தேனே. 78

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே. 79

இருந்தேன் ;இக்காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே. 80

பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே. 81

ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பால் ஆட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே. 82

ஓதிய வெண்ணெண் கலையின் உயர்கலை
ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமும் தத்துவ மாய்நிற்பள்
ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே. 1121

ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடும்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே. 1122

## இத்தலம் தொடர்புடைய பெரியபுராணப் பாடல்கள்

### திருஞானசம்பந்தர் புராணம்

......நம்ம லத்துயர் தீர்க்கவந்து அருளிய ஞானச்
செம்ம லார்திரு ஆவடு துறையிணைச் சேர்ந்தார்.... 417

மூவ ருக்குஅறி வரும்பொருள் ஆகிய மூலத்
தேவர் தம்திரு ஆவடு துறைத்திருத் தொண்டர்
பூஅ லம்புதண் பொருபுனல் தடம்பணைப் புகலிக்
காவ லர்க்குஎதிர் கொள்ளும் ஆதரவுடன் கலந்தார். 418

வந்து அணைந்தவர் தொழாமுனம் மலர்புகழ்ச் சண்பை
அந்த ணர்க்கெலாம் அருமறைப் பொருளனை வந்தார்
சந்த நித்திலச் சிவிகைநின்று இழிந்துஎதிர் தாழ்ந்தே
சிந்தை இன்புற இறைவர்தம் கோயில்முன் சென்றார். 419

நீடு கோபுரம் இறைஞ்சி உள் புகுந்துநீள் நிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
ஆடும் ஆதியை ஆவடு துறையுள் ஆர் அமுதை
நாடு காதலில் பணிந்து எழுந்து அருந்தமிழ் நவின்றார். 420

அன்பு நீடிய அருவிகண் பொழியும் ஆர் வத்தால்
முன்பு போற்றியே புறம்புஅணை முத்தமிழ் விரகர்
துன்பு போம்மனத் திருத்தொண்டர் தம்முடன் தொழுதே
இன்பம் மேவிஅப் பதியினில் இனிது அமர்ந்து இருந்தார். 421

மேவி அங்குஉறை நாளினில் வேள்விசெய் வதனுக்கு
ஆவ தாகிய காலம்வந்து அணைவுற அணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்குஅரும் பொருள்பெற எதிர்நின்று புகன்றார். 422

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைத்துஅருள் முன்னி
அந்தம் இல்பொருள் ஆவன ஆவடு துறையுள்
எந்தை யார்அடித் தலங்களன் றோ என எழுந்தார். 423

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயில்முன்பு எய்தி
நின்று போற்றுவார் நீள்நிதி வேண்டினார்க்கு ஈவது
ஒன்றும் மற்றுஇலேன் உன்அடி அல்லதுஒன்று அறியேன்
என்று பேர்அருள் வினவிய செந்தமிழ் எடுத்தார். 424

எடுத்த வண்தமிழ்ப் பதிகநா லடியின்மேல் இருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்த இன் இசையினால் துதிப்பார்
மடுத்த காதலில் வள்ளலார் அடியிணை வழுத்தி
அடுத்த சிந்தையால் ஆதரித்து அஞ்சலி அளித்தார். 425

நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந்து அருளிய இறைவர்இன் அருளால்
அச்சி றப்புஅருள் பூதமுன் விரைந்துஅகல் பீடத்து
உச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று. 426

வைத்த பூதம் அங்கு அணைந்துமுன் நின்றுநல் வாக்கால்
உய்த்த இக்கிழி பொன்உல வாக்கிழி உமக்கு
நித்த னார்அருள் செய்தது என்று உரைக்கநேர் தொழுதே
அந்த னார்திரு வருள்நினைந்து அவனிமேற் பணிந்தார். 427

பணிந்து எழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்து
அணைந்த ஆடகக் கிழிதலை கொண்டுஅரு மறைகள்
துணிந்த வான்பொருள் தரும்பொருள் தூயவாய்மையினால்
தணிந்த சிந்தைஅத் தந்தையார்க்கு அளித்துஉரை செய்வார். 428

ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவும் திருக்கழு மலத்து
வேத வேதியர் அனைவருஞ் செய்யவும் மிகுமால். 429

என்று கூறி அங்கு அவர்தமை விடுத்தபின் அவரும்
நன்றும் இன்புறு மனத்தொடும் புகலிமேல் நண்ண
வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றல் ஆவடு துறையினில் மகிழ்ந்து இனிது இருந்தார். 430

அண்ண லார்திரு ஆவடு துறைஅமர்ந் தாரை
உள்நி லாவிய காதலி னால்பணிந்து உறைந்து
மண்ணெ லாம்உய வந்தவர் போந்துவார் சடைமேல்
தெண்ணி லாஅணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார். 431

## திருநாவுக்கரசர் புராணம்

ஆஉறும் அஞ்சு ஆடுவார் கோடி காவில்
அணைந்து பணிந்து ஆவடு தண் டுறையைச் சார்ந்தார். 190

ஆவடுதண் டுறையாரை அடைந்துய்ந்தேன் என்று
அளவில் திருத்தாண்டகமுன் அருளிச் செய்து,
மேவு திருக்குறுந்தொகை நேரிசையுஞ் சந்த
விருத்தங்கள் ஆனவையும் வேறு வேறு,
பா அலர் செந்தமிழ்த் தொடையால் பள்ளித் தாமம்
பல சாத்தி மிக்கெழுந்த பரிவினோடும்,
பூவலயத்தவர் பரவப் பலநாள் தங்கிப்
புரிவுறுவைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார்.

## ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்

உரவுநீர்த் தடம்பொன்னி அடைந்து அன்ப ருடன் ஆடி
அரவு அணிந்தார் அமர்ந்ததிரு வாவடுதண்டுறை அணைந்தார்.
அங்கு அணைவார் தமைஅடியார் எதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக்கோயிலினைப் புடைவலம்கொண்டு உள் அணைந்து
கங்கைவாழ் சடையாய்! ஓர் கண்ணிலேன் எனக் கவல்வார்
இங்குஎனக்குஆர் உறவு என்னும் திருப்பதிகம் எடுத்திசைத்தார்.

## திருமூலதேவ நாயனார் புராணம்

ஆவடுதண்டுறை அணைந்தங்கு அரும்பொருளை உறவணங்கி
மேவுவார் புறக்குடபால் மிக்குஉயர்ந்த அரசின்கீழ்த்
தேஇருக்கை அமர்ந்து அருளிச் சிவயோகம் தலைநின்று
பூ அலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார். 25

ஊன் உடம்பிற் பிறவிவிடம் தீர்ந்துஉலகத் தோர்உய்ய
ஞானம்முதல் நான்கும்மலர் நல்திருமந் திரமாலை
பான்மைமுறை ஓராண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம்
ஏனஎயிறு அணிந்தாரை ஒன்றவன்தான் என எடுத்து. 26

முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரம்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை
தன்னில் அணைந்து ஒருகாலும் பிரியாமைத் தாள் அடைந்தார். 27

திருச்சிற்றம்பலம்

## அருணகிரிநாதர் திருப்புகழ் - திருவாவடுதுறை திருத்தலம்

தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தனதான

சொற்பிழைவ ராமல் உனைக்கனக் கத்துதித்து
நிற்பதுவ ராத பவக்கடத் திற்சுழற்றி
சுக்கிலவ தார வழிக்கிணக் கிக்க ளித்து
விலைமாதர்

துப்பிறைய தான இதழ்க்கனிக்குக் கருத்தை
வைத்துமய லாகி மனத்தைவிட்டுக் கடுத்த
துற்சனம காத கரைப்புவிக் குட்டழைத்த
நிதிமேவு

கற்பக இராச னெனப்படைக் குப்பெருத்த
அர்ச்சுனந ராதி யெனக்கவி குட்பதித்து
கற்றறிவி னாவை யெடுத்தடுத் துப்படித்து
மிகையாகக்

கத்திடுமெ யாக வலிக்கலிப் பைத்தொ லைத்து
கைப்பொருளி லாமை யெனைக்கலக் கப்படுத்து
கற்பனைவி டாமல் அலைத்திருக் கச்சலிக்க
விடலாமோ

எற்பணிய ராவை மிதித்துவெட் டித்துவைத்து
பற்றியக ராவை யிழுத்துரக் கக்கிழித்து
எட்கரிப டாமல் இதத்தபுத் திக்கதிக்கு
நிலையோதி

எத்தியப சாசின் முலைக்குடத் தைக்குடித்து
முற்றுயிரி லாமல் அடக்கிவிட் டுச்சிரித்த
இற்கணையி ராமர் சுகித்திருக் கச்சினத்த
திறல்வீரர்

வெற்பெனம தாணி நிறுத்துருக் கிச்சமைத்து
வர்க்கமணி யாக வடித்திருத் தித்தகட்டின்
மெய்க்குலம தாக மலைக்கமுத் தைப்பதித்து
வெகுகோடி

விட்கதிர தாக நிகர்த்தொளிக் கச்சிவந்த
ரத்தினப டாக பயிற்பரிக் குத்தரித்து
மிக்கதிரு வாவடுநற்றுறைக் குட்செழித்த
பெருமாளே!

தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன
தனதான

சோதி மாமதி போல்முக முங்கிளர்
மேரு லாவிய மாமுகை யுங்கொடு
தூர வேவரும் ஆடவர் தங்கள்முன்
எதிராயே

சோலி பேசிமுன் னாளிலி ணங்கிய
மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு
சூதி னால்வர வேமனை கொண்டவ
ரொடுமேவி

மோதி யேகனி வாயத ரந்தரு
நாளலே பொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேகில சண்டைக
ளுடனேகி

மோச மேதரு தோதக வம்பியர்
மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னாகிய பாதக னுங்கதி
பெறுவேனோ

ஆதி யேயெனும் வானவர் தம்பகை
யான சூரனை மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு
நெடுவேலா

ஆயர் வாழ்பதி தோறுமு கந்துர
லேறி யேயுறி மீதனை யுங்கள
வாக வேகொடு போதநு கர்ந்தவன்
மருகோனே

வாதி னால்வரு காளியை வென்றிடு
வாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு
நடபாதர்

வாச மாமல ரானொடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள்
பெருமாளே

திருச்சிற்றம்பலம்


அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள்

# ஒளியின் திருவருள்

- மீ.பா. சோமசுந்தரம் (சோமு)

(திருவாவடுதுறை ஸ்ரீ கோமுத்தீசுவரர் திருக்கோயில் மகாகும்பாபிஷேக விழா மலர், 1972, பக். 51ல் வெளிவந்த கட்டுரை)

நீண்ட காலமாகவே என் முன்னோர்களுக்குத் திருவாவடுதுறை ஆதீனத்தோடு மிகவும் நெருங்கிய ஆன்மநேயத் தொடர்பு இருந்து வந்திருக்கிறது. என் பள்ளி ஆசிரியரும் எனக்குத் தமிழ் இலக்கணம் கற்பித்தவரு மாகிய திருவாவடுதுறை ஆதீன வித்துவான் சிதம்பர ராமலிங்கபிள்ளை அவர்களின் வாயிலாக, இந்தத் தொடர்பிலே ஒரு புதிய வண்ணம் ஏற்பட்டது. அதோடு சித்தர்களின் நூலிலும் சித்தர்களுக் கெல்லாம் சித்தராகிய திருமூலருடைய திருமந்திரத்திலும் என் தொடர்பு இன்னும் நெருங்கியது! திருமூலர் இருந்து தவம் இயற்றிய அரச மரத்தையும் அவருடைய சமாதியையும் காணக்காண, இந்தத் தொடர்பிலே ஓர் ஆனந்தமும் திருவருளுமே காணத்தொடங்கினேன். இந்தத் தலத்தையும் இந்த அதீனத்தையும் இந்தக் கோயிலையும் நினைக்கும்போது, இத்தனை சொந்த நினைவுகளும் உள்ளத்தில் பொங்கு கின்றன! அந்த நினைவிலே இத்தனைக்கும் காரணமான ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தியின் ஜீவசமாதியை வலம் வந்து துதிக்கிறேன்!

ஆம் இந்தத் திருவாவடுதுறையின் பெருமைகளுக்கெல்லாம் மையமாகவிருந்து, ஆதீனத்தையும் இதனைச் சேர்ந்த கோவில் களையும் பரிபாலித்து வருவது எது? குரு முதல்வராகிய நமச்சிவாய மூர்த்தியின் திருவருளேதான் என்று சொன்னால் , அது நூற்றுக்கு நூறு உண்மையாகும். இந்த அதீனத்தை நிறுவியவர் அம்மகான்; அந்த ஆன்ம ஞானி, ஒரு பெரிய சித்தர்! ஏறக்குறைய 500 ஆண்டுகளுக்கு முன்பு தாமே தமது தீர்மானத்தின்மீது இந்த இடத்திலே ஜீவனோடு சமாதியிலே இருந்துவிட்டார்! இருந்து, இன்றளவும் ஜீவனோடு தானே ஒளி வடிவில் ஒளிப்பிழம்பாக இலங்கி, எல்லாவற்றையும் கண்காணித்து வருகிறார்! இது கண்கூடான அனுபவம். தவறுசெய்கிறவர்கள் அந்த ஜீவன் சமாதிக்குள்ளே இருந்து நம்மைப் பார்க்கிறது என்று நினைத்தால், தவறு செய்யமாட்டார்கள். புண்ணியம் செய்கிறவர்கள், தொண்டு செய்கிறவர்கள், பெரும்புண்ணியராகிய மூர்த்தியின் பார்வை நம்மீது விழுகிறது என்று நினைத்தால், மேலும் ஊக்கம் கொண்டு தமது புண்ணியப் பணியைச் செய்வார்கள். அப்படி இருக்கிறது நமச்சிவாய மூர்த்தியின் ஒளிப் பெருமை!

நான் சொல்வது இருக்கட்டும் பல ஆண்டுகளுக்கு முன்பே இந்த மகானின் ஒளிப்பெருமையை உணர்ந்து, அந்த உணர்வை ஒரு நேர்த்தியான பாடலாக நமக்குப் பாடிக் கொடுத்திருக்கிறார் கச்சியப்ப முனிவர் என்ற தவச்சீலர்.

இந்த உலகத்தில் நம்கண்முன் வருவதும் பிறகு நம் கண்ணிலிருந்து மறைவதுமாக இருக்கிறது மனித உயிர்! மாறிமாறிச் சுழல்கிற இந்த மனிதக் கூண்டுகளைப் பார்த்துப் பாடுகிறார் கச்சியப்ப முனிவர்.

வருவதும் போவதுமாய் உழல்வீர்

எத்தனை துன்பப்பட்டு உழல்கிறீர்கள் நீங்கள்! ஊர்விட்டு ஊர் வருகிறதும் போகிறது மான பிரயாணமாக அல்லவா இருக்கிறது உங்கள் வாழ்க்கை! சம்மணம் போட்டு உட்கார முடியவில்லையே! பாவம், நீங்கள் இப்படியெல்லாம் தொல்லைப் பட வேண்டாம், இங்கே இந்தத் திருவாவடு துறைக்கு வாருங்கள். அப்படி நீங்கள் வந்தீர்களேயானால் என்ன கிடைக்கும் தெரியுமா? கேளுங்கள்:

*வருவதும் போவது மாய்உழல்*
*வீர்வம்மின் வந்தனிரேல்*
*தருநிதி சிந்தா மணிகாம*
*தேனுவும் தந்தருளும்*

வம்மின் - வாருங்கள், வந்தனிரேல் - வந்ீரேயானால், தருநிதி - கற்பகத்தரு என்றும், நிதி தருகிற என்றும் இரண்டு சாதுரியப் பொருள்.

எங்கள் நமச்சிவாயமூர்த்தி என்ன செய்வான் தெரியுமா? உங்கட்குக் கற்பகத்தருவும், நிதி தருகின்ற சிந்தாமணியும், காமதேனுவும் தந்தருள்வான் என்கிறார் முனிவர்.

இந்த உலக வாழ்க்கையில் கேட்ப தெல்லாம் கிடைக்கவும், நினைத்ததெல்லாம் நடக்கவும், வேண்டியதெல்லாம் துய்க்கவும், கற்பகத்தருவும், சிந்தாமணியும், காமதேனுவும் உதவுகின்றன என்று புராணங்களிலும் கதைகளிலுமிருந்தும் நாம் படித்துத் தெரிந்து கொண்டிருக்கின்றோம். இம்மூன்றில் ஒன்று இருந்தாலே போதும். ஆகும் மூன்றையுமே ஒருசேரத் தந்து தமக்குப் போகங்களை யெல்லாம் அள்ளிக்கொடுத்து, நமச்சிவாய மூர்த்தி, அருள்பாலிப்பான் என்கிற கச்சியப்ப முனிவர் இதற்கு மேலும் அடுத்த நிலை ஒன்றை அடுக்கிச் சொல்லுகிறார்.

*பொருவரு போக மெலாம்தரும்*
*போகமெ லாம் வெறுத்தால்*

உலக இன்பங்கள் இத்தனையையும் இவ்வளவு நேர்த்தியோடு அனுபவித்தால் இவையும் திகட்டித்தானே போகும்! அப்படித் திகட்டிப் போய் இந்த இகவாழ்வின் இன்பங்களையே நாம் வெறுக்க ஆரம்பித்து விட்டால், நமச்சிவாயமூர்த்தி என்ன செய்வான்?

*ஒருவரு முத்தியும் நல்கும்பஞ்*
*சாக்கர ஒள்ளொளியே*

பஞ்சாக்கரம் என்றால் பஞ்சாக்ஷரமாகிய நமசிவாயம்! ஒள்ளொளி என்றால் ஒளிப் பிழம்பு! அதாவது ஜீவசமாதியிலே ஆன்ம வடிவில் ஒளிவீசுகிற நமச்சிவாய மூர்த்தியாகிய ஒளிவிளக்கு என்று பொருள்.

இவ்வுலக வாழ்விலே உச்சமாகிய இன்பங்கள் அனைத்தையும் தருவான்: இவை திகட்டிவிட்டால் முத்தியாகிய பேரின்பமும் தருவான் எங்கள் ஜீவசமாதி மூர்த்தியாகிய ஒள்ளொளி என்று, தமது பாடலை முடிக்கிறார் கச்சியப்பமுனிவர்.

*வருவதும் போவது மாயுழல்*
*வீர்வம்மின் வந்தனிரேல்*
*தருநிதி சிந்தா மணிகாம*
*தேனுவும் தந்தருளும்*
*பொருவரு போக மெலாம் தரும்*
*போகமெ லாம்வெறுத்தால்*
*ஒருவரு முத்தியும் நல்கும்பஞ்*
*சாக்கர ஒள்ளொளியே.*

நமச்சிவாயமூர்த்தியின் பரிபாலன த்துக்கு உட்பட்ட மாசிலாமணியின் கோவிலிலே கும்பாபிஷேகம் நடக்கிறது. போகமும் முத்தியும் தரவல்ல நமச்சிவாய மூர்த்தியாகிய குருமுதல்வனைப் போலவே முழு முதல்வனாகிய மாசிலாமணிப் பெருமானும் ஞானசம்பந்தர் போன்ற அடியார்களுக்குப் பொன்னும் போகமும் முக்தியுமே தந்த பெருமூர்த்தி. அந்த ஈசன் கோவிலைக் குடமுழுக்காட்டி வழிபடுகிற நன்னாளில், இதனைச் சிறப்பாக நடத்தும் குருமகா சந்நிதானம் அவர்களை மனமுவந்து பாராட்டுவது நமது கடமையாகும். அதே சமயம் இத்தனைக்கும் ஆதிமுதற் காரணமாகிய நமச்சிவாய மூர்த்தியின் ஒளியருளை மனமெய்மொழிகளால் துதிப்போமாக!

---

## அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள் துதி

மெய்கண்ட மரபின் உண்மை மிகுசம்பர தாயம் ஓங்கப்
பொய்கண்டு நீங்கி ஞானப் போதிசேர் துறைசை மேவி
உய்கின்ற வழிஈ தென்றிங் குயிர்க்கெலாம் உபதே சங்கள்
செய்கின்ற நமச்சி வாய தேசிகன் திருத்தாள் போற்றி

- திருவாவடுதுறை புராணம்.



# அருந்தமிழ் வளர் ஆவடுதுறை

- சிவத்தொண்டர் நீ.சீ. சுந்தரராமன், மதுரை.

(இக்கட்டுரை ஆசிரியர் தருமையாதீனப் புலவராகவும், மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தின் செயலராகவும், உழவாரம் எனும் ஆன்மீகத் திங்களிதழின் ஆசிரியராகவும் விளங்கிச் சிறந்த தமிழ், ஆன்மீகத் தொண்டாற்றி வருபவர்கள்)

திருக்கயிலாயத்தில் ஓர் திருவிளையாடல். உமையம்மையார் தாம் பெற்ற சதுரங்க விளையாட்டின் வெற்றியை எண்ணிச் சிறிது களிப்புற்றார். அக்களிப்பினால் விளைந்த செருக்கு நீங்க, சிவபெருமான் அம்மையைப் பசு உருவம் கொள்ளப் பணித்தார். அம்மையாரும் பசு உருக் கொண்டு இறைவனைப் பூசித்து மீண்டும் தம் திருவுருவைப் பெற்றார். அம்மையார் பசுவுரு நீங்கிய காரணத்தால் பெயர் பெற்றதே ஆவடுதுறையாகும். (ஆ - பசு ; அடு - நீங்கிய ; துறை - இடம்).

மற்றொரு வகையாகச் சிந்தித்தால் காவேரியின் தென்கரையில் அமைந்துள்ள இத்தலத்தை வணங்குவோர்க்கு பசுத்துவம் நீங்கி அருள்நலம் பெறும் வாய்ப்பு வரும் என்பதும் தெளிவாகும். தோற்றமில் காலம் தொடங்கி என்றும் நின்று நிலவும் இத்திருத்தலத்தில் தென் பொதிகை நோக்கி வந்த சிவயோக சித்தர், திருவருளால் திருமூலதேவராகி மூவாயிரம் திருமந்திரங்களைக் கொண்ட ஆகமத் தமிழை, அரும்பெரும் அற்புதத் தமிழை அருளிச் செய்தார்.

அவர் அருளிய அருந்தமிழை ஆகமத் தமிழை அடுத்து, கி.பி.7ஆம் நூற்றாண்டில் ''விலையுடைய அருந்தமிழைப்'' பாடி தம் தந்தையார் சிவவேள்வி செய்தற்குரிய குறையாத பொற்கிழியை இறைவன்பால் பெற்று, திருஞான சம்பந்தர் வழங்கிய திருத்தலம் திருவாவடுதுறை. "இடரினும் தளரினும்" என்னும் திருப்பதிகத்தின் கடைக்காப்பாகிய இறுதிப் பாடலில் 'விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்' நிறையுடைய நிலையான வாழ்வைப் பெறுவார்கள் என்று பதிகப் பயன் கூறியுள்ளமை எண்ணத்தக்கது.

*"காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல ஊரர்க்கம்பொன்*
*ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே"*

என அப்பரடிகளும் அருந் தமிழால் விளைந்த அற்புதத்தைப் பதிவு செய்துள்ளார்.

போகர் முதலிய சித்தர்கள் பலரும் தங்கிய திருவுடைய இத்தலத்தை நவகோடி சித்தர்புரம் என நவில்வர். போகரின் மாணவராகிய திருமாளிகைத் தேவர் திருமடம் அமைத்துத் திருவிசைப்பா எனும் இசைத்தமிழைப் பாடியதும் இத்தலத்தின் தனிச் சிறப்பாகும். அப்பெரியோர் அருந்தமிழால் அருஞ் செயல்கள் பல ஆற்றியதும் இத்திரு இடத்திலே தான்.

மெய்கண்டார் என்னும் மேன்மை பொருந்திய சந்தானத்திலே, திருக்கயிலாய பரம் பரையிலே ஸ்ரீநமச்சிவாய மூர்த்திகள், தம் குருநாதர் சித்தர் சிவப்பிரகாசர் ஆணையிட்டருளிய படி, அமைத்த திருமடம் அன்று முதல் இன்று வரை அருந்தமிழை வளர்த்துவரும் அற்புதத் திருவூரும் இத் திருவாவடுதுறையே.

இந்த ஞானப் பரம்பரையிலே தொடர்ந்து சைவத் தமிழையும், சங்கத் தமிழையும் வளர்த்து வரும் பாங்கு நாமறிந்த உண்மையாகும். சித்தாந்த சாத்திரங்களிலும் சிவாகமங்களிலும் நிறைந்துள்ள அரும்பொருளின் பிழிவை நாம் உணரும்படி, பத்து ஞான நூல்களை அருளி அருந்தமிழுக்கு அணி செய்தார்கள் மூன்றாவது குருமகா சந்நிதானம் அருள் திரு அம்பலவாணர் தேசிகர் ஆவர். தொடர்ந்து வரும் இஞ்ஞானப் பரம்பரையில் ஐந்தாவது குருமணி வேலப்ப தேசிகர் சிவஞான சித்தியாருக்கு உரை கண்டவர்கள். இவரின் சீடர் குமாரசாமித் தம்பிரானும் சாத்திர உரைகள் செய்துள்ளார். மற்றொரு சீடர் நமச்சிவாயத் தம்பிரான் சாத்திர உரைகள் இயற்றியுள்ளார்.

ஒன்பதாவது குருமகா சந்நிதானம் காலத்தில் பண்ணிசைத் தமிழ் பாங்குற ஓங்கி ஓதிவரும்

படியாகத் திருமழபாடி என்னும் ஊரிலிருந்து இசை அறிவுடையோர் குடும்பத்தைத் திருவாவடு துறையில் வரவழைத்தமை எண்ணத்தக்கதாகும். பத்து, பதினொன்று, பன்னிரண்டு ஆகிய குருமகா சந்நிதானங்களின் அருளாட்சியில் மாதவச் சிவஞான சுவாமிகளும், கவிராட்சச கச்சியப்ப முனிவர் போன்றோர் வாழ்ந்து அருந்தமிழ் வளர்த் துள்ளார்கள். சிவஞான முனிவர் 28 நூல்களையும், கச்சியப்ப முனிவர் விநாயக புராணம், பேரூர்ப் புராணம், தணிகைப் புராணம் முதலிய நூல்களையும் செய்தமை அருந்தமிழ் வளர்ச்சிக்குச் செய்த ஆற்றல் மிகு பணிகளாகும்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணியர் 31 நூல்களையும், சாமிநாதத் தம்பிரான், திருவாவடு துறை தல புராணத்தையும், சீனிப் புலவர் கலம்பக மும் பாடிக் கன்னித் தமிழை வளர்த்துள்ளார்கள்.

பதினைந்தாவது குருமணி அம்பலவாண தேசிக சுவாமிகளின் ஆட்சியிலேதான் 'பத்துக்கம்பர்' எனப் பெயர் பெற்ற மீனாட்சி சுந்தரம் பிள்ளையை ஆதீன மகாவித்துவானாக நியமித்து அருந்தமிழ் வளர்ச்சிக்கு அரண் சேர்த்தார்கள். யாழ்ப்பாணத்து ஆறுமுகம் பிள்ளையை 'நாவலர்' எனப் போற்றி சைவத் தமிழை வளர்க்கச் செய்ததும் இவர்கள் காலத்திலேதான்.

மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் அவர்கள், வித்துவான் தியாகராசச் செட்டியார், தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாத அய்யர் போன்ற அறிஞர்களைப் பல்கலைத் தமிழை வளர்க்கும் பாங்கிலே புரந்து வந்தார்கள். சவேரிநாதபிள்ளை என்னும் மாற்றுச் சமயத்தவரையும் ஆதரித்து அவருக்கும் தமிழ்க் கல்வியை வழங்கினார்கள். மாயூரம் வேதநாயகம் பிள்ளை என்னும் நீதிநாயகர் இச்சுவாமிகளிடம் பக்தி கொண்ட தமிழறிஞர் என்பதும் நாமறியத் தக்கதாகும். 17 ஆம் பட்டத்து அம்பலவாண தேசிகர் அவர்கள் சிறந்த ஆய்வு நிலையமாக விளங்கிவரும் பெரிய நூலகத்தை நிறுவி அருந்தமிழ் வளர்த்துள்ளார்கள். இருபதாம் பட்டத்திலும், இருபத்தியோராம் பட்டத்திலும் தக்க புலவர்களைக் கொண்டு நூற்றுக்கணக்கான தமிழ் நூல்களைப் பதிப்பித்து, தமிழைப் போற்றியுள்ளார்கள்.

இருபத்து மூன்றாவது குருமகா சந்நிதானமாகத் தற்பொழுது எழுந்தருளியுள்ள சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் காலத்தில் அருந்தமிழ் வளர்த்திடும் அருஞ்செயல்கள் பல நிகழ்ந்து வருகின்றன. சிவஞானச் செழுந்தமிழ் வளர்ச்சியில் பல்வேறு ஊர்களில் சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையங்கள் நிறுவி அவற்றின் வழியே ஆயிரக் கணக்கான அன்பர்களைச் சிவஞானச் செந்தமிழ் ரத்தினங்களாக வளர்த்து வருகிறார்கள். பண்ணிசைத் தமிழ் வளர்ச்சிக்காகப் பல மையங்களில் வகுப்புகள் ஏற்படுத்தியுள்ளார்கள்.

நூற்றுக்கணக்கான பண்ணிசை வாணர் களைப் பாராட்டி, பரிசுகள் வழங்கி வருகின்றார்கள். அருந்தமிழ்ப் புலவர்களை ஆதரித்து அவர்களை ஆண்டுதோறும் குருபூசை விழாக்களில் பட்ட மளித்துப் பாராட்டி வருகின்றார்கள்.

இசைக் கலைக்கும் ஏற்றமுடைய இனிய பணிகள் இவர்கள் அருளாட்சியில் நிகழ்ந்து வருகின்றன. திருக்குறள், சைவசித்தாந்தம், ஆகமம் ஆகியவற்றில் தலைசிறந்தவர்களுக்குத் தக்க பட்டங்கள் வழங்கிப் பெருமைப்படுத்தி வருகின்றார்கள். சிற்ப, ஓவிய, கருவி இசைக் கலைஞர்களையும், சமுதாய, இலக்கிய வளர்ச்சிக்குப் பணி செய்வோரையும் பாராட்டி விருது வழங்கி வருகின்றார்கள். ஆயிரத்தைத் தொடும் அளவில் அற்புதத் தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் பணியையும் நிகழ்த்தி வருகின்றார்கள். "மெய்கண்டார்" திங்களிதழை மேன்மையுற வெளியிட்டு அருளி வருகின்றார்கள்.

இவ்வண்ணம் திருவாவடுதுறை திருத்தலம் அருந்தமிழ் வளர் அற்புதத் திருவூராக விளங்குகின்றது. மெய்கண்ட சந்தானம் மேலும் மேன்மைத் தமிழ் வளர்ச்சியில் மேம்பட்டுச் செயல்புரிய ஆவடுதுறை உறையும் அமரர் ஏறாகிய பெருமான் திருவடிகளை இறைஞ்சுவோம்.

# திரு ஆவடுதுறை

- திருவாவடுதுறை ஆதீன வித்துவான் திரு. க.வச்சிரவேல் முதலியார்.

(திருவாவடுதுறை ஸ்ரீ கோமுத்தீசுவரர் திருக்கோயில் மகாகும்பாபிஷேக விழா மலர், 1972, பக். 13ல் வெளிவந்த கட்டுரை)



அருள்மிகு புத்திரத்தியாகேசர்

*மாயிரு ஞால மெல்லாம்*
*மலரடி வணங்கும் போலும்*
*பாயிருங் கங்கை யாளைப்*
*படர்சடை வைப்பார் போலும்*
*காயிரும் பொழில்கள் சூழ்ந்த*
*கழுமல வூரர்க்கு அம்பொன்*
*ஆயிரம் கொடுப்பார் போலும்*
*ஆவடு துறைய னாரே.*

திருச்சிற்றம்பலம்

உலக முதல்வனாகிய சிவபெருமானை அறிந்து அன்பால் வழிபடுவது இம்மை மறுமை வீடு என்னும் மும்மைப் பயனையும் ஒருங்கே அளிக்கவல்லது. இவ்வழிபாட்டிற்குத் துணையாக நிற்பவை திருக்கோயிலும், இறைவனை வழிபட்டு உய்யும் நெறியினை உள்ளவாறு விளக்க வல்ல குருபரம்பரையும் இன்றியமையாத சாதனங்கள் ஆகும். இந்த இரண்டு சாதனங்களும் இறைவன் திருவருளால்தொன்று தொட்டு இறைவனால் இணைக்கப்பெற்று இலங்கும் தனிச்சிறப்பு உள்ளது திருவாவடுதுறை என்னும் திருத்தலம்.

இத்திருத்தலத்தில் சிவபெருமான் விளக்கமாக வீற்றிருந்து தன்னை அடையும் உயிர்கட்குப் போகமோட்சங்களைத் தோற்றமில் காலமாக அளித்தருளி வருகின்றான் என்பது புராணத்தாலும் உண்மை நாயன்மார் வரலாற்றாலும் விளங்கும் உண்மை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் திருமூலர் சிவபிரான் அருளாணைவழி தங்கி யோகிருந்து தமிழில் உள்ள ஆதி அருள் நூலாகிய திருமந்திரத்தை உபதேச நூலாக வைத்து ஆசாரிய பரம்பரையை நிறுவியதும் இத்தலத்தில் தான். பிற்காலத்தில் திருக்கயிலை அருள் மரபில் வந்த மெய்கண்ட சந்தானத்தில் சிவஞான போதம் என்னும் தலைமணி ஞான நூலை உபதேச நூலாகக் கொண்டு ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகரால் நிறுவப்பெற்ற ஞான ஆதீனத்திற்குத் தலைமைத்தானமாக விளங்கி வருவதும் இத்திருத்தலமே ஆகும். இன்னும் இத்தலத்தில் எண்ணில் கோடி சித்தர்கள் வாழ்ந்திருந்து தமிழகத்தில் உள்ள நன்மக்களுக்கு அருள் நெறியை விளக்கி வந்துள்ளனர். இதனால் இத்திருத்தலம் நவகோடி சித்தபுரம் என்னும் பெயரைப் பெற்று விளங்குகிறது.

திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்தில் உள்ள திருமாளிகைத்தேவர் திருக்கோயில் அவர்தம் ஞானாசிரியராகிய போகநாத சித்தருடைய ஆச்சிரமமே ஆகும். அதனை அடுத்து உள்ள ஸ்ரீபஞ்சாக்கர தேசிகர் திருமாளிகை திருக்கயிலாய பரம்பரை, திருநந்தி அருள்மரபு மெய்கண்ட சந்தானத்தில் ஆறாவது அருட்குரவராகிய சித்தர் சிவப்பிரகாசர் ஆச்சிரமம் ஆகும். அவரது அருளாணைவழித் தங்கியிருந்து திருவாவடுதுறை ஆதீன ஞான பரம்பரையைப் பிரதிட்டை செய்த ஞான ஆசாரியரே நமச்சிவாய மூர்த்திகள் எனப்படும் ஸ்ரீமுத்திபஞ்சாக்கர தேசிகர் ஆவர். அவரைக் குறித்து மாதவச் சிவஞான சுவாமிகள் "மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானு" எனப் போற்றுகிறார்.

சிவபெருமான் திருவாவடுதுறையில் ஏழாம் நூற்றாண்டில், திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு

1000 செம்பொன் பொதிந்த உலவாக்கிழியை அருளிச் செய்தார் என்பது பலரும் அறிந்த உண்மை. இதனை, இக்கட்டுரையின் தலைப்பில் உள்ள அப்பர் அருள்மொழி இனிது விளக்குகிறது. இந்தக் காரணம்பற்றி இத்திருக்கோயிலில் எழுந்தருளி உள்ள பெரிய நாயகர்க்குச் செம்பொன் தியாகர் என்னும் திருப்பெயர் வழங்குகின்றது.

திருவிளையாடல் நிமித்தமாகப் பசுவின் உருஎய்திய உமையம்மை இத்திருத்தலத்தை அடுத்துச் சிவலிங்கத்திருமேனியைப் பால் ஆட்டி வழிபட்டபோது சிவபெருமான் அம்மைக்கு அந்த உருவை நீக்கியருளிப் பழைய அருள் ஒளி உருவை விளங்கச் செய்தார். அங்ஙனம் விளங்கிய அம்மையை அணைத்த திருக்கோலத்தினராய் இறைவன் பல முனிவர்களுக்கும் காட்சி அளித்தனர். இத்திருக்கோலம் அணைத்தெழுந்தநாயகர் என இத்திருக்கோயிலின் முதல் திருச்சுற்றில் வடமேற்கில் தெற்கு நோக்கியத் திருமுன்பு உடையதாய் விளங்குகின்றது.

இனி திருவாவடுதுறை என்னும் திருப்பெயர் உலகியற் பொருளும் ஞானயோக நுண்பொருளும் கொள்ளும்படி அமைந்திருத்தல் எண்ணி இன்புறுதற்கு உரியது. கங்கையினும் புனிதம் உடையது எனப் போற்றப்பெறும் காவிரியின் தென்கரையில் பெரியோர்களும் பொதுமக்களும் திருவுடன் வாழ்ந்து இன்புறுதற்குரிய பல துறைகள் அமைந்துள்ளன. அவற்றின் இயற்கை அழகுபற்றி அத்துறைகளும் அவற்றை அடுத்துள்ள திருத் தலங்களும் மயிலாடுதுறை, குரங்காடுதுறை என்றாற்போல வழங்கி வந்தன. அவற்றுள் திருவாவடுதுறை என்பது ஆக்கள் எனப்படும் பசுக்கள் கூட்டமாக வந்து அடுத்தற்கு உரிய நீரும் நிழலும் புல்வெளியும் உள்ள துறையாதல் பற்றி இது 'திரு ஆ அடு துறை' எனப்பட்டது எனச் சொற்பொருட் காரணம் கூறுதல் உலகியற்பொருள் ஆகும்.

'ஆவடுதண்துறை' என அப்பர் சுவாமிகளும் 'அலைபுனல் ஆவடுதுறை' எனத் திருஞான சம்பந்தரும் வழங்குவதுபற்றி இப்பொருள் கருதி உணரப்படுகின்றது இனி ஆ உரு எய்திய அம்மை இத்தலத்தையடுத்து அவ்வுரு நீத்து தன் பண்டை அருள்ஒளி உருவை எய்தினமை பற்றியும் திருவாவடுதுறை எனக்கொள்ளலாம். இது புராண வியுட்பத்தி. இனி ஆ என்பது பசு எனப் பொருள்படும்; அஃது ஆகுபெயராய், பசுத்துவம், பசுத்தன்மை, இருள்மலம் என்னும் பொருளைக் குறிக்கும். அதனை அடும் - நீக்கும் அருள்துறை ஆதல் பற்றி திருவாவடுதுறை எனப்பட்டது என்பது ஞானயோக நுண்பொருள். இப்பொருளைக் கோமுத்திபுரம் என்னும் இதன் வடமொழிப் பெயர் ஆதரிக்கின்றது. இன்னும் அம்மையின் கோஉரு - பசுஉரு கழிந்த இடமாதல் பற்றியும் இந்தத் திருத்தலம் கோகழிஎன மாணிக்கவாசகரால் குறிக்கப்பட்டதென்பதும் பெரியோர்களது கொள்கை. இக்கருத்துப்பற்றி நோக்கின் திருவாசகம் முதற்பாட்டாகிய சிவபுராணத்தில் வரும் 'கோகழி ஆண்ட குருமணி' என்பது திருவாவடுதுறையில் பல பக்குவ ஆன்மாக்களை ஞான நெறிகாட்டி ஆட்கொண்டஒண்குரவன் எனப்பொருள்படும். அதனை அடுத்துவரும் 'ஆகம மாகிநின்று அண்ணிப்பான்' என்னும் தொடர் திருமூலரால் அருளிச் செய்யப்பெற்றத் தமிழாகம மாகிய திருமந்திரத்தின் உட்பொருளாகி சிவஞானிகள் உள்ளத்தே நின்று இனிப்பவன் என்னும் பொருளைத்தரும். வியுட்பத்தி - சொற்பொருட் காரணம். ஞானயோக நுண்பொருளை வடநூலார் சுவாபதேசம் எனக் குறிப்பர்; உலகியற் பொருளை அந்நியாப தேசமென்பர். கோகழி என்னும் தொடரைத் திருக்கோவையாரில் வரும் வான்கழி என்னும் தொடரொடு ஒப்பிட்டுக் காண்க.

ஞான ராசதானியாகிய திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான, மேற்கூறிய பல்வகைச் சிறப்புக்களையும் உடைய திருக்கோயில் திருப்பணிகள் முற்றுப் பெற்று மாயிருஞால மெல்லாம் மலரடி வணங்கி மகிழ்ச்சி மீதூர்ந்து உய்யும்படி மகாகும்பாபிடேகம் நடைபெறுதல் ஆருயிர் அனைத்திற்கும் இறவாத இன்பும் அன்பும் பெருக்கும் அருள் நிகழ்ச்சி ஆகும்.



# நந்தித்தல நாயகர்



- தி.சு. கோவிந்தசுவாமி, மதுரை.

(இக்கட்டுரை ஆசிரியர் மதுரை – சைவ சித்தாந்த சபையினைத் திறம்பட நடத்தி வருகின்றார். சைவ சித்தாந்தத்தில் ஆழ்ந்த புலமை உடையவராய்த் திகழும் இவர்கள் அத்துறையில் பல விருதுகளைப் பெற்றுள்ளார்கள்)

*மெய்கண்ட மரபின் உண்மை மிகு சம்பிரதாயம் ஓங்கப்*
*பொய்கண்டு நீங்கி ஞானப்போதி துறைசைமேவி*
*உய்கின்ற வழிஈதென்றிங்குயிர்க்கெலாம் உபதேசங்கள்*
*செய்கின்ற நமச்சிவாய தேசிகன் திருத்தாள் போற்றி*

உலகத்திலேயே சிறந்த பூமி பரத கண்டமாகும். பரதன் என்பது சிவநாமங்களுள் ஒன்று. அதிலும் தென்னாடு சிறந்தது. 'மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திட' எனவும் 'பூசனைக்குப் பொருந்தும் இடம்பல. பேசில் அத்திசையொவ்வா பிறதிசை' என்றும் சேக்கிழார் பெருமான் அருளிச் செய்துள்ளார்.

இப்புவனத்தின் நால்வகைத் தோற்றம் எழுவகைப்பிறப்பு எண்பத்தி நான்கு லட்சம் என்னும் பிறவிகளிலே இருவினைக்கீடாக மேலும் கீழும் சுழன்று போக்குவரவு புரியும் உயிர்களை அநாதி மலமுத்தராகிய அருள் வடிவான சிவபெருமான் பெருங்கருணைத் திறத்தினால் கையினாற் எடுத்தற்பொருட்டு அநாதிக் காலத்தே இவ்வுலகைப் படைக்கும் போது தலம், தீர்த்தம், மூர்த்தி என்று மூன்றுவடிவங்களாய்த் தோன்றச் செய்தனர்.

இனி நந்தித்தலம் என்பது திருவாவடு துறையாகும். இங்கு தரும தேவதைக்கு உமையொருபாகனாய்த் தோன்றி இன்று முதல் இடபவாகனமாய் அரசின் நீழலில் எம்முடைய அருளையும் பெற்றுத் தருமமாக எமக்குமுன் நேரே தரிசித்து இவ்விடத்தில் அமர்வாயாக என அருளினார் (1049 - திருவாவடுதுறைப்புராணம்).

அகத்தியருக்கு நந்தீசுரர் தலமகத்துவம் உரைத்தார். தன்னை இடபமாக்கி மெய் இன்பம் ஈந்து இங்கிருத்தியதால் நந்தீசுரபுரம் என்ற பெயருண்டாயிற்று (1793).

இனி இத்தலம் திருவிடைமருதூருக்கு நந்தித் தலமாக விளங்குகிற செய்தி காண்போம்.

திருவிடைமருதூர் மகாலிங்கப் பெருமான் ஆலயத்திற்குப் பரிவாரங்கள் ஒவ்வொரு க்ஷேத்திரமாகச் சுற்றி விளங்குகின்றன. இது மருதவனபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. அப்பாடல் வருமாறு :

***"அணிமருவுமிடை மருதீசருக்கு நந்தி***
***ஆவடுதண்டுறை சோமாக் கந்தராரூர்***
***திணிபுகழாலங்குடியில் குருமூர்த்தியாகத்***
***திருமுகத்தோன் வலஞ்சுழி யேரகத்திற்செவ்வேள்***
***கணிதரு மாப்பாடியின் சண்டீசன் தில்லைக்***
***கதிர்ப்பொதுவில் நடக்கடவுள் வடுகன்காழி***
***பணைமருவு மாந்தரையிற் இரவியாகும்***
***பரமனெழிற் பதமலர்க்கன்பு மிக்கீர்"***

இப்பாடலில் நந்தித்தலம் திருஆவடு தண்டுறை என்று குறிப்பிடுகின்றார். இத்தலத்துள் உள்ள நந்தி 14 அடி 9 அங்குல உயரமுள்ளது. விசுவரூப நந்தி என்றும் கூறப்படும். இதனால் திருவிடைமருதூர் மகாலிங்கத்துக்கு நந்தித் தலமானது. (கிழக்குத்திசை)

**திருவலஞ்சுழி :** விநாயகப்பெருமான் (தென் மேற்குத்திசை).

**சுவாமிமலை:** முருகப்பெருமான். (மகாலிங்கத் திற்கு நேர் மேற்கே உள்ளது).

**திருவாப்பாடி:** சண்டேசர். (வடக்கு இது மகா லிங்கப்பெருமானுக்குச் சண்டேசுவரர் சந்நதி, சூரியனார்கோயில் (மாந்தறை) சூரியன். இது மகாலிங்கப் பெருமானுக்கு நவக்கிரகத்தலம்.

**சிதம்பரம் :** நடராசர் இங்கு இறைவன் உலகு உய்யப் பரானந்தபோதக் கூத்து ஆடுகின்றான். அந்த ஆனந்தக் கூத்தை இறைவி அருகிலிருந்து கண்டு அருளுகின்றாள். இத்தலம் மகாலிங்கப் பெருமானுக்கு நடராஜ மூர்த்த தலமாகும்.

(இக்கூத்தப்பிரானே உமாபதி சிவாசாரியாரின் பெட்டகத்தில் ஞானமா நடராசப் பெருமானாக எழுந்தருளித் திருவாவடுதுறை ஆதீன மடாலயத்தில் வீற்றிருந்து சிவஞானம் அருளுகின்றார்).

**சீர்காழி :** இது மகாலிங்கப் பெருமானுக்கு வைரவர் (வடுக) சந்நிதியாகும்.

**திருவாரூர் :** தியாகராசர் இது மருதவாணராம் மகாலிங்கத்துக்கு சோமாஸ்கந்தர் சந்நிதியாகும்.

**ஆலங்குடி :** தட்சிணாமூர்த்தி. இத்தலம் மருதூர் இறைவர்க்கு தெற்கே அமைந்த தென்முகர் சந்நிதியாகும்.

**பிறசெய்திகள் :**

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் "இடரினுந்தளரினும்" என்னுந்திருப்பதிகம் பாடித் தமது தந்தையின் யாகத்தின் பொருட்டு 'பொன்னுலவாக்கிழிபெற்றார்'. ஆளுடைய பிள்ளையார் சுவாமி தரிசனஞ் செய்த பொழுது பத்ரபீடம் தமிழ் மணங் கமழ்கின்றதை அறிந்து திருமந்திரத்திருமுறை வெளிப்படுத்தியருளினார். திருநாவுக்கரசர் இங்கு வழிபட்டு திருநேரிசை 2 பதிகம் திருத்தாண்டகம் இரண்டு பதிகங்களும் திருக்குறுந்தொகை 1 பதிகமும் அருளிச் செய்துள்ளார். திருநேரிசை முதல் பாடலில் திருஞான சம்பந்தருக்கு உலவாக்கிழி வழங்கியதை 'கழுமலவூரர்க்கம்பொன் ஆயிரங்கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே' எனச் சிறப்பித்துள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்கு வந்து தரிசித்துத் தக்கேசிப்பண்ணில் "கங்கை வார் சடையாய்" எனத் தொடங்கும் பதிகம் அருளினார். தமக்கு வலது கண் மறைத்திருப்பதை வருந்தினார். இறைவன் ஆரூர் வந்தால் உன் குறைதீர்ப்போம் என்று அருளினார். அங்கு சென்று வலக்கண் பெற்றார். திருவாரூரில் உள்வீதிவிடங்கத் தியாகேசரே துறைசையில் எழுந்தருளியுள்ளமையை வணங்கி "சிறைவண்டார் பொழில் சூழ்திருவாரூர் செம்பொனே திருவாவடுதுறையுள் அறவனே யெனை அஞ்சல் என்றருள்வாய்'' என்று குறிப்பிட்டார்.

மேலும் இத்தலத்து நாயகராகிய மாசிலாமணிப் பெருமானது பெயரை 'வான நாடனே' என்ற பாடலில் "மாசிலாமணியே" என்றும் அம்மை பெயரை "ஒப்பிலாமுலையாள் ஒருபாகா" என்றும் அருளியுள்ளார். கோச்செங்கட்சோழன் பற்றியும் கூறியுள்ளார்.

**மணிவாசகப் பெருமான் (திருவாதவூரர்) :**

திருவாதவூரருக்கு இத்தலத்தில் "குருந்தின் மேவும் புண்ணியக் கோலக் காட்சியை மாசிலாமணியீசர் காட்டினார்" (38) அம்பிகை பசுவுருவத்தை நீக்கிய தன்மையால் "கோகழி" என்ற திருநாமத்தை துறைசைக்குச் சொன்னார்.

திருவாசகத்தில் முதல், இடை, கடைகளுக்குள் கோகழியைச் சிறப்பித்துள்ளார். சிவபுராணத்தில் கோகழியெம் கோமாற்கும் உண்டாமோ நெஞ்சே என்றும் புகழ்ந்து பாடியுள்ளார். கோகழியைச் சூட்டியமையை,

*"பாகுறு மின்சொற்தேவி பசுவுருக்கழிந்தவாற்றாற்*
*கோகழி யென்னும் நாமம் கோமுத்தி நகர்க்குக் கூறி'*

என்ற தலப்புராணச் செய்தியால் விளங்குகிறது.

**திருமூலர் :**

இத்தலத்தில் வந்து அரசின்கீழ் யோகமிருந்து ஆண்டுக்கொரு திருமந்திரமாக 3000 திருமந்திரப் பாடல்கள் பாடி இங்கு கோயில் கொண்டுள்ளார். இவரது கோயில் கோமுத்தீசுரர் கோயில் வடமேற்கு மூலையிலுள்ளது. திருமந்திரத்தின் பெருமையை கீழ்கண்ட பாடலால் அறியலாம்.

*"திருமந்திரமே சிவகதிக்கு வித்தாம்*
*திருமந்திரமே சிவமாம் - அருமந்த*
*புந்திக்குனே நினைந்து போற்று மடியார் தமக்குச்*
*சந்திக்குந் தற்பரமேதான்".*

**திருமாளிகைத்தேவர் :**

திருவாவடுதுறை ஆதீன மடாலயத்துள் ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் சந்நிதியின் வடபக்கத்து இவருக்குத் தனிக்கோயில் உள்ளது. இவருடைய திருவுருவம் நான்கு கரங்களுடன் உள்ளது. தற்போதுள்ள குருமகா சன்னிதானம் அவர்கள் இத்திருவுருவத்திற்கு வெள்ளிக்கவசம் செய்து வைத்துள்ளார்கள். போகநாதரின் தலைமைச்சீடர்.

இவர் திருவிசைப்பாப்பதிகங்கள் நான்கு அருளிச் செய்துள்ளார். பல சித்திகளைப் பெற்று திகழ்ந்தார். இவர் செய்த அற்புதங்களைக் கீழ்கண்ட பாடலால் தெரியலாம்.

*"குடங்கர் விசும்பிடை நிறுவிக்குணப நடந்*
*திட இயக்கிக்கொடிஞ்சிப் பொற்றேர்*
*வடங்கழற்றி ஓட்டி மதில் நந்திகளை*
*வரவழைத்து வரைநன்காட்டின்*
*உடம்பின்எழுபுகைமாற்றிக் கொங்கணர்பாத்*
*திரம்சுவற்றி உணவ தாய்வெந்*
*திடும் பயறு முளைசெய் தெமக்(கு) அருள்திருமா*
*ளிகைத்தேவர் இணைத்தாள் போற்றி"*

எனவரும் தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் பாடலால் அறியலாம்.

**சேந்தனார் :**

இவர் திருவிசைப்பா பதிகம் மூன்றும் திருப்பல்லாண்டும் பாடியுள்ளார். திருவாவடு துறைக்குப் "பொய்யாத வேதியர்" எனத் தொடங்கும் பதிகம் அருளியுள்ளார். இத்தலத்து நாயகரைப் 'பாலும் அமுதமும் தேனு மாய் ஆனந்தந் துள்ளே பாலிப்பான்' என்று கூறுகிறார். இத்தலத்தின் பெயர் "சாத்தனூர்" இதன் மரூஉப் பெயர் சாந்தை. சாந்தையூர் என்பதாகும். இவரியற்றிய பதிகத்தில் இப்பெயர்களையே கூறியுள்ளார். ஆவடுதுறை என்றும் கூறியுள்ளார்.

சேரமான்பெருமான் திருவாவடுதுறையை அடைந்து கோமுத்தீசுவரர் திருவடிகளை வணங்கினார். இங்குக் குபேரதிசையில் ஒரு சிவலிங்கம் ஸ்தாபித்து ஆகமவிதிப்படி வழிபட்டார். இது சேரலிங்கம் எனப்படும்.

செங்கட்சோழர் இங்கு வந்து திருப்பணிகள் செய்து வழிபட்டு சேரமான் பிரதிட்டை செய்த லிங்கத்திற்கு கிழக்கே பிரதிட்டை செய்தார். இவருக்குச் சோழலிங்கம் எனப்பெயர்.

வரகுணபாண்டியன் இங்கு வந்து அருச்சனை செய்து வழிபட்டான்.

கொங்கணசித்தர் முதலாகப் பல சித்தர்கள் இங்கு வழிபட்டு வாழ்ந்தார்கள். அதனால் நவகோடி சித்தபுரம் என்றும் பெயர். தலத்திற்குப் பல பெயர்கள் உள்ளன. தீர்த்தம் கோமுத்தி தீர்த்தம், பத்ம தீர்த்தம். தல விருட்சம் படர்அரசு.

இத்தலத்தில்தான் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டார் மரபில் வந்த சித்தர் சிவப்பிரகாசர் நமச்சிவாய மூர்த்திகட்கு உபதேசித்துத் திருமாளிகைத் தேவர் சந்நிதிக்கு மேற்கில் தங்கி உபதேச பரம்பரையைப் பரிபாலிக்குமாறு அருள் செய்தனர்.

இந்தப் பீடத்தில் தற்போது இருபத்து மூன்றாவது குருமகா சன்னிதானமாக சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் எழுந்தருளி ஞானச்செங்கோல் ஏந்தி சிவக்ஷேத்திர பரிபாலனம் குருக்ஷேத்திர பரிபாலனம் செந்தமிழ் பரிபாலனம் ஆகியவற்றை இவ்வாதீனத்துச் சம்பிரதாய விரோதமின்றிச் செய்து பரிபாலித்து வருகின்றார்கள். அவர்களின் திவ்ய சரணா விந்தங்கட்கு அநோக வணங்கங்களை செய்து கொள்ளுகின்றேன்.

---

**தமிழகத்திலேயே மிகப்பெரிய கல்நந்தி**

சிவபெருமானின் வாகனமாக விளங்கும் பேறு பெற்ற நந்தி சிவன் திருக்கோயில்களில் சிவன் சன்னதிகளில் கருவறை நோக்கி அமர்ந்த நிலையில் காணப்படும். இவ்வகை நந்திகள் கோயில்களில் கற்களாலோ செம்பினாலோ அமைந்திருக்கும் தஞ்சை பெரிய கோயிலில் ஒரே கருங்கல்லினால் ஆன 12 அடி உயர நந்தி அமைந்துள்ளது. பிறகோயில்களிலும் கல்நந்திகள் உண்டு.

திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவர் திருக்கோயிலுக்கு நந்தித்தலம் என்றதொரு பெயரும் உண்டு. சிவபெருமானின் திருமுன்னர் கொடிமரத்தருகேஉள்ள மகா நந்தி பெரிய திருவுருவம் உடையது. 14 அடி 9 அங்குலம் உயரம். தனித்தனி செவ்வக வடிவ கருங்கற்களினால் எழுப்பப்பெற்ற இந்த நந்தி மற்றையத் தலங்களில் இல்லாதது. மற்ற நந்திகளை விட மிகச் சிறப்பு வாய்ந்தது. தமிழகத்திலேயே மிக உயரமான கல்நந்தி இதுதான்.

# முசுகுந்த சக்கரவர்த்தி அர்ச்சித்து முத்தி பெற்றமை

- மு. ஞானமூர்த்தி, எம்.ஏ., பி.எட்.,



(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப்பள்ளியின் தலைமையாசிரியராக பணியாற்றுகிறார்கள். ஆதீன சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையத்தில் பயின்று சித்தாந்த ரத்தினம் பட்டம் பெற்றுள்ளார். குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் மெய்கண்டார் இதழில் சித்திரக்கவி எனும் தொடர் கட்டுரை எழுதியுள்ளார்)



மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கி மகிழ்வோடு திருவருள் பெற்று உய்யும்படியாக அருள் பாவித்து வரும் அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய மாசிலாமணீஸ்வரப் பெருமானின் பேரருள் பெற்று விளங்கிய முசுகுந்த சக்ரவர்த்தி, சிவனருள் பெற்றுய்ய சிவார்ச்சனை செய்து முக்தி பெற்றதைப் பின்வரும் பகுதி இனிது விளக்க முற்படுகிறது.

முசுகுந்த சக்ரவர்த்தியின் முற்பிறப்பு குறித்து கந்தபுராணம் விளக்கும் புராணச்செய்தியை முதலில் காணலாம். எல்லாம் வல்ல பரம்பொருளாகிய சிவபெருமான் உமையம்மையோடு திருக் கயிலாயத்தில் ஒரு சோலையில் வீற்றிருந்த போது வில்வ மரத்தின் மீது அமர்ந்திருந்த ஒரு முசு(குரங்கு) பெருமான் மீது வில்வ இலைகளைப் பறித்து போட்டுக்கொண்டு இருந்தது. மகிழ்வுற்ற பெருமான், மனுவின் வழி தோன்றி உலகம் முழவதும் ஆண்டு சிறப்பெய்துவாயாக என்று அருளினார். ஞானம் பெற்ற முசு மானுடப் பிறவியில் மயங்கா வண்ணம் இம்முசுவின் முகம் கொண்டு பிறக்க வேண்டும் என வேண்ட பெருமானும் அருள் புரிந்தார். முசுவும் அரிச் சந்திரனின் வழித்தோன்றலாக குரங்குமுகம் கொண்டு பிறந்தது. முசுகுந்தன் எனப்பெயரிடப்பட்டு சோழ நாட்டு கருவூரில் இருந்து அரசாண்டான். இதனை.....

*மிக்க இன்னது நின்றிட முன்னம்*
*வெள்ளி விண்டுவில் விண்தொடு காவில்*
*இக்கு வேளை எரித்த நுதற்கண்*
*எம்பிரான் உமையோடும் இருப்ப*
*அக் கணத்தின் முசுக்கலை ஒன்றங்கு*
*ஆதிமீதினும் ஆரியை மீதும்*
*தக்க வில்லுவ நல்லிலை சிந்தத்*
*தையல் சீறனும் ஐயன் விலக்கி,*
*கூவிளை கொண்டு எமை இங்ஙன்*
*கோதில் பூசை குயிற்றிய பண்பால்*
*நீவளைந்திட வேலை சுலாவும்*
*நீள்பு விக்கு அர சாகுதி என்றே*
*மாவளைக்கை இடத்தன் இறைப்பு*
*வையகத்திடை வந்து பிறந்தே*
*காவளைத்த வயற்கரு வூர்வாழ்*
*காமர் சேர்முசு குந்தன் இடத்தின்*

என்ற கந்த புராணப் பாடல்களால் அறிய இயலுகிறது.

இனி துறைசை புராணம் என்ற திருவாவடுதுறை புராணத்தில் முசுந்தச் சக்ரவர்த்தி சிவார்ச்சனை செய்து முத்தி பெற்றதை விளக்கமாக காணலாம்.

அனைத்துச் செல்வங்களும் நிறைவாகப் பெற்ற முசுகுந்தன் திருவாவடுதுறை திருத்தலத்தில் வடதிசையில் அமைந்திலங்கிய அரசு மாளிகையிலே சிம்மாசனத்தில் அமர்ந்து பல்வகைப் பொருட்களையும் தன்னை பணிந்த மன்னர்கள், அமைச்சர்கள், தளவீரர்கள். சுற்றத்தார்கள் ஆகிய எல்லோர்க்கும் உரிய வரிசைகளை வழங்கி இன்புற்றான்.

மாசிலாமணிப் பெருமானுக்கு மாதவிழா, சித்திரை விழா, வசந்த விழா மற்றும் சிறப்பு பூசைகள் செய்ய வேண்டிய நாட்களுக்கு வேண்டிய நிவந்தங்கள் அனைத்தினையும் ஏற்பாடு செய்ததை

*சுந்தர நாயகன் மாசிலாமணிக்கோ*
*பாலிற் பூசை சுகமாய் மல்க*
*மாதவிழாச் சித்திரைநல் மதியின் விழா*
*வசந்த விழா மற்று மற்று*
*நீதமுறும் விசேடதின மாதிகட்கு*
*மிகுஞ்சிறப்பு நிகழ நாளும்*
*சாதனமாய் நித்தியமாய் விளைநிலமும்*
*பதிகளும் தண்டலைப் பூங்காவும்*
*மேதகுபொன் சகத்திரமா றிரண்டுளதாய்*
*நடக்கும் வகை விதித்து........*

என்ற செய்யுள் வரிகளால் மேம்பட உணர இயலுகிறது. இத்தலத்தின் வடக்கு வீதிக்கு தென்புறமாக கோயிலை ஏற்படுத்தினான். ஆகமம் உணர்ந்த நல்லாசிரியர் நல்புண்ணிய தினத்தில் சிவலிங்கத்தினைப் பிரதிட்டை செய்து குடமுழுக்கு செய்வித்தான். அனுதினமும் கோமுத்தி தீர்த்தத்திலே நீராடி உரிய வகையில் வெண்ணீறு தரித்து அக்குமணியின் இடைஇடையே முத்து மணி அமைந்திலங்கும் மாலையணிந்து ஐந்தெழுத்து ஓதிப் பஞ்சசுத்தி செய்து தியாகராஜ பெருமானைத் தியானித்து பூசை செய்தான். கோயிலுக்குள் சென்று மாசிலாமணிப் பெருமானின் திருவடியைப் பணிந்தான். சிவனடியார் திரு கூட்டத் தோருடன் அறுசுவை அருந்தி சிவனருள் புராணச் செய்திகள் கேட்டு இன்புற்றிருந்தான்.

*செய்யனே போற்றி! செல்வத் திருவாரூர் அரசே போற்றி*
*அய்யனே போற்றி தென் ஆவடுதுறை அமுதே போற்றி*
*துய்யனே போற்றி ஞானச்சுகமளித்து என்னை யாண்ட*
*மெய்யனே போற்றி தியாக விடங்கனே போற்றி.....*

என வழிபாடாற்றி வரும்பொழுது ஒருநாள் முசுகுந்தன் மனதில் திருவாரூர் வீதி விடங்கப் பெருமானைத் தரிசிக்கும் அன்பு மேலோங்க மாசிலாமணி பெருமானிடத்து மனமுருகி வேண்டினான். அனைத்தும் வல்ல பெருமான், மும்மலங்களின் தொடர்பை நீக்கி திருவடி தீட்சை செய்தருளினான். பெருமானிடத்து விடைபெற்று படைகள் சூழ தேர் ஏறி தன் மனைவியோடு திருவாரூர் சேர்ந்து வன்மீகநாதர் திருவடிகளை வணங்கி துதித்து மகிழ்ந்தான். திருவருளால் எட்டு சேய்களுக்குத் தந்தையானான். வடிவழகு,வீரம், கருணை, நடுவுநிலைமை, கலை, அஞ்சாமை, அறிவு, ஊக்கம், பொறை, கொடை இவை யனைத்தும் பொருந்திய மூத்த மகனுக்கு, பட்டாபிஷேகம் செய்வித்து, தான் செய்து வந்த அரசாட்சி முழுவதையும் அவனிடம் தந்துவிட்டு, அடியார் கூட்டத்தில் சேர்ந்து இறைவன் திருவடி தாமரைகளை முழுவதுமாக எண்ணி நிட்டை கூடி ஆரூரான் அருட்கழல் சேர்ந்து உய்தி பெற்றான்.

தன் பிறப்பின் மகத்துவம் உணர்ந்து பிறந்தது முதல் தன் ஆயுட்கால முழுமையும் தனக்கு அருள் செய்த சிவபெருமானின் திருவருளைப் போற்றிப் பரவிய செய்ந்நன்றி மறவா செல்வராக விளங்கிய சிவத்தொண்டராம் முசுகுந்தன் திருவடிகளைப் போற்றி சிறப்புறுவோமாக.

---

**திருவாரூர்ப்புராணம் :**

இது சம்பந்தமுனிவர் என்பவரால் இயற்றப்பெற்றது; 111 சருக்கங்களைக் கொண்டது. 2929 செய்யுட்களையுடையது. தியாகராஜச்சருக்கம், திருவிழாச் சருக்கம், முசுகுந்தலிங்கச் சருக்கம் என்ற மூன்று சருக்கங்களில் முசுகுந்தன் வரலாறு வலனொடுசெய்த போர் மிக விரிவாகக் (கந்த புராணத்தில் ஆங்காங்குக் கண்ட போர் நடையில்) கூறப்பெற்றுள்ளது. திருவிழாச் சருக்கத்தில் திருவிழா எடுத்தமையும் மற்ற ஆறு விடங்கரையும் ஆறு தலங்களில் தாபித்தமையும் கூறப்பெற்று உள்ளது. முசுகுந்தலிங்கச் சருக்கத்தில், முசுகுந்தன் பூசனைபுரிந்த லிங்கம் புற்றிடங்கொண்ட பெருமான் கோயில் தென்பாலுள்ளது என்றும், அவ்விலிங்கத்தைப் பூசனை புரிந்தமையால் மனுகுலவேந்தன் யாரும் எய்திடா வளம் படைத்தான் என்றும், அவ்விலிங்கத்தைப் போற்றல் செய்வோர் முசுகுந்தன் போன்று பல் பெருந்திருவின் மல்குவர் என்றும் கூறப்பெற்றுள்ளது.



# அகத்தியருக்கு அருள்புரிந்த மாசிலாமணியீசுவரர்

- சி. கிரிஜா, எம்.ஏ,. எம்.ஃபில்., பி.எட்., திருவிடைமருதூர்.

(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப் பள்ளி முதுகலைத் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகின்றார். 2010 சித்திரை ஆயில்யம் (சிவஞான சுவாமிகள் குரு பூசை) கட்டுரைப் போட்டியில் முதலிடம் பெற்று மகா சன்னிதானம் அவர்களிடம் பாராட்டுச் சான்றிதழ் பெற்றவர்கள்)

முன்னுரை :

*"பிறக்கமுத்தி ஆரூரில், காணமுத்தி*
*சிதம்பரத்தைப், பிரியா துற்றங்கு*
*இறக்கமுத்தி காசிதனில், நினைக்கமுத்தி*
*சோணகிரி என்பர், இந்தச்*
*சிறப்புறுங்கோ முத்திநகர் பிறந்தவர்க்கும்*
*இறந்தவர்க்கும் தெரிசித் தோர்க்கும்*
*மறப்பறஉள் நினைந்தவர்க்கும் துதித்தவர்க்கும்*
*இருந்தவர்க்கும் வழங்கும் முத்தி"*

- திருவாவடுதுறைப்புராணம்.

உலக முதல்வனாகிய சிவபெருமானை உணர்ந்து அன்பால் வழிபட இம்மை, மறுமை, வீடுபேறு எல்லாம் ஒருங்கே கிடைக்கும். இதற்கு உதவ இரண்டு இன்றியமையா சாதனங்கள் தேவை. ஒன்று திருக்கோயில். மற்றொன்று இறைவனை வழிபடக் கூடிய நெறியினை விளக்கும் குருபரம்பரை.

இவ்விரண்டும் இறைவனால் ஒருங்கே அமையப்பெற்ற சிறப்பு வாய்ந்தது திருவாவடுதுறை என்னும் தலமாகும். இது சிவனுக்கு உகந்த சிறப்பான தலம். அனைத்து உயிர்களுக்கும் பசுத்துவ நீக்கமும் சிவத்துவ விளக்கமும் அருளவல்ல அற்புதத் திருத் தலமாகும். இத்தலம் அநாதி முத்தித்தலமாகும்.

திருவாவடுதுறை பெயர்க்காரணம் :

திரு + ஆ + அடுதுறை = திருவாவடுதுறை. ஆக்கள் அடுத்த துறை. ஆ - பசு. துறை - ஆற்றுத்துறை. பசுக்கள் நிறைந்துள்ளதும் காவிரிக்கரையில் ஆற்றுத் துறையில் அமைந்துள்ளமான ஊர் என்பது சொற்பொருள் காரணம்.

ஆ உரு பெற்ற உமையன்னை இத்தலத்திற்கு வந்து அவ்வுரு நீங்கி பழைய அருள்ஒளி உருவு பெற்றதால் திருவாவடுதுறை எனப்பெயர் பெற்றது என்பது புராணக்காரணம்.

ஆ என்பது பசு. அது ஆகுபெயராய், பசுத்துவம், பசுத்தன்மை, இருள் மலம் என்னும் பொருளைக் குறிக்கும். அடும் என்பது நீக்கும். இருள் மலத்தை நீக்கும் அருள்துறை என்பதால் திருவாவடுதுறை எனப்பெயர் பெற்றது என்பது சித்தாந்தப் பொருள் காரணம்.

இத்தலம் வடமொழியில் கோமுத்திபுரம் (கோமுக்திக்ஷேத்ரம்) என்று அழைக்கப் படும். கோகழி என்று மாணிக்கவாசகரால் குறிக்கப் பட்டது இத்தலமே என்பது பெரியோர் முடிபு.

இத்தலத்தில், பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமான், மாசிலாமணி என்னும் திருநாமம் கொண்டு எழுந்தருளியிருக் கின்றார். இவருக்கு கோமுத்தீசுவரர், அணைத்தெழுந்த நாயகர், புத்திரத்தியாகேசர், போதியம்பலவாணர், பூகைலாச ஈசுவரர், கோகழிநாதர் போன்ற பற்பல பெயர்கள் உண்டு. இறைவி ஒப்பிலாமுலையம்மை என்னும் திருநாமம் பெற்று அருள்புரிகின்றாள். இக்கோயிலில் மூன்று இராஜகோபுரங்களும், 20 விமானங்களும், பெரிய வசந்த மண்டபமும் கொண்டதாகும்.

இந்த பிப்பிலவனத்தில் (பிப்பிலம் - அரசமரம்) தமிழ்க்குறுமுனி அகத்தியர் தரும நந்தீசுரரைத் தரிசித்ததையும், நந்தீசுரர் அகத்தியருக்குத் தல மகத்துவம் உரைத்ததையும், இத்தலத்தின் சிறப்புகளையும் இக்கட்டுரையில் காண்போம்.

**பிப்பிலவனத்தில் அகத்தியர் :**

பொதிகை மலையில் தம் மனைவியுடன் வாழ்ந்து வந்த அகத்தியர் ஒருமுறை எல்லாச் சிவத்தலங்களையும் வழிபட விரும்பி, சிவாலயங்கள் பலவற்றை வழிபட்டு, திருவாவடுதுறை அருகில் உள்ள திருக்கோடிக்காவை வந்தடைந்தார்.

திருக்கோடிக்காவில் உள்ள இறைவனைத் தினந்தோறும் பூசை செய்து வந்தார். அப்போது அங்கிருந்த உத்தமர்களின் உபசாரங்களையெல்லாம் ஏற்றுக்கொண்ட அகத்தியர் அவர்களை மதிக்கவில்லை. மாறாக அவர்கள் வேதம் ஓதுதலையும் இகழ்ந்து பேசினார். அவருக்கு யான், எனது என்ற பழைய மலவாசனை இருந்ததை உணர்ந்த இறைவன், அதை அவருக்கு உணர்த்த விரும்பினான் என்பதைத்

*"துணிந்து யான் எனது என்று என்னும்*
*தொடர்மலவாசஞ் சற்றே அணைந்திட"*

என்ற வரிகள் மூலம் உணரலாம். இது சிவஞானபோதம் பன்னிரண்டாம் சூத்திரத்துடன் ஆராயத்தக்கது.

**ஆணவ மலமறுத்த இறைவன் :**

ஒருநாள் அகத்தியர் இறைவனை அர்ச்சிக்கும்போது, சிவலிங்கத்திலிருந்து கமண்டலத்தைக் கையிலே உடைய கோடி அகத்தியர்கள் உலோப முத்திரைகளுடன் விரைவில் தோன்றி இறைவனை அர்ச்சிக்கும் புதுமையைக் காட்டினார்.

*"இரண்டற உயிரின் மேவும் எழிற்பரஞ்சோதி அந்த*
*முரண்டனை அகற்ற வேண்டி முதிர்சிவ லிங்கத்தின்கண்*
*இரண்டகக் கையர்கோடி அகத்தியர் கடிதிற்தோன்றி*
*அரண்டகு தன்தாள் மாதோடு அர்ச்சிக்கும் புதுமை காட்ட"*

- திருவாவடுதுறைப்புராணம் 1775

இதனால், அகத்தியர் மிகுந்த வெட்கமடைந்தார். அவருடைய உடலெல்லாம் வெளுத்து அயர்ச்சியடைந்தார்.

**அகத்தியர் இறைவனிடம் வேண்டல் :**

ஐயனே ! என்னுடைய சிறுமையால், மயக்கத்தால் அடியார்களை அரன் எனத் தொழாமல் இகழ்ச்சியாகப் பேசினேன். மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய இம்மூன்றும் நீயேயாகி ஆன்மாக்களுடைய மலங்களைத் தீர்க்கின்ற நன்மையையும் நான் மறந்தேன். அடியார்களைப் போற்றும் மரபையும் மறந்தேன். பொய் வேடம் கொண்டேன்; எனக்கு நல்லறிவு புகட்டினீர்; அடியேனுடைய குற்றங்களைப் பொறுத்தருள வேண்டும் என அகத்தியர் இறைவனிடம் வேண்ட இறைவனும் மகிழ்ந்து, கோமுத்தித்தலம் வருமாறு பணித்தருளினார்.

*"தலத்தொடு மூர்த்தி தீர்த்தமும் மூன்றும்நீ தானே யாகி*
*நலத்தொடு மலங்கள் தீர்க்கும் நன்மையும் மறந்தேன்"*

- திருவாவடுதுறைப்புராணம் 1778

**அகத்தியர் திருவாவடுதுறை வந்தடைதல் :**

திருக்கோடிக்காவில் கோடீச்சுரரின் திருவடிகளை வணங்கி விடைபெற்ற அகத்தியர் தம் மனைவியுடன் திருவாவடுதுறை வந்தடைந்தார். இங்கு முறைப்படி நீராடி, துணைவந்த விநாயகரை வணங்கி, அரசமரத்தை வலம்வந்து, நந்தியெம் பெருமானை வணங்கினார். அகத்திய மாமுனியின் விகாரத் தோற்றத்திற்கான காரணத்தை நந்தியெம் பெருமான் கேட்க, அகத்தியர் நடந்தனவற்றைக் கூறி, இத்தலத்திலே தாம் செய்ய வேண்டிய பணிகள் குறித்துத் தெரிவிக்குமாறு வேண்டினார்.

**நந்தீசுரர் அகத்தியருக்குத் தலப்பெருமை உரைத்தல் :**

நந்தீசுரர், அகத்தியரை நோக்கி, திருவாவடுதுறையின் பெருமைகள் ஏராளம். அதனை ஆயிரம் கோடி பிரமர்கள் ஆயிரம் கோடி நாக்குகளால் சொன்னாலும் முடிவு பெறாது; இருந்தாலும் இயன்ற வரையில் கூறுகின்றேன் கேட்பீராக என்று கூறத் தொடங்கினார்.

*"உத்த மத்தலத் தின்திறம் ஓதிட*
*விதியொ ராயிர கோடிபே ராயிர*
*கோடி நாவால் விளம்பினு முற்றுறாது"*

**அநாதி முத்தித்தலம் :**

இறைவன் முதலில் உலகைப் படைத்தபோது, தமது இச்சை, ஞானம், கிரியை என்ற சக்திகளால் தீர்த்தம், தலம், மூர்த்தி என்னும் இம்மூன்றையும் படைத்து, இதனை என்றும் விரும்பியிருத்தலால் 'அநாதி முத்தித்தலம்' என்று இப்பதி பெயர்பெறும்.

**பூகைலாசம் :**

அம்பிகையின் பசு உருவைப் போக்கி, அன்போடணைத்துக் கயிலாயமாகவே தம்முடைய திருக்கண்ணால் உமையானவள் பார்க்கச் செய்த இறைவனின் தன்மையாலும், கற்பகத்தரு, காமதேனு முதலியவை ஆன் உருவில் முன்பு அம்பிகையோடு இருந்ததால் 'பூகைலாசம்' எனப்பெயர் பெற்றது. நான்கு வேதங்களும் முறையிடுவதால் இத்தலத்திற்கு சமமானது எங்கும் இல்லை.

*"தருக்கு லம்புடை சூழ்திரு வாவடு*
*தண்து றைப்பெயர் பூகயி லாசமாய்"*

- திருவாவடுதுறைப்புராணம் 1788

**வேதபுரம் :**

அசுரர்களை அழித்து, தேவர்களைக் காத்து கோமுகாசுரனிடமிருந்து வேதங்களை மீட்டதால் இது 'வேதபுரம்' என்ற பெயர் கொண்டது.

*"உவகை யுற்றநல் வேத மழைத்தலால்*
*உலகில் வேதபு ரப்பெயர் கொண்டதாம்"*

- திருவாவடுதுறைப் புராணம் 1789

**போதிவனம் :**

இறைவனே தமது திருக்கரத்தால் அரசின் விதை இட்டு, சடையிலுள்ள கங்கை நீரை வார்த்து வளர்ச்சி பெறச் செய்ததால் இதனைப் 'போதிவனம்' என்றும் அழைப்பர்.

*"சிவன்ம லர்க்கையி னால்விதை யிட்டுநற்*
*செஞ்ச டைப்புனல் விட்டு வளர்த்தலாற்*
*புவன மித்தலந் தன்னைநற் புண்ணியப்*
*போதி மாவன மென்றும் புகலுமால்"*

- திருவாவடுதுறைப்புராணம் 1789

**பிப்பிலவனம் :**

திருமால், பிரமன், இந்திரன், தேவர்கள் ஆகிய அனைவரும் அரசமரத்தின் உருவமாக ஆனதால் இத்தலத்தை 'பிப்பிலவனம்' என்றும் 'தேவதாருவனம்' என்றும் கூறுவர்.

*'அரிய யன்மக வான்முதற் தேவர்கள்*
*யாரும் இந்த அரசுரு ஆனதால்*
*திரும லிந்தஇப் பிப்பில மாவனம்;*
*தேவ தாருவ னம்என்றும் செப்புவர்;'*

- திருவாவடுதுறைப்புராணம் 1790

**கஜாரணியம் :**

பூரணை, புட்கலை என்ற மாதர்களின் நாயகனான விநாயகன் இருப்பதால் 'கஜாரணியம்' என்றும் அழைப்பர்.

*மரும லர்க்குழற் பூரணை புட்கலை*
*மாதர் நாயகன் வாரண மேவலாற்*
*பொருவி லாதஇப் போதிவ னம்கசா*
*ரணியம் என்றும் புகல்வர் மிக்கோரெலாம்*

- திருவாவடுதுறைப்புராணம் 1790

**போதியம்பலம் :**

ஒப்பிலாமுலையம்மை காணும்படி மாசிலாமணிப்பெருமான் அரசமரங்களின் அடியில் திருக்கூத்து ஆடுதலால் 'பொற்சபை' என்றும் 'போதியம்பலம்' என்றும் கூறுவர்.

*"ஒப்ப றுந்திருக் கூத்துநின் றாடலால்*
*உலகுள் ளோர் மகிழ்ந் தோங்கு நவநிதிப்*
*பொற்பு றுஞ்சபை யென்றுமா தாண்டவப்*
*போதி யம்பல மென்றும் புகல்வரால்"*

- திருவாவடுதுறைப்புராணம் 1791

**தியாகபுரம் :**

மகப்பேறு வேண்டிவந்த முசுகுந்த மன்னனுக்குத் தம்மைத் தியாகேசராகவும் இத்தலத்தைத் திருவாரூராகவும் காட்டி புத்திரப்பேறு அளித்தலால் 'தியாகபுரம்' என்றும் புகல்வர்.

*"பொன்ப ராவும்இக் கோமுத்தி நன்னகர்*
*புகழ்த் தியாக புரமென்று மாயதே"*

- திருவாவடுதுறைப்புராணம் 1792

நந்தீசபுரம் :

நந்தீசரை இடபமாக்கியருளியதனால் 'நந்தீசபுரம்' என்பார்.

*"என்னை ஊர்தற் இடபம தாக்கிமெய்*
*இன்ப மீந்திங் கிருத்திய நன்மையால்*
*மன்னு நந்தீ சுரபுர மென்னனவும்"*

- திருவாவடுதுறைப்புராணம் 1793

அகத்தியபுரம் :

அகத்திய மாமுனியாகிய உமக்கு அருள் செய்து இங்கேயே நிலைபெறச் செய்ததால் 'அகத்தியபுரம்' என்றும் இனி வழங்கப்பெறும்.

*"உன்ன லால்இவ் வுயர்பதி யென்றும்நற்*
*பொன்னு லாம்எழில் மேவும் அகத்திய*
*புரம தென்றும் புகழ்ந்திடற் பாலதே"*

- திருவாவடுதுறைப் புராணம் 1793

இவ்வாறு, திருவாவடுதுறைக்கு இறைவன் கொடுத்த பெயர்கள் மொத்தம் பன்னிரெண்டாகும். இவை இப்போது உள்ளன. இனி எதிர்காலத்தில் என்னென்ன பெயர்கள் பெறுமோ அறியோம் என்று கூறினார்.

மேலும், முன்பு இங்கு தவம் செய்து வீடுபேறு அடைந்தவர்களின் எண்ணிக்கையும் அறுதியிட்டுக் கூறமுடியாது. திருமால், நான்முகன் முதலான தேவர்கள், அசுரர்கள், முனிவர்கள், இயக்கர்கள், கின்னரர், கிம்புருடர்கள், சூரிய சந்திரர்கள், நட்சத்திரக் கணங்கள், பற்பல வருணத்தவர்கள் ஆகிய இவர்களெல்லாம் இங்கு வந்து வணங்கிப் பேரின்ப வீட்டைப் பெற்றுள்ளனர்.

இத்தலத்தை யார் நினைத்தாலும் அஞ்ஞானம், வினைத்துன்பம், உடல் துன்பம், எமதண்டனை, அவமிருத்து, சாபம், பிறவிநோய் எல்லாம் நீங்கிவிடும். இது சத்தியமாம்.

*"ஆதி யந்தமி லாதஅஞ் ஞானமும்*
*அருவி னைத்துய ரும்உடற் துன்பமும்*
*மாது யர்க்கிட மாம்எம தண்டமு*
*மன்னு மாயை அவமிருத் துக்களும்*
*பேத மாங்கொடுஞ் சாபமும் தாபமும்*
*பின்னு மற்றப் பிறப்புறு நோய்களும்*
*தீதி லாதகோ முத்தித்த லத்தையார்*
*சிந்தை செய்கினும் தீர்வது சத்தியம்"*

- திருவாவடுதுறைப்புரணம் 1796

என்று இத்தலத்தின் பெருமைகளை நந்தீசர் அகத்தியருக்கு அன்புடன் உரைத்தார்.



தெட்சிணாமூர்த்தி (தெற்கு கோஷ்டம்)



அடிமுடிகாணுதற்கரிய அண்ணல் (கருவறை மேற்கு கோஷ்டம்)

# சேரமான்பெருமாளும் சேரலிங்கமும்

- ப. மகாலிங்கம், எம்.ஏ., பி.எட்., திருவிடைமருதூர்.



(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியராகவும், திருக்குடந்தைத் திருமுறை மன்றச் செயலராகவும், திருவிடைமருதூர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் திருநெறிய தமிழ் மன்றத்தின் பொறுப்பாளராகவும் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றார்கள். நாயன்மார்கள் (ஒன்பதின்மர்) வரலாற்றைப் புதுக்கவிதையாகப் படைத்தளித்துள்ளார்)

*ஆசிலாத் தென் துறைசை யரசடியின்*
*முளைத்தெழுந்த வமுதை ஞானத்*
*தேசுலா வுங் கருணைச் சிவக்கொழுந்தை*
*பரலோகத் திரளை யார்க்கும்*
*பேசொணாச் சுகந்தருமுக் கட்கனியை*
*யன்பரின்பப் பெருக்கிற் தோன்றும்*
*மாசிலா மணியினைக் கண் மணிக்குளிரக்*
*கண்டுதினம் வணங்கி வாழ்வாம்.*

**மன்னரின் காலம் :**

சேரநாடு, அந்நாட்டின் தலைநகரம் கொடுங்கோளூர். இன்றைக்கு 1300 ஆண்டுகளுக்கு முன்னர் தொண்டை நாட்டில் ராஜசிம்மப் பல்லவனும், பாண்டிய நாட்டில் கோச்சடையன் ரணதீரனும் அரசு வீற்றிருந்த காலம் கி.பி.670 -710. இக்காலத்தில் சேரநாடாகிய மலை நாட்டை ஆளும் வேந்தராக விளங்கியவர் சேரமான் பெருமாள் நாயனார் என்றழைக்கப்பெறும் பெருமாக் கோதையார் ஆவார்.

**கொடை நிழலும், குடை நிழலும் :**

கொடுங்கோளூர் சேரமரபில் அரசர்கள் வழிவழியாக அரசு புரிந்து வந்த சிறப்புக்குரியது. பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், புறநானூறு முதலிய சங்கப் பழந்தமிழ் நூல்களில் சேர மன்னர்களின் சிறப்புக்களை அறியலாம். பதிற்றுப் பத்து சேரமன்னர்களைப் பற்றியே பாராட்டுவது. சிலப்பதிகாரம் சேர இளவல் இளங்கோவடிகளால் பாடப்பெற்றது. சேரன் செங்குட்டுவனின் சிறப்பை சிறப்பாய்ப் பேசுவது. புறநானூறு பெருஞ்சோற்று உதியன் சேரலாதன், மாந்தரன் சேரல் இரும்பொறை முதலாகப் பல சேர மன்னர்களின் புகழினை புகழ்ந்துரைப்பது. அம்மரபில் கொடை நிழலும், குடை நிழலும் தாங்கி ஆட்சி புரிந்த மன்னன் சேரன் செங்கோட்பொறையன். "வையகமும் தவமும் தூக்கின் தவத்திற்கு ஐயவி அனைத்தும் ஆற்றாது" என்ற உண்மை உணர்ந்தவனாகித் தனது அரச பதவியைத் துறந்து தவம் செய்தற் பொருட்டு தவவனத்தைச் சார்ந்தான்.

**மருமக்கட்தாயமுறை :**

அமைச்சர்கள் ஒருங்கு கூடினர். இந்நாட்டிற்குத் தக்கவாறு அரசு செய்வது அரச குடும்பத்திற்கே இயலும் ஆகையால், மலைநாட்டுச் சட்ட ஒழுங்கின்படி வழி வழி தாயபாகம்வரும் முறைமை ஆய்ந்தனர். தமிழ்நாட்டில் உள்ள ஏனைச் சோழர், பாண்டியர் முதலாகிய நாடுகளில் போல மலைநாட்டுத் தாயமுறை மகன் - மகன் மகன் முதலாக வரும் ஆண் மரபு வழிவருவதில்லை. உடன்பிறந்த பெண் வழியாகத் தாயம் வருவது இம்முறை வழியே, அம்மரபில் வந்துதித்தவர் பெருமாக்கோதையார். அவரைச் சென்று அணுகி, வணங்கி நின்று, நிகழ்ந்தவற்றைக் கூறி 'அரசேற்க வேண்டும்' என்று வேண்டினர்.

**இன்பம் பெருகும் திருத்தொண்டு :**

பெருமாக்கோதையார் பிறவியிலேயே அரச உரிமையைப் பெற்றிருந்தும் அவ்வுரிமைகளையும், போகங்களையும் விரும்பாமல் இளமை தொட்டுக் கொடுங்கோளூரில் உள்ள அரண்மனையில் தங்காது திருவஞ்சைக் களத்தில் தங்கிச் சிவன் திருப்பணிகள் செய்து, இறைவர் கழலே பரவுவதும் அடியார்களைப் பேணுவதுமே குறிக்கோளாகக் கொண்டார்.

*உள்மேவிய அன்பினராகி உரிமை அரசர் தொழில் புரியார்*
*தெண்ணீர் முடியார் திருவஞ்சைக் களத்திற்*
*திருத்தொண்டே புரிவார்*
(பெரிய புரா. 3754)

*பரமர் வாழ் திருவஞ்சைக்களத்தில் பணி புரிந்து*
(திருவாவடு புரா. 2427)

வைகறையில் எழுவார் நீர் ஆடி, நீறும் ஆடி, நாவுக்கரசப் பெருந்தகை குறிப்பிடுவது போல நித்தலும் எம்பிரான் கோவில்புக்கு, புலர்வதன்முன் அலகிட்டு, மெழுகும் இட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி வழிபடும் திருத்தொண்டினை இடைவிடாது மேற்கொண்டு வந்தார். இளமைத் தொட்டே சிவன் அன்பில் விளங்குதல் அரிது. அரச மரபில் வந்தோர் அரசுரிமை ஆட்சி புரியாது சிவனது அடிமைத் தொழில் புரிதல் அதனின் அரிது. இந்நிலை முன்னைத் தவத்தான் அன்றி வராது.

**இறைவரது திருவருளும் அரசுரிமையும் :**

இந்நிலையில் அமைச்சர்கள் வந்துரைத்தது கேட்டு, என் கடன் பணி செய்து கிடப்பதே என்று அதனையே மேற்கொள்வதா? அன்றி அருள்வழியே இப்போது வந்த அரசினையும் அதற்குமாறின்றி ஏற்று உலகியற் கடமைகளையும் அந்த அருள் வழியே மேற்கொள்வதா? எது செய்யத் தக்கது? எனறு ஐயம் கொண்டனர். திருத்தொண்டிற்கு இடையூறாக அரசு இருக்கும் ஆதலின் அதனை ஏற்க அஞ்சினர்.

சாதி, ஆயுள், போகம் என்பன முன்னை வினைக் கீடாக வருவன ஆதலின் அக்கடமைகளை மறுத்தலும் திருவருளுக்கு மாறாகும்,ஆதலின் அருள் வழியே வந்த அரசினை மறுக்கவும் அஞ்சினர். அன்பு வழியினின்றும் வழுவாது அரசு செய்யும்படி திருவருள் ஆணை பிறக்குமாகில் அதனை இறைவனிடம் விண்ணப்பித்து அறிவேன் என்று துணிவு கொண்டு அஞ்சைக் களத்தாரைத் துதி செய்தார்.

இறைவரது திருவருளாலே அன்பு வழிபாடும், எவ்வுயிரும் இயம்புவன அறியும் அறிவும், ஒப்பற்ற விறலும், தடையிலாக் கொடையும் படைவாகனம் முதலான அரசர்க்கு வேண்டியன யாவும் பெற்றார்.

***மேவும் உரிமை அரசளித்தே விரும்பு காதல் வழிபாடும்***
***யாவும் யாரும் கழறினவும் அறியும் உணர்வும் ஈறில்லாத்***
***தாவில் விறலும் தண்டாத கொடையும் படைவாகன முதலாம்***
***காவல்மன்னர்க் குறியனவும் எல்லாம்கைவந் துறப்பெற்றார்.***

-பெரிய புராணம். ...3741

இறையருளைப் பெற்ற, கழறிற்றறிவார் எனும் திருநாமமும் உடையவராகிய பெருமாக் கோதையார் அமைச்சர்பால் அரனருளால் ஒப்புக் கொள்கிறோம் என்றதும் மகிழ்வுற்று முடி புனைவதற்கான ஏற்பாட்டினை விரைந்து செய்வார்கள் ஆயினர்.

**திருநீற்று அன்பு :**

நன்னாளிலே திருமுடி புனைந்தார், எல்லாவுயிரும் மகிழ்ந்தன. இம்மைக்கும் மறுமைக்கும் அரசு முடிபுனைந்த சேரமான் பெருமாள், தம்பிரான் கோயிலை வலம் வந்து வீழ்ந்து வணங்கி, வாழ்த்திக் களிற்றின் மீது ஏறினார். பலவகை மங்கல முரசும் வெற்றிச் சங்கும் சின்னங்களும் ஒலிக்க, கொற்றக்குடையும் சாமரையும் பணியாளர் ஏந்த நகர்வலம் பவனி வந்தார்.

முடிசூடி யானை மீது பவனிவரும் போது, எதிரிலே ஒருவண்ணான் வந்தான். அவன் மீது உவர்மண் படிந்து, அது வெண்ணீறு போல் காட்சியளித்தது. யானை மீது இருந்த சேரர் கோமான் திடும் என்று குதித்து அவன் கால்மீது வீழ்ந்தார். “என்னை யார் என்று எண்ணினீர்? நான் அடி வண்ணான்” என்றான். “அப்பா! நீ அஞ்சற்க, திருநீற்றின் வார வேடம் நீ காண்பித்தாய் அதனால் வணங்கினேன். நான் அடிச்சேரன். நீ அஞ்சாது ஏகுவாய்'' என்றார். எல்லோரும் அவரது சிவபக்தியைக் கண்டு வியந்தார்கள். சேரர் அரண்மனையை அடைந்தார். அவருடைய அரசாட்சியில் சோழரும் பாண்டியரும் நட்பாளராயிருந்தனர். குடிகள் நல்வாழ்வு பெற்றனர். அகப்பகையும் புறப்பகையும் அற்றன. சிற்றரசர் திரை கொணர்ந்து வணங்கினர். திருவெண் ணீற்றொளி வளர்ந்தது. மறை வளர்ந்தது.

**கூத்தன் சிலம்பொலி :**

கழறிற்றறிவார் - தம் ஆட்சியால் பெறும் பயனும், நிறையும் தவமும் தேடும் பொருளும், பெருந்துணையும் தில்லையில் ஆடும் திருவடியே எனத் துணிந்து அம்மலரடியை மலரிட்டு வழிபட்டு வந்தார். மணமிக்க மஞ்சனநீர், மலர், சந்தனம், நறும்புகை, ஒளிவளர் விளக்கு முதலான வழிபாட்டுப் பொருள்களுடனும் வழிந்து பொங்கும் காதலுடனும் வழிபட்டதனால் இறைவர் அவர்க்குப் பூசை முடிவில் சிலம்பொலி கேட்பித்தார்.

**பாணர்க்குப் பெரும் பொருள் ஈந்தது :**

மதுரை மாநகரில் திருவால்வாயில் இறைவரை வழிபடும் பேரன்பர் பாணபத்திரர். அவர் வறுமையால் வாடுவதை அறிந்த சொக்கநாதர், "மதிமலிபுரிசை மாடக் கூடல் ....." எனும் திருமுகம் தந்து, "கொடுங்கோளூர் சேரனிடம் அளிப்பாயாக, அவன் வளநிதி தருவான்" என்று கனவில் அருளி மறைந்தார். பாணபத்திரர் அளித்த திருமுகத்தைப் பெற்ற பெருமான் 'என்னையும் பொருளாகக் கொண்டாரே?' என்று மகிழ்ந்து தமது கருவூலத்தில் இருந்த இருநிதிகளைப் பாணபத்திரர்க்கு வழங்கினார். ஒரு பெரும் களிற்றின் மேல் அவரை அமர்த்திப் பல பணியாட்களுடனும் காவல் வீரர்களுடனும் செல்ல விடுத்தார்.

**சுந்தரர் நட்பும் - இறைவர் வழிகாட்டலும் :**

ஒருநாள் பூசை முடிவில் சிலம்பொலி வழக்கம்போல் கேட்கப் பெறாமையால் வாளை எடுத்து மார்பில் நாட்ட விரைந்தார். அப்பொழுது சிலம்பொலி கணீர் என்று கேட்டது. 'சிதம்பரத்தில் வன்தொண்டனுடைய பாடலில் அழுந்தியிருந்து விட்டோம்' என்று அரனார் அருளிச் செய்தார். சுந்தரரைக் காண விரும்பிப் புறப்பட்டார் சேரர் கோமான். தில்லைச் சென்றார். கூத்தப் பெருமானைக் கும்பிட்டார். பொன் வண்ணத் தந்தாதி பாடிப் பெருமானைப் பரவினார். இறைவரும் அதற்குப் பரிசிலாகத் தம் சிலம்பொலியருளினார். ஆராத காதலுடன் அந்திவண்ணரை வணங்கி நம்பியாரூரைக் காண திருவாரூர் நோக்கி செல்வாராயினர்.

**கோமுத்தீஸ்வர கோயிலில் சிவலிங்கப் பிரதிட்டை :**

பெருமாக் கோதையார் தில்லைத் தொடங்கி பல தலங்களை வழிபட்டு, திருவாவடுதுறையை அடைந்தார். ஆராக் காதலுடன் கோமுத்தீசுவரர் திருவடிகளை வணங்கினார். திருவாரூர் தியாகேசர் கோலத்தை இறைவன் துறைசையில் திரவியத் தியாகேசராகக் காட்டியருளினார். திருஞான சம்பந்தருக்கு உலவாக்கிழி கொடுத்தருளியதையும் சேரர் கேட்டு மகிழ்ந்தார்.

***திருவாரூர் தியாகர் கோலம்***
***திரவியத் தியாகர் காட்ட***
***உருகார்வத் தொடும் பணிந்து***
***சம்பந்தர்க்கு உலாவச் செம்பொன்***
***பெருகு ஆர்வத்தொடு கொடுத்த***
***பேரருள் கேட்ட மிக்கு***
***மருவார் நற்பனந்தார்ச் சேர***
***மான் திருந்து அவ்வூரில்***

- திருவாவடுதுறை புரா.2439

திருவாவடுதுறை அரனாரை நாளும் வழிபட்டு வரும் நாளில், மாசிலாமணி ஈசர் கோயிலில் தம் பெயரினால் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்ய விரும்பினார். திருக்கோயிலுள் வட்டாரிசத்தில் வாயுமூலையில் ஆகம விதிப்படி தாபித்து அன்புடன் பூசித்துத் துதித்து அதற்கு வேண்டிய அளவில்லாத தானங்களையும் கொடுத்தார்.

**இலிங்கபேதங்கள்:**

இலிங்கம்-குறி, அதாவது அடையாளம். நாம் வழிபடும் பரம்பொருளைக் குறிக்கும் அடையாளம் சிவலிங்கம் ஆகும். இது சிவசக்தியின் சம்பந்தத்தையும், பிரம்மா, விஷ்ணு உருத்திரர் களாகச் சிவபெருமான் விளங்குதலையும் தெரிவிப்பது

***காணாத அறிவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்***
***நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்***

சேக்கிழார் திருவாக்கு, விநாயகர், அம்பிகை, முருகன், திருமால், பிரமன்,இந்திரன் முதலியோரும் சூரிய சந்திரர்கள் முனிவர்கள் முதலிய அனைவரும் சிவபெருமானைச் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்டு அருள்பெற்றதைத் தல புராணங்களில் காணலாம்.

***இயக்கர் கின்னர் யமனொடு வருணர்***
***இயங்கு தீ வளி-ஞாயிறு திங்கள்***
***மயக்கமில்புலி வானரம் நாகம்***
***.................................திருவடி அத்னை***
***அர்ச்சித்து ஆரருள் பெறுமாறது கண்டு***
***..................நின் திருவடியடைந்தேன்.***

அனைத்து தேவர்களும் விலங்குகளும் பறவைகளும் சிவலிங்க வழிபாடு செய்து அருள்பெற்று உயர்ந்ததை சுந்தரர் திருப்புன்கூர் திருப்பதிகத்தில் அருளிச் செய்துள்ளார்.

ஆலயங்களில் விநாயகர் முதலிய சிவ கணங்களால் வழிபடப்பட்ட மூர்த்தியை கணலிங்கம் என்றும் திருமால் முதலிய தேவர்களால் தாபிக்கப்பட்ட மூர்த்தியைத் தைவிகலிங்கம் எனவும், இருடிகளால் வழிபடப்பட்ட மூர்த்தியை ஆரிடலிங்கம் எனவும், மனிதர்களால் தாபிக்கப் பெற்ற மூர்த்தியை மானுட லிங்கம் என்றும் சிற்பியால் உருவாக்கப்பெறாமல் தாமே தோன்றிய மூர்த்தியைச் சுயம்பு லிங்கம் என்றும் கூறுவர். இலிங்கம் - அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவ லிங்கம், ஆன்ம லிங்கம், ஞான லிங்கம், சிவலிங்கம் ஆகிய ஆறு பேதங்களாக விளங்குவதைத் திருமூலர் ஏழாம் தந்திரத்தில் அருளியுள்ளார்.

**திருவாரூர் சென்று சுந்தரரைக் காணுதலும் பின் நிகழ்வும் :**

சேரமான் பெருமாள் நாயனார் - திருவாரூர் வருவதை அறிந்து வன்றொண்டர் அன்புடன் வரவேற்று வேண்டியவாறு உபசரித்து நட்புரிமை பூண்டார். அங்குச் சில நாட்கள் தங்கி மதுரை முதலிய திருநகரங்களைவணங்கித் திரும்பவும் திருவாரூர் வந்தார். சுந்தரரை அழைத்துக் கொண்டு கொடுங்கோளூர் வந்து பல நாட்கள் வழிபட்டு அளவளாவினார். சுந்தரர் திருவாரூர்ப் பெருமானார் திருவடி வணங்கும் காதலால் பிரிந்து சென்று சில நாட்கள் கழித்துத் திரும்பி வந்தார். ஆடி சுவாதியில் ஆரூரருடன் குதிரை மீது கயிலை சென்று திருக்கயிலாய ஞான உலா பாடிக் கணங்களுக்குத் தலைவராம் பதம் பெற்று சாயுட்சியம் அடைந்தார்.

*சிவகணத் தலைவராகும்*
*திருவருள் கொடுத்து மிக்க*
*பவமறத் திகழ்பே ரின்பப்*
*பரவையுள் படிந்து வாழென்று*
*உவகையோ டுரைப்ப நாவ*
*லூரரோ டுறைந்து ஞானத்*
*தவமுறு சேரர் சாயுச்*
*சியபதம் சார்ந்து வாழ்ந்தார்.*

- திருவாவடு. புரா. *2458*

திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலாமுலையம்மை திருக்கோயில் விமானமும் இரண்டாம் கோபுரமும்



# துறைசைப் புராணத்தில் திருமாளிகைத் தேவர்



- சே. ஜெயசெல்வன், எம்.ஏ., பி.எட்.,

(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப் பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகின்றார். சிவகாசி 'குருகுலத் தென்றல்' இதழ் நடத்திய கவிதைப் போட்டியில் வெற்றி பெற்று பரிசுகளுடன் 'கவிஞர்' எனும் பட்டம் பெற்றுள்ளார்)

திருவாவடுதுறைக்கு 'நவகோடி சித்தர்புரம்' எனும் பெயரும் உண்டு. அப்பெயர் வரக் காரணம் என்ன தெரியுமா? அப்புனித தலத்தில் பல கோடி சித்தர்கள் வந்து தங்கி யோக நிலையில் அரிய அற்புதங்களைப் புரிந்துள்ளனர். இதனால்தான் அத்தலம் சித்தர்புரம் என்றும் அழைக்கப் பெறுகின்றது. அவ்வாறு அங்கு வந்து சிறப்பு செய்தவர்களுள் திருமாளிகைத் தேவரும் ஒருவராவர். இவர் செய்த சிறப்புகளை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

**திருமாளிகைத் தேவர் :**

சைவத் திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறையாகத் திகழும் திருவிசைப்பாவை அருளிய ஒன்பதின்மருள் முதலாமவராகத் திகழ்பவர் திருமாளிகைத் தேவர் ஆவார். இவர் சுத்த சைவ வேளாளர் மரபில் தோன்றியவரும், சோழ மன்னர்களின் தீட்சா குருவாக விளங்கியவருமான இடைமருதூரில் வாழ்ந்த ஐந்து கொத்தாருள் ஒருவரான சைவராயர் வழியில் தோன்றிய அருளாளர்.

திருமாளிகைத்தேவர் தம் முன்னோர்கள் வாழ்ந்த மடம் மாளிகை மடம் (பெரியமடம்) எனப் பெயர் பெறும். அம்மடத்தின் சார்பால் இவர் திருமாளிகைத்தேவர் என்ற பெயரைப் பெற்றார் என்றும், "மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்து....." என்று நாவுக்கரசப் பெருமானால் சிறப்பிக்கப் பெறும் தில்லைத் தலத்து இறைவனைப் போற்றிய வாழ்வுடையராகத் திகழ்ந்ததால் அப்பெயர் பெற்றார் என்றும் கூறப்படுகிறது. இவர் துறவு மேற்கொண்டு திருவாவடு துறையில் தவம் புரிந்து அங்கே தமக்கென ஓர் மடாலயம் அமைத்துக் கொண்டு இறைவழி பாட்டில் ஆழ்ந்தார்.

**மாளிகைத் தேவரின் குருபக்தித் திறன் :**

மாணவனின் அஞ்ஞானத்தை நீக்கி, மெய்ஞ்ஞானத்தை உணர்த்துபவர் குரு. குருவருளால் கிடைக்கும் பலன்கள் பலவாகும். ***"..... குருவருள் பெற்றான் மறித்துப் பிறவியில் வந்து அணுகானே"*** என்ற திருமூலர் வாக்கும், ***"குருலிங்க வேடம் எனக் கூறில் இவை கண்டார் கருவொன்றி நில்லார்கள் காண்"*** என்ற திருவதிகை மனவாசகம் கடந்தார் கூற்றும், குருவருளால் பிறவா நெறியாகிய பரமுக்தி உண்டாவதை உணர்த்தும். இதனால்தான் மாளிகைத் தேவரும் தமக்கென ஓர் குருவைத் தேர்ந்தெடுத்தார்.

துறைசையில் சிவயோகத்திலிருந்த சித்தரான போகநாதரிடம் ஞானோபதேசம் பெற்று, அவரையே தம் குருவாகக் கொண்டு திகழ்ந்தார். போகர், நாள்தோறும் ஞானயோக சாதனை செய்து மாசிலாமணிப் பெருமானை வணங்கி வாழ்ந்த சிறப்புக் குரியவர். குருபக்தி மிக்க மாளிகைத் தேவர் பாசத் தொடர்பு அற்றவர். இறைவனுக்கு அர்ப்பணிக்கும் திருவமுதையே உண்டு வாழ்ந்தவர். இவர் பக்தித் திறத்தினைத் துறைசைப் புராணம்,

*"சைவநற் சமயத் துறைத்தவர் தம்முட்*
*சாலவுங் குருபக்தி யினராய்*
*மைவளர் பாசத் தொடர்பெலாம் அகற்றி*
*மாசிலாத் தேசொடும் பொலிந்து..."*

என்று நவில்கின்றது. இவர் தாம் பெற்ற குருவருளால் பல சித்திகளைப் பெற்றுச் சைவ சமயத்தை நன்கு வளர்த்துப் போற்றினார்.

**மாளிகைத் தேவரின் அருட் பணிகள் :**

உலகெலாம் உணர்ந்த ஓதற்கரிய கடவுளாகிய சிவபெருமானுக்கு ஆயிரம் திருநாமங்கள் உண்டு. அப்பெருமான் துறைசையில் கோமுத்தீசுவரர், மாசிலாமணிப் பெருமான் ஆகிய

திருப்பெயர்கள் கொண்டு உயிர்களுக்கு அருள் பாலித்து வருகின்றார். அப்பெருமானை நாள்தோறும் வணங்கி, அவருக்குத் தொண்டும் பூசையும் செய்து வரும் பெரும்பேறு திருமாளிகைத் தேவர்க்குக் கிட்டியது.

போகரின் உபதேசத்தின்படி இவர், எழில் திருஅம்பலத்தாடும் சிவனடிக் கமலப் பூசனை புரியும் செயலினை நாள்தோறும் சிறப்பாகச் செய்து வந்தார். இதனைத் துறைசைப் புராணம், *'மாசிலா மணிபொற் பாதம் நாள்தோறும் வணங்கி மிக்க'* என்ற தொடரால் உணர்த்துகிறது. குருநாதரின் கட்டளைப்படி மாசிலாமணிப் பெருமானை வணங்கி ஜபம், தவம், தியானம், நிட்டை இவை செய்து, சிவ சமயத்தை மேன்மேலும் வளர்த்து வந்தார். தில்லை திருத்தலத்திற்குச் சென்று அங்கு எம்பெருமானின் திருநடனக் காட்சியைக் கண்ட மகிழ்வில் திருவிசைப்பா பாடினார். பின்பு துறைசை வந்து மாசிலாமணிப் பெருமானை வணங்கி வழிபட்டு, பஞ்சமப் பண்ணினால் 'பொய்யாத வேதியா' எனத் தொடங்கும் பத்துப் பாக்களை நாவினுக்கு இனிக்க நயப்புறப் பாடி அருளினார்.

**சைவ சமயத்தின் சிறப்பு :**

உலகிலுள்ள சமயங்களுள் சிறப்புடையது சைவமே. இச்சிறப்பிற்குக் காரணம் 'அன்பே சிவம்' என்பதனைச் சைவநெறி ஆதார சுருதியாய் பெற்றுத் திகழ்வதே ஆகும். சைவம் - தமிழ் மக்களின் சமயம். திருநெறி, செந்நெறி என்றெல்லாம் செந்தமிழால் வாழ்த்தப்படுவது. சைவமும் தமிழும் ஒன்றுடனொன்று ஒட்டி வளர்ந்தன. அதனால்தான் திருமூலரும், ***"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"*** என்று எடுத்தியம்புகின்றார். இத்தகு உயரிய சைவசமயத்தின் சிறப்புத் துறைசைப் புராணம், திருமாளிகைத் தேவர் மகத்துவம் உரைத்த பகுதியில், ***"அலகிலாச் சமயந் தம்முள்மிக் கான சைவமே யதிகமாம்'*** என்று குறிப்பிடப்படுகின்றது. எல்லாச் சமயங்களுள்ளும் மேன்மையான சைவ சமயத்து இறைவனை ஆசாரத்துடன் பூசிப்பதே சிறப்பு எனக் கருதி திருமாளிகைத் தேவர் மாசிலாமணிப் பெருமானை அனுதினமும் அன்புடன் பூசித்து வந்துள்ளார்.

**திருமாளிகைத் தேவர் அருளிய அற்புதங்கள் :**

ஒரு தினம் திருமாளிகைத் தேவர் காவிரி நீராடி, சிவ பூசனைக்குரிய திருமஞ்சனம், மலர் மாலை ஆகியவற்றை ஏந்திக்கொண்டு வரும்போது, வழியில் மக்கள் ஒரு பிணத்தினைச் சுடலைக்குச் சுமந்து செல்வதைக் கண்டு தம் சிவபூசைக்கு இடையூறு நிகழா வண்ணம் அங்குள்ள விநாயகரைத் துதித்து அப்பிணத்தினை எழுந்து நடக்கச் செய்தார். சாவுக்கு அடிக்கும் பறையையும் விலக்கித் திருமஞ்சனத்தைக் கொண்டு போனார்.

இவர் தம் தவ வலிமையால் பேரழகு கொண்டு விளங்க அவரைக் கண்டு பிள்ளைப் பேறு இல்லா மாதர்கள் பலர் அவர் உருவத்தினைத் தம் மனத்தில் கொண்டனர். அதனால் அம்மாதர்கள் அவரைப் போலவே புதல்வர்களைப் பெற்றெடுத்தனர். இச்செயலைக் கண்ட அந்த அந்த மாதர்களின் கணவன்மார்களும் பிறரும் திருமாளிகைத் தேவர் மீது ஐயம் கொண்டு பழிச்சொல் கூறலாயினர். பிறகு நரசிங்கன் எனும் அரசனிடம் சென்று முறையிட்டனர். அம்மன்னன் உண்மை அறியாது, தேவரைக் கட்டி இழுத்து வர காவலாளிகளிடம் ஆணையிட்டான். அவர்கள் உடனே மாளிகைத் தேவரை சென்று சந்தித்தனர். தேவர் தம் தவ வலிமையால், காவலர்களே தாம் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு அரசனிடம் வந்து சேர்ந்தனர். இவ்வாறே வெட்ட வந்த படைத்தலைவர்களும் தாங்களே ஒருவரை ஒருவர் வெட்டிக்கொண்டு மாய்ந்தார்கள்.

இதனைக் கண்ட அரசன் மந்திரியுடன் சேர்ந்து தேவரை அழிக்க முற்பட, தேவர் ஒப்பிலாமுலையம்மையிடம் முறையிட்டார். அம்மை, துறைசை திருக்கோயில் திருமதில் மேலிருந்த நந்திகளை உயிர்ப்பித்து ஏவி அரசனுடைய படையினை முறியடிக்கச் செய்தார்.

இவ்வாறு பல அற்புதங்களைப் புரிந்த திருமாளிகைத்தேவர் மாசிலாமணிப் பெருமானை நினைத்து ஞானநிட்டையடைந்தும், குருவை நினைந்து திருமடத்தில் தங்கியிருந்தார். துறைசை ஆதீன மடாலயத்துள் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் திருச் சந்நிதியின் இடதுப் பக்கத்தில் திருமாளிகைத் தேவருக்குத் தனிக்கோயில் உள்ளது. இக்கோயில் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களின் பராமரிப்பில் பொலிவுடன் திகழ்கின்றது.



# திருவாவடுதுறையில் கோச்செங்கட் சோழர் செய்த திருப்பணியும், சிவார்ச்சனையும்

- க. சண்முகம், பி.லிட்., டி.பி.டி.,

(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப் பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகிறார். ஆதீனச் சித்தாந்த பயிற்சி மையத்தில் பயின்று 'சித்தாந்த ரத்தினம்' எனும் பட்டம் பெற்றுள்ளார்)

புராணங்கள் :

புராணங்கள் இறைவனின் அளவிலா ஆற்றலையும் வரம்பிலா அருளையும், பிற வற்றையும், விதந்தெடுத்து விளங்கக்கூறி அவனை அடையும் நெறிகளையுணர்த்துகின்றன.

*"மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த*
*தென்னும் மறையின் இயல் மறந்தாய் - சொன்ன சிவன்*
*கண்ணாஉளம் வினையாற்கண்டறிந்து நிற்குங்காண்*
*எண்ணான் சிவன் அசத்தை இன்று."*

என்னும் சிவஞான போத வெண்பாவில் "சிவன்" என்னும் சொல் முறையே பேரின்ப காரணன் முற்றுணர்வினன், தூய தன்மையன் என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளது.

*"குறைவிலா மங்கல குணத்தன் ஆதலின்*
*நிறைமலம் அனாதியின் நீங்கி நிற்றலின்*
*அறைகுவர் சிவன் என அறிவின் மேலவர்*
*இறையவன் பெருமையை யாவர் கூறுவார்"*

எனச் சிவஞான முனிவர் தமது காஞ்சிப் புராணத்தின் கண் அருளிச் செய்தார்.

இங்ஙனம் புராணங்களிற் போதரும் உயரிய உண்மைகளையும் நுட்பங்களையும் பண்டைய பெரியோர்களே நமக்கு நன்கு இனிது விளக்கிக் காட்டியுள்ளமையினை.

*"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்*
*முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்*
*முப்புரமாவது மும்மல காரியம்*
*அப்புரம் எய்தமை யார் அறிவாரே"* (திருமூலர்)

பதினெண் புராணங்களுடன் தலபுராணங் களும் சொல்லப்படும். தலப்புராணங்களுடன் அந்தத் தலத்தின் பெருமைகளை ஆங்காங்கு உள்ள பெருமக்கள் அறிந்து உய்யும் பொருட்டு அருளிச் செய்யப்பட்டன.

திருப்பணியும் சிவார்ச்சனையும் செய்த அத்தியாயம் 2459 முதல் 2481 பாடல்கள் வரை கூறப்பட்டுள்ளன. திருத்தொண்டர் புராணத்திலும் கோச்செங்கட் சோழர் வரலாறு 23 செய்யுள்களிலும் கூறப்பட்டுள்ளது.

மேருகிரியில் உள்ள ஒரு முனிவர் வெண்ணாவற்பழம் ஒன்றை இறைவனுக்குக் கொடுத்தார். இறைவன் அதனை ஏற்றருளி சாப்பிட்டு அக்கனியின் விதையை அம்முனி வருக்குக் கொடுத்தார். முனிவரும் அதைப் பிரசாதமாக வாங்கி உண்டு அங்கு வணங்கி எதிரிலே இருக்கும் முனிவருடைய வயிற்றில் அவ்விதையானது பொருந்தி ஓர் வெண்ணாவல் மரமாய் முளைத்து எழுந்தது. இறைவன் இதனைக் கண்டு முனிவரைப் பார்த்து பூலோகத்தில் காவிரியின் வடகரையில் தேவர்களும் வணங்கும் படியான ஒரு தலம் உள்ளது. நீ போய் அதில் அமர்ந்திருப்பாயாக உன்னுடைய நிழலிலே நாம் அமர்வோம் என்றருளினார். அவ்வாறே முனிவரும் வெண்ணாவல் மரமாக உருவாகி நின்றார். இறைவன் உமையம்மையைப் பார்த்து நீ முனிவரது நிழலில் எம்மைப் பூசிப்பாயாக என்று விடை கொடுத்து அனுப்பினார்.

கயிலையிலிருந்து வந்த பார்வதி தேவியும் நீரைத்திரட்டி சிவலிங்க வடிவமாக அமைத்து. சந்திரபுஷ்கரணிக்கு அருகிலிருக்கும் வெண்ணாவல் மரத்தின் கீழ் சிவலிங்கத்தை வைத்து அர்ச்சனை புரிந்தாள். இறைவன் அப்புலிங்க உருவாய் அமர்ந்து அருளினார் ஒருநாள் அவ்வனத்திலுள்ள ஒரு யானை அச்சிவலிங்கத்தைப் பார்த்து அதிசயித்து பூசிக்கத் தொடங்கியது. தினமும் நீர் கொண்டு அபிஷேகம் செய்து, தழை

சூட்டி கனிகளைப்படைத்து பூசித்து வந்தது. அந்நாளிலே ஒரு சிலந்தியானது அந்த இலிங்கத்தின் மீது சருகு படியாமல் இருக்கத் தன் வாயில் ஊறும் நூலால் பந்தலிட்டு அந்த சிவலிங்கத்தை வணங்கி வந்தது, இதை யானை கண்டு கோபங்கொண்டதாய் நூற்பந்தரை அழித்தது. யானை நூற்பந்தரை அழிக்க அழிக்க சிலந்தியும் மீண்டும் மீண்டும் நூற்பந்தரைக் கட்டியது. இதனால் யானையின் மேல் சினம் மேலிட்டு சிலந்திக்கும் கோபம் வந்து யானையின் துதிக்கையுள் சென்று துளைத்தது. யானை அலறி விழுந்து துதிக்கையை நிலத்திலே அடித்து விழுந்து இறந்தது. சிலந்தியும் இறந்தது. உடனே இறைவன் தோன்றி காட்சியளித்து ஆனைக்குச் சிவலோகமளித்து அவ்வனத்துக்கு ஆனைக்கா எனப்பெயர் வரச் செய்தருளினார். சிலந்தியை ஒரு அரசனாக ஆகும்படியாகக் கட்டளையிட்டுப் பல திருப்பணிகள் செய்து தம் திருவடி நிழலில் சேருமாறு பணித்தருளினார்.

சிலந்தி, சோழர் குலத்திலே சுபதேவனுக்கும் கமலவதிக்கும் மகவாக பிறந்தது. இது கண்ட சோதிட நூல் வல்லுநர்கள், "ஒரு நாழிகை கழித்து இந்த அருமையான மகன் பிறந்தானெனில் இவன் இறைப்பணிக்கு உரியவனாயும் மூவுலகையும் ஆளும்படியான ஒரு அரசனாகவும் வாழ்வான்" என்று கூறினார். இதைக் கேட்ட கமலவதியானவள் தன் கால்களைத் தூக்கிக் கட்டுமாறு பணித்தார். பின்னர் திருவருளால் ஒரு நாழிகை கழித்துக் குழந்தையை ஈன்று எடுத்து "கோச்செங்கணனோ" என்று கூறி இமைகொட்டாமல் பார்த்து உச்சிமோந்து மார்புடன் அணைத்துத் தன்னுடைய ஆவியை விட்டு இறைவனுலகை அடைந்தார்.

சுபதேவன் அக்குழந்தையை வளர்த்து அரசனாக முடிசூட்டி அரசைக் கொடுத்து, வனம் சென்று, தவம் செய்து, சிவபதவி அடைந்தார். கோச்செங்கட் சோழன் பல சிவாலயத் திருப்பணிகளை மேற்கொண்டு புகழ் பெற்றார். திருவானைக்காவில் வெண்ணாவல் மரத்தோடு இறைவனுக்குத் திருக்கோயில் அமைத்தார். மதில், மண்டபங்கள், கோபுரம், தேனுலவு மலர்ப்பொழில் சூழ்ந்த நந்தவனம் அமைத்து வணங்கினார். இவ்வாறு பலத்திருத்தலங்களிலும் திருப்பணிகளைச் செய்தது.

திருவானைக்காவல் அருள்தரு அகிலாண்டேஸ்வரி உடனாய அருள்மிகு ஜம்புகேஸ்வரர் திருக்கோயிலின் இராஜகோபுரம் திருப்பணிக்கு (உயரம் 88 1/2 அடி) ரூ. 85,000/ மதிப்பில் திருவாவடுதுறை ஆதீனத்தால் திருப்பணி நிறைவேற்றப்பட்டு 26-06-1970-ல் மதுரை பி.டி. இராஜன் அவர்களால் திருக்கோயில் இராஜகோபுரத்தில் கல்வெட்டு திறக்கப்பட்டது.

திருவாவடுதுறையை அடைந்த கோச்செங்கட் சோழன் அருள்மிகு மாசிலாமணிப் பெருமானையும், ஒப்பிலா முலையம்மையையும் வணங்கி மகிழ்ந்தார். திருவாவடுதுறை மடத்திலிருந்து கொண்டு ஆலயத் திருப்பணிகளைச் செய்தார். பிராகிருத [illegible] களுக்குச் சிவபுண்ணியம் [illegible]. அந்த சிவபுண்ணியமே சிவார்ச்சனையாகும். ஆகவே சிவார்ச்சனையாகிய சிவபூசையைக் காட்டிலும் ஆன்மாக்களுக்கு இன்பம் அளிக்கும் சாதனம் பிறிதொன்றில்லை.

சிவபூசை வேதத்திலும், சிவாகமத்திலும், விதிக்கப்பட்டிருப்பினும் சிவபெருமான் ஒருவனே பரமபதி என்றுணர்ந்து சிவாகம நெறிப்படி சிவதீட்சைப் பெற்று ஆச்சாரியரின் அனுமதிப்படி சிவபூசை செய்ய வேண்டும்.

அதன்படி திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு மாசிலா மணியீசர் திருக்கோயிலில் சேரமான் பிரதிட்டைச் செய்த இலிங்கத்திற்குக் கிழக்குத் திசையில் சிவாகம விதிப்படி சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்தார். கிரியாபூசை நலம் பெற்று விளங்க திருமஞ்சனம், வாசனை கலந்த சந்தனம், ஆபரணம், மலர்மலைகள், ஆடை, நிவேதனம் தூபதீப உபசாரத்துடன் சிவலிங்கத்தைப் பூசித்தார். பின்பு தில்லையை அடைந்து வணங்கித் தில்லை வாழ் அந்தணர்கட்கு மாளிகை அமைத்துக் கொடுத்தார். சிலநாள் அங்கிருந்து பின்பு நடராசப் பெருமானின் திருவடி நிழலை அடைந்தார்.

# திருவாவடுதுறை ஆலயத்தில் காணும் கவின்மிகு சிற்பங்கள்



– ஆகம சிற்பக் களஞ்சியக் கலைமணி எஸ். நாராயணசுவாமி, திருவிடைமருதூர்.



(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீனத்தில் "ஆகம சிற்பக் களஞ்சியக் கலைமணி" எனும் சிறப்பு விருது பெற்றவர். திருவாவடுதுறை ஆதீனம் சரஸ்வதி மகால் நூல் நிலையம் மற்றும் ஆய்வு மையம் சார்பாகப் பல நுண்கலை களஞ்சிய நூல்களை எழுதியவர்கள். ஒவ்வொரு தெய்வத்திருமேனிக்கும் விரிவாகத் தமிழில் சிறப்புமிகு களஞ்சிய நூல்களை எழுதி வருகின்றார்கள்)

**தலத்தின் மேன்மை :**

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகையால் சிறப்புடையது திருவாவடுதுறை எனும் சிவம் பெருக்கும் தலமாகும். இது காவிரியின் தென்பால் அமைந்துள்ளது. இவ்வாலயத்தில் சிவபெருமான் இலிங்கத் திருமேனி கொண்டு ஸ்ரீ கோமுத்தீஸ்வரர் எனும் திருப்பெயரோடு நமக்கு என்றும் அருள்பாலித்து வருகின்றார். இவ்வாலயக் கல்வெட்டுகளில் இறைவன் திருவாவடுதுறைத் தேவர், திருவாவடுதுறை ஆழ்வார், திருவாவடுதுறை உடையார், திருவாவடுதுறைப் பெருமானடிகள், என்றும் மிகப் பிற்காலத்துக் கல்வெட்டில் கோமுத்தீஸ்வரர் என்றும் இறைவி அதுலகுசநாயகி என்றும் காணப்படுகின்றன.

மூவாயிரம் ஆண்டுகள் தவமேற்கொண்டு வருடத்திற்கு ஒரு பாடல் வீதம் 3000 பாடல்களை அருளிய திருமூலர், இத்தலத்திலேயே ஜீவசமாதி ஆகித் தனித் திருக்கோயில் கொண்டு திகழ்கின்றார்.

திருஞான சம்பந்தர் தமது தந்தையார் யாகத்தின் பொருட்டு, இத்தலத்துப் பெருமானை வேண்டி ஆயிரம் பொற்காசுகளைப் பெற்றுத் தந்ததும், முசுகுந்த மன்னனுக்குப் புத்திரத் தியாகேசராகத் திருமேனி கொண்டு புத்திரப் பாக்கியம் தந்தருள செய்ததும் ஆகிய சிறப்பிற்குரிய பதி இதுவாகும். இது போல பல நூறு சிறப்புகளைக் கொண்டுத் திகழும் இவ்வாலயத்தில் காணும் கற்சிலாத் திருமேனிகள் (மூலத் திருமேனி), உற்சவத் திருமேனிகள் (எழுந்தருளும் மூர்த்திகள்), தூண்கள், சுவர்கள் விதானங்களில் காணும் புடைப்புச் சிற்பங்கள், கோபுரம், விமானம் முதலான பகுதிகளில் காணும் சுதைச் சிற்பங்கள், மரவேலைப் பாடமைந்த சிற்பங்கள் என்று ஐந்து வகையாகப் பிரித்து ஆய்வாளர்கள் ஆய்வினை மேற் கொண்டால் இன்னும் பல புதிய செய்திகளை மக்களுக்கு உணர்த்தலாம்.

**மூல பிம்ப மூர்த்திகள் - (கற்சிலாத் திருமேனிகளின் விபரம்) :**

1. இவ்வாலய மூலமூர்த்தியாக உள்ள கோமுத்தீஸ்வரர் இலிங்கத் திருமேனி, 2. அர்த்த மண்டபம் - இடப்புற விநாயகர், 3. இரு புறமும் துவாரபாலகர்கள், 4. மூல இலிங்கத்தைப் பார்த்தவாறு ரிஷபம், 5.கோஷ்டப் பகுதியில் தல (அழகிய) விநாயகர், 6.அகஸ்தியர், 7.தட்சிணா மூர்த்தி, 8. இலிங்கோத்பவர் - இவரது இரு மருங்கினும் கூப்பிய கரத்துடன் விளங்கும் பிரமன், விஷ்ணு, 9.வடக்குகோஷ்டத்தில் பிரமன், 10.அஷ்ட புஜ துர்க்கை, 11.சண்டேசுவரர், 12. முதலாவரணம் - மேற்கு நோக்கின மூன்று சூரியன் திருமேனிகள், 14. தெற்கு ஆவரணம் தொடர்ச்சியாக நந்தி (நடராசரைப்பார்த்தவாறு), 16. விசுவநாதர் (இலிங்கம்), 17.விசாலாட்சி, 18. திருமுறைகண்ட விநாயகர், 19. அறுபத்துமூவர், 20.சேக்கிழார் (23ஆவது குரு மகா சன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் செய்த பிரதிஷ்டை), 21.மேற்கு ஆவரணம் - கன்னி விநாயகர், 22. ஞானாம்பிகை, 23. காளத்தீஸ்வரர், 24. பாண்டியலிங்கம், 25.கொங்கணேஸ்வரர் லிங்கம், 26.கொங்கணேஸ்வரி, 27.வள்ளி - தெய்வானையுடன் சுப்பிரமணியர், 27. சரசுவதி,

## அருள்மிகு கோமுக்தீசுவரர் ஆலயம் - திருவாவடுதுறை (நந்திகேச்வரர் - திருத்தலம்)



(மேலே) புஷ்கரணியிலிருந்து கோபுர தரிசனம். (நடுவில்) ஸ்ரீ கோமுக்தீச்வரர் கோவிலின் முன் உள்ள நந்தி மண்டபத் தோற்றம். பீடத்துடன் பதினாறு அடி உயரமுள்ள நந்திகேச்வரர்.

28. மீனாட்சி, 29. சொக்கலிங்கம், 30. விஸ்வநாதர், 31. சேரலிங்கம், 32. மகாலட்சுமி, 33. ஈசான்ய பாகத்திலிருந்து - கோகுபாம்பிகை (கற்பலகைச் சிற்பம்), 34. சோழலிங்கம், 35. சனீஸ்வரர், 36. சொர்ணாகர்ஷண பைரவர் (நாய் வாகனம் இல்லை), 37. பஞ்சலிங்கங்கள், தியாகராசர் மகாமண்டபத்தின் வடபால் சந்தானாச்சாரியர்கள், 38. மெய்கண்டார், 39. அருள்நந்தி, 40. மறைஞான சம்பந்தர், 41. உமாபதி, 42. அம்மன் கோயில் மூலத்திருமேனி நின்ற நிலையில் ஸ்ரீ ஒப்பிலா முலையம்மை, 43. அர்த்த மண்டபத்தில் நந்தி, 44. அம்மனுக்குரிய சண்டேசுவரி, 45. தனிக் கோயிலில் பத்மாசனத்தில் (யோகநிலை) திருமூலர் திருமேனி, 46. கொடிமரமண்டபத்தில் சின்ன நந்தி, 47. இதன்பின்னால் பல கருங்கற்களைக் கொண்டு அமைக்கப்பட்ட 14 3/4 அடி உயரமுள்ள பெரிய விஸ்வரூப நந்தி (மேடை நீங்கலாக), 47. பொறகிழி வைத்த பெரிய பலிபீடம், 48. பலிபீடத்தின் நான்கு திசைகளை நோக்கியபடி உள்ள நான்கு பூதங்கள் நின்றநிலை, 49. முதல் கோபுரத்தின் (இராஜகோபுரம்) தென்பால் தனி ஆலயம் கொண்டு திகழும் சமயாச்சாரியர்கள் நால்வர், 50. வடபால் தனிக்கோயிலாக மேற்கு நோக்கியபடி ஆதிகோமுக்தீஸ்வரர் (இலிங்கம்), 51. அர்த்த மண்டபத்தில் நந்தி, 52. கிழக்கு இராஜகோபுரத்தின் வெளியில் தென்பால் துணைவந்த விநாயகர், 53. வடபால் வள்ளி - தெய்வானை சமேத சுப்பிரமணியர், 54. வரசித்தி விநாயகர் (வன்னி மரத்தின் அடியில்) முதலான திருமேனிகள் மூல பேரங்களாகும். மேலும் பெரிய நந்தியின் முன்னால் வடக்குப்பக்கம் 55. நரசிங்க முனைய அரசன், 56. தென்பால் மன்னனின் மந்திரி வில்லும் அம்பும் உடைய படிமங்கள் நின்ற நிலையில் உள்ளன.

**உற்சவத் திருமேனிகள் :**

இவ்வாலயத்தில் உற்சவத் திருமேனிகளாக 1. நின்ற நிலையில் விநாயகர் 2. சந்திரசேகரர் - அம்மன், 3. வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர், 4. பிட்சாடனர் 5. அஸ்திரதேவர் 6. பிரதோஷ நாயகர் - அம்மனுடன் 7. வள்ளி தெய்வானை நிற்க மயிலின் மீதமர்ந்து சதுர் புஜங்களுடன் முத்துக்குமாரசாமி 8. கலியாண சுந்தரர் - அம்மனுடன் 9. திருமூலர் கூப்பிய கரத்துடன் நின்ற நிலை 10. திருநந்திதேவர் 11. அஸ்திரதேவர் 12. நான்கு கரத்துடன் சுகாசனமாக திருமாளிகைத் தேவர் 13. திருஞான சம்பந்தர் (ஓர் விரல்காட்டிய நடனத் திருக்கோலம்) 14. அப்பர் 15. கூப்பிய கரத்துடன் சுந்தரர் (பெரியது) 16. மாணிக்கவாசகர் 17. மூலவர் எதிரே நந்தி அமர்ந்த நிலை 18. கண்ணாடி (ஆதர்ஷம்) 19. தியாகராசர் (சோமாஸ்கந்தர்) 20. நின்ற நிலையில் அம்பாள் (கமலாம்பிகை) 21. தியாகராசர் சந்நிதியின் முகமண்டபத்தில் நந்தி (அமர்ந்த நிலையில்) 22. கண்ணாடி 23. அணைத்தெழுந்த நாயகர் (ஆலிங்கன சந்திரசேகர்) 24. பிடாரி 25. ஐயனார் 26. ஸ்ரீ நடராசர் 26. சிவகாமி - அனிந்திதை, கமலினி 27. ஆடிப்பூர அம்மன் 28. சுவாமி மூலதானத்துக்குரிய போக சக்தி அம்பாள் 29. ஆடிப் பூர அம்மன் 30. பள்ளியறை சுவாமி 31. பள்ளியறை அம்மன்

**கோபுரங்களும் விமானங்களும் :**

இவ்வாலயத்தில் நான்கு கோபுரங்களும், 20 விமானங்களும், பெரிய அளவில் வசந்த மண்டபமும், அதில் ஒன்பது கல்சங்கிலும் உள்ளன. இதில் உள்ள தூண்கள் யாவும் மிகப் பெரிய அளவில் காணப்படுகின்றன. இதன் நடுப்பகுதி வெளவால் நெத்தி மண்டபமாக உள்ளது. மண்டபத்தின் வெளிப்பகுதியின் கீழே புடைப்பு சுற்சிற்பங்களாக யாளி, மகளிரின் நடனக்காட்சி, யானை முதலான சிற்பங்கள் காணப்படுகின்றன. இதனைக் கட்டியவன் மூன்றாம் குலோத்துங்கச் சோழன் ஆவான்.

இத்திருக்கோயிலில் நான்கு கோபுரங்கள் உள்ளன. கிழக்கு நோக்கி மூன்று கோபுரங்கள் உள்ளன. இந்தக் கும்பாபிஷேகத்தை முன்னிட்டு வடக்கு வாயிலில் புதியதாக மூன்று நிலை கோபுரம் (திருக்கயிலாயக் கோபுரம்) அமைக்கப்பட்டுள்ளது.

**முதல் கோபுரம் :**

பிற்காலச் சோழர் கலைப் பாணியில் அமைந்து காணப்படும் மூன்று கோபுரங்களில்

பல்வேறு மகா புராணங்களின் நிகழ்வுகள் மற்றும் இத்தலத்துப் புராணத்தை உணர்த்தும் நிகழ்வுகள் யாவும் சுதைச் சிற்பங்களாக உள்ளன. இவைகளுக்குப் பஞ்சவர்ணங்கள் கொடுக்கப் பட்டுள்ளன.

இராஜ கோபுரமாகக் காட்சியளிக்கும் முதல் கோபுரத்தில் கிழக்கு நோக்கி தியாகேசப் பெருமானை முசுகுந்தன் உறுக்கமாக தனக்கு பிள்ளை வரம் வேண்டி வழிபட்ட காட்சி, திருஞானசம்பந்தர் பூதம் வாயிலாக பலி பீடத்தில் பொன் உலவாக்கிழி பெற்ற காட்சி, படரரசின் கீழ் யோக நிலையில் திருமூலர், கோபுரத் துவாரங்களில் இருமருங்கிலும் துவார பாலகர்கள், சிவபுராண நிகழ்வுகள், விஷ்ணு முதலான தேவர்கள், சந்திரசேகரர், தென் பகுதியில் உபதேச தட்சிணாமூர்த்தியின் பல நிலை திருக்கோலங்கள், வடக்கு நோக்கியபடி தனது சக்திகளுடன் பிரம தேவன், முதலான சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இக்கோபுரம் ஐந்து நிலை களையும் ஏழு கலசங்களையும் கொண்டது.

**இரண்டாம் கோபுரம் :**

இக்கோபுரம் ஐந்து நிலைகளையும், ஐந்து கலசங்களையும் கொண்டது. மார்க்கண்டேய புராணத்தை உணர்த்தும் மகா கால சம்ஹார மூர்த்தியும், இத்தலப் புராணத்தை உணர்த்தும் பசு ரூபமாக உள்ள பார்வதி தேவி கோமுத்தீசுவரராகிய மூல லிங்கத்தை தமது பாலினால் அபிஷேகித்தலும் உள்ளது. நரசிம்ம மூர்த்தி, தனி அம்பாள், பார்வதியுடன் கூடிய சிவன், பிரமனின் பல நிலைகள், தட்சிணாமூர்த்தி பலி நிலைகள், விநாயகர், சுப்பிரமணியர், ஆறுமுகர் முதலான சிற்பங்கள் காணப்படுகின்றன.

**மூன்றாம் கோபுரம் :**

இக்கோபுரம் இரண்டு நிலைகளையும், ஐந்து கலசங்களையும் கொண்டதாகும். சுதைச் சிற்பங்கள் மிகச் சிலவே காணப்படுகின்றன.

**விமானங்கள் :**

மூல விமானமாகிய சுவாமி விமானம் துவைதளமாகவும், கைலாய காட்சி சிற்பமாக உள்ளது. ஏக கலசம் வைக்கப்பட்டுள்ளது. அம்மன் விமானம் (மூல ஸ்தானம்) மூன்று கலசங்கள் கொண்ட துவை தளமாக தெற்கு நோக்கி உள்ள கோயிலாகும்.

அனைத்தெழுந்த நாயகருடைய கோயில் விமானமும், ஸ்ரீ நடராசருடைய விமானமும் தில்லைக் கோயில் (பொன் தகடு அமைப்பு) அமைப்பாக காணப்படுகின்றன.

**சுதையில் துவார பாலகர்கள் :**

இவ்வாலயத்தில் சுதையில் அமைந்த மிகப் பெரிய சிற்பங்கள் எவை என்றால் இரண்டாம் கோபுர வாயில் இருமருங்கிலும் காணும் துவார பாலகர்களும், அம்மன் கோயிலில் மகா மண்டபம் (வாயிற் பகுதியில்) துவார சக்திகளுமே ஆகும்.

**கயிலாய வாயில் / வடக்குக் கோபுரம் (புதியது) :**

இந்தத் திருப்பணிக்கு இவ்வாயிலின் மேற்பகுதியில் கயிலாயக் காட்சி இருந்தது. அதில் சிவனும் பார்வதியும் அமர்ந்த நிலையிலும் விநாயகர் முருகனும் நின்ற நிலையிலும் இருந்தனர். தற்போது இக்கும்பாபிஷேகத்தின் பொருட்டு சிறப்பான திருப்பணியாக, இவ்வாயிலின் மேல் மூன்று நிலைகொண்ட புதிய கோபுரமும் அதில் ஐந்து கலசங்களும் காணப்படுகின்றன.

இப்புதிய வடக்குக் கோபுரத்தின் கிழக்குப் பகுதியில் காணப்படும் சுதைச் சிற்பங்கள் (மேலிருந்து கீழாக) சோமாஸ்கந்தர், அர்த்த நாரீசுவரர், உமாமகேஸ்வரர் உருவங்களும், தெற்குத் திசையில் - மூன்றுத் துவாரங்களின் மருங்கிலும் துவார பாலகர்களின் சுதைச் சிற்பங்களோடு கீழ் நிலையிலிருந்து அகத்தியர், தட்சிணாமூர்த்தியும் அதன் அருகில் (இடப்பக்கம்) திருநந்தித்தேவர் சிவஞான உபதேசம் பெறுதலும், செவ்வக பத்ரபீடத்தில் ஸ்ரீநமசிவாயமூர்த்திகள் உருவமும் (திருவாவடுதுறை ஆதீன ஸ்தாபகர்) மேலும் தற்போது அருளாட்சி நடத்தியருளும் இவ்வாதீனத்து (23வது பட்டம்) குருமகா

சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரியர் சுவாமிகளின் திருவுருவமும் சர்வலங்காரத்துடன் அஞ்சலி ஹஸ்தத்துடன் வடிக்கப்பட்டுள்ளது. இதன் மேலடுக்குகளில் வீணாதர தட்சிணாமூர்த்தி சனகாதியர்க்கு உபதேசம் செய்த காட்சியும், நடராசர், சிவகாமி, ஆலமர்ச்செல்வர், சங்க நிதி, பதும நிதி அமர்ந்த கோலத்துடனும், நான்கு திசை மூலைகளிலும் ரிஷபத்துடன் கூடிய பூதங்களும், கிழக்கு திசையினைப் பார்த்தவாறு கீழிருந்து ஸ்கந்தரை மடியில் வைத்த உமா, நின்ற நிலையில் நரசிம்மர், விஷ்ணு ஆகிய படிமங்கள் உள்ளன. (இந்தக் கோபுரம் மற்றும் சிற்பத்தைச் செய்தவர் மாயூரம் - சுதைச்சிற்பக் கலைமணி திரு.ராம்குமார் ஸ்தபதி அவர்கள்).

**வடக்கு நோக்கிய சிற்பங்கள் :**

வடக்கு திசை பார்த்தவாறு இக்கோபுரத்தில் கீழிருந்து மேலாக ஸ்ரீ நமசிவாயமூர்த்தி (அமர்ந்த நிலை) இதன் வலப்பக்கம் 23வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம், இடப்பக்கம் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள், திருஞானசம்பந்தரின் பனுவலைக்கேட்ட சிவனார் பூதத்திடம் பொன் உலவாக்கிழி (கையில்) கொடுக்க இதனை பெற்ற திருஞானசம்பந்தரின் தந்தையார், பசு வடிவில் உள்ள பார்வதி ஸ்ரீ கோமுத்தீசுவரரை (இலிங்கத்தை) தமது மடிப்பாலால் அபிஷேகித்தல் (கோவுரு வாம்பிகை) படரரசின் கீழ் திருமூலர், நடுப்பகுதியில் சந்தானச்சாரியார்கள் நால்வர், சமயாச்சாரியார்கள் நால்வர், மேல்நிலையில் விநாயகர், முருகன், சங்கநிதியும் பதும நிதியும் நின்றவாறு சங்கத்தையும் பதுமத்தையும் தத்தமது தலைமேல் கொண்டு திகழ்பவர்களாக உள்ளனர். இந்தப் புதிய கோபுரத்தில் திருமடத்தின் வரலாற்றையும், திருக்கோயிலின் வரலாற்றையும் ஒருசேரக் காணுமாறு சுதைச் சிற்பங்களாக வடித்துள்ளார்கள். இச் சிற்பங்கள் யாவும் தெளிவாகவும், நுணுக்கமாகவும், சகலவித லட்சணங்களுடன் அமைந்துள்ளன.

**புதிய கல்வெட்டு :**

மேலும் இவ்வாலய கொடிமரத்தை பழுதுபார்க்க அடிப்பகுதியைத் தோண்டியபோது ஒரு கல்லின் நடுவே சூலம்புடைப்பாகவும், இருமருங்கிலும் ஒவ்வோர் எழுத்தாக மா சி லா ம ணி யீ ச ர், கீழ் பகுதியில் 'திரு' என்று கட்டம் கட்டியும் உள்ளது. திரு என்பது திருவாவடுதுறை என்றும் பெருமானின் திருப்பெயரும் இடம் பெற்றுள்ளது. இதன் விரிவுச் செய்தியினை மெய்கண்டார் மலர் 29 இதழ் 1, டிசம்பர் 2010ல் காண்க.

**சுவாமி கோயிலின் மேற்கு ஆவரணத்தில் :**

மேற்கு ஆவரணத்தில் வள்ளி - தெய்வானை - சமேத சுப்பிரமணியர் சந்நிதிக்கு நேராக இவ்வாதீன இரு மகா சன்னிதானங்களின் திருமேனிகள் சர்வாபரணங்களுடன் கிழக்கு நோக்கி 14-வது பட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் மேனியும், (1789-1843) தம்பிரான் ஒருவரும் நின்ற நிலையில் கரங்களுடன் காட்சியளிக்கின்றனர்.

அம்மன் சந்நிதி முன்னர் உள்ள மண்டபத்தூண்களில் கூப்பிய கரங்களுடன் இவ்வாதீன மகா சந்நிதானங்களின் திருவுருவங் களும், தம்பிரான் சுவாமிகளின் திருவுருவமும் உள்ளன.

**தமிழகத்திலேயே மிகப்பெரிய மகா நந்தி :**

நந்தி மண்டபத்தில் சிவனை நோக்கி சதுரம் மற்றும் செவ்வகக் கருங்கல்லில் கட்டிய (கட்டுநந்தி) மிகப்பெரிய நந்தி உள்ளது. இக்கல் நந்தியின் உயரம் 14 அடி 9 அங்குலம், அகலம் 11 அடி 3 அங்குலம், நீளம் 16 அடி - 4 அங்குலம், சுற்றளவு 41அடி - 3 அங்குலம். இதுவே சிவாலயங்களில் மிகப் பெரியது ஆகும். (தஞ்சை நந்தி ஒரே கல்லில் ஆன 12 அடி உயரம்) இங்கு பிரதோஷம் மிகச் சிறப்பாக நடைபெறும்.

இந்தப் பெரிய நந்தியின் இருமருங்கிலும் 4அடி உயரமுள்ள நரசிங்க மன்னன் உருவமும், வில்லையும், அம்பையும் ஏந்திய ஒரு சிலையும் உள்ளன. பெரிய நந்தியின் முன்னாள் ஒரு சிறு



இத்தலத்தில் விளங்கும் விஸ்வரூப மகா நந்தி.
(கருங்கற்களால் அமைந்த கட்டுமான நந்தி)



ஸ்ரீ கோமுக்தீச்வரர் சன்னிதிக்குப் போகும் வழி. இடது பக்கத்தில் நால்வர் கோயிலும், வலது பக்கத்தில் ஸ்ரீ ஆதி கோமுக்தீச்வரர் கோயிலும் இருக்கின்றன. (இவ்வோவியம் 60 ஆண்டுக்கு முன்னர் ஓவியர் சில்பி அவர்களால் வரையப்பெற்றது)

நந்தியும் உள்ளது. நித்ய அபிஷேகம் செய்ய நந்தியின் பின்னாள் உள்ள பலிபீடத்தில் கீழே சுமார் 2 அடி உயரமுள்ள நின்ற நிலையில் நான்கு பூதகணங்கள் நாற்றிசைகளை நோக்கி நின்று கொண்டுள்ளனர். அதன் எதிரே உள்ள தூண்களில் (தென்பால்) சுவாமி சந்நிதியை நோக்கியவாறு திருவேடப்பொலிவோடு மகா சன்னிதானங்களான ஸ்ரீ வேலப்ப தேசிகர், ஸ்ரீ பின் வேலப்ப தேசிகர் திருவுருவங்கள் தொழுதவண்ணம் காணப் படுகின்றன. இவர்களின் பின்னால் உள்ள ஒரு தூணில் திருவாவடுதுறை ஆதீனக் குலதெய்வமான திராவிட மாபாடிய காரர் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் திருவுருவமும் காணப்படுகிறது. சுவாமிகள் அஞ்சலிகரமாக இருந்து தமது குருநாதரை பின்னால் நின்று சேவிப்பது ஆதீனச் சம்பிரதாயமாகும். இம்மண்டபம் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் காலத்தில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. (சுமார் 220 ஆண்டுகளுக்கு முன்) சிற்பங்களின் கீழே பெயர்கள் காணப்படவில்லை யென்றாலும் ஆறுகட்டி, சிரவடம், கொத்துச் தாழ்வடம், மூலமாகவும் கல்லாடையினை உடுத்தியிருக்கின்ற முறையில், சிற்பங்களை மகா சன்னிதானம் என்றும், துவிதீயர் என்றும், திரிதீயர் என்றும், தம்பிரான் என்றும் முடிவு செய்ய முடிகிறது.

**சுவாமி கோயிலின் கருப்பக்கிரக வெளிச்சுற்றுச் சுவரில் காணும் சோழர் காலச்சிற்பங்களும் வரலாற்றுச் செய்திகளும் :**

திருவாவடுதுறை கோமுத்தீசுவரர் திருக் கோயில் பண்டு திருவாவடுதுறை உடையார் கோயிலெனவும், திருவாவடுதுறை பரம சுவாமித் திருக்கோயில் எனவும் அழைக்கப்பட்டது. முதல் பராந்தகன் காலத்துக் கற்றளிக்கு இத்திருக்கோயில் சிறந்த எடுத்துக்காட்டு, முதற் பாரந்தகத் தேவனுடைய 38-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று குமுதப் படைக்கு மேலுள்ள கோயிற் பகுதிகளை எடுப்பிக்க, பராந்தகத் தேவனே 500 கழஞ்சு பொன் நன்கொடை வழங்கியதாகக் குறிப்பிடுகிறது.

எழில்மிகுந்த இக்கற்றளியில் பலரது திருவுருவங்கள் கற்படிமங்களாகக் கல்வெட்டுக் குறிப்புகளுடன் காணப்படுகின்றன.

**(1) கற்றளிப் பிச்சன் :**

கோமுத்தீசுவரர் திருக்கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் ஒரு சிவலிங்கத்தை வழிபடும் நிலையில் ஓர் அடியவர் இரு கரம் கூப்பி நிற்கிறார். இப் படிமத்திற்குக் கீழாகக் கற்றளிப் பிச்சன் என்ற கல்வெட்டுக் குறிப்பு உள்ளது. இவர்தான் இக் கற்றளியை எடுப்பித்தவர் என்பதைக் கல்வெட்டுகள் வாயிலாக அறியலாம். கற்றளிப் பிச்சனுக்குப் பின்புறம் மற்றொரு அடியவர் நின்றுகொண்டு தலைக்குமேல் இரு கரங்களையும் உயர்த்தி வணங்குகிறார்.

பரகேசரி வர்மனின் மூன்றாம் ஆண்டில் இக்கற்றளிப் பிச்சன் அடுத்த கிராமமாகிய சிற்றானைச்சூரில் சில நிலங்களை விலைக்கு வாங்கி, அவற்றைக் கோயிலில் திருப்பதிகம் பாடுவாருக்கும் திருமஞ்சனத்திற்கு நீர் கொணர்வாருக்கும் இன்னியம் இயக்குவாருக்கும் தனித்தனியே மானியமாக விடுத்தான். மீண்டும் இம்மன்னரின் 25-ஆம் ஆண்டில் இன்னியம் இயக்குவாருக்கு இவன் மானியம் அளித்தலும், 35-ஆம் ஆண்டில் காளம் ஊதுவோன், சங்கு ஊதுவோன், குடை பிடிப்போன், திருநந்தவனம் பராமரிப்போன் போன்றவர்களுக்கு மானியம் அளித்த செய்திகளும் இத்திருக்கோயில் கல்வெட்டுகள் வாயிலாக அறியலாம்.



கற்றளிப் பிச்சன்

எனவே கற்றளிப் பிச்சன் திருவாவடுதுறை மகாதேவர் கோயிலைக் கற்றளியாக எடுத்த தோடல்லாமல், தொடர்ந்து இக்கோயில் செவ்வனே செயல்பட வழிவகுத்தான் என்பதையும் அறியலாம். கலைப்பணியும் சமயப் பணியும் புரிந்த இப்பெருமகனின் படிமம் தமிழக வரலாற்றில் சிறப்பிடம் வகிக்கும் பெருமையுடையதாகும்.

**(2) இளைய திருநாவுக்கரையர் :**

இதே தென்புறச் சுவரில் இக்கற்றளிப் பிரானைத் தலைக்குமேல் கை கூப்பித் தொழும் ஓர் அடியவர் சிலை உள்ளது. இதனருகில் உள்ள கல்வெட்டு இவரை இளைய திருநாவுக்கரையர் என்று குறிக்கிறது.

**(3) அம்பலவன் திருவிசலூரான் :**

தென்புறச் சுவரில் உள்ள பிறிதோர் படிமம் ஒரு சிவலிங்கத்தை வணங்கும் கோலத்திலுள்ளது. இதனருகிலுள்ள கல்வெட்டு திருவாவடுதுறையைச் சார்ந்த அடியவராக அம்பலவன் திருவிசலூரான் என்ற திருநாவுக்கரையர் என்று இப்படிமத்தைக் குறிக்கிறது.

**(4) எழுவன் சந்திராதித்தனும் - பணிமகளும் :**

கருவறையில் வட புறச்சுவரில் ஒன்றன்பின் ஒன்றாக இரண்டு சிலைகள் ஒரு சிவலிங்கத்தை நோக்கியுள்ளன. இதன் அருகிலுள்ள கல்வெட்டு முதலில் நிற்பவரை இக்கோயிலின் ஒரு படை (தளம்) அமைத்த வாரம் புசலைச் சார்ந்த எழுவன் சந்திராதித்தன் என்றும், பின்னால் உள்ளது பெரிய வேளம் எனும் அரண்மனையின் பணிப் பெண்ணான நக்கன் வண்ணாத்தடிகளின் சிலை என்றும் குறிப்பிடுகிறது.



அம்பலவன் திருவிசலூரான்

**(5) தாமன் அம்பலவன் :**

இதே திருக்கோயிலின் கருவறைச் சுவரில் திருநரையூர் நாட்டுச் சிற்றாடியைச் சார்ந்த தாமன் அம்பலவன் என்ற நமசிவாயத்தின் சிலை கல்வெட்டுக் குறிப்புகளுடன் உள்ளது. இவ்வாறு முதல் பராந்தகன் காலத்தில் வாழ்ந்து திருவாவடுதுறை திருக்கோயிலோடு நெருங்கிய தொடர்பு கொண்ட பலருடைய (திருப்பணி பங்குகொண்டு செய்தோர்) சிற்பங்கள் (சுவரில் காணும் புடைப்புச் சிற்பங்கள்) கல்வெட்டுக் குறிப்புகளோடு இருப்பதும், அரண்மனையின் சாதாரணப் பணிப் பெண்ணும் சிவத்தொண்டால் மதிக்கப்பட்டாள் என்பது இத் திருக்கோயிலில் காணும் சிற்பங்களால் அறியமுடிகிறது.



தாமன் அம்பலவன்

**தூண்களில் காணும் புடைப்புச் சிற்பங்கள் :**

இவ்வாலயத் தூண்கள் பெரும்பாலும் செவ்வக வடிவத்தில் அமைந்தவையாகும். இதில் வேலைப்பாடுகளும், சிங்கம், தாமரைப் மொட்டு முதலியன ஒரே நேர்க்கோட்டில் உச்சிப்பகுதியில் அமைந்துள்ளன.

சுவாமி சந்நிதித் தூண்களில் (தற்போது உருத்திர ஹோமம் செய்யும் இடம்) புடைப்புச் சிற்பங்கள் இரண்டு அடி முதல் மூன்று அடிக்குள்ளாக அமைந்துள்ளன. மேற்படி முக மண்டப இடது பக்கத் தூண்களில் நின்ற கோலத்தில் அரசன், மந்திரி, தம்பிரான் சுவாமிகள், ஸ்தபதி சிற்பங்கள் உள்ளன. ஸ்தபதி சிற்பத்தின் வலப்புறப் பக்கவாட்டில் செங்குத்தாக உள்ள அளவு கோல் புடைப்பாக காட்டப்பட்டுள்ளது. இவ்வளவுகோலின்படி இப்பகுதி நிர்மானிக்கப் பட்டிருக்க வேண்டும் என யூகிக்க வேண்டியுள்ளது.

**தியாகராசர் முகப்பு மண்டபம் :**

தியாகராசர் சந்நிதியின் முகப்பு மண்டபத் தூண்களில் இரண்டு அடி கொண்ட புடைப்புச் சிற்பங்களாக வியாக்ரபாதர், பதஞ்சலி, சுந்தரர், பரவையார் உருவங்கள் உள்ளன. குரங்கின் திருமுகத்தோடு முசுகுந்த மன்னன் கூப்பிய கரத்துடனும், எதிரே இம்மன்னரின் மந்திரியின் சிற்பமும் உள்ளது.

**இத்திருக்கோயிலிலிருந்து ஆதீனத்திற்குச் (வடக்குவாசல்) செல்லும் பகுதியில் காணும் கவின்மிகு சோழர் காலத்து (கலைக்கூடப்பகுதி) கற்சிற்பங்கள் :**

இப்போது ஞானாட்சி புரிந்தருளும் குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் 1984 ஆண்டு ஆதீனத்தில் ஓர் அருங்காட்சியகம் அமைய வேண்டி, எனைப் பணித்தார்கள். அதன்படி நானும் (கட்டுரை ஆசிரியர் : திருவிடைமருதூர் எஸ்.நாராயணசுவாமி) ஆலயங்களுக்குச் சென்று நந்தவனம், பிரகாரம், மண்டபங்கள் முதலான இடங்களில் காணும் பல சிற்பங்களைப் பல மாதங்களாகச் சேகரித்து இவ்வாலயத்தின் தென்பால், முதற்கட்டமாக பீடங்கள் அமைத்து அதில் பதிக்கப்பட்டது. இப்பகுதியில் சம்ஹார வேலவர், அர்த்தநாரிகள் (பெரிய உருவம்), இலிங்கம், நந்தி, புவனேஸ்வரி, இலக்குமி, பைரவர்கள், அர்த்தநாரி, சாமுண்டி, தட்சிணாமூர்த்தி, வலம்புரி விநாயகர், இடம்புரி விநாயகர், ஜேஷ்டாதேவி, விநாயகர், நாகர், வள்ளி, தெய்வானை, மூன்று விதமான சண்டேசுவரர்கள், துவாபரயுக சண்டேஸ்வரர், சாமுண்டி முதலியனவற்றைக் காணலாம். இவைகளின் அடிப்பகுதியில் கிடைத்த இடம், காலம், பெயர் முதலியன தமிழிலும், சமஸ் கிருதத்திலும் எழுதிவைக்கப்பட்டுள்ளது. ஆலயத்திற்கும், திருமடத்திற்கும் வரும் அன்பர்கள் யாவரும் இக் கலையம்சப் பகுதியினைக் காணாது செல்லமாட்டார்கள்.

**திருமூலர் திருவுருவம் :**

திருமூலர் ஆலய கருப்பக் கிருகத்தில் (ஆதியில்படரரசு) திருமூலர் பத்மாசனம் கொண்டு ஆடைநீக்கி, தமது இருகைகளையும் ஒன்றன் மேல் ஒன்றாகவும், ஜடைகள் யாவும் மேலிருந்து கீழ் நோக்கி முதுகிலே கிடப்பனவாகவும். தாடி, மீசையுடன் யோக மார்க்கமாக புன்சிரிப்புடன் திகழ்கின்றார். இவர் கிழக்கு திருமுக மண்டலம் செய்விக்கின்றார். இவ்வாலயம் யோகிகளுக் குரியனவாகவும் குறைந்த வெளிச்சமும், நல்ல காற்றும் வரும் பகுதியாக உள்ளது. இவ்விடமே திருமூலர் 3000 ஆண்டுகள் தவமேற்கொண்டு ஆண்டிற்கு ஒரு பாடல் வீதம் அருளிச்செய்து, இறுதியில் இங்கேயே ஓர் நாளில் சிவஞான ஜீவசமாதியானார் என்பர்.

மேலும் மகா மண்டபத்தில் (வவ்வால் நெற்றி மண்டபம்) திருமூலரின் வரலாறு வண்ணக் கலவையால் ஓவியம் மிக நீளமாக வரையப் பட்டுள்ளது. இவரது உற்சவத் திருமேனி நின்ற நிலையிலும், இடுப்பில் வஸ்திரமும் இவரது திருமார்பில் உருத்திராக்க மாலையும், ஜடைகள் யாவும் தொங்கிய நிலையிலும் அஞ்சலி ஹஸ்தராக உள்ளது. இவ்வாலயத்தில் புரட்டாசி மாதம் வரும் பூரட்டாதி நட்சத்திர நாளில் திருமூல நாயனாரது நாடகமும் ஆரியக் கூத்து ஏழு அங்கமும் நடத்தப்பெற்று வந்ததாக முதலாம் இராசராச சோழ தேவரது ஒன்பதாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டினால் புலப்படுகின்றது.

**திருமாளிகைத் தேவர் :**

இவரது காலம் கி.பி. 8ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியாகும். ஒன்பதாம் திருமுறை அருளிய ஒன்பது ஆசிரியர்களுள் ஒருவர். போகரால் ஞான உபதேசம் செய்விக்கப் பெற்றவர். சைவ சமயத்தை வளர்க்கும் பொருட்டு அருட்டுறை மடம் நிறுவினார். தமது தவப்பயன் காரணமாக கண்டார் காமுறும் உடலழகைப் பெற்றவர். பல்வகை அற்புதங்களைச் செய்தவர்கள். தமது தபோ பலத்தினால் மேலும் இரு கரங்களைப் பெற்றவர். இவரது ஞான சமாதி ஆலயம் திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ளது. இவரது உற்சவமூர்த்தி திருக்கோயில் விளங்குகின்றது.

திருமாளிகைத் தேவர் தம் குருவின் மீது இருந்த பக்தியின் காரணமாக அவரது திருவடியினை தன் முன்னே வைத்து தியானிக்கலானார் என்பதாக பிரதிட்டையும் காணப்படுகிறது. ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் குருபூசைத் தொடக்கமாகிய முதல் திருநாளுக்கு முன் திருமாளிகைத்தேவர் ஏகதின உற்சவம் நடக்கும். அப்போது திருமடத்தின்



ஸ்ரீ புத்திரத் தியாகேசர் நந்தி மண்டபத்தின் தென்பால் உள்ள தூணில் கூப்பியக் கரங்களுடன் முசுகுந்த சக்கரவர்த்தி, புடைப்புச் சிற்பம் உள்ளது. முசு (குரங்கு) முகம், கிரீட மகுடம், காதுகளில் மகர குண்டலங்கள், கழுத்தில் ஏகருத்ராட்சம் கண்டாபரணம், பத்ர பூரிமம், கரங்களில் காப்புகள், விரல்களில் மோதிரங்கள், இடுப்பிலிருந்து கணுக்கால் வரை பல மடிப்புகளை உடைய வஸ்திரம், உருட்டுப் பார்வையுடன் புத்திரர் வேண்டி நிற்றல். எதிர் திசையில் ஒரு பெண்ணின் புடைப்புச் சிற்பம் உள்ளது. இது (ராணி) முசுகுந்தனின் மனைவியாக இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

<u>முசுகுந்தச் சக்கரவர்த்தி :</u>

*"மிருகமாய்த் திரியும் எனக்கு அருள்புரியக்*
*கிருபை வைத்த வேதநாதா!*
*மருவுநன்றி மறவாமல் இம்முசுவின்*
*முகமும் உன்தாள் மறவாஅன்பும்*
*அருளி மெய்வீடு அடையும் நெறியருளுக" **எனக்***
*கேட்டலும் அப்படியே ஈயத்*
*திருமருவு முசுகுந்தச் சக்கரவர்த்தித்*
*தலைமைச் செல்வனாகி.*

- திருவாவடுதுறைப் புராணம். **14:30.**

வடபால் அமைந்த ஆலயத்திற்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் எழுந்தருளி உற்சவ மூர்த்தியோடு உடன் வர திருச்சந்நியில் எதிர் சேவையாக தீபாரதனை நிகழ்த்தப்படும். பின்னர் திரும்பவும் ஸ்ரீலஸ்ரீ அவர்களால் திருமாளிகைத் தேவர் (உற்சவர்) கோயிலின் யதாஸ்தானத்திற்குக் கொண்டு சேர்ப்பார்கள். இவரது விரிவான வரலாற்றின் 2000 ஆண்டு வெளிவந்த கோமுத்தீசுவர சுவாமி திருக்கோயில் தலவரலாற்று நூலில் காணலாம்.

**நடராசர் :**

இவ்வாலய நடராசர், சிவகாமி திருமேனிகள், இவ்வாலய உற்சவ மூர்த்திகளிலே பெரியதாகும். நடராசரின் சிரிப்பும் திருமுக மண்டலமும் மிகப் பொலிவுடையது. இடப்பக்கத்தே விளக்கும் சிவகாமியைப் பார்த்தவாறு இவரது கண்கள் காணப்படுகின்றன. இதுவும் சோழர்களின் கைவண்ணமாகும்.

**தியாகராசர் :**

சோமாஸ்கந்தர் திருவுருவமே தியாகராசர் இடுப்பிலிருந்து கால் வரை மறைக்கப்பட்டிருக்கும். இது ஓர் யோக நிலையாகும்.

**ஆலிங்கின சந்திரசேகரரர் : (அணைத்தெழுந்த நாயகர்)**

சிவன் மான், மழு, வரத, அபய முத்திரைக ளுடன் தனியாக சமபாதக நின்ற நிலையில் கேவல சந்திரசேகர் என்றும் பார்வதியோடு சிவன் நின்ற நிலையில் இருந்தாலும் சந்திரசேகர் என்றும், லாவன்யமாக சிவனார் பார்வதியின் இடது தோளில் தனது இடக்கரத்தினை வைத்திருந்தால் ஆலிங்கன சந்திரசேகர் என்று கூறுவர். அந்த வகையில் பார்வதியின் தோளினைப் பற்றிய நிலையில் தலபுராண நிகழ்வினை உணர்த்துவனவாக இப்படிமம் அமைந்து காணப்படுகிறது.

ஈசனின் திருவாயால் பசுவின் உடலைப் பெற்று திருவாவடுதுறையினை அடைந்து சிவலிங்கத்தை பாலால் அபிஷேகித்து தனது பழைய நிலையினை தேவி பெற்றாள். தேவியின் பொன் மேனியினைக் கண்ட இறைவனும், முனிவர்கள் சூழ அன்னையை அரவனைத்தப்படி அணைத்தெழுந்த நாயாராக காட்சியளித்தார். 23 சுடர்கள் உள்ள திருவாட்சி உடைய செவ்வக பீடத்தில் ஜடாமகிடத்துடன் சுவாமி மான்மழு முன் வலக்கரம் அபய ஹஸ்தமாகவும், இடக்கரம் பார்வதியின் தோளில் வைத்தவாறும் திரிபங்க நிலையில் சர்வாபரணங்களுடன் திகழ்கின்றார். இடப்பக்கம் நிற்கும் பார்வதியின் வலக்கரம் மலர்க்கரமாகவும், இடக்கரம் ஊறு கரமாகவும் விளங்குகின்றார். அன்னையின் பார்வை வெட்கத்தில் கீழ்நோக்கிய பார்வையோடு கரண்ட மகுடத்துடன் காட்சி தருகின்றார். இத் திருமேனியானது சோழர் காலத்தின் கலை நுட்பம் தெரியவருகிறது. சிறப்பினில் சிறப்பாக சுவாமியின் கரம் அம்பிகையின் தேகத்தில் எவ்விடத்தும் படவில்லை என்பது அபிஷேகம் செய்யும் காலங்களில் நாம் காணலாம். மேலும் கணவன் மனைவி ஒற்றுமை வளரவும், குடும்பத்தில் அனைவரின் சுகம், பிரிந்த தம்பதியினர் ஒன்று சேர்ந்து வாழவும், புத்திரபாக்யம், செல்வம் (பணம்) கிடைக்க யோகத்தினால் கிடைக்கும் ஞானமும் கைவர இத்திருமேனியினை வணங்குதல் நலம்.

**புத்திர தியாகேசர் :**

இப்பெருமானே ஒரு சமயம் புத்திர தியாகராசர் திருமேனி கொண்டு முசுகுந்த மன்னனுக்குப் புத்திரப்பேறு அருளியவர். இவரது அமர்ந்து ஆடும் நடனம் ஹம்ஸ நடமாகும். தைமாத ரத சப்தமி மகோற்சவத்தில் திருத்தேரில் பவனி வருபவரும் இவரே ஆவார். வருடத்திற்கு இவருக்கு ஆறு அபிஷேகங்கள் நடக்கும். இப்பெருமானை மேலும் விரிவாக அறிய ஆதீன வெளியீடாகிய சோமாஸ்கந்தர் எனும் நூலில் காண்க.

மேலும் இவ்வாலயத்தில் ரிஷபம், ஆடு, குதிரை, மஞ்சம் போன்ற மர வாகனங்கள் உள்ளன. இன்னும் பல்வேறு திருமேனிகள் இவ்வாலயத்தில் எழில்மிகு தோற்றத்துடன் விளங்குவதை விழாக் காலங்களிலும், சிறப்பு அபிஷேக நாட்களில் வழிபாடு செய்யும் சமயம் நாம் கண்டு அனுபவித்து பேரானந்தம் அடையலாம். வாரீர் வந்து தெய்வத் திருமேனிகளைத் தரிசிப்பீர்.

# தலப் பதிகக் கட்டுரைகள்



திருஞான சம்பந்த சுவாமிகள்

# பேசாத நாள் எல்லாம் பிறவா நாள்!
# அப்பர் அருட்பாட்டு :

- செஞ்சொற்கொண்டல், புலவர். சொ. சிங்காரவேலன், M.A., Dip.Ling.,



(திருவாவடுதுறை ஸ்ரீகோமுத்தீஸ்வரர் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் 1972ல், பக்.9ல் வெளிவந்தக் கட்டுரை)

திருநாவுக்கரசர் இறைவன் திருவருளினால் மூழ்கியெழுந்த அனுபவங்களை எடுத்து ஓதியுள்ள தேவாரப்பாட்டுக்கள் படிப்போர் நெஞ்சில் சீரிய அருள் அனுபவத்தை அவ்வாறே விளைவிக்கும் திறம் உடையவை. அவற்றைப் பன்முறை ஓதுவதும் சிந்திப்பதும் பரம்பொருளை அடையும் படி நிலைகள். உலகப் பொய்மைகளை விட்டு நீங்கி, அருள் மெய்மையையுணர்தற்கேற்ற அருந் துணைதனை நினைய வல்லோர்க்கு என்றும் பெருந்துணை என்று அடிகள் தில்லைப் பெருமானைத் தம் திருத்தாண்டகத்துப் போற்றுவர். உண்மையிற் பார்க்கப்போனால், இறைவனை நினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணை என்று மதிக்கத்தக்க அரும் பாடல்கள் அடிகளுடையவை. மேலோட்டாகப் படித்து நிறுத்துதற்கேற்றன அல்ல அவை. ஆழ்ந்து சிந்தித்தற்குரியவை. மணிவாசகர் நடையிற் கூறினால், ஆழ்ந்து தேனித்தற்கு உரியவை. அவ்வாறு நாளும் சிந்திக்கச் சிந்திக்கப் புதுப்புது நயம் காட்டுவதுடன் ஞானநெறியில் மேலே மேலே உயர்த்தும் உயர்வுடையவையாய் அடிகளாரின் ஒவ்வொரு சொல்லும் விளங்குகின்ற ஒட்பத்தை வல்லோர் உணர்வர். உயர்ந்த பாட்டின் இலக்கணமே இதுதான். தன்னைப் பயில்வோரை உயர்த்தி ஒருமைப்பாட்டிற்கு உரியவராய்த் தகுதிப்படுத்துவதே உயர் பெருங் கவிஞர் திறன் ஆகும்.

**ஒளியும் உவகையும் :**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் முதலிய அருளாளர்தம் அருட்கவிதைகள் சமய அனுபவங்களின் கருவூலங்கள்; இறைவனுடைய அருள் ஒளியைக் கண்ட கழிபேருவகையின் (ectasy) வெளியீடுகள்; அப்பேரொளியின் வெளிப் பாடாக வையகத்தையே கண்டு வழி காட்டியவர்கள் அப்பெருந்தகைகள் என்று திறன் ஆய்ந்த செம்மலோர் குறிப்பது முற்றும் உண்மை ஆகும். தென்னாட்டின் வரலாறு (A History of South India) என்ற நூலை எழுதியுள்ள வரலாற்றுப் பேரறிஞர் திரு. கே. ர. நீலகண்ட சாத்திரியார் அவர்கள், அந்நூலின் பத்தாவது பகுதியிற் பின்வருமாறு எழுதியுள்ளமை அறிதற்கினிய ஒன்றாகும். "The hymns of Sambandar, Appar, and Sundarar form a varied treasure house of religious experience which tells of mystical raptures and ecstasies of moments of light, when these is a vision of God" *(பக். 414)*

உயர் கவிஞர் தன் கவிதையில் தன் முழு அனுபவத்தினுடைய சீரிய பிழிவின் தெளிவையே எடுத்து வழங்குகின்றான். ஒவ்வொரு வரியிலும், ஒவ்வொரு பகுதியிலும் தான் அடைந்த மெய்ப்பாட்டுணர்வினை எடுத்துப் பெய்கின் றான். உரைநடையில் அதனை ஓதுவதனினும் ஒலிநயம் சான்ற கவிதையாக அதனை வழங்குவதில் அவன் பெருந்திறன் படைத்தவனாக உள்ளான் என்ற கருத்துப்பட கவிதைத் திறனாய்வு (The criticism of Poetry) என்ற நூலில், பேரறிஞர் எஸ். ஹெச். பர்ட்டன் (S.H.Burton) கூறுவது இங்கு எண்ணி மகிழ்தற்குரியது.

The poet seeks to express the quintessence of the whole experience and consequently, each line and each paragraph are wrought at a higher pitch of emotion than is the case in prose, and moreover, the use of rhythm demands a method of description of narration that achieves its effects more vividly and instantaneously than in prose writing *(பக். 79)*.

**கூர்ந்து நோக்குதல் :**

அப்பரடிகள் தமிழ் முழுதறிந்த பெரும்புலவர்; உயர் கவிஞர். அவருடைய அருட்பாட்டுக்கள் கூற்றாயினவாறு (பா. 1) தொடங்கி, ஒருவனை யல்லாது (பா.3066) வரையுள்ள அனைத்தும், இத்தகைய ஆழ்ந்த நோக்கிற்கு உரியன. இறையருட்பாட்டுக்களாகக் கொண்டும், இலக்கிய நயம் வாய்ந்ததாகக் கருதியும் இவற்றைக் கூர்ந்து நோக்கினால் பெரும்பயன் விளைந்திடும். இலக்கியத்திறன் ஆய்வாளர் கண்களுக்கு இங்குக் கிடைக்கும் அறிவு விருந்து அளவிற் பெரிது ஆகும். இதனை விளக்க ஒரு சான்றினை இங்கு எடுத்து விளக்குவோம்.

**எப்போதும் ஏத்தல் :**

இறைவன் அருளைப் பெற்று எப்போதும் அதில் மூழ்கி இன்புற்ற அடிகளார் தம்மைச் சார்ந்தவர்கட்கும் அந்த அனுபவத்தைக் கூறிக் கூறி மகிழ்வார்; மகிழ்விப்பார். திருவாய்மூரில் தாம் கண்ட அருட்காட்சியை ஞானசம்பந்தர்க்குக் காட்டி மகிழ்ந்து கவிக் கூத்தாடியவர் அடிகள். தாம் பிறந்த பிறவிப்பயன் இதுவே என்று உணர்ந்தவர். எப்போதும் துஞ்சும்போதும் துயிலின்றி ஏத்தும் திறம் வேண்டிப்பெற்றவர் அடிகள். அவன் அருட்புகழைப் பேசி மகிழப் பெறாத நாட்களைப் பயன்படாத நாட்கள் என்றே வெறுத்து ஒதுக்குவார் அடிகள். பேசாத நாள் எல்லாம் பிறவா நாள் என்று உறுதியாக உரைத்து, உலக மாந்தர்களின் உள்ளத்தில் இந்த மெய்ம்மையை இனிது பதிவித்துவிடுவார் அடிகளார்.

**வீரர் இயல்பும் விழுமியோர் இயல்பும் :**

பழந்தமிழ் வீரர்கள் போர்களில் ஈடுபட்டு வீரமுடன் போராடுவர்; போராடுவது உடலாற்றல் மிகுந்த வீரர்கட்குப் புன்னகையும் பூரிப்பும் தரும் ஓர் இனியபொழுது போக்கு ஆகும். போர் எனிற் புகலும் புனைகழன் மறவர் என்று இவ்வீரர் திறத்தைப் புறநானூறு புனைந்து பாடும். போரிற்சென்று விழுப்புண் பெறுதலை (மார்பிற் புண்படும் சீரிய வாய்ப்பினை) என்றும் நினைத்து நினைத்து மகிழ்வர். தம்முடைய வாழ்நாளில் பிறந்து பயன்பட்ட நாட்கள் என்று அத்தகைய விழுப்புண்பட்ட நாள் ஒவ்வொன்றையும் உரைத்து மகிழ்வர். போர்செய்யாது - விழுப்புண் பெறாது கழித்த நாட்களைப் பயன்படாத நாட்களாக, வழுக்கிய நாட்களாக, எண்ணி வருந்துவர். இது பழந்தமிழ் வீரர் இயல்பு ஆகும். இதனை வான்புகழ் வள்ளுவர்.

***விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள்***
***வைக்குந்தன் னாளை யெடுத்து.***

என்று பாராட்டி மகிழ்வர். அப்பரடிகள் இந்தக் குறட் செய்தியையும், பழந்தமிழ் வீரர் மாண்பினையும் நன்கறிந்தவர். சிவநெறியைப் பின்பற்றிவரும் தமிழ் மாந்தர் யாவரும், எல்லாம் வல்ல சிவபிரானைப் பேசாத நாள் தம் வாழ்வில் பிறந்தும் பயன்படாத நாள் என்று கருதுதல் வேண்டும் என்பதும், ஒவ்வொரு நாளும் இறைவனுடைய பொருள் சேர் புகழை ஓதிக்கொண்டே இருத்தல்வேண்டும் என்பதும், அடிகள் தமிழ் மாந்தர்க்கு விடுக்கும் அருட்செய்தி என்று கூறலாம். கூறிக் கூறி உருகும்படி, இந்தத் தொடரை அடிகளார் குறள் நெறியிற் படைத்துத் தந்துள்ளார்.

*பேசாத நாள் எல்லாம்*
*பிறவா நாளே!*

இந்த நினைவு எப்போதும் உள்ளத்தில் இருந்துவரல் வேண்டும். பயனில் சொல்லாமை வேண்டும். பொய், குறளை, கடுஞ்சொல், இன்னாச் சொல் ஆகிய வாக்கின்கண் நிகழக்கூடிய நான்கு பாவங்களை விலக்குதல் வேண்டும்: விலக்குவ துடன் அவனுடைய இனிய புகழை வாயாரப் பாடுதல் வேண்டும் என்பது அடிகளார் கருத்து. உய்வனோ, எட்டனைப் பொழுதும் மறந்து உய்வனோ (தில்லை குறுந்தொகை) என்று கூறி உருகும் அடிகள், எள்ளத்தனைப்1 பொழுதும் கூட மறவாமை வேண்டும் என்று நினைக்கின்ற திறம் அவரது பாடல்களில் எண்ணற்ற இடங்களில் அறியப்படும்.

**தில்லையிலும் திருவாவடுதுறையிலும் :**

உலகினைப்பற்றிய பேச்சுக்கள் ஒருவகையிற் குறைவுடையனவே ஆகும். ஏனெனில் அவை பயன்

கருதியவை; அப்பயனும் நிலையற்ற சிறு பயனே; இன்பம்போலத் தோன்றித் துன்பத்துள் விழுவிக்கும் துயரப் பேச்சுக்கள் தாம் அவை. அவை மறுமைக்குத் துணை செய்யமாட்டா. அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை என்பது திருவள்ளுவர் தெளிவுரை. அவ்வுலக இன்பத்திற்கு அடிகோலுவது இறையருட் பேச்சு ஒன்றே ஆகும். இந்த உண்மையை அடிகளார் உலகிற்கு உணர்த்துவது இரண்டு பெருந்தலங்களிலேயே. ஒன்று கோயில் என்று வழங்கப்பெறும் தில்லை மற்றது திருவாவடுதுறை என்னும் திருத்தலம்.

அரியானை அந்தணர்தம் சிந்தையானை என்று தொடங்கும் பெரிய திருத்தாண்டகத்தின் பாடல்தோறும், பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாள் எல்லாம் பிறவாநாளே என்று கூறி உருகுகின்றார். இதே உருக்கமும் நெகிழ்வும், பின் தலயாத்திரை செய்துகொண்டு, சித்தர் பெருந் தலமாகிய திருவாவடுதுறைக்கு வருங்கால் அடிகளார்க்கு எழுகின்றன. திருவீழிமிழலை வழிபாட்டின் பிறகு திருவாவடுதுறை வரும் அடிகள், அத்தலத்து இறைவனை ஐம்பத்தொரு பாடல்களாற் பரவி மகிழ்ந்துள்ளார். அவற்றுள் திருநேரிசை - இரண்டு பதிகங்கள் (பா.20) திருக்குறுந்தொகை - ஒரு பதிகம் (பா.10) திருத்தாண்டகம் - இரண்டு பதிகங்கள் (பா.21).

**திருவாவடுதுறைத் திருப்பாட்டுகள் :**

திருநேரிசை இரண்டும், ஆவடுதுறையனார் அருளியல்புகளை விளக்கித் தம்மை அஞ்சலென்று அருள வேண்டும் என்று வேண்டிக்கொள்வன. திருக்குறுந்தொகை, திருவாவடுதுறைப் பெருமா னைக் காதல் செய்து கருத்தழிந்த பெண் ஒருத்தியின் நிலையை உரைப்பதுபோல் உயிர் நிலை உரைக்கும் அகப்பாட்டு நெறி உடையது. ஆவடுதண் துறையுள் மேய அரன் அடியேஅடைந்து உய்ந்தேன் என்றும் அஞ்சேல் என்னாய் ஆவடுதண் துறை உறையும் அமரர் ஏறே என்றும் இருதிருத் தாண்டகங்கள் கூறிக்கூறி உருகுவன. இரண்டாம் திருத்தாண்டகப் பதிகத்தின் நிறைவுத் திருப் பாட்டினை ஓதி மகிழ்ந்திடும்போதே, அடிகளார் தில்லைப் பெரியதாண்டக மனநிலை கொள்கின்றார். தில்லைப் பெருமானை, பெரும்பற்றப் புலியூரா னைப் பேசாத நாள் எல்லாம் பிறவாநாளே என்று அறிவுறுத்திய நிலை மீண்டும் அடிகளார் செம்மனத் திற்கிளர்ந்தெழுகின்றது. யான் துறவுநெறி மேற் கொண்டாருடைய தூய நெறியிற் சென்றேனல் லேன்; மாலைகள் சூட்டி வழிபடும் பேறும் பெற்றேனல்லேன்; பிறந்தேன்; நின் திருவருளையே பேசினல்லாது நின்னைப்பற்றிப் பேசாதநாள் எல்லாம் பிறவா நாளேயாம்; இராவணனை அடர்த்து அதன்பின் அருளிச் செய்த திறம் அறிந்தேன்; ஆதலின் திருவாவடுதுறை இறைவா! அடியேனை அஞ்சேல் என்று அருள்வாயாக என்று கணிக்கின்றார். இவ்வழகிய திருப்பாட்டுப் பின்வருவதாகும்:

*துறந்தார்தம் தூநெறிக்கட் சென்றே னல்லேன்*
*துணைமாலை சூட்ட நான் தூயே னல்லேன்*
*பிறந்தேன்நின் திருவருளே பேசி னல்லால்*
*பேசாதநாள் எல்லாம் பிறவா நாளே*
*செறிந்தார் மதின்இலங்கைக் கோமான்றன்னைச்*
*செறுவரைக்கீழ் அடர்த்தருளிச்செய்கை எல்லாம்*
*அறிந்தேன் அடியேனை அஞ்சேல் என்னாய்*
*ஆவடுதண் துறையுறையும் அமரர் ஏறே.*

**துறந்தார் தூநெறி - திருக்குறிப்பு :**

திருவருள் திறம் பேசுகின்ற நாளே எனக்குப் பிறந்து பயன்பட்ட நாள்; ஏனைய நாள் எல்லாம் பிறந்து பயன்படாத நாட்களே என்று அடிகளார் கூறும் அறிவுரை, இத்திருப்பாட்டில் மிக அழகுற அமைந்துள்ளமை காணலாம். தம்முடைய நிலை கூறுவார் போன்ற வாய்ப்பாட்டில் அடிகளார் அருளினாராயினும் இது வையகத்தார் உய்தற்கு வழிகாட்டிய திறம் என்றே கொள்ளற்பாலது ஆகும். துறந்தார் தம் தூநெறி என்று அடிகளார் பல நூற்றாண்டுகட்கு முன் பாடிய திருக்குறிப்புத்தான், அடிகளார் காலத்திற்குப் பின் - சில நூற்றாண்டுகள் கழிந்து - பஞ்சாக்கர தேசிக மூர்த்திகள் இத்திருத் தலத்தில், திருவாவடுதுறைத் திருமடத்தைத் தோற்று வித்ததற்கு உரிய ஞானக் குறிப்பாக விளங்குகின்றது என்பது நுட்பமாக உணர்தற்கு உரியதாக உள்ளது. அட்டமாக உருவினானே என்ற இத்திருத் தலத்துத் திருநேரிசைக் குறிப்பு (பா.3) க்கேற்ப, யோகநெறி விளக்கமாக - திருமந்திரக் கடலாக இத்திருத்தலம் எழிலூட்டும் நிலையை உணர்த்துவதாக உள்ளது.

**வீழ்நாள் படாத வாழ்நாள் :**

உயர் பெருங்கவிஞர்களாக விளங்கிய இத்தகு அருளாளர்களுடைய திருப்பாட்டுகளும் அவற்றிற் கூறப்பெற்ற குறிப்புகளும் மெய்ம்மை விளைப்பன என்று காட்டுதற்கு இவற்றிலும் வேறு சான்று வேண்டுமோ? அப்பர் அடிகளாருடைய மொழிவழி நின்று, எல்லாம் வல்ல இறைவன் இன்னருட் புகழையே, நின் திருவார்த்தை விரிப்பார் என்றபடி, எப்போதும் பேசி, வாழ்நாளை வீழ்நாள் படாமல் கொண்டு செலுத்தவேண்டும்; இதுவே அறிவு படைத்த மாந்தர் அறிவறிந்து ஆற்றுதற்குரிய கடனும் ஆகும். இதனை நினைவூட்டி நிற்பதே, தில்லையிலும் திருவாவடுதுறையிலும் அருளியுள்ள, பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே என்ற நறுந்தொடர் ஆகும்.



# வழித்துணை மருந்து

- சித்தாந்தம் புகட்டும் செம்மலார் கு. வைத்தியநாதன், இயக்குநர், திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர்.

(இக்கட்டுரை ஆசிரியர், சித்தாந்த வித்யா சாகரம், செந்நெறிச் செல்வர், மெய்ஞ்ஞான வள்ளல் போன்ற பட்டங்களைப் பெற்றவர்கள். மகா சன்னிதானம் அவர்களால் "மகரக் கண்டிகை" வழங்கியருளப்பெற்றவர்கள். மலேசியா போன்ற நாடுகளுக்குச் சென்று சித்தாந்த சைவ நெறியைப் பரப்பி வருபவர்)

**தோற்றுவாய் :**

சுந்தரமூர்த்தி சுவாமிகள், காஞ்சிபுரத்திலிருந்து திருவாரூர் செல்லும் வழியில், திருவாவடுதுறைக்கு எழுந்தருளினார். அது போழ்து அருளிச் செய்த "கங்கைவார் சடையாய்" எனத் தொடங்கும் பத்து பாட்டுகள் கொண்ட பதிகத்தின் எட்டாவது பாட்டில் "வழித்துணை மருந்தே" என்னும் தொடர் இடம் பெறுகிறது.

திருவாரூர் செல்லும் வழியில் எனக்குத் துணையாக வருகின்ற அமிழ்தம் போன்றவனே என்று இத்தொடருக்குப் பொருள் கொள்ளலாம்.

**சேக்கிழார் குறிப்பு :**

திருவாவடு தண் துறை அணைந்த சுந்தரர், திருக்கோயிலை வலம் கொண்டு, மாசிலாமணி ஈசன் திருமுன் நின்று,

***"கங்கைவார் சடையாய், ஓர் கண் இலேன் எனக் கவல்வார் இங்கு எனக்கு ஆர் உறவு"*** என்று ஏயர்கோன் கலிக்காமர் புராணத்தின் 296ஆவது பாடலில், சுந்தரர் நிலையைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**சுந்தரரின் மனநிலை :**

இப்பதிகம் பாடிப் பரவும் பொழுது, சுந்தரர் தமக்கு வலக்கண் கிடைக்குமா? என்னும் மனக் கவலையோடு, இருந்திருக்கிறார் என்பது புலனாகிறது.

சம்பந்தப் பெருமான், தம் தந்தையாருக்கு வேள்வி செய்யப் பொருள் வேண்டித் திருவாவடுதுறை ஈசனிடம் முறையிட்ட நிகழ்ச்சி இந்த இடத்தில் நினைவுகூரத் தக்கது.

வேண்டியதை வேண்டியவாறு வழங்கும் பேரருளாளன், மாசிலாமணி ஈசன் என்பதை எண்ணியே சுந்தரர் பெருமான்,

***"எனை 'அஞ்சல்' என்று அருளாய்;***
***ஆர் எனக்கு உறவு? அமரர்கள் ஏறே"***

என்று ஒன்பது பாடல்களிலும் கூறியருள்கிறார். இத்தொடர்களைப் பதிகத்தின் "மகுடம்" என்பர் அறிஞர்கள்.

சுந்தரர் பெருமானின், அப்போதைய மனநிலை இதிலிருந்து தெளிவாகிறது. மாசிலாமணி ஈசன் திருவாவடுதுறைத் திருத்தலத்தில் எழுந்தருளி, யார் யாருக்கு என்னென்ன வேண்டுமோ, அவற்றை எல்லாம் வழங்கியருள இருக்கிறான் என்னும் உண்மையை நாம் ஒருபோதும் மறக்கக்கூடாது.

**பதிகத்தின் பிற சிறப்புக்கள் :**

திருவாவடுதுறைத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் திருநாமம் "மாசிலாமணி" அம்மையின் அரும் பெயர் "ஒப்பிலாமுலையாள்" இவ்விரு பெரும் பெயர்களையும் தம் பதிகத்தில் சுந்தரர் பெருமான் குறிப்பிட்டருளியுள்ளார்.

இன்னும்,

"திருவாவடுதுறையுள் அங்கணா, அண்ணலே, அப்பனே, அதிபனே, அந்தணா, அறவனே, ஐயனே, ஆதியே, ஆனையே, அண்டவாணனே" என்று பதிகம் முழுவதிலும் கோமுத்தீஸ்வரப் பெருமானை, அவர் விளித்துப் பாடியருளியிருப்பதைப் படனம் செய்யும் பொழுது, உள்ளம் அவன் நினைவாகவே நிறைந்து உள்ளது.

*"கண் இலேன், உடம்பில் அடு நோயால் கருத்தழிந்து, உனக்கே பொறை ஆனேன்"*
*"மதியிலேன்; உடம்பில் அடுநோயால் மயங்கினேன்"*
*"உறவு இலேன் உனை அன்றி; மற்று அடியேன் ஒரு பிழை பொறுத்தால் இழிவுண்டோ?"*

என்னும் திருவாக்குகளைத் திரும்பத் திரும்பப் பயிலும் பொழுது, நெஞ்சு நெகிழ்கிறது.

இத்தகு அருமைப் பதிகத்தைத் திரும்பத் திரும்பப் படனம் செய்யுமாறு, அடியேனை ஆட்படுத்தியருளிய திருவாவடுதுறை ஆதீனகர்த்தர், சீர் வளர் சீர் குரு மகா சந்நிதானம் அவர்கள் பொன்னார் திருவடி மலர்களை நன்றியுணர்வோடு, நினைந்து நினைந்து வழிபடுகிறேன்.

**நிறைவுரை :**

இப்பதிகத்தின் திருக்கடைக் காப்பில்,

*"வன் தொண்டன் ஆர்வத்தால் உரைத்த*
*தண்தமிழ் மலர் பத்தும் வல்லார்கள்*
*சாதலும் பிறப்பும் அறுப்பாரே"*

என்று பதிகப் படனப் பயன் அருளிச் செய்துள்ளார்கள்.

சாதல் என்பது இறப்பது. பிறந்தவர் இறப்பதும் இறப்பவர் பிறப்பதும் உலக நியதி. இப்பதிகத்தைப் படனம் செய்பவர், இந்தப் பிறவியில் இறப்பதில்லை; அஃதாவது கயிலைக்குச் செல்வது உறுதி என்பது கருத்து. ஆகவே அவர்கள் மீண்டும் பூவுலகில் பிறப்பதும் இல்லை என்பது உறுதி. இவ்வுண்மையை வலியுறுத்தவே, "சாதலும் பிறப்பும் அறுப்பரே" என்று சுந்தரர் பெருமான் அருளிச் செய்துள்ளார்.

திருவாவடுதுறையைப் பூலோக கயிலாயம் என்பர். இத்தலத்து இப்பதிகம், படனம் செய்பவர்க்கு இந்தப் பிறவியிலேயே கயிலாய பதவியைத் தரும் என்பதை உறுதிப்படுத்துகிறது.



அருள்மிகு வள்ளி தெய்வானை உடனாய சுப்பிரமணியர்



# விலையுடை அருந்தமிழ் மாலை

- சிவத்தொண்டர் மா. பட்டமுத்து, M.Sc.,B.T., சங்கரன்கோவில்.

(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீனத்தில் சிவத் திருத்தொண்டர் எனும் விருது பெற்றவர். சங்கரன்கோயில் ஸ்ரீ கோமதியம்மை மாதர் சங்கம், விக்கிரமசிங்கபுரம் – திருநாவுக்கரசர் உழவாரப் பணி மன்றம் ஆகியவற்றின் நிறுவனர். 20 ஆண்டுகளுக்கு மேலாக சங்கரன்கோவில், விக்கிரமசிங்கபுரம் ஆகிய தலங்களில் திருமந்திரம், பெரிய புராணம் உள்ளிட்ட திருமுறைத் தொடர் வகுப்புகளும், திருவிளையாடற் புராணம், காஞ்சிப் புராணம் உள்ளிட்ட புராணத் தொடர் வகுப்புகளும் நடத்தி வருகின்றார்கள்)

சிவபிரான் செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலம் ஆணவ மலம். அதனை நீக்கத் துணை நிற்பன கன்ம மலமும், மாயா மலமும். இம்மலங்கள் ஆன்மா சிவசிந்தனை செய்வதற்குத் தடையாக இலங்குவன. பிராரத்த கன்மமாவது, கட்டுப்பட்டிருந்த சஞ்சித கன்மம் இன்பத் துன்பமாகிய பயனைத்தர அனுபவிப்பதாம். இவ்வனுபவம் ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என முத்திறப்படும். மின்னல், இடி, காற்று, மழை, தீ முதலியவற்றால் வரும் இன்பத்துன்பங்கள் ஆதிபௌதிகம் என்பன. சனனம், மரணம், நரை, திரை, பிணி என்பன ஆதிதைவிகமாவன. மானிடர்,மிருகம் முதலிய வற்றால் வரும் இன்பத்துன்பங்கள் ஆத்தியான்மிகம் என்பன. இவ்வனுபவங்களில் தோய்ந்த ஆன்மா சிவசிந்தனை செய்ய முயலாது. இம்மூவகை இன்பத்துன்பங்களிலும் சிவபிரானை விடாது வழிபடும் பேறு, எதிர்நீச்சல் போட்டு எம்பிரானைச் சிந்திக்கும் பேறு உயிர்களுக்குக் கிடைப்பதற்கு உறுதுணையான அருந்தமிழ்மாலை அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றுகிறார் பாலறாவாயர். அதற்குரிய சந்தர்ப்பம் திருவாவடுதுறையில் உருவாகிறது.

"நம்மலத்துயர் தீர்க்க வந்தருளிய ஞானச் செம்மலர் ஆடுமாதியை, ஆவடுதுறையுளாரமுதை நாடுகாதலார் பணிந்தெழுந்தார்'' வேள்வி செய்வதனுக்காவதாகிய காலம் வந்தணைவுறத் தாதையார் சிவபாதஇருதயர் பொருள் வேண்டி ஞானக்குழந்தையிடம்புகன்றார். ஆறுசூழ் வேணி நாதனாரை முன்னாகவே புரியும் நல்வேள்வி தீது நீங்க செய்யப் பொருள் யார்பால் கேட்பது.? அந்தமில் பொருளாவன ஆவடுதுறையுள் எந்தையார் அடித்தலங்கள்அன்றோ? நீணிதி வேண்டினார்க்கு ஈவது ஒன்று மற்றிலேன் உன்னடியல்லது ஒன்றறியேன் என்று பேரருள் வினவிய செந்தமிழ் மாலையினைப் புகலிவேந்தர் மாசிலாமணி ஈசர் திருமுன் இன்னிசையால் பாடலுற்றார்.

அவ்வண்டமிழ்ப் பதிகம் நாலடியின் மேல் இருசீர் தொடுத்த வைப்பொடு அமைந்தது. பிராரத்த வினையால் விளையும் எத்தகைய துன்பங்கள் வந்த போதிலும் உள்ளமும், நாவும், செயலும் சிவநாதனை விட்டு அகலக்கூடாது என்ற உறுதிப்பாட்டினைப் பாசுரம், பாசுரமாக வலியுறுத்தும் வண்ணமாக அமைவது அத்திருப் பதிகம், பேரருள் நிதி வேண்டிய அருட்குறிப்போடு மலர்வது அச்சொல்மாலை. முன்னிரண்டு அடிகள் எம்பிரான் இணையடிச் சிந்தனையை எத்தகைய பிணியும் துயரும் வருமாயினும் விடாது பற்ற வேண்டும் என்ற கடைப்பிடியை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைப்பன. அடுத்த இருவரிகள் எந்தை பிரானின் அருளாற்றல் நிகழ்வுகளைப் பதிவு செய்வன. மேலிரண்டுஅடிகள் "நீணிதி வேண்டி னார்க்கு ஈவதற்கு ஒன்றில்லேன். பொருளாகும் உனது திருவடிகளே அன்றிவேறு பற்றுக்கோடு அறியேன்'' என்ற அருள் கருத்தினைத் தாங்கித் திருப்பதிகத்தினை அலங்கரிப்பன.

*இடரினும் தளரினு மெனதுறு நோய்*
*தொடரினு(ம்) உனகழ(ல்) தொழுதெழுவேன்*
*கடல்தனி(ல்) அமுதொடு கலந்த நஞ்சை*
*மிடறினி(ல்) அடக்கிய வேதியனே*
*இதுவோ எமையாளுமாறு) ஈவதொன்று எமக்கில்லையேல்*
*அதுவோ உன தின்னரு(ள்) ஆவடுதுறை அரனே*

இம்முதல் திருப்பாட்டில் நஞ்சுண்ட கண்டா! இடர், தளர்வு, பழவினைப்பயன் வரினும் உனது திருவடியினைத் தொழுது எழுவேன் என்று பூந்தராய் வேந்தர் அருளுகிறார்.

*வாழினும் சாவினும் வருந்தினும் போய்*
*வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்*
*தாழிளம் தடம்புனல் தயங்கு சென்னிப்*

*போழிளமதிவைத்த புண்ணியனே*
*இதுவோ எமையாளுமா(று) ஈவதொன் றெமக்கில்லையேல்*
*அதுவோ உன தின்னருள் ஆவடுதுறை அரனே*

என்பது 2ஆவது திருப்பாடல். மரணம் வரும்போதும் இந்து சேகரனை மறவாது நிற்க என்று ஆணையிடுகிறார் ஆளுடைய பிள்ளையார்.

*நனவினும் கனவினும் நம்பா உன்னை*
*மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்*
*புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த*
*கனல் எரி அனல்புல்கு கையவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக் கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை அரனே.*

எனவரும் 3 ஆம் திருப்பாடலில் கங்கையும் கொன்றையும் அணிந்து எரிதாங்கிய எம்பிரானைக் கனவிலும் மறவாது வழிபடுக என்று பூம்புகலி நாயகர் வழிகாட்டுகிறார்.

*தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்*
*அம்மலர் அடியலால் அரற்றாதென்நாக்*
*கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்*
*மும்மதில் எரிஎழ முனிந்தவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை அரனே.*

என்பது 4ஆம் திருப்பாடல். தும்மல் இருமல்தொடர்ந்த போழ்தினும் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் இணையடியினைப் பாடி மகிழ்க என்று எடுத்துரைக்கிறார் சீர்காழிச் செம்மல்.

*கையது வீழினும் கழிவுறினும்*
*செய்கழல் அடியலால் சிந்தை செய்யேன்*
*கொய்யணி நறுமலர் குலாய சென்னி*
*மையணி மிடறுடை மறையவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக்கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை அரனே.*

என்ற 5ஆவது அருண்மலரில் பக்கவாதம், உயிர் வன்மை குறைதல் போன்ற இடர்ப்பாடுகள் வரினும் நீலகண்டர் தம் பாதமலர்களைச் சிந்தித்து சிறப்புறுக என்று வழிகாட்டுகிறார் ஞான போனகர்.

*வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்*
*எந்தாய் உன்னடியலால் ஏத்தாதென்நா*
*ஐந்தலை அரவு கொண்டரைக்கசைத்த*
*சந்தவெண் பொடியணிசங்கரனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக் கில்லையேல்*
*அதுவோஉனதின்னருள் ஆவடுதுறை அரனே.*

என்ற 6ஆவது அற்புதக் கண்ணியில் கொடுமையான துயரம் அச்சுறுத்தினாலும் சுகத்தையே செய்யும் சங்கரன் மலரடியினையே ஏத்தி ஏற்றம் பெறுக என்று அருளிச் செய்கிறார் நலமிகு ஞானசம்பந்தர்.

*வெப்பொடு விரவியோர் வினைவரினும்*
*அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா*
*ஒப்புடை ஒருவனை உருவழிய*
*அப்படி அழலெழ விழித்தவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக்கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை யரனே.*

என்பது 7ஆவது இனிய பாடல். வெப்பொடு விரவிய கொடுவினைக்குத்தளராமல், காமனுக்கு அனலாம் கண்ணுதற் பெருமான் ஆகிய எந்தை திருவடியன்றிப் பிறரை வாழ்த்தாத நா வேண்டும் என உறுதிபட உரைத்தருள்கிறார் வேணுபுரத்து வேந்தர்.

*பேரிடர் பெருகிஓர் பிணிவரினும்*
*சீருடைக் கழல் அலால் சிந்தை செய்யேன்*
*ஏருடை மணிமுடி யிராவணனை*
*ஆரிடர் படவரை அடர்த்தவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக் கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை யரனே.*

என்ற 8ஆவது திருப்பாடலில் தாங்க இயலாத நோயினை இராவணனை அடர்த்து அருள் பாலித்த எந்தை இணையடிச் சிந்தனையன்றி தீர்க்க இயலாது என்று தெளிவுறுத்துகிறார் தோணிபுரத் தோன்றல்.

*உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் நின்*
*ஒண்மல ரடியலால் உரையாதென்நாக்*
*கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்*
*அண்ணலும் அளப் பரிதாயவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக் கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை யரனே.*

என்ற 9ஆவது அருள் பாடலில் வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் மாலயற்கரிய நாதன் மலரடித் துணையன்றி வேறில்லை என்று ஓங்கு சீர் ஞானசம்பந்தர் உரைத்தருள்கிறார்.

*பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்*
*அத்தாவுன்னடியலால் அரற்றாதென்நாப்*
*புத்தரும் சமணரும் புறன் உரைக்கப்*
*பத்தர்கட்கு அருள்செய்து பயின்றவனே*
*இதுவோ எமை ஆளுமா(று) ஈவதொன்றெமக் கில்லையேல்*
*அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை யரனே.*

எனவரும் 10ஆவது திருப்பாடல் பித்து, மயக்கம் தரும் பிணிகள் வரினும் புத்தர், சமணர் அறியொண்ணா எந்தை பிரான் மலரடியைத் தவிர எனது வாக்கு பிறரை வாழ்த்தாது என்று ஸ்ரீ ஞான சம்பந்தர் காட்டும் உறுதிப்பாட்டினைக் கோடிட்டுக் காட்டுகிறது. இனி, மகுடமான திருக்கடைக்காப்பு.

*அலைபுனல் ஆவடுதுறை அமர்ந்த*
*இலைநுனை வேற்படைஎம்மிறையை*
*நலமிகு ஞான சம்பந்தன் சொன்ன*
*விலையுடை அருந்தமிழ் மாலை வல்லார்*
*வினையாயின நீங்கிப்போய் விண்ணவர் வியனுலகம்*
*நிலையாக முன்னேறுவர் நிலமிசை நிலையிலரே*

இந்த அற்புத விலையுடை அருந்தமிழ் மாலையை ஞானத்தின் திருவுருவாம் ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய உடன் அவரது விண்ணப்பக் குறிப்பினை ஏற்று ஈசன் அருளாலே சிவபூதம் விரைந்து வந்து ஆயிரம் பசும்பொன் கொண்ட உலவாக் கிழியினைப் பலிபீடத்தின் உச்சிமேல் வைத்து "நித்தனார் அருளிய இப்பொன் உலவாக்கிழி உமக்கு அருள் செய்தது" என உரைத்தது.

திருஞான சம்பந்தப்பிரபு அவனிமேல் பணிந்து அப்பொன் உலவாக்கிழியினை எடுத்து திருத்தந்தையாருக்கு நல்கியருளினார்.

இப்பதிகத்திற்கு ஞானப்பால் உண்ட வித்தகர் விலையுடைய அருந்தமிழ் மாலை என திருநாமம் சூட்டுகிறார். விலை என்பது அருளாகிய நிதி. அந்த அருந்தமிழ் மாலை, அருளை மட்டுமா வழங்க வல்லது! பொருளையும் தர வல்லது அந்த அருந்தமிழ் மாலை, நிலமிசை முன்னேற்ற வாழ்வினையும் முத்திப்பேற்றினையும் நல்க வல்லது அந்த அற்புதத் தமிழ்மாலை, ஞான சம்பந்தரின் இன்தமிழ் அருட்செல்வத்தினையும், பொருட் செல்வத்தினையும் ஒருங்கே தரவல்லது. எனவே அது விலையுடை அருந்தமிழ் மாலையாயிற்று.

திருஞான சம்பந்தப் பிரபுவின் அருந்தமிழ் மாலை அன்றும், இன்றும், என்றும் விலை மதிப்பற்ற அற்புத மாலையாகும். காந்தார பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்த இத்திருப்பதிகத்தினை உள்ளம் உருகிப் பாடவல்லோருக்கு இன்றும் பொருட்செல்வம் கிட்டுவது உறுதி.

கோவை திரு. கந்தசாமி ஓதுவார்அடியேனது மாணவர். கேள்வித்திறனாலே அருமையாகத் திருமுறைகள் நன்கு பாடுவார். ஒரு முறை கோவையிலிருந்து 15 அன்பர்களைக் காசிக்கு அழைத்துச் சென்றார். சென்னையிலிருந்து காசி ரயிலில் பயணம் செல்லும்போது அந்த 15 பேரில் ஒருவர் கிண்டலாக, கந்தசாமி நீர் பாடும் தேவாரத்தில் ஒரு பாட்டுப் பாடினால் பணம் கிடைக்குமாமே, இந்த ஓடும் ரயிலில் அதைப் பாடும், பணம் கிடைப்பதைப் பார்ப்போம் என்று பரிகாசமாகக் கூறுகிறார். உடனே கந்தசாமி ஸ்ரீ கோமுத்தீசுவரப் பெருமானையும், ஸ்ரீ ஆளுடைய பிள்ளையாரையும் தியானித்துக் கொண்டு விலையுடை அருந்தமிழ் மாலையினைப் பாடுகிறார். அதே ரயில் பெட்டியில் பயணம் செய்யும் கர்நாடகத்தைச் சார்ந்த பொறியியல் மாணவர்கள் அத்திருப்பதிகத்தினைச் செவிமடுக்க ஆரம்பித்தனர். தமிழே தெரியாத கன்னட மாணவர்கள் உள்ளத்தைக் கவர்கிறது அந்த அருந்தமிழ் மாலை. திருப்பதிகம் பூர்த்தியாகிறது. அந்த மாணவர்களின் தலைவன் ரூ.5000ஐ வசூல் செய்து கந்தசாமி மடியில் வைக்கிறார். கிண்டல் பேசியவர் கந்தசாமியிடம் மன்னிப்புக் கோருகிறார். தமிழ் அறியாதவர்களையும் ஈர்க்கவல்ல அருந்தமிழ் மாலை அது.

தை மாதத்திருவிழாவில் உலவாக்கிழி பெற்ற விழா இன்னும் துறைசையில் விமரிசையாக நிகழும், கொடிமரத்தின் அருகே ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் எழுந்தருளி நிற்க, ஓதுவாமூர்த்திகள் விலையுடை அருந்தமிழ் மாலையினைப் பண்ணொன்ற இசை பாட, சிவபூதம் ஸ்ரீ கோமுத்தீசுவரரின் உலவாக் கிழியினைப் பலிபீடத்தில் வைக்கும் அற்புதக் காட்சியே காட்சி. ஸ்ரீ மாசிலாமணிப்பெருமான் ஆலய மஹா கும்பாபிஷேக விழாப்பொன்னாளில் விலையுடை அருந்தமிழ்மாலை பாடிக் குருவருளும் திருவருளும் பெற்றுய்வோமாக.



# அடைந்தவருக்கு அன்பர்

- பேராசிரியை உ. விஜயலட்சுமி, விக்கிரமசிங்கபுரம்.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் "சித்தாந்த வித்யாநிதி" எனும் பட்டம் பெற்றவர். ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையத்தில் சைவத்திருமுறைப் பேராசிரியராக விளங்கியும், விக்கிரமசிங்கபுரம் மாதவச் சிவஞான சுவாமிகள் திருக்கோயிலில் திருவாசகத் தொடர் உரை ஆற்றியும் வருகின்றார்கள்)

நலமிகு ஞானப்பண்ணையாம் திருவாவடுதுறையில் அன்பே குருவாய் எழுந்தருளியிருக்கும் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானத்தின் கமல பாதங்களைத் தெண்டனிட்டு 'அடைந்தவருக்கு அன்பர்' என்ற இக்கட்டுரையினைச் சமர்ப்பிக்கின்றேன்.

மாயிரு ஞாலமெல்லாம் வணங்கும் ஆவடுதுறை அரனாரை 'அடைந்தவர்க்கு அன்பர் ஆவார்' என்று போற்றி அகம் மகிழ்கிறார் திருநாவுக்கரையனார். எல்லா உயிர்களுக்கும் அருள் பாலிக்கும் ஈசன் தன்னைத் தொட்டுக் கொண்டே இருக்கும் அடியார்களிடத்து அன்பைப் பெருக்கி அவர்கள் ஆருயிரைக்காக்க வந்த இன்பப் பெருக்காக இருக்கிறான். தாயினும் நல்ல தலைவன் என்று அவனடியைப் போற்றிசைப்பார்கள் அருளாளர்கள். அவர்கள் திருவாக்கின் வழியே அவன் அன்பனாகி நின்ற அருளினைச் சிந்தனையில் வைப்பதே இக்கட்டுரையின் கருத்தாகும்.

உருவின்றி, குணமின்றி, அடையாளமின்றி, நின்மலமாய், ஏகமாய், நித்தமாகி, உலகிலுள்ள உயிர்க்கெல்லாம் உணர்வாகி, சலனம் அற்றதாய், வரையறைக்கு உட்படாததாய், ஆனந்த உருவாகி எளிதில் அடையப்படாததாய், உயிர்கள் அடைய வேண்டிய கதியாகி, சிறிதாகிப், பெரிதாய்த் திகழ்பவர் சிவபெருமான். இவ்வளவு பேரறிவும், பெரும் திறனும் பேரின்பமும் கொண்ட பெருமானிடம் மலச்சேர்க்கையும் அதனால் சிற்றறிவும், சிறு செயலும் கொண்ட உயிர்கள் அன்பு காட்டினால் அந்த அன்பு ஒருதலை அன்பாக ஆகி விடாதா? அப்பெருமான் இந்த உயிர்கள் செலுத்துகின்ற அன்பினை ஒரு பொருட்டாக எண்ணுவானோ? அல்லது அந்தத் திசைமுகனுக்கும் மாலுக்கும் அன்று ஒளித்தவாறு ஒளித்துக் கொள்வானா? மறையினால், அயனால், மாலினால் மனத்தினால், வாக்கினால் குறைவில்லாத அநுமானப் பிரமாணத்தாலும் கூற ஒண்ணாது ஆகி நின்ற இறைவனார் கமலபாதம் என்றல்லவா சாத்திரங்கள் பேசுகின்றன.

''நான்மறையவனும் நீயே ஆகின்றாய் என்பது அறிந்து நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன்'' என்றால் அந்த அன்பை அவன் ஏற்றுக் கொள்வானா? என்பது போன்ற வினாக்கள் எழுகின்றன. இதற்கு விடையாகத்தான் இடையறாத பேரன்பும், கண்ணீர் மழையாய்ப் பொழியும் விழிகளும், சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும், பதிகச் செஞ்சொல் பகரும் திருநாவும் உடைய நாவுக்கரசர் பெருமான் பதிலளிக்கிறார். எவ்வாறு?

உயிர்கள்பால் கொண்ட அருளின் காரணமாகவே அம்மையை ஒருபாகமாகக் கொண்டவன் சிவபெருமான்.

*''விரிகதிர் ஞாயிறல்லர் ..................................*
*அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக அருள் காரணத்தில் வருவார்''*
(திருமுறை 4, பொது)

மாமேருவை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கி தேவர்கள் பாற்கடலைக் கடைய, அது சமயம் அந்த நீலமார்ந்த கடலின் தோன்றிய கொடும் விடத்தினை உண்டு கண்டத்தே வைத்து அத்தேவர்களைக் காத்த சீலமுடையவன் சிவபெருமான். இது அவன் விண்ணவர் பால் கொண்ட அன்பினை விளக்குகிறது. அந்தணச் சிறுவனாகிய மார்க்கண்டேயன் அடைக்கலம் புக,

அவனைக் காப்பது காரணமாக அங்கு வந்த காலனைக் காய்ந்தான் கண்ணுதல் கடவுள். இது அவன் மண்ணவர் பால் கொண்ட அன்பினை வெளிப்படுத்துகிறது. இவற்றையெல்லாம் உணர்ந்த தாண்டக வேந்தர்,

*"மடந்தை பாகத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்*
*குடந்தையிற் குழகர் போலும் கொல்புலித் தோலர் போலும்*
*கடைந்த நஞ்சுண்பர் போலும் காலனைக் காய்வர் போலும்*
*அடைந்தவர்க் கன்பர் போலும் ஆவடுதுறை யனாரே"*

(4ஆம் திருமுறை - திருவாவடுதுறை) என்று திருவாவடுதுறை அரனார் அன்பருக்கு அன்பராகி நிற்பார் என்று பதிலளிக்கிறார்.

சிவனடியே சிந்திக்கக் கூடிய திருப்பெருகு சிவஞானம் பெற்ற திருஞான சம்பந்தப் பெருமானும் திருவாரூர் அண்ணலை 'அன்பன்' என்றே அழைக்கிறார். நம் சித்தமெல்லாம் தெளிந்து, துன்பமெலாம் தொலைந்து, இன்பமெலாம் பெருக அணி ஆரூர் அன்பன் மீது மலர் தூவி வழிபட நம்மை அழைக்கிறார்.

*"சித்தம் தெளிவீர்காள் .....*
*துன்பம் துடைப்பீர்காள், அன்பன் அணியாரூர்*
*நன்பொன் மலர்தூவ இன்பமாகுமே"*

(முதலாம் திருமுறை, திருவாரூர்)

மேலும்

*''வம்மின்னடி யீர்நாண்மல ரிட்டுத்தொழு துய்ய*
*உம்மன்பினோ டெம்மன்பு செய் தீசன் னுறை கோவில்*
*மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித்*
*திசையெங்கும் விம்மும் பொழில்*
*சூழ்தண்வயல் வீழிம்மிழ லையே"*

(1ஆம் திருமுறை, திருவீழிமிழலை)

என்று கூட்டமாக இணைந்து அவன்பால் அன்பு செய்து உய்வு பெற வழிவகுக்கிறார். நம்பிரான் திருமூலரும்

*'பொன்னை........ துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப் பின்னிக்*
*கிடந்த தென் பேரன்புதானே"*

(திருமந்திரம், பாடல் 271)

என்று மெய்யெல்லாம் வெண்ணீறு அணிந்த பெருமான்பால் தான் கொண்ட அன்பின் திறத்தை வெளிப்படுத்துகிறார். அது மட்டுமில்லாமல் நம்மையும் "எலும்பும் உருகும்படி சிவபிரான் பால் அன்பு செய்ம்மின். தைலதாரை போன்று தலையன்பு செய்ம்மின். இவ்வாறு அவன்பால் அன்பு செலுத்தினால் அந்தப் பெருந்தகை நந்தியும் (சிவபிரானும்) தன்னன்பை நம்பால் வெளிப்படுத்தி நிற்பானே என்பார்".

*'என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்*
*முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்*
*பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியும்*
*தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே'*

(திருமந்திரம் பாடல் 274)

என்பது அந்தப் பாடலாகும். ஏகனாகி இறைபணி நிற்கும் தன் அடியார்களுக்குச் சிவபிரான் உறவாகவும், நட்பாகவும் ஆகி அன்பருக்கு அன்பனான நிலையைத் தாயுமானவரும்,

*"சித்த நினைவும் செயும் செயலும் நீ என வாழ்*
*உத்த மருக்கான உறவே பராபரமே"*

(பராபரக்கண்ணி, 16) என்றும்

*"ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்*
*நாடும் பொருளான நட்பே பராபரமே"*

(பராபரக்கண்ணி, 17வது கண்ணி)

என்றும் விரித்துரைப்பர்.

பாதாளத்தே புகப்பாய்ந்து உயிர்களுக் கெல்லாம் பெரும்கேடு சூழாதவாறு பாயிரு கங்கையாளைப் படர்சடையில் வைத்திருக்கும் ஆவடுதுறை அண்ணல், கவுணியர் தனமாய் விளங்கும் திருஞான சம்பந்தருக்கு ஆயிரம் அம்பொன் கொடுத்ததைப்பாடி பரவிய அப்பர் பெருமான் தனக்குச் சிவபிரான் அன்போடு செய்த அருளிப்பாடுகளையெல்லாம் விரித்துரைக்கிறார். தன் பிறப்பினை அறுத்து, வினைக் கட்டுக்களையும் அறுத்து, ஏழ்நரகத்தில் விழுந்து விடாமல் காத்து சிவலோக போகத்தில் ஆழ்த்தினான் என்பார்.

*"தன்னைச் சரணென்று தாளடைந்தேன் தன்னடி அடைய*
*புன்னைப் பொழில்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ*
*என்னைப் பிறப்பறுத்து என்வினை கட்டறுத்து ஏழ் நரகத்து*
*என்னைக் கிடக்க லொட்டான் சிவலோகத் திருத்திடுமே"*

(4ம் திருமுறை, திருப்புகலூர்) என்பது அப்பாடலாகும்.

பாலும், தேனும், ஆரமுதும், கனியும், கருப்பஞ்சாறுமாய் கருவூர்த் தேவருக்குத் தித்தித்

தான் சிவபெருமான். அவன் கருவூர்த் தேவருக்கு அருளிய அன்பானது அவருடைய எலும்புகளை யெல்லாம் உருகச் செய்ததாம். அந்தப் பெருமானின் அன்பின் திறத்தை தீஞ்சொலால் சித்தரிக்கின்றார் கருவூர்த்தேவர்.

*"என்னையுன் பாத பங்கயம் பணிவித் தென்பெலாம் உருகநீ எளிவந்*
*துன்னைஎன் பால்வைத் தெங்கும் எஞ்ஞான்றும் ஒழிவற நிறைந்த ஒண் சுடரே*
*முன்னைஎன் பாசம் முழுவது மகல முகத்தலை அகத்தமர்ந் தெனக்கே*
*கன்னலும் பாலும் தேனும் ஆரமுதும் கனியுமாய் இனியை யாயினையே"*

(திருமுறை 9)

நீற்றறையைக் குளிர்வித்து, பாற்சோற்றில் கலந்த நஞ்சை அமுது ஆக்குவித்து, கொல்கரியைப் பணியவைத்து, கல்லையே தெப்பம் ஆக்கி கடலை நீந்தவைத்து உற்ற நோய் தீர்த்து, தனக்கு உறு துணையான ஆவடுதுறை அரனாரை

*"உற்ற நோய் தீர்ப்பர் போலும் உறுதுணையாவர் போலும்*
*செற்றவர் புரங்கள் மூன்றும் தீ எழச் செறுவர் போலும்*
*கற்றவர் பரவியேத்தக் கலந்துலந்து அலந்து பாடும்*
*அற்றவர்க்(கு) அன்பர் போலும், ஆவடு துறையனாரே"*

(4-ஆம் திருமுறை, திருவாவடுதுறை)

என்று தண்டமிழ் மாலை சாத்தி தலை வணங்குவார் தாண்டக வேந்தர். மெய்ந்நூல் கற்று அதனால் மெய்யறிவில் மேம்பட்டு, எல்லாவிதமான பற்றும் விட்டு எம்பெருமானைப் பற்றி காதலினால் கசிந்துருகிப் பாடும் அன்பருக்கு அன்பர் ஆவார் ஆவடுதுறையனார் என்பது அவர்தம் திருவாக்கு. 'அன்பே என் அன்பே' என்று அடியார்களெல்லாம் அழுது அரற்றி அவனடி வணங்கி நிற்பர். தற்போதம் கெட்டு நிற்பர். இவ்வாறான அன்பில்லாமல் செய்யப்படக் கூடிய தியானம், தீர்த்தமாடுதல், சிவார்ச்சனை முதலியவற்றால் எந்தப் பயனுமில்லை. அன்பு கலவாத சரியை ஆதியாய செயல்கள் 'நான்' எனும் அகந்தையை ஒழிக்காது. எனவே அவை பயனற்றவையாகும்.

*''அன்பேயென் னன்பேயென் றன்பாலமுதரற்றி*
*யன்பேயன் பாக வறிவழியும் - அன்பன்றி*
*தீர்த்தந்தி யானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை*
*சாற்றும் பழமன்றே தான்''*

(திருக்களிற்றுப்பாடியார் - பாடல் 55)

அரனுக்கு அன்பிலாது செய்யும் செயல்கள் யாவும், ஓடும் நீரினை ஓட்டைக் குடத்தில் நிரப்பி மூடி வைத்திட்ட மூர்க்கர்களின் செயல்கள் போலாகும் என்பார் அப்பர் பெருமான்.

குருவுக்கே உரிய செங்கழுநீர் மாலையைச் சிறப்பாக அணிந்து, அந்தணன் ஆகிவந்து அழகிய சேவடி காட்டி, அற்புதமான அமுத தாரைகளை எலும்புகளின் துளைகள் தோறும் ஏற்றி குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த குருபரனாகிய சிவபிரானை 'அன்பருக்கு அன்பனே' என்று அழைப்பார் மாணிக்கவாசகப்பெருமான். முதிர்ந்த அன்பினால் அன்பே வடிவாய் நின்ற அன்பர்களுக்கு அவர்களது அன்பின் அளவைவிட பன்மடங்கு அன்பை அவர்கள்பால் பொழிபவனே என்று வணங்குகிறார்.

*"தீர்ந்த அன் பாய அன்பர்க் கவரினும் அன்ப போற்றி.....*
*ஆர்ந்தநின் பாதம் நாயேற்கருளிட வேண்டும் போற்றி'*

- (திருவாசகம், திருச்சதகம் 69)

தன் தோழனான சுந்தரர் பால் கொண்ட அன்பால் திருக்கச்சூர் ஆலக்கோயில் அம்மான் உச்சிப்பொழுதில் வீடு வீடாகச் சென்று சோறு இரந்து வந்து 'துன்பம் தரும் பசி தீர அருந்துவீர்' என்றளித்தார்.

பெருமானின் அன்பு வெள்ளத்தில் மூழ்கிய ஆரூரரும் 'நீ இவ்வாறு சுடும்வெயிலில் பிச்சை எடுத்து வந்ததை உன் அடியார் கண்டால் வருந்தாரோ? எனக்காக என்ன வேலை செய்தாய்?' என்று நெஞ்சம் உருகி நிற்பார்.

*"கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்*
*கழலுஞ் சிலம்புங் கலிக்கப் பலிக்கென்*
*றுச்சம் போதா ஊரூர் திரியக்*
*கண்டால் அடியார் உருகாரே*
*............ ஆலக்கோயில் அம்மானே"*

(திருமுறை 7, திருக்கச்சூர் ஆலக்கோயில்)

'உன்னை நினைவார் அவரை நினை கண்டாய்' என்றும் பாடி மகிழ்ந்து நிற்பார். பசு ஏறி வரும் பரமன் தன்னை அடைந்தவர்பால் அன்புடையவன் என்பதனை

*'விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை*
*அடையில் அன்புடையானை........... சார்வென்னே'*
(திருமுறை 7, வன்பார்த்தான் பனங்காட்டூர்)
என்று இன்னிசை வண்டமிழ் மாலையால் விரித் தோதுவார் நாவலூர் கோன். அடியார்களின் மும்மலங்களையும் அழிக்கக்கூடிய படைகளாக மழுவும், சூலமும் கையில் கொண்ட மாசிலாமணி ஈசர் தோத்திரம் பலவும் சொல்லி தொழுது எழுந்து ஆடிப்பாடி அன்பினால் அழும் அன்பருக்கு அன்பராவார் என்பார் அன்பு செறி கடலாகிய அப்பர் பெருமான். அரியவற்றுள் எல்லாம் அரியவனான பெருமான் எளியனாகி வந்து தன்னை அன்பால் ஆர்த்ததை எண்ணி

*"அத்தாவுன் னடியேனை யன்பா லார்த்தாய்*
*அருள் நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்"*
என்று அகம் மகிழ்ந்து நிற்கிறார் வாக்கின் மன்னவனார். கங்கையைச் சடையில் அணிந்த பெருமான் தன்னை விரும்புவாருக்கு எளியனாகி, உள்ளத்தின் உள்ளே உருகி நின்று உகப்பவர்களுக்கு அன்பரும் ஆவார், என்று திருவாலங்காட்டுப் பதிகத்திலும்,

*"விரும்புவார்க்கு எளியர் போலும் உள்ளுளே உருகி நின்றங்கு*
*உகப்பவர்க்கு அன்பர் போலும் ......... ஆலங்காட்டு அடிகளாரே"*
எனப் பாடுவார்.

தருமதேவதையின் அன்பிற்குக் கட்டுண்டு அத்தேவதையை விடை ஆக்கி அதில் ஆரோ கணித்த ஆவடுதுறை அண்ணல் அடைபவர் இடர்களைத் தீர்ப்பவர். வக்கராசுரன் உயிரை வவ்வ சக்கரப் படையை வேண்டி நின்ற மாலுக்கு அதனை ஈந்தவர் அந்த கோமுத்தியீசுவரன். பஞ்சவரில் பார்த்தனுக்காக காட்டில் ஒரு பன்றியின் பின் சென்று, அவனிடம் வில்லடியும் பட்டு வேடுவனாய் நின்றான் பரமன். இது அவன் பார்த்தன் பால் கொண்ட அன்பினால் விளைந்ததன்றோ.

இரசகுளிகை இரும்பைப் பொன்னாக ஆக்கியது போல் கண்ணப்ப நாயனாரின் மலம் மூன்றையும் கெடுத்து அவரை அன்பு பிழம்பாக்கியவர் திருக்காளத்திநாதன். அவன் கண்ணப்பரின் அன்பில் கசிந்து நின்றதைத் "திருக்கண்ணப்ப தேவர் திருமறத்துள்" காணலாம். ஒரு வேடுவன் நாயோடும் புகுந்து செருப்படியால் பெருமான் மேனியில் உள்ள மலர், பத்திரம் நீக்கி வாயில் உள்ள புனலை மேனியில் ஆட்டி, இறைச்சியை நிவேதனமாக்கி, செய்த பூசையைக் கண்டு மனம் நொந்து துயில்கிறார் சிவகோசாரியார். அவர் கனவில் தோன்றிய திருக்காளத்தி அப்பன்,

"அந்த வேடன் சிறந்த மாதவன். அவன் செருப்படி எனக்கு விருப்பமானது. அவன் வாய் தூய பொற்கலசம். அந்த எச்சில் புனல் எனக்குக் கங்கையின் புனலே. பொற் குடத்தில் இடப்படும் மாமணி அவனது பற்களே. தர்ப்பையினும் இனிது அவனது மீசையின் புன்மயிர். அவன் உகந்து இட்ட இறைச்சி நன்மாதவர்கள் இட்ட நெய்பால் அவியுணவாகும். உனக்கு நாளை அவன் அன்பினைக் காட்டுவன்" என்றார். கண்ணப்பன் ஒப்பது ஓர் அன்பு இன்மை கண்ட நாம் இங்கு காளத்தி நாதன் கண்ணப்பன்பால் காட்டிய அன்பினைக் கண்டு கசிந்துருகுகிறோம்.

அன்பினால் உருகி அழுது, என்பும் உருக இராப்பகல் ஏத்தி நின்ற திருமூலரும்

*"அன்பினுள் ளான்புறத் தானுட லாயுள்ளான்*
*முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்*
*அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்*
*அன்பினுள் ளார்க்கே அணை துணையாமே"*
(திருமந்திரம் 279)
என்று அன்பே சிவமாய், குருவே சிவமாய், அன்புடையாருக்கு உற்ற துணையாய் அப்பெரு மான் அமர்ந்திருப்பதை ஆராதிப்பார்.

அன்பருடைய அன்புக்குத் தான் தாழும் தன்மையுடையவன் சங்கரன். இதனைக் குன்றத்தூர் கோமானாகிய சேக்கிழார் பெருமான் அமர்நீதி நாயனார் புராணத்தில் விளக்குகிறார். தராசின் ஒரு தட்டினில் மறையவரின் கிழிந்த கோவணம் இருக்க, மற்றொரு தட்டினில் அடியார்களுக்கு அளிப்பதற் காக வைக்கப்பட்ட எல்லாக் கோவணங்களும், மணியும், பொன்னும், நல் ஆடைகளும் எல்லாவற் றையும் பொதிகளாக அநேக கோடிகள் வைக்கிறார் அமர்நீதி. அமர்நீதிநாயனாரின் தட்டுக்குப் பரம் பொருளானார் தட்டு பணிந்தது என்பார்.

*''முட்டி லன்பர்த மன்பிடுந் தட்டுக்கு முதல்வர்*
*மட்டு நின்றதட் டருளோடுந் தாழ்வுறும் வழக்கால்*
*பட்டொடுந்துகி லநேககோ டிகளிடும் பத்தர்*
*தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு''*

(பெரியபுராணம், அமர்நீதி நாயனார் புராணம், பாடல் 536)

எலும்பும், ஊனும் நெகும்படி அகத்தே எழுந்து அன்பின் வழி வந்த ஆரமுதாம் பெரும்பற்ற புலியூரானை நம்பியாண்டார் நம்பியும் சரியா, கிரியா, யோகம் முதலியவை முற்றுவித்த நல்தவத்தவர்களுக்கு அவன் அன்பனாகின்றான் என்பார்.

*''தவனைத் தவத்தவர்க்கு அன்பினைத் ......*
*பண்டை வல்வினை பற்றறவே''*

(திருமுறை 11, கோயில் திருப்பண்ணியர் விருத்தம்)

திருவாவடுதுறை ஆதீனத்துப் பண்டார சாத்திரங்களுள் ஒன்றான பஞ்சாக்கரப் பஃறொடையில் அருள்திரு பேரூர் வேலப்பதேசிகர் தமது ஞானாசிரியரான பத்தாவது குருமூர்த்திகள் தமக்கு அத்துவித ஆனந்த அகண்ட பரிபூரண வாழ்வளித்த செய்தியினைத் தெரிவிக்கிறார். அதில்

*''நீடின்பம் தரும் அன்பை யென்சொல்வேன்தான்''*

(பஞ்சாக்கரப்பஃறொடை - கண்ணி 42)

என்று சிவமேயான தன் குருமூர்த்தி தன்னிடம் காட்டிய அன்பின் நிலையை அறிவிக்கிறார்.

ஆக சிவபெருமான் தங்களிடம் காட்டிய அன்பினை நினைந்து நினைந்து உருகிய அருளாளர்கள் ''கனிய நினைவொடு நாள்தொறும் காதல் செயும் அடியாருக்கு இனியன்'', ''அடியார்களின் மனக்கருத்தினை முடித்திடும் குன்றம்'', ''அடியாருக்கு அருள் சுரந்திடும் அற்புதக் கூத்தன்'', ''தன்னடைந்தார்க்கு இன்பம் தருபவன்'' என்றெல்லாம் அன்பொடு துதிப்பார்கள். அவ்வழியே நாமும் அடைந்தவர்க்கு அன்பனான திருவாவடுதுறை அண்ணலைப் போற்றிப் பணிந்து பரவி பெருவாழ்வு பெறுவோமாக.



அருள்திரு சண்டேசுவரர்



# பேரருள் வினவிய செந்தமிழ்

- ச. கமலா, எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்., திருவாவடுதுறை.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீன மேனிலைப்பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி வருகின்றார். திருவாவடுதுறையைத் தமது பிறப்பிடமாகக் கொண்ட இவர், திருமுறை ஓதும் மரபினில் தோன்றியவர். திருமுறைகளைப் பண்ணுடன் பாடும் ஆற்றல் கொண்டவர். ஆதீன சைவத்திருமுறை நேர்முகப் பயிற்சி மாணவராக விளங்குபவர்)

உலகில் தோன்றிய உயிர்கள் யாவும் புகழ்பட வாழ்தலே அவை பெறும் பேறாகும். அவ்வாறு வாழ்வதற்கு உறுதுணையாய் அமையும் அனைத்து உயர் பண்புகளையும் அளிக்க வல்லது பக்தி நெறி என்றால் அது மிகையன்று. அப்பக்தி நெறியின்பால் நம்மை ஆற்றுப்படுத்துவதில் பெரும்பங்கு வகிப்பன ஆலயங்கள், ஆதீனங்கள், பக்தி இலக்கியங்கள், திருத்தலங்கள், தல புராணங்கள், அருளாளர்களின் வாழ்வியல் நெறிகள் போல்வன. அவற்றுள் சிவம் பெருக்கும் திருத் தலமாகவும், தமிழ் வளர்க்கும் திருக்கோயிலாகவும் விளங்குவது திருவாவடுதுறை.

**அலைபுனல் ஆவடுதுறை :**

பசு வடிவம் பெற்ற அம்பிகை இங்கே வழிபட்டுத் தன் வடிவம் மாறி இறைவனால் அணைக்கப்பெற்றாள். அதனால் இத்தலத்துக்கு ஆவடுதுறை என்ற பெயர் வந்தது. ஆவின் வடிவத்தை நீக்கி அருளியமையால் இறைவனுக்கு கோமுத்தீஸ்வரர் என்றும், ஆ உருவில் தன் மடி வழியே அன்பென்னும் பாலைச்சுரந்து இறைவனை வழிபட்டமையால் இறைவிக்கு ஒப்பிலா முலையம்மை என்றும் திருநாமம் அமைந்துள்ளது. அம்பிகையை அணைத்தெழுந்த காரணத்தினால் இறைவனுக்கு அணைத்தெழுந்த நாயகர் என்ற திருநாமமும் உண்டு. இத்தலம் மிகவும் புனித முடையதாகும். இங்குப் பிறந்த விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள், மனிதர்கள் ஆகிய யாவும் சிவசொரூபமாகிய முத்தி அடைகின்றன. இவற்றைப் பார்த்த தேவர்கள் தாங்களும் இத்தலத்தில் வந்து பிறக்க விரும்புகின்றனர் என்பதால் இதன் பெருமையை யாரே கூற இயலும் என்று திருவாவடுதுறைப் புராண ஆசிரியர் வியக்கின்றார்.

**நலமிகு ஞானசம்பந்தர் :**

வேதநெறி தழைத்தோங்கவும், மிகுசைவத் துறை விளங்கவும், பூதபரம்பரைப் பொலியவும், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பவும், தொண்டர் மனம் களி சிறப்பத் தூய திருநீற்று நெறி எண்டிசையும் தனி நடப்பவும், அண்டர்குலம் அதிசயிப்பவும், அந்தணர் ஆகுதி பெருகவும், திசையனைத்தின் பெருமை எலாம் தென்திசையே என்றேறிடவும், அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறை வெல்லவும், இசை முழுதும் மெய்யறிவு பொருந்தும் நிலை பெருகவும், நாளுடைய நிகழ்கால எதிர்கால நவை நீங்கவும், திருவாதிரை நாள் திசை விளக்கம் அடையவும், தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கவும் ஆளுடைய பிள்ளையார் திரு அவதாரம் செய்தார் என்று சேக்கிழாரும்,

*புண்ணி யந்தலை யெடுப்பநான்*
*மறைக்கடல் பொங்கியார்த் தெழச்சைவ*
*மண்ணி னிற்தழைத் தோங்கவோர்*
*அருட்திரு மைந்தன்வந் துதித்தின்பத்*
*தண்ணி லாக்கொழுந் தெனப்பிறந்*
*தரும்பெறற் தந்தைதாய் மகிழ்வெய்த .....*

என்று சாத்திரம் சாமிநாத முனிவரும் சிவநெறியாகிய திருநெறியையே ஒருநெறியாக மனதுள் வைத்துணர் ஞானசம்பந்தரின் திரு அவதாரத்தைப் போற்றுகின்றனர்.

**திருஞானசம்பந்தர் திருவாவடுதுறை அடைதல் :**

நம் பாசத்துன்பங்களை நீக்குவதற்கென்றே அவதரித்த ஞானச் செம்மலாகிய திருஞான சம்பந்தர் திருவாவடுதுறையை அடைந்தார்.

*நம்ம லந்துயர் தீர்க்கவந் தருளிய ஞானச்*
*செம்ம லார்திரு ஆவடு துறையினைச் சேர்ந்தார்.*
*அவரை திருவாவடுதுறைவாழ் தொண்டர்கள் மிக்குப்பெருகும் அன்புடன் வரவேற்றனர்.*

*'ஆவடு தண்துறை மேவுமெய் யன்பர்கள் அனைவோரும்*
*தேவி தனம்பொழி பால்நுகர் மைந்தர்முன் சென்றெய்தி*
*ஆவ லொடுந்தொழ முன்னவ ருந்தொழு தவரோடும்*
*பூவணி மேவுநல் வீதிபணிந்து புறஞ்சூழ்ந்தே ...'*

*"என்று முயிர்க்குயி ராய்வளர் மாசிலா மணிஈசர்*
*முன்திக மூன்பொடு கண்டு பணிந்தனர் முதிர்செல்வர்"*

**சிவபாத இருதயரின் சீர்மை :**

சிவன் திருவடிகளை எப்போதும் கொண்ட மனத்தை உடையவர். சீர்காழி என்ற தலத்தில் அந்தணர்களின் குடியில் வந்த முதன்மை உடையவர். வேதங்களில் கூறிய வண்ணம் ஒழுகும் ஒழுக்கத்தை உடையவர். கவுணியர் கோத்திரம் மேன்மை அடையும்படியும் தன்னலம் கருதித் தாம்வாழ எண்ணாது, உலகம் வாழும் பொருட்டுத் தவம் செய்வது என்பதனைச் செயற்கைப் பழக்கத்தாலன்றித் தம் இயல்பாக உடையவராகித் திருஞான சம்பந்தரைப் பெறும் பேறு பெற்றவர்.

**புகலியாரிடம் புகன்ற தாதை :**

திருஞான சம்பந்தர் திருவாவடுதுறையில் தங்கி இருக்கும் காலத்தில் வேள்வி செய்வதற்குரிய காலம் வந்துசேரப் பிள்ளையாரிடம் தந்தையார் விடைபெற்றுச் சீர்காழிக்குச் செல்லும் பொருட்டு வேள்விக்குரிய அப்பொருளைப் பெறுதல் வேண்டும் என்று கூறினார்.

*"மேவி அங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்*
*காவ தாகிய காலம்வந் தணைவுற அணைந்து*
*தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்*
*போவ தற்கரும் பொருள்பெற எதிர்நின்று புகன்றார்"*

**பேரருள் வினவிய செந்தமிழின் திறம் :**

தந்தையார் பொருள் வேண்டவும், பிள்ளையார் "அந்தமில் பொருளாவன எந்தையா ரடித்தலங்களே'' என்று துணிந்து, திருக் கோயிலுக்குச் சென்று இறைவர் திருமுன்பு நின்று, ''நீணிதி வேண்டினார்க் கீவதொன்று மற்றிலேன் உன்னடியல்ல தொன்றறியேன்'' என்று பேரருள் வினவிய கருத்துடைய ''இடரினும் தளரினும்'' என்று தொடங்கும் பதிகத்தைக் காந்தார பஞ்சமம் பண்ணில் நாலடிமேல் வைப்பாக,

*"இதுவோஎமை ஆளுமாறு ஈவதொன்று எமக்கு இல்லையேல்*
*அதுவோஉனது இன்னருள் ஆவடுதுறை அரனே"*

என்னும் மகுடமுடையதாகப் பாடி அருளினார்.

இப்பதிகத்தில் உயிரானது எப்பொழுதும், எந்நிலையிலும் இறைவனின் திருவடியையே நாடுதல் வேண்டும். அவ்வாறு நாடினால் வினைகள் நீங்கி நலமெலாம் பெறலாம் என்கிறார்.

துறைசையில் சம்பந்தர் பாடிய பதிகத்தில் கேளாமல் கேட்டது இறைவனது பேரருளையே. ஆகவே தான் பொன்னாகிய பொருள் கிடைத்தமைக்கு ஏதுவாய் இருந்த சம்பந்தரது இத்திருப் பதிகத்தை பொருள் வினவிய செந்தமிழ் என்று தெய்வப் புலவர் சேக்கிழார் குறிப்பிட்டார் போலும்!

*"நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்*
*இச்சை யேபுரிந் தருளிய இறைவர்இன் அருளால்*
*அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகல் பீடத்து*
*உச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று"*

நெஞ்சுளே புகுந்து நின்று நிகழ்தரு நினைவினன் ஆகி பக்தர்களுக்கு அருள்செய்து பயின்ற பரமனல்லவா? நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம்பந்தருக்கு அருளாதிருப்பாரா? விலையுடை அருந்தமிழ் மாலை பாடியதும் விரைந்து பொன்னுல வாக்கிழி பெற அருள் செய்தார்.

இன்றும் உலகியலில் இப்பதிகத்தை மனம் ஒன்றி முழு நம்பிக்கையோடு ஓதுபவர்க்குத் தேவையான பொருள் கிடைத்தலும், பொருளின் மையால் ஏற்படும் இடர் நீங்குதலும் அனுபவப் பூர்வமான உண்மை.

**உலவாக்கிழியின் உயர்வு :**

இறைவன் இன்னருளால் சிறப்பை அருளும் சிவபூதம் முன்விரைந்து பசும்பொன் ஆயிரம் கொண்ட பொற்கிழியினைப் பலிபீடத்தின்மேல் வைத்து முன் அணைந்து நின்று, "இக்கிழி பொன்

உலவாக்கிழி. உமக்கு இறைவர் அருளியது'' என்றுரைத்தது. பிள்ளையார் அது கேட்டுத் தொழுது, அக்கிழியினை எடுத்துத் தந்தையார்கை கொடுத்தார்.

*"சிங்கவண் பீடத் துச்சியின் மீது சிறப்போடும்*
*பொங்குல வாக்கிழி வைத்துமக் கெங்கள்தம் பொன்தியாகர்*
*இங்கருள் செய்தனர் கொள்கவென் றோர்விர லாற்சுட்டிப்*
*பங்கமில் பூத குரைத்திட வேற்றனர் பாலுண்டார்"*

மேலும், நித்தனார் அருளிய இக்கிழி கொண்டு இறைவரை வழிபடும் நல்வேள்வியை நீரும் சீர்காழி மறையவர் அனைவரும் செய்யவும் இது குறைவிலாது மிகுந்து வளரும் என்று கூறினார்.

*''ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி*
*நாத னாரைமுன் னாகவே புரியநல் வேள்வி*
*தீது நீங்கநீர் செய்யவும் திருக்கழு மலத்து*
*வேத வேதியர் அனைவரும் செய்யவும் மிகுமால்"*
எனச் சேக்கிழார் விளக்குகின்றார்.

பொன்னுலவாக்கிழி அருளியமையால் இத்தலத்து இறைவர்க்குச் 'செம்பொன்தியாகர்' என்ற திருநாமமும் உண்டு.

**பலிபீடத்தில் வைத்த பான்மை :**

மனதில் உள்ள தீய, புற எண்ணங்களையும், யான், எனது என்னும் தன்னலத்தையும் பலி பீடத்தில் பலிகொடுத்துத் தூய மனதுடன் ஆலயத்துள் புகவேண்டும் என்பதே பலிபீடம் உணர்த்தும் தத்துவம். உலக மக்களைத் துன்பத்தினின்று காக்க, கலியை வாராமே தடுக்க கழுமல வளநகர் வேதியர் அனைவரும் கற்றாங்கு எரி ஓம்புதற்காகத் தருமத்தின் தலைநின்ற சிவபாத இருதயர் வேண்டியமையால் உலவாக்கிழி பலி பீடத்தில் வைக்கப் பெற்றது. ஆம்! பொது நலத்திற்காக வழங்கப்பெறும் பொருளை தன்னலம் நீக்கும் இடத்திலிருந்து பெற்றமை சாலப் பொருந்தும் அல்லவா! நித்தனார் அருளியமையால் நிரந்தரமாகிய அப்பொற்கிழி நாற்றிசை, எண்திக்கு, விரிதல், குவிதல், வட்டம், சதுரம் போல்வனவற்றின் உருவமாகிய பத்திரலிங்கமான பலிபீடத்தின்மேல் வைத்தமையால் இறைவன் தந்த அருள் காக்கவும், வகுக்கவும் காரியமாக்கிடவும், வாய்ப்பாக அமைந்தது. திருவீழிமிழலையில் ஈசனார் ஊர்வாழ் மக்களின் பஞ்சம் போக்குதற் பொருட்டு தமிழோடு இசைகேட்கும் இச்சையால் சம்பந்தருக்கும், அப்பருக்கும் நித்தம் பலிபீடத்தின்மேல் படிக்காசு வைத்தருளிய பாங்கும், மக்களின் வாழ்வியலுக்கு வழிகாட்டியாய் அமைந்து வாழ்ந்து வரலாறு படைத்த நாயன்மார்களின் வரலாற்றை வடிவமைத்து வாழும் சிவத் தொண்டர்களாம் ஓதுவாமூர்த்திகளை சிலையாக்கி சிவமாக்கிச் சோழர்கலை பாணிக்கு சொல்லும் ஓர் ஆதாரமாகத் திகழும் தாராசுரம் கோயிலில் பலிபீடம் பண்ணிசைப் படிக் கட்டாக அமைந்த அழகும் சிந்தித்தற்குரியன.

**ஆன்றோர்கள் வாக்கில் அருள் உலவாக்கிழி :**

சம்பந்தருக்குப்பின் திருவாவடுதுறை வந்த அப்பர் பெருமான் இறைவன் இன்னருளால் நிகழ்ந்த இந்நிகழ்வினைத் தமது பதிகத்தில் முதல்பாட்டின் முத்தாய்ப்பாக வைத்துப் பேசியது, அவர் அந்நிகழ்ச்சியை எவ்வளவு சிறப்புடையதாகக் கருதினார் என்பதைப் புலப்படுத்தும்.

*"காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூர்க் கம்பொன்*
*ஆயிரங் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே"*
- அப்பர் திருநேரிசை.

*"திருவா வடுதுறையிற் செம்பொற் கிழியொன்*
*றருளாலே பெற்றருளு மையன்"*
- ஆளுடையபிள்ளை திருத்தொகை.

*"மாயிரு ஞாலத்து மன்னா வடுதுறைபுக்*
*காயிரஞ் செம்பொ னதுகொண்டும்"*
- ஆளுடையபிள்ளை திருவுலாமாலை.

*பூவிடு மதுவிற் பொறிவண் டுழலும்*
*ஆவடு துறையிற் பொன்னா யிரமே*
- ஆளுடையபிள்ளை மும்மணிக்கோவை.

*.... திருவாவடு துறையிற் றிகழும்*
*எந்தையைப் பாடலிசைத்துத் தொலையா நிதியமெய்தித்*

*தந்தையைத் தீத்தொழில் மூட்டிய கோன்*
(தீத்தொழில் - சிவவேள்வி; தொலையா நிதியம் - உலவாக்கிழி)
- ஆளுடையபிள்ளை திருவந்தாதி.

*ஓடஞ் சிவிகை யுலவாக் கிழியடைக்கப்*
*பாடல் பனைதாளம் பாலைநெய்தல்*

- திருக்களிற்றுப்படியார்.

*வண்டார் செருந்தி தியாகேசர்*
*நல்கு உலவாக் கிழிபோல்*
*தண்டாது அவிழ்பொன் தரும்அரசூரர்*

- திருவாவடுதுறைக்கோவை.

*"துறைசையுள் மேவிய சொர்ணத்*
*தியாகர்முன் தோணிபுரத்து*
*இறையவ னார்சொன்ன செந்தமிழ்க்*
*காக இனிது அளித்த*
*நிறைஉல வாக்கிழிச் செம்பொன்*
*தனமது நேரிழையாய்*
*குறையினும் உன்பொன் தனம்ஒரு*
*நாளும் குறைவிலதே"*

- திருவாவடுதுறைக்கோவை.

*பொருள் நேர்ந்த சிந்தை யவர்தொழ*
*புகழ்செல்வம் மல்குபொற் கோயிலுள்*
*அருள்நேர்ந் தமர்திரு வாவடு*
*துறையாண்ட ஆண்டகை யம்மானே*

- சேந்தனார் திருவிசைப்பா.

*"உலவாக் கிழிசம் பந்தர்பெற*
*உதவும் பூதர் தமைத் தரிசித்து*
*இலகும் புகழுற் சவகாலத்*
*தினிய புழுகு நறுஞ்சாந்தம்*
*மலர்மா லிகைதூ பந்தீபம்*
*வழங்கி வடைகள் நிவேதனஞ் செய்து*
*அலர்பூங் கமலத் தாள்தொ ழுவோர்க்கு*
*அருநோய் துன்பம் அடையாவால்"*

- திருவாவடுதுறைப் புராணம்.

ஆன்மீக நாட்டம் மிக்கிருந்த ஏழாம் நூற்றாண்டில் நிகழ்ந்த இவ்வற்புத நிகழ்வு, அறிவியல் ஆக்கம் மிக்கிருக்கும் இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டிலும் இனிதே கொண்டாடப் பெற்று வருதல் கண்கூடு. அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனுறை அருள்மிகு மாசிலாமணியீசர் திருவருளாலும், **சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களின்** குருவருளாலும் இன்றும் இவ்வரலாறு இவ்வாலயத்தில் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப் பெற்று வருகிறது. இனிவரும் காலமும் கண்டு களிப்புறும். அவ்விழா நாளில் இந்நிகழ்வினைக் கொண்டாடும் முகத்தான் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்கள் திருமுறை இசைவாணருக்கு விருதும், பொற்கிழியும் வழங்கிச் சிறப்பித்தருளி வருகின்றார்கள்.

அவ்விழா நாளன்று துறைசை முழுதுமே விழாப்பொலிவு மிகும் வகையில் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்கள் ஆலயத்திற்கு எழுந்தருளி முறைப்படி வழிபாடு ஆற்றுவார்கள். பஞ்சமூர்த்திகள் உடன்வர பாலறாவாயர் பல்லக்கில் எழுந்தருள்வார். ஓதுவாமூர்த்திகள் ஒருங்கிணைந்து இப்பதிகத்தைப் பண்ணுடன் பாடுங்கால் சிந்தை நைந்து, செவி குளிர்ந்து கண் களிப்புற ஆலயம் முழுதும் அருள்மணம் கமழும். அந்நிலையில் ஆலயமணி ஓசை 'ஓம்' என்றொலிக்க மங்கல இசை முழங்க மாசிலாமணியீசருக்கும் ஆளுடைய பிள்ளைக்கும் சிவாசாரியர் தீபம் காட்டியதும் அண்டர்குலம் வியக்க ஆவடுதுறைசேர் ஆன்மாக்களனைத்தும் ''பெற்றனம் பெரும்பேறு'' என்று பெம்மானைத் தொழும். அப்பொழுது தொந்தி மிகுத்து, இருதாள் குறுகி, சுழல் விழியோடு செஞ்சடிலப் பூதம் பொற்கிழி ஏந்திப் புறப்பட்டுவர, வெடியோசை இடியென முழங்க, திருச்சின்னம் 'திருச்சிற்றம்பலம்' என்று ஒலிக்க 'அரோஹரா' என்ற முழக்கம் ஆங்காங்கே எழ, பூ மழை பொழிய புறப்பட்டு வந்தபூதம் பொற்கிழியைப் பலிபீடத்தில் வைக்க ஆவடுதுறையார் அருளும் பொன்உலவாக் கிழியை ஆளுடையபிள்ளையார் பெறும் அற்புதக் காட்சி காண மனிதப்பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே!.

'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை' ஆதலால் பொருள் வேண்டுவாரும், இறை அருள் வேண்டுவாரும் இப்பதிகத்தை நாளும் ஓதி இறையருள் பெற்று உய்வோமாக!

*'முத்திதரு தலமாகும் ஆவ டுதண்*
*துறைமேவு முதல்வன் சீர்த்திப்*
*பத்தியொடும் கேட்டதனாற் சன்மசா*
*பல்லியம் பலிக்கப் பெற்றோம்'.*

திருச்சிற்றம்பலம்.



# திருவே! என் செல்வமே!

- மகாவித்துவான் மா. அமிர்தலிங்கம், காஞ்சிபுரம்.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் "சித்தாந்த வித்தியாநிதி", "சித்தாந்தச் செம்மணி" ஆகிய பட்டங்களும், தொண்டை மண்டல ஆதீனத்தில் 'மகாவித்துவான்' பட்டமும், சைவ சித்தாந்தப் பெருமன்றத்தில் "சித்தாந்த சரபம்" பட்டமும் பெற்றுள்ளார்கள். சிறு நூல்கள், கட்டுரைகள் எனப் பல படைப்புகளைப் படைத்தளித்துள்ளார்கள்)

நமக்குத் திருவும் செல்வமுமாகத் திகழ்வன திருமுறைகள். திருமுறைகள் ஞானசம்பந்தம் பெற்ற நாவுக்கரசர்களால் சுந்தரத் தமிழில் பாடப்பெற்ற மாணிக்க மொழிகள். திருமுறையாசிரியர்களாகிய நால்வர் பெருமக்களில் நாவன்மையால் பெயர் பெற்றவர் நாவுக்கரசர். அப்பெயரும் இறைவனே அளித்தது. நாவுக்கு அரசர் தாண்டகம் என்னும் பாவுக்கும் அரசரானதால் ''தாண்டக வேந்தர்'' என்றும் பெயர் பெற்றார்.

'தாண்டகம்' என்ற பாவகை நாவுக்கரசர் தமிழுக்கு-தமிழ் இலக்கியத்திற்குத் தந்த பெருங் கொடை. நாவுக்கரசரைத் தமிழ்மொழித் தலைவர் என்று போற்றுவார் சேக்கிழார். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற குறிக்கோள் மொழியை அளித்தவர் நாவுக்கரசர். நாவுக்கரசரைத் தெரியாத வருக்கும் அந்தக் குறிக்கோள் மொழி தெரியும். "சொற்குறுதிக்கு அப்பர்'' என்று பெயர் பெற்றவர் நாவுக்கரசர். "நாமார்க்கும் குடியல்லோம்" என்பது அவருடைய உரிமைக்குரல். அவருடைய பாடல்களில் தாண்டகம் பெருமித நடை உடையது; உருக்கச் சிறப்பும் உடையது.

அப்பர் பெருமானார் திருவாவடுதுறைக்கு வருகிறார். தொடக்கப் பாடலிலேயே "கழுமல ஊரர்க்கு அம்பொன் ஆயிரம் கொடுப்பர் போலும்" என்று இறைவன் இயலிசைத் தலைவனார்க்கு அம்பொன் ஆயிரம் அளித்ததனைப் போற்று கின்றார். தொடர்ந்து திருத்தாண்டகமும் பாடுகின் றார். முதல் திருத்தாண்டகம் "ஆவடுதண் துறையுள் மேய அடிநாயேன் அரன்அடியே அடைந்து உய்ந்தேன்'' என்ற மகுடம் உடையது. அடுத்த திருத்தாண்டகம் "ஆவடுதண்டுறை உறையும் அமரர் ஏறே" என்னும் மகுடம் உடையது.

குருவருளாலும், திருவருளாலும் இரண்டாம் திருத்தாண்டகத்தின் சொற்பொருள் நீர்மைகளை அறிந்து கும்பிடும் சிவபுண்ணியம் கைகூடியுள்ளது. "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்ற பெருமிதத்தில் ஒரு மிகச்சிறிய கூறு(லவலேசம்) அடியேனுக்கும் வாய்த்துள்ளது.

பதிகத்தின் முதற்பாடல் ''திருவேஎன் செல்வமே" என்று தொடங்குவது. தொடக்கத் திலேயே நம்மைச் சிந்திக்க வைக்கின்றது. 'திரு' என்றால் செல்வம் என்று பொருள் சொல்லலாம். செல்வத்துக்குரியவள் திருமகள் தானே! ஆனால் செல்வம் என்றால் மேன்மை என்றோ தெய்வத்தன்மை என்றோ சொல்ல முடியாது. திருவாளர் என்று ஒருவர் பெயருக்கு முன்னால் கூறினால் அது செல்வத்தை மட்டும் குறிக்காது. மேலும் திருவருள், திருவாசகம், திருக்கோயில் என்னும் இடங்களில், "திரு" தெய்வத்தன்மை என்ற பொருளைத் தருகிறது. இங்ஙனம் அடிகள் தொடக்கத்திலேயே, "திருவேறு-செல்வம் வேறு" என்ற தெளிவினைத் தருகின்றார்.

இறைவனைத் 'தேனே' என்றார்; தேன் என்றால் தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேனா? இல்லை. ''கருதுவார் இதயக் கமலத்து ஊறும் தேனவன் காண்'' என்று அவரே விளக்கமும் தருவார். பிறிதோரிடத்தில், வானோர் செழுஞ்சுடரே என்பார், இறைவன் வானோர்க்கு அரிய மருந்து; மண்ணகத்தே வந்து உடனாய் நின்று உதவும் பெருமான் வானோர்க்கு வேறாய் நின்று காட்சி கொடுக்கின்றான் எனலாம். செழுஞ்சுடரே என்றவர் செழுஞ்சுடர் நற்சோதி என்றார். சுடர்வேறு சோதி வேறு. ஆனால் இறைவனைப் பொருத்தவரை சுடரும் அவனே; சோதியும் அவனே. "சோதியே! சுடரே! சூழ்ஒளி விளக்கே!'' என்பார் மாணிக்க வாசகர்.

அடுத்து, 'உருவே என் உறவே' என்கிறார். வானோர்க்கரிய மருந்தாகிய இறைவன் மண்ணக மாந்தர்க்கு உருவாக வருகிறான்; உறவும் ஆகின்றான். மாமனாக வந்து, வழக்குரைக்கின்றான். கூலியாளாய் வந்து மண் சுமக்கின்றான். தாயுமானவனாய்த் தண்ணளி புரிகின்றான். மேலும் நம் ஊனாக உயிராக உள்ளமாக உள்ளத்தின் உள்ளே நின்ற கருவாகவும் விளங்குகின்றான். அடிகளே பிறிதோரிடத்தில்,

*"ஊனாகி, உயிராகி அதனுள் நின்ற*
*உணர்வாகிப் பிறஅனைத்தும் நீயாய் நின்றாய்*
*நானேதும் அறியாமே என்னுள்வந்து*
*நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்"*

என்பார். "ஊனார் உடல்புகுந்தான் - உயிர்கலந்தான் உளம்பிரியான்" என்று நுட்ப வேறுபாடு தோன்றக் கூறுவார் மாணிக்கவாசகர்.

அடுத்து 'கண்ணே! கண்ணிற்கருமணியே! மணியாடு பாவாய்!' என்று கண்ணின் பிரிவெல்லாம் கடவுளாதலைக் காட்டுகின்றார்; பாவாய் என்றவர் தொடர்ந்து காவாய் என்றார். எதனை? அருவாய வல்வினை நோய் அணுகா வண்ணம் காவாய் என்கிறார். வினைசெய்யும்போது உருவாகத் தெரியும் ஆனால் அதன்பயன் அருவ மாகத்தான் வரும் இருவினை "அருவதாய் நின்று அரன்தன் ஆணையின் அமர்ந்து செல்லும்" என்பார் அருள் நந்திசிவனார்.

ஆவடுதுறையை ஆவடுதண்துறை என்றார். ஆவடுதுறைக்குள் இடைப்பிறவரலாகி வந்த 'தண்மை' இறைவனின் தண்ணருளை-தண்ணிழலை நினைவூட்ட வல்லது.

'திருவே! என் செல்வமே! தேனே! வானோர் செழுஞ்சுடரே' என்னும் தொடர்கள் திருவடிகளில் மலர்தூவிப் போற்றும் அருச்சனைக்கு உரியனவாக உள்ளன. அப்பரடிகள் மலர் வழிபாட்டுக்கெனவே போற்றித் திருத்தாண்டகங்கள் பாடியவர். அகத்தியர் தேவாரத் திரட்டில் 'வேற்றாகி விண்ணாகி' என்று தொடங்கும் போற்றித் திருத் தாண்டகம் 'அருச்சனை' என்ற தலைப்பில் அமைந்துள்ளது.

எழுத்தஞ்சும் என்தன்நாவில் மாற்றேன் என்கிறார். அஞ்செழுத்து ஓதுதலை நம்முடைய நாவின் செயலாக்குகின்றார். நாம் மறந்தாலும், நா மறக்காது என்பதனால் ''நான் மறக்கினும், சொல்லும் நாநமச்சிவாயவே'' என்ற சுந்தரத் தமிழுக்கு முன்னோடி இத்தொடர் எனலாம்.

திருவருளை மறவேன் என் வஞ்சம் உடைய நெஞ்சில் ஏற்றேன் என்கிறார். "வஞ்சனையார் யார் பாடும் சாராத மைந்தன்" என்று கூறியவர் இங்கு வஞ்சநெஞ்சில் ஏற்றேன் என்று கூறுகின்றாரே எனில் இவர் வஞ்சனையை உணர்ந்து விட்டார். ஒளிந்திருக்கும் திருடனைப் பார்த்து விட்டால் திருடன் ஓடுவதுபோல் வஞ்சனையை நாம் இனங்கண்டு கொண்டால் பின் அது நம்மிடம் இருக்குமோ, "உரைமாண்ட உள்ளொளி உத்தமன் வந்து உளம் புகுந்தால்'' வஞ்சனைகள் விரைந்தோடும் அன்றோ!

வஞ்ச நெஞ்சில் திருவருளை ஏற்றாலும் வஞ்சனைகள் நீங்கும்வரை அவன் சோதனைகளைத் தருகின்றான். அவை வேதனைகளாய் விளைகின்றன. 'நீ செய்வினைகள் செய்யக்கண்டு வேதனைக்கே இடம் கொடுத்து நாளும் நாளும் ஆற்றேன்' என்கிறார். இறைவன் நம் வினைமாசு தீருவதற்குத் தான் வேதனைகளைத் தருகின்றான் என்றாலும் எவ்வளவு தான் பொறுக்க முடியும்? அதனால் நான் ஆற்றேன் என்று முறையிடுகின்றார்.

திருவருள்கள், வேதனைகள் என்னும் இடங்களில் ''கள்'' என்ற பன்மை விகுதி தேவையில்லை. ஆனால் அடிகளை இலக்கணம் கட்டுப்படுத்துமோ? அவர் பாடலை வைத்துதான் நாம் இலக்கணம் வகுக்க வேண்டும். 1933-இல் ''கலா நிலையம்'' இதழில் "அப்பரும் அறுபத்து நான்கு கலை ஞானங்களும்'' என்ற கட்டுரைத் தொடரை எழுதிய E.N. தணிகாசலம் அவர்கள் அப்பருடைய பாடல்களுக்குத் தனி வியாகரணமே வகுக்க வேண்டும் என்பார்.

ஐந்தெழுத்தை மறவாது சொல்வேன் என்றாரே ஏன் தெரியுமா? உயிர்போகும்போது இறைவன் திருநாமத்தைச் சொல்ல வேண்டும். அதற்காகத் தான் நாள்தோறும் ஐந்தெழுத்தைச்

சொல்வது என்றும் கூறலாம். இன்னோரிடத்தில், நமச்சிவாய என்னும் அஞ்செழுத்தும் சாம் அன்று உரைக்கத் தருதி என்பார்.

ஐந்தாம் பாடலில் 'நறுமாமலர் கொய்து நீரில் மூழ்கி நாள்தோறும் நின்கழலே ஏத்தி வாழ்த்தி' என்று புறவழிபாட்டினைக்கூறிய அவர் இங்கு மூன்றாம் பாடலில் .... "கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக் காதலித்து நின்கழலே ஏத்தும் அன்பர்க்கு அரையா" என்னுமிடத்தில் வழிபாடு செய்வார் உள்ளுருகி நிற்க வேண்டிய தன்மையைக் கூறுகின்றார்.

"நாள்தோறும் நின்கழலே ஏத்தி வாழ்த்தித் துறவாத துன்பம் துறந்தேன்" என்கின்றார். இறைவன் திருவடிகளை ஏத்துவதும் வாழ்த்துவதும் எல்லாம் நீங்காது தொடர்ந்து வரும் துன்பத்தைப் போக்கிவிடும்.

துறவாத துன்பம் துறந்தேன் என்னுமிடத்தில் என்னைவிடாது தொடரும் துன்பத்தினைத் துறந்தேன் என்ற நயம் உணர்ந்து மகிழ்வதற்குரியது. துன்பத்தைத் துறந்த என்னை ஊழ்வினை வந்து என்ன செய்யும் என்கிறார். இப்பாடலில் இறைவனை "அறவா" என்று அழைத்தார். காரணம் இறைவன் தேவர்கள் வேண்டியதனால் நஞ்சை உண்டு தேவர்களை உய்யக்கொண்டதனால்,

***"அறத்தால் உயிர்காவல் அமர்ந்தருளி***
***மறத்தால் மதில்மூன்றுடன் மாண்பழித்த***
***திறத்தால் தெரிவெய்திய தீ வெண்திங்கள்***
***நிறத்தான் நெல்லிக் காவுள் நிலாய வனே"***

என்ற பாடலில் திருஞானசம்பந்தர் அறத்தின் இயல்பும் மறத்தின் திறமும் விளக்கி மொழிகின்றார்.

அப்பரடிகளும் இறைவன் வீரத்தினை எடுத்துரைக்கின்றார்.

திரிபுரங்கள் தீயில் வேவச் சிலைவளைத்து, களிறு உரித்த கங்காளா எனவும் (4) நாரணன் அங்கம் தோள் மேல் கொண்டு மலரான் சிரத்தைக் கையில் ஏந்திக் கான்ஆர் களிற்றுரிவைப் போர்வை மூடிக் கங்காள வேடராய் எங்கும் செல்வீர் (6) என்றும் கூறுகின்றார். நூறுகோடி பிரமர்கள் நொந்தினால் (அழிந்தால்) ஆறுகோடி நாராயணர் அங்ஙனமே அழிவர். ஈறிலாதவனாகிய ஈசன் காலாந்தரத்திருவர் தங்காலம் செல்ல அவர்களின் எலும்புக் கூட்டைத் தரித்தனன் என்பர்.

அருளாளர்கள் தம்மைப்பெரிதும் தாழ்த்திக் கொள்வது இயல்பு. அவ்வகையில் அப்பர் அடிகளும்,

***"நிலத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்***
***நில்லா உயிர் ஓம்பும் நீதனேன்"***

என்றும்

***"மலம்தாங்கு உயிர்ப்பிறவி மாயக்காய***
***மயக்குளே விழுந்து அழுந்தி நாளும் நாளும்***
***அலந்தேன்"***

என்றும்

***"ஏழை அமண்குண்டர் சாக்கியர்கள்***
***ஒன்றுக்கும் அல்லாதார் திறத்தொழிந்தேன்"***

என்றும்,

***"நானார் உமக்கோர் வினைக்கேடன்"***

என்றும், தம்முடைய குறைகளைக் கூறுகின்றார்.

"நிலத்தார் அவர்தமக்கே பொறை" என்னுமிடத்தில், "நிலக்குப்பொறை" என்னும் குறள் மொழியினை வழிமொழிவது போல் உள்ளது. இப்பதிகத்தில் மலம் மாயை கன்மங்களும் குறிக்கப்பெறுகின்றன.

இறைவனை நல்வினையும், தீவினையும் ஆனாய் என்பார். நின்ற திருத்தாண்டகத்தில் 'பெரு நலமும் குற்றமும்.... தாமே ஆகி' என்றார். 'குற்றம் நீ! குணங்கள் நீ! என்பார் சம்பந்தர். நாம் தீவினை செய்யும்போதும் பின் நின்று ஆட்டியது அவனுடைய மறைப்பாற்றல் தானே'.

"இறைவா! உன்னிடம், "எங்கள் பிழைபொறுத்தி" என்று வேண்டினாலும் அது உன்கடன் அன்றோ? பேரருள் என்பது உன்னிடம் தானே உள்ளது என்றும் கூறுகின்றார். இவ்விடத்து 'உன்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்னும் மாணிக்கத் தமிழையும் ஒப்புநோக்கலாம். மேலும் 'இறைவா! நீ எனக்கு அருள்செய்யக் கருதவில்லை [illegible]றால் எல்லாரும் என்னை இகழ்வார்களே' என்கிறார். 'இலங்கைக் கோமான் தன்னை செறுவரைக்கீழ் அடர்த்தினதாலும் பின்

அருளிச்செய்கை எல்லாம் அறிந்தேன், ஆதலின் என்னை அஞ்சேல் என்னாய்' என்கிறார்".

இறைவன் நமக்கு அருள் செய்ய வேண்டும் என்று வேண்டுவது நம் உரிமையைக் கேட்பது. அதே நேரத்தில் நம் கடமையையும் செய்ய வேண்டும். தன் கடன் அடியேனைத் தாங்குதல் என்றவர், என் கடன் பணி செய்து கிடப்பதே என்றும் கூறினார் அன்றோ? அதனால் கடமையையும் நினைவூட்டுகின்றார்.

*"துறந்தார்தம் தூநெறிக் கண்சென்றேன் அல்லேன்"* என்பார்.

துறந்தார் என்பவர் யார்? எப்பற்றினையும் அறஉகைத்து ஏறுயர்த்தார்தாள் மெய்ப்பற்றெனப் பற்றி நிற்பவர். அவர்களுக்குரிய கடமைகள் வழிபாடு மட்டுமே; மேலும் திருக்குறளில் துறவறவியல் என்றொரு பிரிவு உண்டு. அங்கே கூறப்படும் அறங்களாகிய வாய்மை, கள்ளாமை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை முதலானவற்றைக் கடைப்பிடித்தலையே துறந்தார் தம் தூநெறி என்றார். அதற்குரிய முதற்படியாக மலர்எடுத்து மாலை தொடுத்து வழிபடலாமே எனில் அதற்கும் நான் தூயவன் அல்லேன் என்கிறார். காயமே கோயில், கடிமனம் அடிமை என்றும் கூறும் பாடலில், 'வாய்மையே தூய்மை' என்பார் அப்பர். அந்த நெறியை எட்டுவது எல்லார்க்கும் எளிதன்று. என்றாலும் இறைவன் திருப்பெயரைச் சொல்லலாமே. இறைவனின் திருவருட் பெருமையைப் பேசலாமே.

*"பிறந்தேன் நின் திருவருளே பேசின் அல்லால்*
*பேசாத நாள்எல்லாம் பிறவாநாளே"*

என்று கூறுகின்றார்.

"பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவாநாளே" என்பதனையே மகுடமாகக் கொண்ட திருப்பதிகமே உண்டு. 'குலமிலராயினும் குலத்துக்கு ஏற்பதோர் நலம்மிகக் கொடுப்பது நமச்சிவாயவே' என்று அப்பரடிகளே நமச்சிவாயப் பதிகத்தில் பாடுகின்றார். பேசும்போதெல்லாம் அவன் புகழையே பேசுவோம். மற்றவர்கள் பேசுவதைக் கேட்போம். சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான் என்று அழைத்தால் இவன் எனைப் பன்னாள் அழைப்பு ஒழியான் என்று வந்து எதிர்ப்படும். அவ்வாறு இறைவனை அழைப்பதற்குரிய பெருந்துணையே திருமுறைகள், திருமுறைகளே சைவ நெறிக் கருவூலம்; திருமுறை ஆசிரியர்களின் திருவடிகளே நமக்கு உயிர்த்துணையாகும்.

*"திருவேஎன் செல்வமே தேனே வானோர்*
*செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதிமிக்க*
*உருவேஎன் உறவேஎன் ஊனே ஊனின்*
*உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற*
*கருவேஎன் கற்பகமே கண்ணே கண்ணின்*
*கருமணியே மணிஆடு பாவாய் ஆவாய்*
*அருவாய வல்வினைநோய் அணுகா வண்ணம்*
*ஆவடுதண் துறைஉறையும் அமரர் ஏறே".*

---

**திருநாவுக்கரசர் துதி :**

கற்பெருந்தூண் புணையாகக் கடல்கடந்தை
ஆற்றில்எழிற் கயிலை கண்டு,
பற்பணியின் விடம்தீர்த்துஅப் பூதிமக
உயிரளித்துப், பதிகச் சொல்லால்
பொற்புறுவே தாரணியக் கதவுதிறந்து,
அருட்புகலூர்ப் பொருளிற் சேர்ந்த
அற்புதநா வுகரசன் அடியிணைப்பூ
முடியிலற அமைத்தல் செய்வாம்.

- திருவாவடுதுறை புராணம். 23



அருள்மிகு கோமுத்தீசுவரர் சன்னதி



# திருவாவடுதுறை அமுதே

- தமிழாகமச் சால்பறிவார் மு.செல்வநாதன், சோளிங்கர்.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் "தமிழாகமச் சால்பறிவார்" எனும் விருது பெற்றவர். சோளிங்கர், வேலூர் ஆகிய தலங்களில் சைவ சித்தாந்தப் பேரவையை நிறுவித், திருமுறை மாநாடுகள், திருமந்திர வகுப்புகள், பன்னிரு திருமுறை தொடர் முற்றோதல் ஆகியன நடத்தி வருகின்றார்கள். சிறந்த சமய நூல்களைப் படைத்து அளித்துள்ளார்கள்)

திருவாவடுதுறை அமுதே என்று சேந்தனார் இறைவனை விளிக்கிறார். அத்திருவிசைப்பா இதோ!

***பொய்யாத வேதியர் சாந்தை மெய்ப்புகழாளர் ஆயிரம் பூசுரர்***
***மெய்யே திருப்பணி செய் சீர்மிகு காவிரிக்கரை மேய***
***ஐயா, திருவாவடுதுறை அமுதே என்று உன்னை அழைத்தக்கால்***
***மையார் தடங்கண் மடந்தைக்கு ஒன்று அருளாது ஒழிவது மாதிமையே?***

இப்பாடலில் அமைந்துள்ள ஒன்றுக் கொன்று தொடர்புடைய மூன்று தொடர்களை - கருத்துகளை ஆழமாகச் சிந்திக்க வேண்டும். திருவாவடுதுறை அமுது, பொய்யாத வேதியர், மையார் தடங்கண் மடந்தை என்பன அவை.

திருவாவடுதுறை என்பது காவிரியாற்றில் உள்ள பல புண்ணியத் துறைகளில் ஒன்று. உமையம்மை பசுவாய் இருக்க வேண்டி வந்த நிலையை நீக்கினமை பற்றி வந்த காரணப் பெயர் என்பது புராணக் கருத்து. புராண நிகழ்வு களையெல்லாம் அப்படியே எடுத்துக் கொள்வ தோடு, அதன் உள்ளே அமைந்துள்ள மற்றொரு நுட்பத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது திருமூலர் கருத்து. முப்புரமாவது மும்மல காரியம், கண்டம் கறுத்த கருத்து அறிவார் இல்லை என்பன போன்ற திருமூலர் திருவாக்குகளை உன்னுக. அவ்வகையில் திருவாவடுதுறை என்னும் ஊர்ப் பெயருக்கு இன்னொரு காரணம் இருக்கிறது. அது, திரு + ஆ + அடு + துறை என்பது. அதாவது பசுக்களாகிய உயிர்கள் எல்லாம் தம் கட்டுத்தன்மை நீங்கி, இறைத்தன்மை அடைவதற்காக வந்து சேருகின்ற துறை - உயிர்கள் பிறவிக் கடலினின்றும் நீங்கித் திருவடிக் கரை ஏறும் துறை - என்பதாம். இக்கருத்தை உறுதிப் படுத்தும் வகையிலேயே இத்தலத்தில் கருமூல வாதனையை நீக்கும் திருமூலதேவரின் திருமந்திரம் வெளிப்பட்டுள்ளது. அது மட்டுமா? ஞானக்கதிர் எனத் தோன்றித் தென் ஆவடுதுறைக்கண் இருந்த மதி தரும் பஞ்சாக்கர தேசிகராம் நமசிவாய மூர்த்திகள் நிறுவிய திருக்கயிலாய நேர் பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனமும் அமைந்துள்ளது.

இத்திருவாவடுதுறை தலத்தில்தான் எல்லாம் வல்ல இறைவன் மாசு இலா மணியாக - இயல்பாகவே பாசம் இன்மையனாக - உயிர்களின் பாசத்தை நீக்குபவனாக எழுந்தருளி யிருக்கிறான். அவனை அமுது என்று குறிப்பிடுகிறார் சேந்தனார். அமுதுக்கு இரண்டு தன்மைகள் உண்டு. ஒன்று தான் இனிமையாய் இருந்து இனிமை தருவது. இரண்டு, சாவாமையைத் தருவது. பேச்சு வழக்கில் அமுது என்று தேவாமிர்தத்தைத் தான் குறிப்பிடுகின்றனர். தேவாமிர்தம் நிரந்தரமானது அன்று என்பதோடு சாவாமையையும் தரவில்லை என்பது வெளிப்படை. ஆனால், இறைவனோ வரம்பு இல் இனியன். ஒரு பொழுதும் மாறாமல் எப்போதும் ஒரே தன்மையில் நிரந்தரமானவன். தம்மைச் சேர்வாரையும் தாமாக ஆக்கும் அதாவது உயிர்களுக்குச் சாவாமையையும், பிறவாமையையும் தந்தருளும் தன்மையன். ஆதலின் இறைவனை - திருவாவடுதுறை அமுது என்று சேந்தனார் மிகச் சரியாகவே குறிக்கிறார்.

அடுத்துப், 'பொய்யாத வேதியர்' என்பதைச் சிந்திப்போம். பொய்யாத வேதியர் சாந்தை மெய்ப்புகழாளர். மெய்யே திருப்பணி செய் பூசுரர் என்பன வேதியரைக் குறிக்கும் தொடர்கள். வேதியர், வேதத்தை ஓதுபவர்; அது மட்டுமன்று, வேதத்தை வாயளவில் ஓதிக் கொண்டு, செயலளவில் உலகியல் நாட்டம் உடையவர் அல்லர்; உலகியல் வாழ்வுக்

குரிய அடிப்படைத் தேவைகளை மட்டும் நிறைவேற்றிக் கொண்டு, சிந்தையைச் சிவன்பாலே வைத்திருப்பதனால் தமக்குப் பொய்யாத வேதியராகத் திகழ்கின்றனர். தமக்குப் பொய் ஆகாதவர் மட்டும் அல்லர்; வேதம்; விளங்கும் இறைவனுக்கும் பொய்யாதவர்கள். இறை திருமேனிக்குச் செய்ய வேண்டிய பூசையை உள்ளபடியே மனமும் மொழியும் மெய்யும் ஒன்றி நின்று செய்பவர்கள். அதனால் தான் 'மெய்யே திருப்பணி செய் பூசுரர்' என்று குறிப்பிடுகிறார் சேந்தனார். இப்படி மெய்யாகவே பூசை செய்ததால் மக்களிடமும் புகழ் பெற்றவர்களாக விளங்கினர். விளம்பரத்தால் புகழ் தேடிக் கொண்டவர்கள் அல்லர்; இவர்கள் புகழைத் தேடிச் செல்லவில்லை. இவர்களைத் தேடித்தான் புகழ் வந்தது என்பது கருத்து. அதனால்தான் மெய்ப்புகழாளர் என்று குறிப்பிடுகிறார் சேந்தனார். இவர்கள் ஆயிரவர் என்றும் குறிக்கிறார். திருவாவடுதுறைக்குத் தெற்கில் அமைந்துள்ள சாத்தனூரில் வாழ்ந்திருக்கிறார்கள். தில்லை மூவாயிரவரைப் போலச் சாத்தனூர் ஆயிரவரும் சிவபூசை செய்திடும் தனி இனத்தினர் போலும். இவ்வினத்தினர் இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே சாத்தனூரில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பது, 'அந்தணர் தம் சாத்தனூர்' என்று திருமூலர் புராணத்தில் சேக்கிழார் குறிப்பதால் தெரிகிறது. இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வேதம் இருந்தது என்றும், அவ்வேதம் சிவபரம் பொருளை நன்கு விளக்கியது என்றும், அதனால், அவ் வேதத்தை ஓதிய வேதியர்கள் வேதம் ஓதிடும் தமக்கும் வேதப் பொருளான இறைவனுக்கும், வேதப் பயனைப் பெறும் தகுதி உடைய மக்களுக்கும் பொய்யாதவராய் வாழ்ந்தனர் என்றும் தெரிகிறது. இத்துணையளவு வேதியர்களைப் பற்றிச் சேந்தனார் ஏன் சொல்ல வேண்டும்? அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே என்பது பழமொழி. இறைக்க, இறைக்கக் கிணற்றிலே நீர் சுரப்பது போல, பசுங்குழந்தை வாய் வைத்துக் குடிக்கக் குடிக்கத் தாயின் மார்பகத்திலே பால் சுரப்பது போல, மக்கள் உண்மையாகவே வழிபட வழிபடத்தான் கருவறையிலிருந்து இறைவனின் கருணை வெளிப்படும். திருக்குட நன்னீராட்டினாலே திருக்கோயிலில் தூய்மை கமழத் திருவருள் வெளிப்பாட்டிற்குரிய அணிய நிலை உருவாகும். பூசை நடக்க நடக்க, மக்கள் வழிபட வழிபடத் தான் திருவருள் வெளிப்படும். இந்த உண்மையை நாம் உணர வேண்டியே சேந்தனார் பொய்யாத வேதியர், மெய்ப்புகழாளர், மெய்யே திருப்பணி செய் பூசுரர் என்று மூன்று முறை கூறி அவ்வந்தணர்களின் உண்மைத் தன்மையை - புகழ்த்துணை நாயனார் போன்று அவர்களின் சிவபூசைத் தொண்டின் உறைப்பினை விளக்குகிறார்.

அடுத்து, மையார் தடங்கண் மடந்தை என்பது பற்றிச் சிந்திப்போம். இப்பாடல் இறைவனைப் போற்றிப் புகழும் பாடல். ஆனால் செவிலி கூற்றாக அமைந்துள்ளது. மானிட வாழ்க்கையில் ஆண் பெண் காதல் மிக உயர்ந்தது. உயிரின் இச்சை அறிவு வாயிலாகவோ, செயல் வாயிலாகவோ தான் வெளிப்பட வேண்டும். தன் இச்சையை அறிவு வாயிலாக வெளிப்படுத்தும் நாட்டம் மிகுதியும் உடைய உயிர் ஆணாகப் பிறக்கும். தன் இச்சையைச் செயலின் வாயிலாக வெளிப்படுத்தும் நாட்டம் மிகுதியும் உடைய உயிர் பெண்ணாகப் பிறக்கும். செயலும் அறிவும் ஒத்துப் போவதனால் தான் செயல் திருத்தமும், அறிவுத் திருத்தமும், பின்னர் இச்சை திருத்தமும் ஏற்படும். அதனால்தான் ஆணும் பெண்ணும் இணையும் காதல் - திருமணம் - இல்லறம் என்பன பெரிதும் மதிக்கப்படுகின்றன. இவ்வகையில் பருவம் வாய்த்த பெண்ணுக்குக் காதல் அரும்பும். அவளின் மனம் கவர்ந்த ஆடவனை அடைவதில் காதல் முயற்சிகள் பெருகும். ஆனால், சில நேரங்களில் சில காரணங்களினால் தலைவியின் பேச்சைத் தலைவன் செவி மடுக்க முடியாத நிலையில் இருப்பான். அந்த நேரங்களில் அத்தலைவி படும் மன வேதனை சொல்லி முடியாதது. அப்படிப்பட்ட நிலையில் அவளின் செவிலித்தாயோ, தோழியோ தலைவனுக்கு எடுத்துச் சொல்வது உண்டு. அவ்வகையிலேயே செவிலி கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது.

இறைவன் மீது பத்தி கொள்ளும் உயிரைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் கொண்டு அமையும் அகத்துறைப் பாடல்கள் பக்தி இலக்கியங்களில் இடம் பெறுவது மேற்சொன்ன காரணத்தால் தான், பொதுவாக நாயக நாயகி பாவம் சைவத்திற்கு இல்லை என்று சொல்வார்கள். ஆனால் அது முழு உண்மை அன்று. உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு மூன்று நிலைகளில் நிகழும். ஒன்று : குரு-சீடன் தொடர்பு. இரண்டு : காதலன் - காதலி தொடர்பு. மூன்று : ஆண்டான் - அடிமைத் தொடர்பு. உலகப்பொருள்களை அறிந்து அனுபவிக்கும் உயிர் நாளடைவில் அதில் உவர்ப்புக் கொண்டு நிலையான பொருளை - இறைவனைத் தேடும் முயற்சியை மேற்கொள்ளும். உணர்த்துவதை உணர்த்துகின்றவாறே உணர்ந்து கொள்ளும் நிலையாகிய பக்குவத்தை உயிர் அடையுங்கால் இறைவன் தானேயோ, அதிட்டித்தோ குருவாக வந்து சிவஞானத்தை உணர்த்துவான். அப்போது உயிர் உண்மைச் சீடனாக நிற்கும். ஞான உபதேசம் பெற்ற உயிர் இறைவனை அடைவதில் அளவிலா ஆர்வம் கொள்ளும். உலகியலில் ஒரு காதலி, தன் காதலனை அடைய மேற்கொள்ளும் முயற்சி போன்றது அது. காதலனின் பாராமுகமோ, உடன்பாடாகப் பேசாமையோ காதலியைப் பெரிதும் பாதிக்கும். அவளின் உடலும் உள்ளமும் பெரிதும் தளரும். அது போலவே இறைவனின் திருவடியை அடைய முயலும் உயிர்க்கு இறைவனின் அருள் கிட்டாத போது, அவ்வுயிர் துடிக்கும். சொல்லொணா வேதனையை அனுபவிக்கும். இந்த நிலையில் தான் இறைவனுக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு காதலன் - காதலி தொடர்பு போன்றது. இறைவனின் திருவடியை அடையும் உயிர் திருவடி இன்பத்தில் திளைத்திருக்கும் போது ஆண்டான் - அடிமை நிலையில் இருக்கும். ஆண்டான் தருவதை அனுபவிப்பதற்கு மட்டுமே உரிமை உடைய நிலை அடிமை நிலை. அதிகாரம் செலுத்தும் நிலை ஆண்டான் நிலை. எனவே, உயிர் வீடு பேற்றில் அடிமையாகவே - மீளா அடிமையாகவே இருக்கும்.

ஆக, உயிர் இறைவனை அறிதலில் சீடனாகவும், அடைவதில் காதலியாகவும், அழுந்தி அறிதலாகிய அனுபவித்தலில் அடிமையாகவும் இருக்கும் என்பதைத் தெளிய வேண்டும். சேந்தனாரின் இப்பாடல் உயிரின், காதலி நிலையில் வைத்துப் பாடப்பட்டதாகும்.

உலகில் உழலும் உயிர் முக்குண வயப்பட்டிருக்கும். சத்துவம், இராஜசம், தாமசம் ஆகிய முக்குணங்களும் முறையே இன்பத்தையும் துன்பத்தையும் மயக்க இன்பத்தையும் தந்து கொண்டிருக்கும். எத்தனை காலம் தான் இதிலேயே உழன்று கொண்டிருப்பது? இறைவனால் ஈர்க்கப்படும் உயிர் இறைவனை அடைய ஒரு காதலியைப் போல் முயலும். காரணம், தனக்குரிய ஆணை அடையாத வரையிலும் பெண்மை முழுமையடையாதது போல், உயிர் இறைவனை அடைந்தால் ஒழிய முழுமை பெறாது. அப்படி என்ன தான் இருக்கிறது இறைவனிடம்? பொருள் என்று ஒன்று இருந்தால் அதற்குக் குணம் என்று ஒன்றும் இருக்கும். இறைவன் அறிவுப் பொருள். அருள் இறைவனாகிய பொருளின் குணம். இந்த அருளை விரிக்குங்கால், அஃது எண்குணமாகும். அவை தூய உடம்பு. இயல்பாகவே ஆணவம் இன்மை, இயற்கை அறிவு, முற்றறிவு, வரம்பு இல் ஆற்றல், பெருங்கருணை, பேரின்பம், தன் வயம் என்பன. இந்த எண்குணங்களையும் உடைய பொருளாகிய இறைவன் நிலையறிவுப் பொருள். முக்குண வயப்பட்டிருக்கும் உயிரோ சார்ச்சி யறிவுப் பொருள். நிலையறிவுப் பொருளாகிய இறைவனைச் சார்ந்தால் ஒழிய உயிர் நிலைத்த அறிவில் நின்று, நிலைத்த இன்பத்தில் திளைக்க முடியாது. எனவே, இறைவனை அறிந்து கொள்ளும் உயிர், இறைவனை அடைவதில் ஓர் உண்மைக் காதலியைப் போல் ஆர்வம் கொள்கிறது. அந்த வகையில்தான் இப்பாடலில் தலைவியாம் உயிர், 'திருவாவடுதுறை அமுதே!' என்று தன் தலைவனை - இறைவனை - அழைக்கிறது. ஆனால், இறைவனோ (இவ்வுயிர்க்கு உறைப்பில் முதிர்வும் முழுமையும் வர வேண்டி) அருளாது ஒழிகிறான். "இப்படி அருளாதிருப்பது பெருமானே, உனக்குப் பெருமையோ?" என்று செவிலித்தாய் ஆகிய சேந்தனார் கேட்பது போல் இப்பாடல் அமைந்துள்ளது.

அத்தலைவியைப் போல் மாசிலாமணி ஈசனைத் 'திருவாவடுதுறை அமுதே!' என்று அழைக்கும் பக்குவத்தை அடைவதில் நாமும் இச்சை கொள்ளலாம் அல்லவா!

---

# துறைசையில் சுந்தரர்



சைவத் தமிழ்ச் சீராளர், இரா. ஆவுடையப்பன், பி.காம்., சங்கரன்கோவில்.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் 'சைவத் தமிழ்ச் சீராளர்" எனும் விருதும், சித்தாந்த ரத்தினம் எனும் பட்டமும் பெற்றவர். வாரத்தில் ஒருநாள் தமது இல்லத்தில் சாத்திரப் பாடங்களை நடத்தி வருகின்றார். தமது சொந்தச் செலவில் தேவாரப்பள்ளி, மிருதங்கப் பயிற்சி வகுப்புகள் நடத்தி வருவதோடு, சாத்திர நூல்கள் பலவற்றை வெளியிட்டுள்ளார்)

ஸ்ரீ கயிலையில் எம்பெருமான் சூடிக் கொள்ளும் மாலையையும், அள்ளிக் கொள்ளும் திருநீற்றையும் தாங்கிப் பணி செய்பவர், தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்த போது முதலில் வெளிப்பட்ட கொடும் விஷத்தைத் தேவரும் மற்றெவரும் எதிர் கொள்ள முடியாமல் ஓடிப் பரமசிவனைச் சரணடைந்த போது, அவ்விஷத்தைச் சிறிதாக ஆக்கித் தன் கையில் கொணர்ந்து இறைவன் தன் கண்டத்தில் நிறுத்திக் கொள்ளக் காரணம் ஆனவர். ஆதலால் அன்னவர் பெயர் ஆலால சுந்தரர்.

அவர் இந்தியாவில் தென்னாட்டில் வந்து திருநாவலூரில் அந்தணர் குலத்தில் சடையனார் இசைஞானியாருக்குத் திருமகவாக அவதரித்த காரணம் என்ன என்பதை அறிவோம்.

இறைவன் ஒருவன். ஆன்மாக்கள் எண்ணில. அவை 84 நூறாயிரம் யோனி பேதமாம். அவை அனைத்தும் முத்திக் கரை சேர வேண்டும் என்பதே இறைவனின் பெருவிருப்பம். எனவே அவன் தன் பெருங் கருணையால் அவைகளது மொத்த வினையில் இருந்து (நல்வினை மற்றும் தீவினையின் மொத்தத்தொகுப்பு (Total Deposit) சிறிது எடுத்து, எடுத்த அப்பிராரத்த கன்மத்தைப் புசிக்கத் தனு, கரண, புவன, போகங்கள் அளிக்கிறான். பூமியில் வினைகளை அனுபவிக்கும்போது அதன் கொடுமைகளை உணரச் செய்கிறான். அதுவே பக்குவப்படுத்துதல். பிரபஞ்ச வெயிலில் காய்ந்த ஆன்மாக்கள் இறைவனது திருவடி நிழல் அடைந்து பேரின்பம் துய்க்க எண்ணுகின்றன. இதைத்தான் திருவருட் பயன் ஆசிரியர். உமாபதிசிவம்,

*"தூறிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோற்*
*றானதுவாய் நிற்குந் தரம்"* என்கிறார்.

இத்தகைய பக்குவத்தில் தலைப்பட்ட 63 அடியவர்களுக்கு முத்தி கிடைத்தது. அவர்கள் சரித்திரத்தைத் தென்னாட்டு மக்களுக்கு ஸ்ரீ சுந்தரர் மூலம் சொல்லி அவர்களை முத்தி வழியில் செலுத்தத் திருவுளம் கொண்ட சிவபிரான் ஒரு திருவிளையாடல் செய்தார்.

*மாதவஞ் செய்த தென்றிசை வாழ்ந்திடத்*
*தீதிலாத் திருத் தொண்டத் தொகை தரப்*
*போது வாரவர் மேல் மனம் போக்கிடக்*
*காதன் மாதருங் காட்சியிற் கண்ணினார்.*

ஸ்ரீ சிவபிரான் சுந்தர பாண்டியனாக மதுரைத் தெருக்களில் நடந்திடவும், 64 திருவிளையாடல்களை நிகழ்த்திடவும், அறுபத்து மூவருக்கு அருள் செய்து முத்தி அளித்திடவும் ஸ்ரீ சுந்தரர் மூலம் திருத்தொண்டத் தொகை பெற்றிடவும் மாதவம் செய்துள்ளது தென்னாடு.

கயிலையில் கமலினி, அனிந்திதை என்ற இரு பெண்கள் மீது மனம் போக்கியதால் இறைவன் ஆணையின் வண்ணம் திருநாவலூரில் அவதரித்தார் ஸ்ரீசுந்தரர். அவரது விருப்பப்படியே மண் மீது மையல் மானுடராய் மயங்கிய வழி திருமணத்தில் இறைவன் அவரைத் தடுத்து திருவெண்ணெய் நல்லூரில் ஆட்கொண்டார். திருவாரூரில் தன்னைத் தோழமையாகத் தந்தார். என்றும் மணக் கோலத்துடன் மண் மீது விளையாடுவாய் என்றார். தடுத்தாற்கொண்டபின் கூறுவார்.

*மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க*
*அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலான் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடு கென்றான் தூமறை பாடும் வாயான்.*

இவ்வாறு வேதங்களை அருளிச் செய்த பெருமான் உத்தரவுப்படி திருநாவலூரர் ஆகிய தம்பிரான் தோழர் சுந்தரத் தமிழிலே எம்பெருமானைப் பல தலங்களிலும் பாடி வழிபட்டுக் கொண்டு திருஅரிசிற் கரைப் புத்தூர் தொழுது பல பதிகளையும் வணங்கிக் கொண்டு திருவாவடுதுறை வந்து சுவாமியை வலம் வருகிறார். இத்தலம் கோமுத்திபுரம், பிப்பலாரண்யம், நவகோடி சித்தபுரம், அநாதிமுத்திதலம் என்று பல பெயர்களை உடையது. ஸ்ரீ கயிலையில் இறைவி இறைவனோடு சொக்கட்டான் ஆடிக்களித்ததால் பசுவடிவம் கொண்டு திருவாவடுதுறையில் இறைவனை வழிபட்டு அவ்வடிவு நீங்கப் பெற்றார். பசுக்களாகிய ஆன்மாக்களின் ஆணவ மலத்தை இவ்விறைவன் நீக்குகிறான். எனவே அநாதி முத்தி தலம்.

**திருவாவடுதுறை :**

| | | |
|---|---|---|
| சுவாமி | - | மாசிலாமணி ஈசர், செம்பொற் தியாகர் |
| அம்மை | - | ஒப்பிலா முலையம்மை |
| மரம் | - | அரசு |
| தீர்த்தம் | - | கோமுத்தி தீர்த்தம் |

**தலச்சிறப்பு :**

முசுகுந்தன் வழிபட்டு மகப்பேறு பெற்றது. வாதவூரர் குரு தரிசனம் கண்டு போற்றியது. திருமூலர் திருமந்திரம் அருளிச் செய்தது.

திருவாவடுதுறையில் இறைவனை வழிபட்ட ஸ்ரீ சுந்தரர் ஆன்மாக்களின் வினைத் தொகுப்பையும் வினை அனுபவிக்கும் ஆன்மாக்கள் ஈட்டும் வினையால் ஏற்படும் (ஆகாமியம்) கொடுந் துன்பங்களையும் நினைக்கிறார். அவருக்கு அந்த நேரத்தில் 10 சரிதங்கள் நினைவுக்கு வருகின்றன. அதைப் பாடலாக இறைவன் முன்பு பாடுகிறார். நமது தவத்திற்கேற்ப அதில் 5 பாடல்கள் கிடைத்துள்ளன. அந்தச் சரிதங்களின் சுருக்கத்தை இங்குக் காண்போம்.

**சரிதம் - 1**

நிகழ்ச்சி நடந்த இடம் - அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்றாகிய திருக்கடவூர்.

மிருகண்டு முனிவருக்கு வெகு காலமாகக் குழந்தைப் பேறு இல்லை. இறைவனை வேண்டித் தவம் செய்ய நற்குணமிக்க 16 வயது வாழக் கூடிய மார்க்கண்டேயர் அவதரித்தார். அவருக்கு 16 பிராயம் வந்த போது பெற்றோர் மிக்க துயரடைந்தனர். மார்க்கண்டேயரோ பிறந்த நாள் முதல் சிவனடியில் சரணம் அடைந்தவர். பெற்றோரது வருத்தம் நீக்க நினைந்தார். திருக்கடவூர் இறைவன் பாதங்களை "இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன். எங்கு எழுந்து அருளுவது இனியே" என்று கட்டிப் பிடித்துக் கொண்டார். இயமன் பாசக் கயிற்றை வீச, அது இறைவன் மீது பட, எமனை காலால் கடிந்தார் சிவபிரான். மார்க்கண்டேயருக்கு என்றும் பதினாறான சிரஞ்சீவித் தன்மையை அளிக்கிறார்.

இந்த அருள் நிகழ்ச்சியை எண்ணி எண்ணி, திருவருள் கண்டு கண்டு, அவன் திருவடியைப் பாடிப்பாடி ஆவடுதுறை ஆதிமூர்த்தியே! சிலம்பு ஒலிக்கும் திருப்பாதங்களைச் சரண் அடைந்தேன். எனக்கு சஞ்சிதவினை இல்லை. ஆகாமியம் சேராமல் காப்பாற்றுவாயாக என்று வழிபடுகிறார்.

*மறையவன்ஒரு மாணிவந் தடைய வார*
*மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்*
*கறைகொள் வேலுடைக் காலனைக்கா*
*லாற்கடந்த காரணங் கண்டுகண் டடியேன்*
*இறைவன்எம் பெருமான்என் றெப்போதும்*
*ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்*
*அறைகொள் சேவடிக் கன்பொடும்*
*அடைந்தேன் ஆவடு துறைஆதி எம்மானே.*

**சரிதம் - 2**

நிகழ்ச்சி நடந்த இடம் - திருவானைக்கா.

திருஆனைக்காவில் ஒரு வெண் நாவல் மரத்தடியில் ஒரு சிவலிங்கம். அப்பெருமானை வெள்ளையானை பூசித்து வந்தது. அப்பெருமான் மீது சருகுகள் படாமல் இருக்கத் தன்வாய் நூலால்

பந்தலிட்டது ஒரு சிலம்பி. அதை அநுசிதம் என்று யானை அழித்தது. விரைவாக மீண்டும் பந்த லிட்டது சிலம்பி. யானை மீண்டும் அழித்தது. யானையைத் தண்டிக்க நினைத்த சிலம்பி யானையின் துதிக்கைக்குள் புகுந்து கடித்தது. யானை துதிக்கையைத் தரையில் அடித்து இறந்தது; சிலந்தியும் இறந்தது. யானையின் தூய வழிபாட்டுக்கு முத்தி கிடைத்தது. (அதன் கருத்து அது) சிலம்பியின் கருத்து இறைவனுக்குப் பந்தரிட வேண்டும் என்பது. எனவே அந்த ஆகாமிய வினைக்கு ஏற்ப அதைக் கோட்செங்கச்சோழராக ஆக்கினார் சிவபிரான். தனது கருத்துக்கு ஏற்ப நாயனாரும் எண்ணற்ற சிவன் கோவில்களை யானை நுழைய முடியாத சுவாமி சந்நிதியுடன் கட்டி இறைவன் அருளால் முத்தி பெற்றார்.

இந்தச் சரித்திரத்தை நினைத்து நினைத்து "உன் பொன்னடியைப் போற்றிப் போற்றி, புரண்டு வீழ்ந்து பாடி சஞ்சிதவினை நீங்கப் பெற்றவர் களையும் ஆகாமியம் பற்றிவிடுமே என்று அரண்டு ஆவடுதுறை ஆதி மூர்த்தியாகிய உன்பாதம் சரண் அடைந்தேன்" என்கிறார் ஸ்ரீ சுந்தரர்.

*தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி சித்திரப்*
*பந்தர் சிக்கன இயற்றச்*
*சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச் சோழன்*
*ஆக்கிய தொடர்ச்சிகண் டடியேன்*
*புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம் போற்றி*
*போற்றிஎன் றன்பொடு புலம்பி*
*அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்*
*ஆவடு துறைஆதி எம்மானே.*

**சரிதம் - 3**

சிவபிரான் சலந்தராசுரனை வதை செய்த போது உருவாக்கப்பட்ட சக்கரத்தை வேண்டி எம்பெருமானைத் தினமும் 1000 தாமரை மலர்களால் அர்ச்சித்து வந்தார் விஷ்ணுமூர்த்தி. ஒருநாள் வழிபாட்டில் 1000 தாமரை மலர்களில் ஒன்று குறையக்கண்டு அதனால் தளர்வுறாமல் உறுதிப்பாட்டுடன் தன் கண்தாமரையைப் பெயர்த்து அர்ச்சித்தார். சிவபிரான் மகிழ்ந்து அச்சக்கரப்படையை ஈந்தார்.

'வன்தொண்டு செய்து சக்கரப் படை பெற்றாலும், ஆகாமியவினை சேரத்தானே செய்கிறது. இதுபோன்ற வல்வினை எனக்கு வேண்டாம் என்று அவ்வினைக்கு அஞ்சி உன் திறத்தைப் போற்றிப் போற்றிப் பாடி தேவதேவே நின் திருப்பாதங்களைச் சரண் அடைகின்றேன். ஆவடுதுறையில் உறையும் என் முழுமுதல் கடவுளே என்னை காப்பாயாக! என்கிறார்' ஸ்ரீ சுந்தரர்.

*திகழும் மாலவன் ஆயிர மலரால் ஏத்து*
*வான்ஒரு நீள்மலர் குறையப்*
*புகழி னால்அவன் கண்இடந் திடலும் புரிந்து*
*சக்கரம் கொடுத்தல்கண் டடியேன்*
*திகழும் நின்திருப் பாதங்கள் பரவித்*
*தேவதேவநின் திறம்பல பிதற்றி*
*அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்*
*ஆவடு துறைஆதி எம்மானே*

இதை மணிவாசகரும்,

*சலமுடைய சலந்தரன் தன் உடல்தடிந்த நல்லாழி*
*நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடி*
*நலமுடைய நாரணன்தன் நயனமிடந்தரன் அடிக்கீழ்*
*அலராக இடஆழி அருளினன் காண் சாழலோ*

என்று அருளிச் செய்கிறார்.

**சரிதம் - 4**

அர்ச்சுனன் ஒரு நல்ல சிவபக்தன். பாரதப் போரில் தங்கள் படைவெற்றியடைய வேண்டுமானால் சிவபிரானிடம் பாசுபத அத்திரத்தை வேண்டிப் பெற வேண்டும் என்பதை உணர்ந்தான். சிவபிரானை நோக்கி அருந்தவம் செய்தான். அவனது தவத்தை மெச்சிய சிவபிரானர் அவனது விரதத்தை உலகிற்குக் காட்டிப் பாசுபத அத்திரத்தை வழங்கிடத் திருவுளம் நேர்ந்தார். ஒரு கொடிய காட்டுப் பன்றியை வேட உருவுடன் விரட்டிக் கொண்டு சென்று அது காரணமாக அர்ச்சுனனுடன் அன்பால் போர் செய்து வான் படையாகிய பாசுபத அத்திரத்தை அருளினார்.

இத்தகைய அற்புதத்தைக் கண்டு "உன் நாமங்கள் பரவி ஏத்தி உருகி ஆர்வத்துடன் உன் திருவடி ஏத்துகிறேன். ஆவடுதுறை ஆதிமூர்த்தியே என்னை காத்தருள்வாயாக" என்கிறார் ஸ்ரீ சுந்தரர்.

*வீரத் தால்ஒரு வேடுவனாகி விசைத்தொர்*
*கேழலைத் துரந்துசென் றணைந்து*
*போரைத்தான் விசயன் றனக்கன்பாய்ப் புரிந்து*
*வான்படை கொடுத்தல்கண் டடியேன்*
*வாரத்தால் உன்னா மங்கள் பரவி வழிபட்*
*டுன்திற மேநினைந் துருகி*
*ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்*
*ஆவடு துறைஆதி எம்மானே.*

**சரிதம் - 5**

"முப்புரத்து அசுரர்கள் தாரகாக்கன், கமலாக்கன், வித்யுன்மாலி என்போர். அவர்களது அதர்ம ஆட்சி ஒழியவும் அவர்களது கோட்டையைத் தகர்க்கவும் இறைவன் நோக்கினான். முப்புரமும் தீயால் அழிந்தது. ஆயினும் அங்கு சிவனது திருவடியிலேயே மனம் வைத்துக் கிடந்த சுதன்மன், சுசிலன், சுபுத்தி என்ற மூவர் மட்டும் உய்ந்தனர். பொன்னுலகம் பெற்றனர்".

எனவே உன்னை உன்னினோர் பெற்ற பேரருள் நினைந்து உன் புகழ்பாடி, பாம்பினைக் கச்சாக அணிந்த ஆதிமூர்த்தியே உன் திருவடி அடைந்தேன் ஆவடுதுறை எம்மானே என்னைக் காப்பாற்றுக என்கிறார் ஸ்ரீ சுந்தரர்.

*ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ உன்னை உன்னிய*
*மூவர்முன் சரணம்*
*புக்கு மற்றவர் பொன்னுலகும் ஆளப் புகழினால்*
*அருள் ஈந்தமை அறிந்து*
*மிக்க நின்கழலே தொழுது அரற்றி வேதியா*
*ஆதிமூர்த்திநின் அரையில்*
*அக்கணிந்த எம்மான் உனை அடைந்தேன்*
*ஆவடு துறைஆதி எம்மானே*

மேலே கூறியவாறு உய்ந்த மூவரும் மீண்டும் தவம் இயற்றிப் பெற்ற பதவியை திருப்புன்கூரில் நினைவு கூர்கிறார் சுந்தரர்.

***மூவெயில் செற்றஞான் றுய்ந்தமூவரில் இருவர்***
***நின்திருக் கோயிலின் வாய்தல்***
***காவ லாளர்என் றேவியபின்னை ஒருவன் நீகரி***
***காடரங்காக***
***மானை நோக்கியோர் மாநடம் மகிழ***
***மணிமுழா முழக்க அருள் செய்த***
***தேவ தேவ நின் திருவடி அடைந்தேன்***
***செழும்பொழில் திருப்புன் கூருளானே***

ஆன்மாக்கள் சிவதீக்கை பெற்று குருவருளால் சஞ்சிதவினை நீங்கப்பெற்று ஸ்ரீ சுந்தரர் நமக்குக் காட்டிய வழியில் சிவனது திருவடியை விடாமல் பற்றிக் கொண்டு வருவினை ஆகிய ஆகாமியம் சேரவிடாமல், முத்திக்கரை சேரவேண்டும் என்பது கருத்து.

திருச்சிற்றம்பலம்.



நாயன்மார்கள் அறுபத்து மூவரின் திருவுருவ சிற்பங்கள்

# திருமந்திரக் கட்டுரைகள்



அருள்திரு திருமூல தேவ நாயனார்



# திருமந்திரம் போற்றும் திருக்கூத்து

முனைவர். ர. வையாபுரி, எம்.ஏ., பி.எச்.டி., கோவை.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் "சைவ சித்தாந்த வித்யாநிதி" எனும் விருதும், மாதவச் சிவஞான சுவாமிகள் சித்திரை ஆயில்யத் திருநாளில் அருட்கொடையும் மோதிரமும் பெற்றவர்கள். புடை நூலும் பன்னிரு சூத்திரங்களும், கச்சியப்ப முனிவரின் சைவ சித்தாந்தம், மூலகன்மம் ஆகிய ஆய்வு நூல்களையும் உலகுடைய நாயனார் கழிநெடில், விநாயகர் அகவல் முதலான நூல்களுக்கு உரைகளும் ஆக்கியவர்கள். 78 அகவையினர்.

**முன்னுரை :**

திருமூலதேவநாயனார் அருளிய திருமந்திரத்தில் ஒன்பதாந் தந்திரத்தில் திருக்கூத்துத் தரிசனம் என்னும் தலைப்பில் எண்பத்திரண்டு பாடல்கள் (2679 - 2760) இடம் பெற்றுள்ளன. இவையன்றி நான்காந் தந்திரத்திலும் சக்கரத்தில் பிரணவத்தையும் திருவைந்தெழுத்தையும் அமைத்து வழிபடும் (யந்திரவழிபாடு) முறையிலும் திருக்கூத்துப் பற்றிப் பல செய்திகளைக் (திருவம்பலச் சக்கரம்) கூறியுள்ளார். இந்தக்கட்டுரையில் ஒன்பதாந்தந்திரம் கூறும் செய்திகளே முதன்மையாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**திருமூலதேவநாயனார் திருக்கூத்துத் தரிசித்தவர் :**

திருமூலதேவநாயனார் திருக்கயிலை மலையிலிருந்து பொதியமலைக்குச் செல்லும் வழியில் தில்லையம்பலத்தில் தங்கித் திருக்கூத்துத் தரிசித்த அனுபவத்தையே நான்காந் தந்திரத்திலும் ஒன்பதாந்தந்திரத்திலும் பாடியுள்ளார்.

*"தப்பிலா மன்றத்துத் தனிக்கூத்துக் கண்ட பின்"*
(திருமந்திரம் - 74)

*'அற்புதக்கூத்தாடுகின்ற அம்பலஞ்சூழ் திருவீதிப் பொற்பதியாம் பெரும்பற்றப் புலியூரில் புக்கணைந்தார்'*
(பெரியபுராணம் - 3569)

*"மெய்யுணர்வின்கண் வரும் ஆனந்தக் கூத்தை அவ்வியல்பில் கும்பிட்டு அங்கு ஆராமை அமர்ந்திருந்தார்"*
(பெரியபுராணம் - 3570)

*"என்னை அடக்கி, அடிவைத்து, பரானந்தத்தே என்னை இட்டு, உள்ளுள் படிந்திருந்தான்"*
(திருமந்திரம் - 2740)

*"இன்புறநாடி என் அன்பில் வைத்தேன்"*
(திருமந்திரம் - 2741)

*''இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும் நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்"*
(திருமந்திரம் - 2767)

*"ஆடநின்றான் எனை ஆட்கொண்டவாறே"*
(திருமந்திரம் - 2793)

என வருவன இதற்குச் சான்றாகும்.

**திருக்கூத்து வகைகள் :**

கூத்தப் பெருமான் செய்யும் திருக்கூத்தின் வகைகளை நாயனார் தம் நூலுள் குறிப்பிட்டுள்ளார். அவை : அனவரத தாண்டவம், பிரளய தாண்டவம், சங்காரத் தாண்டவம் (887) சிவானந்தக் கூத்து (2722) என்பன.

**பெயர் விளக்கம் :**

**1. அனவரத தாண்டவம் :** எப்பொழுதும் - இடையறாமல் (அல்லும் பகலும் அனவரதமும் என வருதல் காண்க). நிகழும் கூத்து. இது சகலத்தில் நிகழ்வது.

**2. பிரளய தாண்டவம் :** உலகத்தை ஒடுக்குவதற்கு நிகழும் கூத்து.

**3. சங்காரத் தாண்டவம் :** உலகத்தை ஒடுக்கிய பின் புனர் உற்பவமாம் படிக்குச் சங்கார காலத்தில் நிகழும் கூத்து. இது கேவலத்தில் நிகழ்வது.

(2,3 என்பவற்றில் குறிப்பிடப்பட்டவை ஒன்றே எனலும் ஆம்).

**4. சிவானந்தக் கூத்து :** முத்தான்மாக்களுக்குச் சிவானந்தம் அளவின்றிப் பெருகச் செய்யும் கூத்து. இதற்குச் "சித் பரம் சோதி" என அடைமொழி புணர்க்கப்பட்டிருக்கிறது. இது சுத்தத்தில் நிகழ்வது;

:ஞானானந்தக் கூத்து என்பதும் இது; சொல்லளவில் சொல்லிக் காட்டொணாதது.

**5. சுந்தரக் கூத்து :** சுந்தரம் - அழகு. திருமேனியின் அழகு. அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூவகைத் திருமேனியும் உடையவனாய் (அங்கப் பிரத்தியங்க, சாங்க, உபாங்கங்களுடன் கூடிய உருவம்) நின்று ஆடுவது. இது சொல்லால் சொல்லிக் காட்டக் கூடியது.

"சொற்பதம்" என அடைமொழி புணர்க்கப் பட்டிருக்கிறது. அழகு என்பது செய்யும் தொழிலழகினைக் குறிக்கும். தொழிலுக்கு அழகாவது தன்பொருட்டன்றி ஆன்மாக்களின் பொருட்டே - அவற்றை மலத்திலிருந்து எடுத்து ஆனந்தத்தில் அழுத்துதற் பொருட்டே - செய்தல்.

**6. பொற்பதிக்கூத்து :** பதி - தலம் - தலமாவது ஆன்மாக்களை உய்விப்பதற்காகச் சிவம் வெளிப்பட்டு நின்ற இடங்கள். எனவே சிவதலங்கள் அனைத்திலும் சிவம் திருக்கூத்து நிகழ்த்தும் எனக் கொள்ளத்தக்கது. பொன் என்ற அடைமொழி - பொலிவு என்னும் பொருளைத்தரும். எனவே தலங்களில் விளங்கும் சிவப்பொலிவினை - திருவருட் பொலிவினை உணர்த்திற்றாம்.

**7. பொற்றில்லைக்கூத்து :** தில்லை என்னும் தலத்தில் விளங்கிநின்று நிகழ்த்தும் கூத்து. இதுவே அனைவராலும் தரிசிக்கப்படுகின்ற தலம். இது ஆதாரத்தலங்களுள் அநாகதத் (இதயத்தானம்) தலம் எனவும் பஞ்ச பூதத்தலங்களுள் ஆகாசத்தலம் எனவும் (இங்குக் குறிப்பிடப்படுவது பூதாகாச மன்று; பரமாகாசமாகிய சிதாகாசம் - சிதம்பரம் - சிற்பரவியோமம்) கூறப்படுவது. விராட்புருடனுக்கு (பூமிக்கு) இதயத்தானமாகக் குறிப்பிடப்படுவது இத்தலம் ஆதலின் பதி எனப் பொதுவாகக் குறிப்பிடப்பட்ட தலங்களுள் அடக்காமல் விதந்து (தனியே - சிறப்பாக) எடுத்துக் கூறப்பட்டது. இத்தலம் பொன்னால் வேயப்பட்ட கோயில்; பொன்னம்பலம் (கனகசபை) என்னும் பகுதியைத் தன்னகத்தே கொண்டது ஆதலின் "பொன்" என அடை மொழி புணர்க்கப்பட்டது.

**8. அற்புதக்கூத்து :** அற்புதம் - வியப்பு. (மருட்கை) வியப்பு இருவகை.

1. இதுவரை காணப்பட்ட சிறிய பொருள்களினும் மிகச் சிறிய பொருளைக் காண்பதனாலும் பெரிய பொருள்களினும் மிகப்பெரிய பொருளைக் காண்பதனாலும் வருவது. இது காட்சிக்கு அகப்படுவது.

2. இதுவரையிலும் காணாத பொருளை - கேள்வியால் மட்டுமே - அறிந்த பொருளை இப்பொழுது அறிவில் உணர்வதனால் வருவது. இது காட்சிக்கு எட்டாதது. திருக்கூத்தினால் நிகழ்த்தப் படும் திருவைந்தொழிலும் அதனால் ஆன்மாவுக்கு வரும் பாசநீக்கம், திருவருள் வெளிப்பாடு, ஆனந்த அனுபவம் ஆகியவை காட்சியால் அறியப்படுவன அல்ல; இதுவரை ஆன்மாவினால் அறியப் பட்டனவும் அல்ல; அது இப்பொழுது அனுபவம் ஆதலையே அற்புதம் என்னும் சொல் உணர்த்தி நிற்கிறது.

**9. கூத்து :** கூத்து என்னும் சொல் குதித்துக் குதித்துத் தாள ஒத்துக்கு இயைய ஆடுவதைக் குறிக்கும். திருமூலதேவநாயனாரும் "தொம் - தி எனும் தாள ஒத்தினில்" (2734) ஆடுவதாகக் கூறியுள்ளார். கூத்தன் - அங்ஙனம் ஆடுபவனைக் குறிக்கும். சிவத்துக்கு இது விளையாட்டு.

மேலும் சில பெயர்கள் : மேலே கூறப்பட்ட பெயர்களேயன்றி உத்தமக் கூத்தன், சேவகக் கூத்தன், சம்பந்தக்கூத்தன், தற்பரக்கூத்தன், ஆணிப்பொற் கூத்தன், மாணிக்கக் கூத்தன் முதலிய பெயர்களையும் நவக்கூத்து, ஞானக்கூத்து, திருவம்பலக்கூத்து, பொன்னம்பலக் கூத்து, நாதாந்தநட்டம், அகிலாண்ட நட்டம், மோகாந்தக் கூத்து என்னும் பெயர்களையும் திருமூல தேவநாயனார் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

**கூத்து நிகழும் இடம் :**

சிவம் எங்கும் எதிலும் ஔபச்சிலேடிக வியாபகமாய்க் கலந்து நிற்பது. ஆதலின் அதன் செயல்கள் எனப்படும் கூத்தும் எங்கும், எதிலும் நிகழும். இதனை நாயனார் தொடக்கத்திலேயே "எங்கும் சிதம்பரம்; எங்கும் திருநட்டம்" (2721) எனப் பொதுவாகக் கூறிவிடுகிறார். பின்னர் "பூதங்கள் ஐந்தில், பொறியில், புலனைந்தில்" (2729) என்பது முதலாக இடைவிட்டு இடைவிட்டு நாயனார் கூறிச் செல்லும் இடங்களைத் தொகுத்தால் அது பெரும் பட்டியலாக நீளும். எனினும் "தென்திசையாகிய சிவபூமியில்" (2746) "சுத்த பூமியில்" (2754) சிறப்பாகத் திருக்கூத்து நிகழ்கிறது எனக்கூறியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பிண்டம், அண்டம் அவை சமம் ஆதலினால் (கோயிற் புராணம் - பதஞ்சலிச் சருக்கம் -70) திருமூலதேவநாயனார் பிண்டத்திலும் (உடம்பில்) அண்டத்திலும் கூத்து நிகழும் இடங்களைச் சுட்டிக் காட்டுகிறார். பிண்டத்தில் மூலநாடி (மூலாதாரக் கோணத்தின் மேல் முனையிலிருந்து பிரமரந்திரம் வரையிலும் மற்றும் துவாதசாந்தம் வரையிலும் செல்வது). என்னும் சுழுமுனை, அநாகதம், ஆஞ்ஞை, பிரமரந்திரம் என்னும் இடங்கள் கூத்தன் ஆடும் இடமாகச்சுட்டிக் காட்டுகின்றார். அண்டத்தில் தாருகவனம், தில்லைவனம், வடவனம் (திருவாலங்காடு) என்னும் தலங்களை அவன் ஆடும் இடங்களாகச் சுட்டிக்காட்டுகின்றார். இவற்றைச்

*"சங்கரன் மூலநாடிக்குள் தரித்தராடல்"* (2734)

*"சுழுமுனையுள் ஆடி"* (2735)

*''நீடுஞ் சிரசிடைப்பன்னிரண்டங்குலம்....
நம்பெருமான் உகந்து ஆடும் இடம்"* (2763)

*"நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி... ... பரமன் இருந்திடம்"* (2769)

*"தேவதாருவனம், தில்லை, வடம் முற்றமாவன"* (2732)

*"ஒண் சுழுமுனையாம் பாதிமதியோன் பயில் திருவம்பலம்"* (2747)

*"நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுமுனை கடவும் தில்லை வனம் கைகண்ட மூலம்"* (2753)

*"அரதன மன்றினில் மாணிக்கக் கூத்தன்"* (2760)

என வருவனவற்றால் அறியலாம்.

திருமூலதேவநாயனார் கூறிய தில்லைத் தலம் உமாபதிசிவம் பாடியருளிய கோயிற் புராணம் - பதஞ்சலிச்சருக்கத்தில்

*"நடுவுபோம் சுழுமுனைநாடி"* (70) எனவும் *''நடுவின் நாடி நலங்கிளர் தில்லை நேர் போய்க் கூடும்"* (71) எனவும் கூறப்பட்டிருத்தல் இங்கு நினைக்கத்தக்கது.

**அம்பலம், மன்றம் :**

திருமூலதேவநாயனார் திருமந்திரத்தில் கூத்து நிகழும் இடமாகத் தில்லையம்பலம், பொன்னம் பலம், அரதனமன்றம் எனச் சில இடங்களைச் சிறப்பாக எடுத்துக் கூறினார்.

*"அம்பலமாவது அகில சராசரம்"* (2774)

எனப் பொதுவாகவும் கூறினார். இவற்றுள்

*"சத்தி திருவம்பலம்"* (2748)

*"அம்பலமாவது அஞ்செழுத்து"* (2774)

என்பன குறிப்பிடத்தக்கன. சக்தி திருவம்பலம் என்பது "பரையிடமா நின்று" என்னும் உண்மை விளக்கத்தை (38) நினைவு படுத்துகிறது. திருவைந்தெழுத்தில் சிவ-ஞானநடம்; நம-ஊன நடனம் எனக் கூறும் திருவருட்பயனை (அஞ்செழுத்தருள்நிலை - 3) நினைவு படுத்துகின்றது.

**திருவுருவும் திருக்கூத்தும் திருவைந்தெழுத்தே :**

சிவத்தினுடைய திருவுருவம் பஞ்சாக்கரத் திருவுருவம் என்பதை நான்காந் தந்திரத்திலும் ஒன்பதாந் தந்திரத்திலும் நாயனார் கூறியுள்ளார். திருக்கூத்தினையும் திருவைந்தெழுத்தில் அமைத்துக் காட்டியுள்ளார். அவர் காட்டியுள்ள முறை வருமாறு:

1. ந-பாதம்; ம-நாபி; சி-தோள்; வ-வாய் (முகம்); ய-சுடர்முடி (941) இது தூலபஞ்சாக்கரம்.

2. சி-துடிஒலிக்கும் கை; வ-அணைத்த கை (வீசு கரம்); ய-அமைந்த கை (அபயகரம்); ந-தீ ஏந்திய கை; ம-ஊன்றிய தாள் (2796). இது சூக்கும பஞ்சாக்கரம்.

இதில் துடிஒலிக்கும் கையும் அணைத்த கையும் அமைத்த கையும் ஆன்மா வாசியிடை நிற்றலை உணர்த்துகின்றன. தீ ஏந்திய கையும் ஊன்றிய தாளும் ந ம க்களின் நீக்கத்தை உணர்த்துகின்றன எனலாம்.

3. துடி, வீச்சு, அமைப்பு, அனல், மிதிப்பு என்பன முறையே சிவயநம என ஆகும்.(2797). இதுவும் சூக்கும பஞ்சாக்கரம்.

4. துடி - தோற்றம்; அமைப்பு - திதி; அங்கி - சங்காரம்; ஊற்றணைப்பு - திரோதானம்; தூக்கியாடுதல் - அனுக்கிரகம். (2798) இது ஐந்தொழில். அங்கி - அக்கினி; ஊற்றணைப்பு - ஊன்றி அழுத்துதல்.

இங்கு மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றாக இடம் பெற்றுள்ள உண்மை விளக்கம் கூறும்

*"எட்டும் இரண்டும்"* (31)
*"ஆடும்படி கேள்"* (32)
*"சேர்க்கும் துடி"* (33)
*"தோற்றம் துடி"* (35)
*''மாயைதனை"* (36)

என்னும் பாடல்கள் நினைக்கத்தக்கன.

**திருமந்திரமும் பழந்தமிழ் நூல்களும் :**

திருமந்திரத்தில் "கொடுகொட்டி பாண்டரங்கம் கோடு சங்காரம்" (2732) என்னும் கூத்துவகைகள் கூறப்பட்டுள்ளன. இங்குக் கலித்தொகை என்னும் சங்க இலக்கியத்தில் வரும் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்பவை பற்றிய குறிப்பும் (கடவுள் வாழ்த்துப் பாடல்) சிலப்பதிகாரத்தில் அரன் ஆடலாகக் கூறப்பட்ட பாண்டரங்கம், கொடுகொட்டி, கொட்டிச் சேதம் (கடலாடு காதை 40-45; நடுகல் காதை 67-75) பற்றிய குறிப்பும் நினைக்கத் தக்கன.

**கூத்து எவ்வாறு நிகழ்கிறது :**

சிவம் ஏனைய பொருள்களை ஆட்டுவதற்காக ஆடுகிறது. எல்லாப் பொருள்களும் அதன் ஆட்டத்துக்கு உட்பட்டு ஆடுகின்றன. இதனை நாயனார் "யாவையும் ஆடிடும் எம் இறை ஆடவே" (2730) எனப் பொதுவாகக் குறிப்பிடு கிறார். மற்றும் "வேதங்கள் ஆட மிகும் ஆகமம் ஆட" (2728) என்பது முதலாகப் பல இடங்களில் சிறப்பாகவும் கூறுகிறார். அது பெரிய பட்டியலாக நீளும். அவற்றுள் "அஞ்சுமுகமாக நின்று ஆடுவதும்" (2738) "ஆறுமுகத்தின் அதிபதி நான் என்றும் கூறு பரன் நான்" (2757) என்றும் வருவன சிறப்பாக எடுத்துக் கூறத்தக்கன.

**திருக்கூத்துக் கண்டவரின் சிறப்பும் அனுபவமும்:**

திருக்கூத்துக் கண்டவரே "அடியவர்" என்னும் சிறப்புக்கு உரியவர் என்கிறார் திருமூலதேவநாயனார். அடியவர் என்பதற்கு "ஆடி ஆர்பவர்" என்றே பொருள் உரைக்கின்றார். (2739) திருக்கூத்துக் கண்டவர்க்குப் புறத்தே நிகழும் அனுபவமாக விம்முதல், வெருவுதல், விழுதல், எழுதல், மெய்சோருதல், தம்மை மறத்தல், சதுர் கெடுதல் என்பவற்றைக் குறிப்பிடுகின்றார். (2743) வெருவுதல் - அஞ்சுதல். சிவத்துக்கு அன்பிலாரைக் கண்டாலும், பந்தத்துக்கு ஏதுவான பொருள்களைக் கண்டாலும் இது நிகழும். விழுதல் - தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குதல். தம்மை மறத்தல்; தன்வயம் இழத்தல். சதுரழிதல் - நான் என்னும் முனைப்புக் கெடுதல். உள்ளத்தில் நிகழும் அனுபவமாகத் தேட்டறுதல். சிந்தைத்திகைப்பு அறுதல். உடம்பு பற்றிய வாட்டம் அறுதல். மனம் புலன்களின்மேல் ஒட்டறுதல். ஆசை அறுதல், ஆனந்த அனுபவத்தின் மேல் நாட்டம் முறுகி எழுதல் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றார். (2744) புளியம்பழத்தைக் கண்டவர்க்கு நாவில் நீர் ஊறுதல் போல் திருக்கூத்துக் கண்டவர்க்கு ஆனந்தக்கண்ணீர் ஊறும் என்கிறார் (2777) இவ்வனுபவம் கண்டவர்க்கு மட்டும் வருவதன்று; கண்டவர் சொல்லக் கேட்டவர்க்கும் வரும் என்கிறார். (2778) திருக்கூத்துக் காணும் தகுதியுடையவர் யார்?

மாயை, மாமாயை கடந்து நின்றாரே திருக்கூத்தைக் காணும் தகுதி யுடையவர் என திருமூலநாயனார் கூறுகின்றார். இவற்றைக் கூறவே கன்மமும் ஆணவமும் கூறப் பட்டனவாம். (2765) இங்கு "மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத் தான் அந்த மான இடத்தே தங்கியிடும்" என வரும் உண்மை விளக்கப்பாடல் (37) நினைந்து மகிழத் தக்கது.

**திருமூலதேவநாயனாரின் வியப்பு :**

திருமூலதேவநாயனார் திருக்கூத்தைத் தரிசித்தவர்; திருக்கூத்தில் அன்பு வைத்தவர்; கூத்தனை உள்ளத்தில் கொண்டவர். திருக்கூத்துப் பற்றி நான்காந் தந்திரத்திலும் ஒன்பதாந் தந்திரத்திலும் விரிவாகப் பல செய்திகளைப் பொறித்து வைத்தவர். அப்படியிருந்தும் "ஆதிநட மாடல் ஆரும் அறிகிலர்" (2786) ஆனந்த மாநடம் ஆரும் அறிகிலர் (2795) "ஆர் அறிவார்" (2722) "ஆர் உரைப்பார்" (2742) "என் சொல்லுமாறு" (2800) என வியந்து பேசுகிறார். இனிநான் எழுதுவதற்கு என்ன இருக்கிறது?

**முடிவுரை :**

திருமூலநாயனார் ஆவடுதண்துறை அடைந்து அரும் பொருளை உறவணங்கிக் குடபால் மிக்குயர்ந்த அரசின் கீழ்த் தேவிருக்கை அமர்ந்தருளிச் சிவயோகம் தலைநின்று ஓராண்டுக்கு ஒரு பாடல் என மூவாயிரம் பாடலாக அருளிச் செய்த திருமந்திரநெறியைப் பலரும் அறியப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டு அவ்வப் பொழுது உரையுடன் நூலினை வெளியிட்டு உதவிவரும் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்து மூன்றாவது குருமகா சந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகளுக்கு மனம் மொழி மெய்களால் வணக்கம் தெரிவித்து இந்த அளவில் இந்தக் கட்டுரையினை நிறைவு செய்கிறேன்.

# சேர்ந்திருந்தேன் சிவனாவடு தண்டுறை

சிவத்தமிழ்ச் செல்வர் சிவ. காந்தி, திருநெல்வேலி.



(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீனத்தில் "சிவத்தமிழ்ச்செல்வர்" எனும் விருது பெற்றவர். திருநெல்வேலி சிவநெறிக் கழகத்தின் செயலாளராக இருந்து, சைவ சமயத் தொண்டுகள் செய்தும், சாத்திரம், தோத்திரம், புராணங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, 30 ஆண்டுகளாக சைவச் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றியும் வருகின்றார்)

*மஞ்சனே மணியும் ஆனாய் மரகதத்திரளும் ஆனாய்*
*நெஞ்சளே புகுந்துநின்று நினைதரும் நிகழ்வினானே*
*துஞ்சும் போதாக வந்து துணை எனக்கு ஆகி நின்று*
*அஞ்சல் என்று அருளவேண்டும் ஆவடுதுறை உளானே.*

(திருநாவுக்கரசர்)

சைவ சமயத்தின் இரு கண்களாக விளங்குவன "திருமுறை", "சாத்திரம்" என்னும் இருவகைத் தொகுப்பு நூல்களாகும். சாத்திரத் தொகுப்பு நூல்களே சைவசித்தாந்தம். இப்போதைய சாத்திர நூல்கள் யாவும் காலத்தால் திருமுறைகட்கு பிற்பட்டவையாகும். ஆயினும் 10ஆம் திருமுறை யாகிய திருமூலரின் 'திருமந்திரம்' காலத்தால் முற்பட்டதோடு சாத்திர நூலாகவும் திகழுவது. நம்பிரான் திருமூலர் தனது சரிதத்தை 22 திருப்பாடல்களால் உரைத்ததால் சேக்கிழார் 28 பாடல்களால் மட்டும் திருமூலர் சரித்திரத்தை உணர்த்தியருளினார். எனவே திருமூலர் வாக்கில் அமைந்த திருமூலர் வரலாற்றை (திருமந்திரம் 73-94) நாம் சிந்தித்து உணர வேண்டியது அவசியமாகும்.

## தன்னைப்பற்றி தான் கூறியது ஏன்?

திருமந்திரம் ஓர் சிவஞான நூல். இந்த ஞானநூல் எந்த உயர்ந்த நிலையில் இருந்து வெளிப்பட்டதென உயிர்கள் அறிந்து, நூலின் பெருமையை உணர்ந்து ஓதி உய்தியடைதல் வேண்டும் என்பதற்காகவே தன் வரலாற்றைத் தானே பகர்கின்றார். அப்படித் திருமூலர் கூற வில்லையெனில் திருமூலரைப் பற்றி உலகோர் அறிய இயலாது போய் விடும். சிவனது வாக்காகிய வேதத்தில் சிவனைப்பற்றி கூறியதால்தான் நாம் சிவனைப் பற்றி அறிய முடிந்தது. அதுபற்றியே திருஞானசம்பந்தரும், சுந்தரரும் இன்னும் பலரும் தன்னைப்பற்றி தனது வாக்கிலே உணர்த்தினார்கள். இந்த உண்மையைக் குமரகுருபரர் சுவாமிகள் திருவாரூர் நான்மணிமாலை பாடல் 29ல் உணர்த்துகிறார்.

***எழுதாக் கிளவிநின் மொழியெனப் படுதலின்***
***நின்பெருந் தன்மை நீயே நவிற்றுதல்***
***மன் பெரும் புலமைத் தன்றே யும்பரின்***
***நின்னோ ரன்னோர் ரின்மையி னின்னிலை***
***கூறாய் நீயெனிற் றேறுந ரிலரால்***
***தன்னுடை யாற்றன் முன்னார் முன்னர்த்***
***தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம***
***நிற்புகழ்ந் திசைத்தனை நீயே .....***

தன் வரலாற்றைச் சொல்லத் தொடங்குகின்ற திருமூலர் முதலில் "நந்தி" எனத் தொடங்குகிறார். திருமூலர் நந்தி இணையடியைத் தலைமேற் கொண்டு குரு தெய்வம் வணக்கம் செய்கிறார். தான் நந்தியருள் பெற்ற நான்மறையோகி என நமக்குக் காட்டுகிறார். அவர் ஆனந்த தாண்டவம் தரிசனம் பெற்று தன்னை ஏற்றுக் கொள்ளும்படி புவனேச்வரி யாகிய அருந்தவச் செல்வியைச் சேவித்துக் கோடியுகம் தவமிருந்தார். அந்தத் தவத்தின் பயனாக நாம் உய்யத் திருவருளே அகத்தியனைக்காண வேண்டுமென வேட்கையைக் கொடுத்து சிவயோகியைத் திருவாவடுதுறையில் வந்து அடையும்படி செய்தது. திருவாவடுதுறையை

யடைந்த திருமூலர், திருமந்திரத்தை வெளிப்படுத்த தான் இருந்த நிலையை 79ஆம் திருமந்திரத்தில் மிகுந்த பொருட்செறிவோடு நமக்கு உணர்த்துகிறார்.

*சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்*
*சேர்ந்திருநந் தேன்சிவ னாவடு தண்டுறை*
*சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்*
*சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே.*

**விளக்கம் :**

*"சேர்ந்திருந்தேன் என்ற சொல் மிகவும் பொருளாழம் உடையது"*

சேர்தல் என்பது வழியிடை உள்ள இடத்தைக் கடந்து முடிவான இடத்தை அடைவது என்று பொருள்படும். (Destination).

**இருந்தேன் :**

சேர்ந்த இடத்திலிருந்து பெயரா வண்ணம் நிலைபெற்றிருத்தல். பெரியபுராணத்தில் சேக்கிழார் காரைக்கால் அம்மையை "சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றாரை" எனக் குறிப்பிடுகிறார்.

**சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனை :**

தனது உடலை கரப்பித்தவரான மாசிலாமணி ஈசனின் வாமபாகத்துறையும் அம்மை தனது நாயகனையே "மதுர மொழியாற் பலகாற் கம்பிதம் செய்திடப் பேசியவள்" ஆதலினால் உயிர்களை இந்நூல் வயப்படுத்த உமையொரு பாகனைத் தாம் ஒற்றித் திருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

**சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை :**

உலகின் கண்ணுள்ள எல்லா இலிங்கங்களும் ஒன்று சேர்ந்து ஒரு இலிங்கமாகி எல்லா ஆன்மாக்களுக்கும் அருளவேண்டி மாசிலா மணியாகிய நாமத்தை கொண்டு இத்தலத்தில் வீற்றிருக்கிறார். ஆகமப்பொருள் உரைக்க வந்த நம் திருமூலர் தீர்க்க தரிசினியாக (இறைவன் உணர்த்த) இத்தலம் சிவாகம சித்தாந்த உபதேசத்தை குருபரம்பரையில் வைத்து அருள அப்பரம்பரையில் வந்த குருமூர்த்திகள் தங்கும் திருமடமும், கிரியா சாதனங்களைச் செய்யும் சீரடியார்களும், நிட்டைகூடும் அன்பர்களும் துறைசையில் விளங்குவார்கள் என்பதறிந்தே ஆவடுதண்துறை அடைந்ததாகத் தலசிறப்பை நமக்கு உணர்த்துகிறார்.

**சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில் :**

இறைவியின் பீஜாட்சர மந்திரத்தை இறைவன் ஏழுமுறை ஓத அம்மனு ஏழு வித்துகளாக வந்தது. முதல் வித்தை தாமே துறைசையில் வித்தி கங்கைநீரைத் தெளித்தார். அதிலிருந்து வெளிப்பட்ட அரசு தளிராகி வளப்பத்துடன் பரந்து கிளையாகி ஓங்கி வளர்ந்து பெருகி அரசவனமானது. அந்த சிவனருட்விருக்ஷமாகிய போதியின் நீழலிற் அமர்ந்து யோக நிலையில் நிலைபெற்றிருந்தார் எனக் குறிப்பிடுகிறார்.

**சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே :**

பிறவியின் நோக்கம் உயிர் உடலைவிடும் போது உயிருக்கும் அருளைக் கூட்டுவிப்பதே. அருந்துயர்கெட அவன் நாமமாகிய திருவைந் தெழுத்தைப் பற்றாதவர் நீர்த் துளிகள் காற்றில் அலைவது போல் அலைப்புண்டு பிறவியில் சுழல்வர். (திருமந்திரம் 2703).

திருவருள்நெறிக்கு வழிகாட்டுவது ஐந்தெழுத்து ஆகையாலும் திருமந்திர நூற்பயன் உயிர்க்கு அருளைக் கூட்டுவிப்பது என உணர்த்தவும் சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே என்று குறிப்பிட்டு அருளினார்.

*திருமூல தேவனையே சிந்தைசெய்வார்க்குக்*
*கருமூல மில்லையே காண்.*

# திருமந்திரம் உணர்த்தும் அறநெறி

- முனைவர். மு. பாலவடிவேல், நெய்வேலி.



(இக்கட்டுரை ஆசிரியர், குமாரதேவர் மடத்து மகாசன்னிதானம் அவர்களால் "இளையஞானி" எனும் பட்டம் பெற்றவர். "நிம்மதி" எனும் மாத இதழின் ஆசிரியர். பல ஆன்மீகக் கட்டுரைகளையும் நூல்களையும் படைத்து வருபவர். நெய்வேலி ஆதீன சைவத்திருமுறை நேர்முகப் பயிற்சி மையப் பேராசிரியராகவும் விளங்கி வருகிறார்)

*சக்கர வர்த்தி தவராச யோகி யெனும்*
*மிக்க திரு மூலனருள் மேவுநாள் எந்நாளோ?*

- தாயுமானவர்.

தோத்திரத்தில் சாத்திரமாகவும், வேத ஆகமங்களின் பிழிவாகவும் போற்றப்படுவது பத்தாம் திருமுறையாகிய திருமந்திரமே ஆகும். பன்னிரு திருமுறைகளும் மந்திரமே என்றாலும் 'மந்திரம்' என்ற பெயரில் அமைந்த நூல். தமது உடம்பை விடுத்துப் பிறர் உடம்பில் புகுந்து பாடிய நூல், மந்திரங்களை அவ்வவற்றிக்குரிய யந்திரங்களில் வைத்து விளக்கும் நூல் எனப் பலத் தனித்தன்மைகளை உடையது திருமந்திரமாகும்.

**திருமந்திரத்தின் மெய்ம்மைகள் :**

திருமந்திரத்தில் உணர்த்தப்படும் மெய்ம்மை களைப் பற்றி,

*"ஊனு டம்பிற் பிறவி விடந் தீர்ந்துலகத் தோருய்ய*
*ஞான முதல் நான்குமலர் நற்றிரு மந்திர மாலை"*

- பெரியபுராணம் - திருமூலர் - 25.

என்பார் சேக்கிழார்.

பன்னிரு திருமுறை வரலாறு என்னும் நூலில்,

"சிவபெருமான் உயிர்கள் மேல் வைத்தப் பெருங் கருணையால் மன்னுயிர்கள் பாசப் பிணிப்பினினின்றும் நீங்கி வீடு பேறடைதல் பொருட்டு வேத சிவாகமங்களை அருளிச் செய்துள்ளார்...."

சிவபெருமான் நந்தியம் பெருமானுக்கு உணர்த்த அவர் வழியே சனகாதியர்க்கும் மூலனுக்கும் உபதேசித்து அருளினார்... என்பார் க.வெள்ளை வாரணார். (ப.தி.வ.முதல் பகுதி.பக்.44)

*'நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு'*

(திருமந்திரம். பாயிரம்.பா.11)

எனவரும் அகச்சான்றால், நந்தியம் பெருமான் வழிப் பெற்ற மெய்ம்மைகளையே 'திருமந்திரமாக' செய்தருளினார் என்க.

பிறவித் துன்பத்தைப் போக்கி நிலைத்த இன்பமாகிய பேரின்பத்தைப் பெறுவதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறமும் தகுதியாக்கிக் கொள்ளுதற்குரிய சாதனங்கள் ( 1 முதல் 3 தந்திரங்கள்), சைவச் சித்தாந்த உண்மைகள் (4 முதல் 6 தந்திரங்கள்), ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கனவாயுள்ள நற்பலன்கள் (7 முதல் 9 தந்திரங்கள்) ஆகிய மெய்ம்மைகளை விரித்துக் கூறும் வகையிலே திருமந்திரத்தை அமைத்துள்ளார் எனலாம்.

**அறநெறி :**

பிறவித் துன்பத்தைப் போக்கவும் பேரின்பத்தைப் பெறவும் முதலில் தன்னை உள்ளும் புறமும் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். அதற்கு ஏதுவாக தூய நல்லொழுக்க அற நெறிகளை முதற்கண் (முதல் தந்திரத்தில்) உபதேசித்து அருளினார்.

திருமூல நாயனார் ஒன்பது தந்திரத்துள் முதல் தந்திரத்தில் அறநெறிகளை உணர்த்துவதற்குக் காரணம் உண்டு. அறம் பொருள் இன்பத்தை உரைத்த வள்ளுவர் பெருமான் அறத்தை மிக்கு உணர்த்த 'அறன் வலியுறுத்தல்' என்னும் அதிகாரத்தை வைத்தார். பிற அதிகாரத்தில் இவ்வாறு வலியுறுத்தவில்லை. இதற்கான காரணத்தைப் பரிமேலழகர்,

*'பொருள், இன்பம் போலாது அறன் இம்மை மறுமை*
*வீடு என்னும் மூன்றனையும் பயத்தலான் அவற்றின்*
*வலியுடைத் தென்பது கூறுவர்'*

என்பார். (பரிமேலழகர் உரை வை.மு.கோ. பதிப்பு. ப.30)

அறநெறி இம்மை மறுமைக்கும் மட்டுமல்லாது வீட்டின்பத்தையும் தருதலால் முற்கூறினார் திருமூலர் எனலாம்.

ஞானம்பெற முயல்வோர் அதற்குத் தகுதியுடையவராகத் தம்மை உள்ளும் புறமுமாக அறநெறியில் நிலைக்கச் செய்தல் வேண்டும். சிவாகமங்கள் உணர்த்தும் பேரின்பத்தைப் பெறுதல் பொருட்டு வினைக்கட்டுடைய உயிர்களைத் தூய்மை செய்வதற்காக அறநெறிகளைத் திருமூல நாயனார் அருளினார் என்க.

**உணர்த்தும் அறநெறிகளின் வகைகள் மூன்று :**

முதல் தந்திரத்துள் அன்புடைமை முதலாக 16 அறங்கள் கூறப்படுகின்றன என்பார் கு.சுந்தரமூர்த்தி. (திருமூலர் திருமந்திரம் 4,5,6, பக்.95)

திருமூலர் கூறும் அறங்களை மூன்றாகப் பகுத்து,

"ஒன்று பாவம் செய்யாதீர்கள் என்பது. இரண்டாவது பாவம் செய்யாதிருந்து அறங்களைச் செய்யுங்கள் என்பது. இந்த இரண்டோடு மூன்றாவது உபதேசம், இறைவனுடைய பேரின்பத்தை உடம்போடு இருக்கும் போதே அவ்வுடம்பு தன் வலியை இழக்காத முன்பே பெற்று நுகருங்கள் என்பது" என்பார் க. வச்சிரவேல் (முதற் பதிப்பின் முன்னுரை தருமையாதீனப் பதிப்பு, பக்.75)

மேற்காணும் மூவகை நிலைகளில் அவ்அறநெறிகளை ஆய்ந்து உணரலாம்.

**பாவத்தை விலக்கும் அறங்கள் :**

இம்மையில் வாழ்வாங்கு வாழவும், அம்மையில் பேரின்பத்தைப் பெற்றுத் துய்க்கவும் விரும்புவோர் முதற்கண் அதற்குத் தம்மைத் தகுதியாக்கிக் கொள்ள உள்ளும் புறமுமாக அறநெறியில் நிலைக்கச் செய்தல் தலையாயது ஆகும். அறநெறியில் நிலைக்க வேண்டுமானால், பாவங்கள் தம்கண் நிகழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பாவங்களைப் பற்றி,

***கொலையே களவு கள் காமம் பொய் கூறுதல்***
***மலைவான் பாதகமாம்*** - பா.எண்.207

என்கிறார் திருமூல நாயனார்.

கொல்லுதல், புலால் உண்ணுதல், பிறன்மனை நயத்தல், கள்ளுண்ணுதல், பொய் கூறுதல் ஆகியவற்றைப் பாவங்கள் என்கிறார். அப்பாவங்கள் தம்கண் நிகழாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும் என்னும் அறவுரையைக் கூறுகிறார்.

மெய்யுணர்வு நிலை பெறுவதற்குத் துணையாய குரு வழிபாட்டிற்குப் பல மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை முதலியன இன்றியமை யாதன ஆகும். ஞான நெறியார் செய்கின்ற அகப்பூசைக்குக் கொள்ளப்படும் எட்டு மலர்க ளுள்ளும் கொல்லாமையே தலையாய அறமாகும் என்பதை,

'மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்' - திருமந்திரம். பா.196.
என அருளுகிறார்.

கொல்லும் பாவத்திற்குத் தூண்டுதலாய் அமைவது புலால் உண்ணுதலே ஆகும். கொலை செய்வதவற்குத் தூண்டுகோலாய் அமைவதால் இது அதனினும் பாவமாகும் என்பதால்,

***'கொல்லாப் புலாலை நுகரும் புலையரை'***
- பா.எ.198

என்று புலால் நுகருவோரைப் 'புலையர்' எனச் சாடுகிறார். புலால் மறுத்தலையே அறம் என்கிறார்.

காமம் பற்றி நிகழும் பாவமான பிறன் மனை நயத்தலை விலக்க வேண்டும் என மூன்று பாடல்களிலும் மகளிர் இழிவு பற்றி ஆறு பாடல்களிலும் அறம் கூறுகிறார். ஈச்சம்பழம், புளிமாங் கொம்பு, மருள் கொண்ட மாதர் என உவமித்து அதனால் வரும் கேடுகளைச் சுட்டிக் காட்டுகிறார்.

காமத்திலும் கள்ளுண்ணுதலிலும் அறிவு அழிதலால் அஃது இம்மைக்குப் பயன்தராது. காமம் கொள்ளுதலும் கள்ளுண்ணுதலும் கீழ்மக்கட் செயல் என்பதை,

*"காமமும் கள்ளுங் கலதிகட் கேயாகும்"*

- பா.324

எனவரும் அடியால் உணர்த்துகிறார்.

பாவச் செயல்களைச் செய்யாமல் இருப்பதற்காக அதனால் ஏற்படும் தீமைகளை விளக்கிக் கூறினார் என்க. கொல்லாமை, புலால் உண்ணாமை, பிறன்மனை நயவாமை, கள்ளுண்ணாமை ஆகியவற்றைக் கைகொள்ளுதல் இன்றியமையாதன என்பது திருமூலர் உணர்த்தும் அறமாகும்.

**செய்ய வேண்டிய அறங்கள் :**

திருமூல நாயனார் நாம் செய்ய வேண்டிய அறங்களில் முதற்கண் உணர்த்துவது ஈகையாகும்.

அவர் இவர் என அவரது தகுதி வேறுபாடு களை ஆராயாது யாவர்க்கும் தானம் செய்யுங்கள். உண்ணும் காலத்தில் விரையச் சென்று உண்ணாது விருந்தினர் வருகையை எதிர்நோக்கியிருந்து பின்பு உண்ணுங்கள் என்பதை,

*ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்*
*பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்*
*வேட்கை யுடையீர் விரைந் தொல்லை உண்ணன்மின்*
*காக்கை கரைந் துண்ணும் காலம் அறிமினே*

- பா.எ.243

என்னும் பாடலால் அறியலாம். தேடிய பொருளைப் பிறர்க்குப் பயன்படச் செய்தலே அறம் என்கிறார்.

மேலும் ஓர் எளிய அறத்தைக் கூறுகிறார்.

*யாவர்க்கு மாம் இறை வற்கொரு பச்சிலை*
*யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை*
*யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி*
*யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே*

- பா.எ.251

எனவரும் பாடலால், மக்கள் யாவரும் தத்தமக்கு ஒல்லும் வகையால் அறத்தைச் செய்தல் வேண்டும் என அருளிச் செய்கிறார்.

'அன்புதான் கனிந்து கனிந்து சிவமாகும்' என்னும் உயரிய கருத்தை,

*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே*

- பா.எ.269

என்னும் வரிகளில் உரைக்கிறார்.

அன்புதான் இம்மையிலும் அம்மையாகிய வீட்டின்பத்திலும் நம்மை வாழ்வாங்கு வாழவைக்கும் என்னும் அறவுணர்வை,

*ஆர்வம் உடையவர் காண்பர் அரன் தன்னை*
*ஈரம் உடையவர் காண்பர் இணையடி*
*பாரம் உடையவர் காண்பர் பவந்தன்னை*
*கோர நெறிகொடு கொங்குபுக் காரே*

- பா.எ.272

என்ற பாடலில் விளக்குகிறார்.

ஆர்வம் என்னும் பேரன்புடையோர் அரனடியைக் காண்பர். சிறிது அன்புடையார் அவனது அருளைப் பெறுவர். அன்பே இல்லாதவர் இல்லறமாகிய பாரத்தை உடையவராகித் துன்பமாகிய பிறவிக் கடலையே காண்பார் என்பதால், அன்பினால் ஏற்படும் பயனும், அஃதில்லார் பெறும் துன்பமும் கூறினார் என்க.

அன்பு செய்வாரை அறியும் சிவன் அவர்களிடம் வந்து அவர்களைத் தன்னோடு சேர்த்துக் கொள்வான் என்பதை,

*தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில்*
*ஈசன்வந் தெம்மிடை ஈண்டி நின்றானே*

- பா.287

என்னும் மந்திர வரிகளால் உணர்த்துகிறார்.

கல்வியின் உண்மைப் பயன் திருவடியைத் தொழுதலே ஆகும் என்பதை, 'வாலறிவன் நற்றாள் தொழாஅ ரெனின்' என்பார் வள்ளுவர் பெருந்தகை.

சிவம் பரம்பொருளைப் பற்றிய கல்வியே உண்மைக்கல்வி. அக் கல்வியால் பாவங்கள் பற்றறக் கழியும். இறைவனது திருவடியைப் பல்லாற்றான் தொழுது அடைதலாகிய அனுபவத்தையும் அக்கல்வி தரும் என்பதை,

*'நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்*
*கற்கின்ற செய்மின், கழிந்தறும் பாவங்கள்*
*சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்*
*மற்றொன் றிலாத மணி விளக் காமே'*

- பா.291

என்பார் திருமூல நாயனார்.

இறைவனது திருவடியை விளக்கும் கல்வியே கல்வி என்பதற்கு நிலையுடையான் கழல் கற்கின்ற

செய்யுமின் என்றார். திருவடிக் கல்வியால் வினை நீங்கப் பெறும். அஃது நீங்கப் பெற்றார் அத்திருவடிகளைத் தொழுவர். அது மட்டுமல்லாது அதனைப் பெற்று இன்புறுவர் என்பதனை உணர்த்த "தொழுதபின் ....மணி விளக்காம்" என்கிறார். திருமூலரின் உள்ளக் கிடக்கையை ஆழ்ந்து சிந்திப்பது நலம் பயப்பதாகும்.

நடுவுநிலைமை என்பதனை அறங்கள் பலவற்றுள்ளும் அடிப்படை அறமாகக் கொள்வார் திருமூல நாயனார்.

*நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை*
*நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை*
*நடுவுநின் றார் நல்ல தேவரு மாவார்*
*நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே*

- *பா.எ.319*

நடுவுநிலைமை உடையார் ஞானம் பெறுவர். தேவர் ஆவர். நரகம் இல்லை. அதனால் அவ்வழியில் நானும் நிற்கின்றேன் என்று நடுவுநிலைமையின் சிறப்பை மேற்காணும் பாடலில் உணர்த்துகிறார்.

ஈகை அறத்தையும், அன்பு செய்யும் திறத்தையும் கல்வியின் உண்மைத் தன்மையையும், நடுவுநிலைமையின் பயனையும் உணர்த்தி அத்தகைய அறங்களைச் செய்யுமின் என்கிறார் நாயனார்.

**உணர வேண்டிய அறங்கள் :**

உயிர்களை அநாதியாகப் பற்றி நிற்கும் மலங்களைப் போக்குவதற்காக உடல், கரணம், புவனம், போகங்களைக் கொடுத்தருள்கிறான் என்பது சித்தாந்தத் துணிபு. இறையருளியவற்றை உயிர் அனுபவிக்கும் போது நல்லது கெட்டதை அறிந்தும், நிலையானவை நிலையற்றவைகளை உணர்ந்தும், நல்லது பற்றி உயிர் உய்தி பெற வேண்டும். அதற்கு ஏதுவாகவே அருளாளர்கள் உபதேசித்தார்கள்.

அவற்றில் ஒன்று நிலையாமை. உயிர் உய்தி பெறுவதற்கு முதற்கண் உணர வேண்டியது நிலையாமை பற்றிய அறிவாகும். நாம் பற்று வைக்கும் ஒன்றின் நிலையாமையை உணர்ந்து கொண்டால்தான் அதன்மீது கொண்ட பற்று குறைந்து அழியும்.

நிலையாமையை உணர்ந்தால் தான் ஒருவனது அறிவு அறநெறியை நாடும். அதற்காக நான்கு அதிகாரங்களில் நிலையாமைப் பற்றி உணர்த்துகிறார்.

உடம்பையே நிலையெனக் கருதி அதன் மீது பற்றுக் கொள்ளக் கூடாது என்பதை,

*'ஊரெல்லாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்*
*பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்*
*சூரையங் காட்டிடைக் கொண்டு போய்ச் சுட்டிட்டு*
*நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே'*

- *பா.144*

என்னும் பாடலால் உணரலாம்.

உடம்பொடு தொடர்புடையது செல்வம். அச்செல்வம் காரணமாக ஒருவனிடத்துச் செருக்கு எழும். அதனை அறுத்தல் பொருட்டும், அதற்குக் காரணமான செல்வம் நிலையாமையை அருளுகிறார் நாயனார்.

தன் நிழலே தனக்கு உதவாது போலவே செல்வமும் துணை போகாது என்பதை,

*'தன்னது சாயை தனக்குத வாதுகண்*
*டென்னது மாடென் றிருப்பார்கள் .....'* - *பா.169*

என்பதால் உணரலாம்.

இளமை நீங்கியவழி உலக இன்பத்தை மட்டுமன்றித் திருவடி இன்பத்தையும் பெறுதல் கூடாதாகலான் உடல் வலிமையோடு இளமையாய் இருக்கும் போதே பேரின்பத்தைப் பெற்று நுகர்தல் வேண்டும். இளமையிலே சிவனடி அடைந்து விட்டமையால் 'முன்னடைந்தான் சம்பந்தன்' எனப் போற்றப்பட்டார்.

கிழக்கே தோன்றும் ஞாயிறு பேரொளியும் வெப்பமும் உடைத்தாய் எழுகிறது. பின்பு வெப்பமும் ஒளியும் குறைந்து மேற்கில் சாய்கிறது. அதுபோலத் தான் நமது இளமையும் என்பதை,

*'கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கில்*
*விழக் கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்'*

- *பா.176*

என்னும் வரிகளால் உணரலாம்.

இறக்கும் காலத்தில் செய்வதைச் செய்து கொள்வோம் என நினைத்தால் அதுவும் கூடாது என்பதை, 'உயிர் நிலையாமை'யில் உணர்த்துகிறார். உயிர் நிலையாமை என்பது உயிர்த் தன்மையாகிய உணர்வின் நிலையாமையைக் கூறுகிறார்.

ஒரு நிலத்தை விளைவு செய்ய ஐந்து உழவர்க்கு விட்டான். அவர்களும் நன்றாகவே செய்தார்கள். ஆனால் உடையவன் நிலத்தை விட்டு விலகிடுமாறு ஓலை அனுப்பினன். அவர்களும் விலகிவிட்டார்கள்.

சிவனின் ஆணைவழி ஐம்பொறிகள் நீங்கிய வழி உயிர் உணர்வைப் பெறுவது எவ்வாறு என்று உயிர்த் தன்மையாகிய உணர்வின் நிலையாமையை,

***ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்***
***ஐவரும் அச்செய்யைக் காவல் விட்டாரே***
- பா-187

என்ற பாடலில் அறிவுறுத்துகிறார்.

யாக்கை செல்வம் இளமை உயிர்த்தன்மை ஆகியவற்றின் நிலையாமையை உணர்ந்தால் தான் ஒருவனது அறிவு அற நெறியை நாடும் என்பதால் அவற்றை உணர்த்தினார் என்க. மேலும்,

அறநெறிகளை, அறம் செய்வான் திறம், கல்லாமை என எதிர்மறையில் உணர்த்திய திருமூலர் உடன்பாட்டு முறையில் 'அக்கினி காரியம், அரசாட்சி முறை, வானச் சிறப்பு' என்னும் மூன்று அதிகாரங்களில் உணர்த்தியுள்ளது குறிப்பிடத் தக்கது.

**வாழ்வாங்கு வாழ :**

பிறவித் துன்பத்தினைப் போக்கி நிலைத்தப் பேரின்பத்தை பெற விரும்புவோர் தம்மை உள்ளும் புறமும் தகுதியாக்கிக் கொள்ள அறநெறிகளைப் பின்பற்ற வேண்டும்.

பாவங்களை விலக்கும் அறங்களைக் கைக்கொண்டு, செய்ய வேண்டிய அறச் செயல்களைச் செய்து, உணர வேண்டிய அறங்களை உணர்ந்து வாழ்ந்தால் இம்மையில் வாழ்வாங்கு வாழலாம்! பிறகு பேரின்பத்தையும் பெற்றுத் துய்க்கலாம்!



அருள்மிகு புத்திரத்தியாகேசர் சன்னதி

# பெரியபுராணத்தில் திருமூலரின் வாழ்வும் வாக்கும்



முனைவர் மு. அருணகிரி, முதல்வர் (பணி நிறைவு), தியாகராசர் கல்லூரி, மதுரை.

(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீனத்தில் 'சைவ உரைநெறிச் சீராளர்" எனும் விருதும், பன்னிரு திருமுறை மன்றத்தில், இயற்றமிழ் வித்தகர் எனும் விருதும் பெற்றுள்ளார். சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளில் சித்தாந்தப் பயிற்சி வகுப்பும், சொற்பொழிவுகளும் நிகழ்த்தி வருகின்றார்)

உள்ளுணர்வான ஞானம் முதலிய ஒரு நான்கு உண்மை தெள்ளுதீந்தமிழால் கூறும் திருமூலர் பெருமையினைத் தெய்வச் சேக்கிழார் சிறப்புறக் காட்டுவார்.

**திருமூலர் வாழ்வு :**

திருநந்திதேவரின் அருள்பெற்ற யோகிகளுள் ஒருவர், தம் நண்பராம் அகத்திய முனிவரைக் காணும் பெருவிருப்பினாலே, கயிலையினின்று பொதிகை மலை நோக்கிச் சென்றார்.

செல்லுங்கால், இடைப்பட்ட திருத்தலங்கள் பலவற்றையும் கண்டு, இருந்து, வணங்கிச் செல்கின்றார். திருக்கேதாரம், பசுபதி நேபாளம், காசி, விந்தமலை, திருப் பருப்பதம், திருக்காளத்தி, திருஆலங்காடு, காஞ்சி, திருவதிகை ஆகிய தலங்களை வணங்கித் தில்லை நகரடைந்தார். கூத்தப்பெருமானைக் கண்டு வழிபட்டார். அங்கிருந்து திருவாவடுதுறை சென்றடைந்தார். உமையம்மையார் பசுவின் கன்றாக இருந்து வழிபட்ட தலம்; இறைவனோடு இருந்து அருள் புரியும் தலம் திருவாவடுதுறை.

எவ்வுலகும் உய்ய எடுத்து அருளிய சேவடியாராம் சிவபெருமானை, செவ்விய அன்புற வணங்கி, சிந்தை களிவரத் திளைத்து, வவ்விய மெய்யுணர்வின் கண் வரும் ஆனந்தக் கூத்தை அவ்வியல்பில் கும்பிட்டு வந்த கயிலை யோகியார், திருவாவடுதுறைத் தலத்தை விட்டு நீங்காததோர் பெருவிருப்பு திருவருளால் உடையவரானார்.

இருப்பினும், அத்தலத்தைவிட்டு நீங்கிச் செல்லுங்கால், காவிரிக்கரைப் பகுதியில் பசுக் கூட்டமொன்று புலம்புவதைக் கண்ணுற்றார். ஆநிரைகளின் புலம்பலைக் காண மனம் கசியாத யோகியார், அவற்றின் துன்பம் நீக்கத் திருவுள்ளம் கொண்டார்.

ஏன் ஆநிரைகள் துன்புற்றன? அருகில் இருந்த சாத்தனூர் எனும் தலத்தைச் சார்ந்த மூலன் எனும் இடையன் ஆநிரைகளை மேய்த்து வரும் இயல்பினன். அவ்வாறு மேய்த்து வருங்கால், விடம் தீண்டப்பெற்று இறந்து பட்டான். அவனால் மேய்க்கப்பெற்ற பசுக்கள், அவனது உடம்பைச் சுற்றி வந்து கதறின; செயலிழந்து வருந்தி நின்றன.

மேய்ப்பவனின்றிப் பசுக்களடைந்த துன்பம் கண்ட தவயோகியார். 'நம்பர் அருளாலே ஆ உற்ற துயர் இவை நீங்க ஒழிப்பன்' என எண்ணினார்.

என் செய்வது? இவன் உயிர்பெற்று எழிலன்றி ஆக்கள் இடர் நீங்கா எனத் துணிந்து, தமது உடம்புக்குக் காவல் செய்து வைத்துப் பரகாயப் பிரவேசம் எனும் சித்தியினாலே, தம் உயிரை மூலனது உடலிற் செலுத்தித் திருமூலராய் எழுந்தார். இவரைக் கண்ட பசுக்களெல்லாம் நாத்தழும்ப நக்கின; அனைத்து கனைப்பொடு நயந்து களித்தன்; மோந்தன; துயர் நீத்தன; பின் மேய்ந்தன.

திருமூலரும் அவைகளைக் காத்து, நீருட்டி, மாலையானபின் அவை செல்லும் வழியே பின்தொடர்ந்து சென்று ஊர்ப் பொதுவெல்லை அடைந்தார். பசுக்களும் தத்தம் மனையடைந்தன.

மூலனது மனைவியாம் நங்கை 'என் கணவர் இன்னும் வரக் காண்கிலனே, யாது நேர்ந்ததோ?' எனக் கலங்கியவாறு தேடிச் சென்றாள். சிவயோகியார் இருந்த இடத்தைக் கண்டாள். அவருடலில் கண்ட மாற்றம் கண்டு மருண்டாள்.

தீங்கு ஏதும் நேர்ந்திருக்க வேண்டும் என எண்ணினாள். அவரருகில் சென்று அணைய முற்பட்டபோது, யோகியார் தடுத்தார். விலகி நின்றார். யாதுமறியாது தனித்து விடப்பெற்ற நங்கை மயங்கினாள்; துயருற்றாள். 'என் செய்தீர்' எனத் தளர்ந்தாள். 'நீ எண்ணியவாறு இங்கு என்னுடன் எத்தகைய உறவும் உனக்கு இல்லை' எனக்கூறி ஊர்ப் பொது மடம் சென்று இருந்தார்; சிவயோகத் திலமர்ந்தார்.

தனது இல்லம் சென்ற நங்கையும் மயங்கித் தவித்து, சான்றோர் பலரிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறி உதவிக்கழைத்தாள். அவர்களும் திருமூலரை அணுகினர்; உண்மை உணர்ந்தனர்; பித்துற்ற மயலன்று; சித்த விகற்பங்களைந்து தெளிந்த சிவயோகத்தில் இருக்கும் இவர்தம் பெருமை அளக்க வொண்ணாதது என்று எண்ணி, நங்கையிடம் இவ்வாறு மொழிந்தனர். 'இவர் பற்றறுத்த நிலையில் உள்ளார். எல்லாம் அறியும் ஆற்றல் உள்ளார் போலத் தெரிகின்றார். முன்னை நிலைமையில் உன்னோடு குடும்பம் நடத்த முனைவார் அல்லர்', நங்கையைத் தேற்றி, அவள் இல்லம் அழைத்துச் சென்றனர்.

யோகம் கலைந்து, பசுக்கள் வந்த வழியே சென்ற யோகியார், மறைத்து வைத்திருந்த தமதுடலைத் தேடினார்; அதனைக் காணாது தனது சிந்தையால் தெளிந்தார். உயிர்களிடம் கொண்ட பெருங்கருணையினால் அருளிய சிவாகமப் பொருளை, திருமூலரது வாக்கினால் தமிழில் உரைக்கவே, தம் திருவருட்திறத்தினாலே யோகியின் பழம் உடலை மறைப்பித்தருளினார் இறைவன் என்று தெளிய உணர்ந்தார். 'இதுவும் ஈசனருள்' என்றார்.

தம்மைத் தொடர்ந்து வந்த இடைக்குலத்தாருக்கு இதனை அறிவுறுத்தினார். சிவனடியே சித்தித்தார். திருவாவடுதுறைத் திருக்கோயிலை அடைந்தார்; அம்மையப்பரை வணங்கினார்; கோயிலின் மேற்கில் மதிப்புறத்தே இருந்த அரசமரத்தின் கீழ் யோக நிலையில் அமர்ந்தார்; சிவபரம்பொருளை நினைந்தார்.

ஊன் உடம்பில் பிறவி விடம் தீர்ந்து உலகத்தோர் உய்யவும்; சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு வழிகளைக் காட்டவும், ஆண்டுக்கு ஒன்று எனப் பாடல் பாடித் தமிழ் மூவாயிரம் எனும் திருமந்திர மாலை அளித்தார்.

திருமந்திரத்தை நிறைவு செய்து, எம்பிரான்தன் திருவருளினாலே, மீண்டும் திருக்கயிலைச் சென்று, முதல்வன் திருவடி நீழலைப் பிரியாமலிருக்கும் நிறை வாழ்வு பெற்றார்.

***''ஒன்றவன்தானே இரண்டவன் இன்னருள்***
***நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து***
***வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்***
***சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே''***

எனத் தொடங்கும் திருமந்திரம் கிடைத்த வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் இவ்வாறு காட்டியுள்ளார்.

**வரலாறு காட்டும் செய்திகள் :**

வரலாறு வெளிப்படுத்தப்பட வேண்டும் என்பது மட்டும் சேக்கிழாரின் நோக்கமன்று. வரலாறு மூலமாக சமய, சமுதாய வெளிப்பாடும், பண்பாடும் புலப்படுத்தப் பட வேண்டுமென்பதே அவர்தம் விருப்பம்.

திருக்கயிலையினின்று பொதிகை நோக்கிச் சென்ற யோகியார் இடையிடையே தங்கிச் செல்ல வேண்டிய காரணம் என்ன? இறைத் தலங்களைக் காண்பதும், வழிபடுவதும் இன்றியமையாமை என்பனவற்றை விளக்கவே.

தாம் எண்ணிய செயலான அகத்தியரைச் சந்திக்க இயலாமல் போனதற்கு யாது காரணம்? இடையிலேயே இடையனது இறந்த உடலைக் காணவும் பசுக்களின் துயரைக் களையவும் நேரிடத்தான் யாது காரணம்?

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பதும்; 'எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின், தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே' என்ற தாயுமானவர் வாக்கும்; 'பிறிதொரு செயல் நடைபெற வேண்டும் பொருட்டே மற்றொரு செயல் தடைப் படுகின்றது' என்ற கருத்தும் ஈண்டு நினைக்கத்தக்கன.

திருமூலர் வரலாற்றில் சேக்கிழார் கையாண்டுள்ள தொடர்கள் பொருள் பொதிந்தவை. ஆநிரைகள் துன்பத்தால் துடிக்கின்றன. துன்பம் தீர்க்க எண்ணுகின்றார் யோகியார். எவ்வாறு தீர்ப்பது என்ற உள் வினாவிற்கு 'இவன் உயிர் பெற்றாலன்றி ஆக்கள் இடர் நீங்கா' என்றும் உணர்கின்றார். இந்நினைவுகளனைத்தும் சிவயோகி யார் உள்ளத்தில் ஏன் தோன்றின? 'நம்பர் அருளாலே... உணர்கின்றார்' எனச் சேக்கிழார் கூறுவார்.

**நம்பர் அருள் ஈண்டு வரக் காரணம் என்ன?**

நந்தியெம் பெருமான் அருள்பெற்ற யோகியருக்கு உலக ஈர்ப்பு ஏற்படலாகாது. அகத்தியரைப் பார்க்கச் செல்லுங்கால் பிற செயல்களில் ஈடுபடக் கூடாது, உலக இன்ப துன்பங்களில் மனங்கொண்டு உழலல் கூடாது. ஆனால், உயிர்களது கன்ம பேதங்களுக்கு ஏற்ப இன்ப, துன்பங்களை இறைவன் ஊட்டுவிக்கிறார்; அவற்றை நாம் தவிர்ப்போம் என முயலுதல் பெரியோர் செயலன்று... யோகியர் போந்த செயலும் கருத்தும் வேறாகியும், இவ்வாறு தாம் கருதாதோர் உணர்வினை மனங்கொள்ளச் செய்தது திருவருள் என்றபடி என்றும், திருவருட் குறிப்பு உலகில் பசுக்களாகிய உயிர்கள் பிறவி விடம் தீர்ந்து உய்யும் வழி காட்டுதலாம் என்றும் சிவக் கவிமணி கூறும் விளக்கம் ஈண்டு குறிக்கத் தக்கது. இடையன் மேய்க்கும் பசுக்களை அடிப்படையாகக் கொண்டு உலக உயிர்களாகிய பசுக்களின் துன்பம் நீங்கி இன்பம் அடையச் செய்வதற்கு யோகியர் மூலர் இறைவர் கொண்ட திருவருட்கிடையாகிய திருவுள்ளமே என்பதற்கு 'நம்பரருளாலே உணர்கின்றார்' எனச் சேக்கிழார் கூறுவார் என மேலும் சிவக்கவிமணி கூறுவார். இடையனின் பசுக்கள் தலைவனைக் காணாது துயரம் அடைந்து அவனைப் பெற வேண்டி நின்ற நிலை போல, பக்குவம் உடைய உயிர்கள் இறைவனைக் காண அருள் வேட்கையோடு நிற்கும். அவர்களுக்குக் கிடைத்த சாதனமே திருமந்திரம் என்பதும் சேக்கிழார் பாடல்களால் விளங்கும்.

சிவபெருமானே ஆகமங்களை அருளினார். அவ்வாகமங்கள் இருபத்தெட்டு. இதனையே 'சடையார்தாம் தந்த ஆகமப் பொருளை' என்பார் சேக்கிழார். இறைவன் தந்த ஆகமங்களின் பொருள் உலக உயிர்களுக்கு விளங்காததனாலே, திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்பக் கண்ணிய அத்திருவருள் என்று மானுட உயிர்களின் பக்குவத்திற்கேற்ப அறிந்து உணரும் விதமாகத்திருமூலரது வாக்கின் மூலம் தமிழில் அருளக் கருதி இறைவர் திருவுளம் கொண்டார் எனச் சேக்கிழர் மொழிவார். திருமூல நாயனார் புராணம் இருபத்தெட்டு திருவிருத் தங்களால் அமைந்ததும் இருபத்தெட்டு ஆகமங்கள் என உணர்த்தவே போலும்!

திருவாவடுதுறையிலமைந்த அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலின் புறக்குடபால் மிக்குயர்ந்த அரசின்கீழ் இருந்து திருமூலர் அளித்த திருமந்திரம் ஊன் உடம்பின் பிறவி விடம் தீர்ந்து, பிறவாப் பேரின்பமாம் இறைவன் திருவடி நீழலில் இருக்க உதவும் வழிமுறைகளைக் கூறும் நூல் ஆகும்.

# திருமந்திரத்தில் குருவருள்



- க. சோமசுந்தரம், இயக்குநர்,
திருவாவடுதுறை ஆதீனம் சைவத்திருமுறை நேர்முக பயிற்சிமையம், சிவகாசி.

(இக்கட்டுரை ஆசிரியர், திருவில்லிப்புத்தூர், சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையத்தின் அமைப்பாளராக உள்ளார். ஆதீனத்தில் சித்தாந்த ரத்தினம், சித்தாந்த சேவா ரத்தினம் ஆகிய பட்டங்களைப் பெற்றுள்ளார். பல இதழ்களுக்குக் கட்டுரையும் வழங்கியுள்ளார்)

*''சைவ சமயத் தனிநாயகன் நந்தி*
*உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு*
*தெய்வச் சிவநெறி சன்மார்க்கம் சேர்ந்துய்ய*
*வையத்துளார்க்கு வகுத்து வைத்தானே"*
(திருமந்திரம் - 1547)

சைவ சமயத்தின் தனிப் பெருந்தலைவர் சிவபெருமானே ஆவார். அவர்தான் கேவல நிலையில் தன்னைப்பற்றி அறியாமல் ஆணவ இருளில் கட்டுண்டு கிடந்த உயிர்கள் உய்வடைய வேண்டுமென்று அவற்றுக்காகத் தனு, கரண, புவன, போகங்களை அளித்த தயாபரன். அவரே அனைத்து உலகங்களுக்கும், உயிர்களுக்கும் தாய், தந்தை, குரு ஆவார்.

அவர் சிவாகமங்களில் தன் திருவடியை அடையக் காட்டிய நெறிகள் நான்கு ஆகும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவை, உயிர்கள் சிற்றறிவுடையவை. மேலும் படி நிலையில் முன்னேறும் திறன் உடையவை. எனவே அவற்றின் அறியாமையை நீக்குபவராகிய குருவாய் விளங்கும் சிவபெருமான் தன் திருவருளை அவற்றுக்கு நல்குகிறார்.

சிவகுருவின் இயல்பைப் பற்றி,

*''பத்தி பணித்துப் பரவும் அடி நல்கிச்*
*சுத்த உரையால் துரிசறச் சோதித்துச்*
*சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்*
*சித்தம் இறையே சிவகுரு வாமே"* - திருமந்திரம்.

அறியாமையில் இருந்த உயிருக்கு முதலில் இறையுணர்வை ஏற்படுத்தித் திருவடியின் பெருமையைக் கூறி திருவடிப் பெருமையைப் பலவாறாகப் புகட்டி, அதன் மன மாசுகளை அகற்றி நிலையான பொருள் எது, அது மெய்ப்பொருளாகிய சிவ பெருமானே என்று தெளிவித்து, நிலையற்ற பொருட்களின் தன்மையை விளக்கிக் கூறி இதுகாறும் அவற்றின் மீது அது கொண்டிருந்த பாசமாகிய பற்றினை அறுத்தும், சத சத்தாகிய உயிரின் தன்மைகளைப் புரிய வைத்த பின் அந்த உயிர் தனக்கு இந்தப் பேருண்மையைப் புரிய வைத்தது சிவமாம் தன்மை எய்தி நின்ற அருளாளராகிய சிவகுருவே என்பதை உணரும்.

**சிவபெருமான்தான் சற்குரு :**

உலகில் பிறந்த உயிர் ஆணவத்தால் கட்டுண்டுத் தனக்கு அறிவு இருப்பதையே மறந்து ஆணவத்தின் போக்கிலேயே செயல்படுகிறது. சிவபெருமானைப் பற்றியோ அவருடைய திருக் கருணையைப் பற்றியோ தெரிய விடாமல் உலகப் பொருட்களின் மீது பற்றும், பாசமும் வைக்கச் செய்கிறது. ஆனால் கருணையே வடிவாகிய சிவபெருமான் குருவாக எழுந்தருளி அந்தக் கட்டினைப் பறித்திட்டு நேசித்த காயம் விடுவித்து நேர் நேரே கூசற்ற முத்தியில் கூட்டு விக்கிறார்.

**குருவருளால் சிவஞான சித்தி கிட்டும் :**

உலகப் பொருட்கள் நிலையற்றவை என்று அறிந்த பின் ஆன்மா தனக்கு முதலாகிய இறைவர் மீது நேசம் கொள்கிறது. அதனால் இறைவரை வணங்குவதற்குரிய சித்தியளிக்கக் கூடிய மந்திரங்களை ஓதி வணங்குகின்றது. சிவபெருமான் கருணையே வடிவானவர் அல்லவா? அதனால் உடனே அந்த ஆன்மாவுக்கு எட்டு வகை சித்திகளையும் யோகத்தில் நிலை பெற்று நிற்கக் கூடிய உறுதிப்பாட்டையும் அருள்வார். அந்த யோகத்தால் அடையப்படும் அட்டமா சித்திகளும். வானம் முதல் எட்டாக விரிந்து நிற்கின்ற சிவபெருமானின் மறைப்பாற்றலாகிய திரோதான சக்தி திருவருட் சக்தியாக மாறிவிடும்.

அதன் பிறகு திருவருட் சக்தி அருள்கின்ற சிவஞானமும், அந்த ஞானத்தின் வழி விளங்கிய சிவம் ஆன்மாவைத் தானாகச் செய்யும் முத்தியும் குருவருளால் இனிதாகக் கிடைக்கும்.

**குருநாதரே சுத்த சிவம் :**

***"எல்லா உலகிற்கும்...... சுத்த சிவமே"*** (தி.மா.1556)

ஆன்மாவிற்குச் சிவபெருமானின் திருக் கருணையை உணர வைக்கின்ற குருநாதர் சுத்த சிவமாக விளங்குகிறார் என்று திருமூலர் மொழிகிறார். சிவபெருமான் நின்மலன், நிமலன், எனவே சுத்தசிவம் என்று இத் திருப்பாடலில் கூறியருளியுள்ளார். அவர் அனைத்து அண்டங்க ளையும் கடந்து நிற்பவர். ஆனால் எல்லா உயிர்களும் உய்தி பெற வேண்டும் என்ற பெருங் கருணையினால் இவ்வுலகிற்கு வந்து நல்ல ஆன்மாக்களின் உள்ளத்தில் திருவருளைப் பதிய வைப்பதால் உணர வைக்கின்ற ஞான குரு சுத்தசிவனே ஆவார்.

இறைவனே குருவாகவந்து குருவருள் புரிகின்றார்.

***"தேவனும் சுத்தகுருவும் .....***
***யாவையும் நல்கும் குருபரன் அன்புற்றே"***

தி.மந்.1557

சிவபெருமான் மாணாக்கர்களுக்கு இருவித மாகத் திருவருள் புரிகிறார். தானே நேராக அருள் செய்தல் ஒருமுறை. மற்றொரு முறை மானுடச் சட்டை தாங்கி ஞானகுருமூர்த்தியிடமாக நின்று அருளுதல். இவ்வாறு குருவாய்த் திருவருள் புரியும்போது அந்தக் குரு மாணாக்கன்பால் மிகவும் அன்பு கொண்டு அறிவுரை கூறும் மொழியால் எல்லாப் பொருள்களையும் பதி, பசு, பாசம் ஆகிய முப் பொருள்களில் அடக்கி உணர வைப்பார். பிறகு அந்த உணர்வினால் அது வரை பிணித்திருந்த பாசத்தை நீக்கி முத்திக் காலத்தில் உண்டாகும் அனைத்து நலன்களையும் அருள்வார். சிவபெரு மான் உயிர்களுக்கு உணர்த்தும் முறைகள் நிராதாரம், சாதாரம் என இருவகைப்படும். 'நிராதாரம்' என்னும் முறை விஞ்ஞானகலர், பிரளயாகலர்களுக்கு அருள்வது ஆகும்.

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள் உடைய சகலர்க்கு குருவிடமாக நின்று அருளுதல் சாதாரம் ஆகும்.

***"சுத்த சிவன் குருவாய் ..... அடி பணிவாரே"***

தி.மந்.1558

**குருவருளாலன்றி சிவஞானம் கிட்டாது :**

***"உண்மையும் பொய்ம்மை ...... ஆரறிவாரே"***

(தி.மந்.1559)

சிவபெருமான் ஒருவரே நிலையானவர். உண்மைப் பொருளாய் விளங்குபவர் சிவபெருமான் என்பதையும், அந்த உண்மையை உணரும் வரை இடையூறாக இருந்த மும்மலங்களின் காரணமாக நிலையில்லாத பொருட்களின் மீது கொண்டிருந்த பற்றை நீக்கியதும், என்றும் நிலையானவராய் விளங்கும் சிவபெருமானிடம் கொள்ளும் உறுதியும், நன்மையளிக்கும் சிவபெருமான் என்னும் அந்த இறைவன் புகழையும் ஆன்மாவின் பெத்தம், முத்தி ஆகிய இரண்டு நிலைகளிலும் உடனாய் நின்று உதவி செய்து வருவதையும் பெத்த நிலையில் புத்தியின் அலைவுகளாகிய அறுபத்து நான்கினையும் அண்ணலாகிய சிவபெருமானின் குருவருளன்றி யாரால் அறிந்து கொள்ள இயலும்?

புத்தி மயக்கம் அறுபத்து நான்கு - புத்தி குண பாவகங்களாகிய தருமம் முதலிய எட்டினுள் அஞ்ஞானத்தின் விரிவு. அதன் கொடுமையின் தீவிரத்தைப் பற்றி குருவருளாலன்றி இவற்றை ஒருவராலும் அறிய இயலாது என்பதை "நானும் என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம் தானும் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலையேல்'' (தி.8.கோத்தும்பி.15)

***"நானார் என் உள்ளம் ஆர் ஞானங்களார் என்னை யாரறிவார்***
***வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்"***

(திருவாசகம் திருக்கோத்தும்பி-2)

எனவும்,

***"ஆகமங்கள் எங்கே! அறுசமயந் தானெங்கே!***
***யோகங்கள் எங்கே! உணர்வெங்கே - பாகத்***
***தருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்***
***பெருவடிவை யாரறிவார் பேசு"***

- திருக்களிற்றுப்பாடியார்-5

எனவும்,

***"ஆரறிவார் எல்லாம் அகன்ற நெறி அருளும் பேரறிவான் வாராத பின்"*** - திருவருட்பயன் 49

எனவும் மேலும் பல நூல்கள் வாயிலாகவும் அறியலாம்.

**குருவே சிவம் :**

**"சிவனே சிவஞானி ...... பரலோகமாமே"**

சிவபெருமான் தான் சிவஞானியாக விளங்குகிறார். எனவே சிவபெருமான் நின்மலன் என்று அவருடைய திருவடிகளை அடைய வல்லவர்களுக்கு புதுமையான தத்துவமாகிய கருவிகளைக் கடந்து விளங்கும் முத்தியாகிய பேரின்பம் கிட்டும், பிறவிப் பிணியின்றி வீடு பேறு அடைவர்.

இதனால் குருவருளால் உண்மையை உணர்ந்து அடைபவர்கள் பெறும் பயனைக் கூறுகின்றது.

***"குருவே சிவம்.......... ஓர் கோவே"*** (தி.மந்.1561)

சிவ கணங்களில் ஒருவரும், திருமூலரின் குருவுமாகிய நந்தியெம்பெருமான் திருமூலரிடம், "குருவாக விளங்குபவர் சிவபெருமான்தான் என்று கூறியதாகக் கூறியருளியுள்ளார். சிவபெருமான்தான் குருவாக எழுந்தருளியுள்ளார் என்பதை உள்ளத்தில் கொள்ளாதவர்கள் அந்த உண்மையை உணர மாட்டார்கள். குருநாதராக எழுந்தருளியிருப்பவர் சிவபெருமான் என்பதால் சிவபெருமானைத் தனித்து வழிபடத் தேவையில்லை. குருவின் ஆணையை சிவபெருமானின் ஆணையாக ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏனெனில் சிவபெருமானே நம் தலைவர். குரு என்பவர் சொல்லாலும் உணர்வாலும் கூறி விளக்குவதற்கரிய மேன்மையான சிவபெருமான்" ஆவார்.

எனவே சிவபெருமானை நம் உள்ளத்தில் கோயில் கொள்ளச் செய்ய வேண்டும். குருவையும் சிவமாகப் பாவிக்கும் நிலையில் குருவின் ஆணையை சிவபெருமானின் ஆணையாக ஏற்று நடக்க வேண்டும். நம் தலைவர் சிவபெருமான். சொல்லாலும் உணர்வாலும் கூறி விளக்குவதற்கரிய மேன்மையுடைய சிவபெருமானே குருவடிவில் எழுந்தருளியுள்ளார். அருவ வடிவிலுள்ள சிவபெருமான் உருவம் கொண்டுள்ள குருவாய் எழுந்தருளியுள்ளார் என்று சிவகுருவை அணுகி நிற்கும் முறைகள் பல கூறப்பட்டுள்ளன.

***"சித்தம் யாவையும் ............. அமர்ந்தானே"*** (தி.மந்.1562)

உயிரின் அறிவு அறியும் எல்லா விடயங்களும் சிவபெருமான் தனது அருளால் அறிவிப்பவை. அந்நிலையில் உயிரின் அறிவு அறியும் எல்லா விடங்களும் உறுதியான சிவமாகவே முடிந்து விட்டால் சிவபெருமான் அந்த அறிவில் வேறொன்றும் தோன்றாதவாறு தன்னை மட்டுமே தோற்றுவித்து நிற்பார்.

உயிரின் அறிவு பக்குவமடையாத போது சிவபெருமான் அதன்கண் வினைக்கு ஈடானவற்றை உணர்த்துவார். உயிரின் அறிவு பக்குவம் அடைந்த பிறகு அவற்றை ஒழித்துத் தன்னையே உணர்த்தி நிற்பார்.

ஞானாசிரியர் சிவபெருமான் தன்னையே உணர்த்தி நின்ற அறிவுடையவராதலால் அவர் அந்தச் சிவபெருமானே ஆவார். குருவே சிவம் என்பது இதனால் உணர்த்தப்படும் பொருள் ஆகும். சிவகுரு சிவமேயாதல் அதன் உண்மையுணர்த்தும் முறையில் கூறியருளப்பட்டது.

***"தானந்தி .......... தனிச் சுடராகுமே"*** (தி.மந்.1563)

சிவபெருமானுடைய சிறப்புகளைத் தன் உள்ளத்தில் பெற்றவர் சிவபெருமானின் இயல்பைத் தனது அறிவில் காணும்படி வைத்த ஆசிரியர் அந்தச் சிவபெருமான் தான் என்னும் சிவபெருமானின் திருவுள்ளத்தை அறிபவர் உலகில் இல்லை. அந்த உண்மையை அறிய வல்ல ஒருவருக்குச் சிவபெருமான் மாலைக் காலத்தில் ஏற்றப்பட்டப் புற விளக்கைப் போன்று ஒப்பற்ற அகவிளக்காய் நிற்பார்.

இதனால் சிவகுருவைச் சிவன் என உணர்தலே சிவபெருமானுடைய திருவுள்ளத்துக்கு மகிழ்ச்சியானது என்பது கூறப்பட்டது.

***"திருவாய ................... ஒண்ணாதே"*** (தி.மந்.1564)

சிவ நல்வினைப் பயனால் கை கூடும் வீடு பேறும், மெய்ம்மையை மறக்காத அருள் நிலையும், மாயையால் ஏற்படும் மயக்கத்தைத் தவிர்த்தருளும் மெய்ப்பொருளாகிய வேத முடிவின் விளக்கமும், தலைவராகிய சிவபெருமான் திருவுருவாய் வரா விட்டால் யாராலும் அறிந்துணர முடியாதவை.

இதனால் சிவபெருமான் உருவாய் வரவேண்டுவதன் அவசியம் கூறப்பட்டது.

**'சிவலோகம்' அளிப்பது ஞானகுரு ஒருவரே :**

***"பக்தியும்......... எளிதாமே"*** **தி.மந்.1565**

சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்றும் குருமார்களின் வழியாகப் பெறலாம் என்றும், ஞானம் ஞானகுரு வழியாலன்றி ஏனையோர் வழியால் பெற முடியாது என்றும் கூறப்பட்டது. இதனால் ஞானகுரு பிற குருமார்களை விட மேம்பட்டவர் என்பது தெளிவு.

***"பின்னெய்த .......... மனமது தானே"*** (தி.மந்.1565)

இவ்வுடம்பு நீங்கிய பிறகு அடைகின்ற பேரின்பப் பேற்றை அதாவது இப் பிறவி நீக்கத்திற்குப் பின் அடையக் கூடிய பேரின்பப் பேற்றை அதற்கு முன்பே அடையும்படிச் செய்த ஞானகுரு சிவபெருமானேயாவார். சிவபெருமானை நிலைபேறாகக் கொண்டு மனம் விளங்கும், அவரை அடையும் காலத்தில் சிவபெருமான் அம்மனதிலிருந்து வெளிப்பட்டுத் தானே குருவாய் விளங்கித் திருவருள் புரிவார்.

***சிவஞானமும், சிவானந்தமும் பெறுவது குருவருளால் தான் :***

***"சிவமான ஞானம் .......... சிவனாந்தம் நல்குமே"***
(தி.மந்.1567)

சிவஞானம் சிவகுருவைத் தவிர வேறு யாராலும் எதனாலும் அடைய முடியாது. அவ்வாறு எய்திய சிவஞானத்தைத் தெளிவாக உணர்வதால் பரசித்தி கிடைக்கும். சிவஞானத் தெளிவால் வீடு பேறு பெறலாம். சிவஞானம் சிவபரதேகம், சிவானந்தத்தையும் அருளவல்லது ஆகும்.

குருவருளால் சிவஞானமும், அதன் அருளால் சிவானந்தம், பரதேகம் ஆகியவையும் விளங்கும்.

சிவகுருவால் அடையும் பயன்கள் :

***"அறிந்துணர்ந்தேன் ...............பிறவியை நானே"***
(தி.மந்.1568)

குருவருளால் அடியேன் இந்தப் பெரிய பூமி முழுவதின் இயல்புகளை முதலில் பொதுவாகவும், பிறகு உண்மையாகவும் உணர்ந்தேன். அவ்வாறு அவருடைய அருளை அடைந்து சிவபெருமானுடைய இயல்பையும் முதலில் கேள்வி ஞானத்தால் அறிந்து, பிறகு ஞான நூல்களை சிவாகம முறைப்படி ஓதி உணர்ந்து சிவபெருமானின் திருவருளைப் பெற்றேன். அதனால் அறிவையிழந்துள்ள உலகத்தாரின் வாழ்க்கையில் சிறிதும் பற்றில்லாதவன் ஆனேன். அதனால் இவ்வுடம்பிலிருந்தும் நீங்கி நிற்கும் நிலையுடையவன் ஆயினேன்.

அறிந்துணர்ந்தேன் இவ்வகலிடம் முற்றும் - தத்துவ சுத்தி.
செறிந்துணர்ந்தோதித் திருவருள் பெற்றேன் - கேட்டல், சிந்தித்தல்
மறந்தொழிந்தேன் - தெளிதல்
மதி மாண்டவர் வாழ்க்கை பிறிந்தொழிந்தேன் இப்பிறவியை
நானே - நிட்டை கூடுதல்

இவ்வரிய பயன்கள் யாவும் சிவகுருவருளால் பெறப்பட்டது என்பதை அறிந்துணரலாம்.

சந்தானாச்சார்யார்களின் திருப்பெயர்கள் வரிசையாக மெய் கண்ட சிவம், அருணந்தி சிவம், மறைஞான சம்பந்த சிவம், உமாபதி சிவம் என அமைந்திருப்பதன் மூலம் 'குரு' வே சிவம் ஆக இருந்து அருள் புரியும் முறைமையை உணர்ந்து கொள்ள முடியும்.

திருச்சிற்றம்பலம்.

# திருமந்திர யோகம்

முனைவர். ப. சுவாமிநாதன், எம்.ஏ., பிஎச்.டி., திருவாவடுதுறை.



(இக்கட்டுரை ஆசிரியர் ஆதீன மேனிலைப்பள்ளித் தமிழாசிரியர். திருமந்திரத்தில் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் எழுதிய திருவாவடுதுறைத் தலவரலாறு, சூரியனார்கோயில் தலவரலாறு, திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் ஆகிய நூல்கள் ஆதீன வெளியீடுகளாக வெளிவந்துள்ளன. "மெய்கண்டார்" எனும் ஆதீனத் திங்களிதழில் மகா சன்னிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் பணியாற்றி வருகிறார்)

சமய தத்துவ உலகில் தொன்மை நலம் வாய்ந்தது யோகக்கலை. இது காலந்தோறும் மக்களை ஆன்மீக வாழ்வில் ஈடுபடுத்தி உய்வித்து வருகிறது. சமுதாய முன்னேற்றத்தில் தனிமனிதனின் உடல், உள்ள வளர்ச்சிக்கு முதன்மையாக விளங்குவது யோகம். இவ்வுலக மக்களின் செம்மை வாழ்விற்கும், வாழ்வின் குறிக்கோளாக இலங்கும் பரலோக வாழ்விற்கும் இவ்வுலகிலேயே அடிப் படையை அமைத்து அவற்றைப் பெறும் நல்லாற்றலையும் புகட்டகிறது யோகம்.

**5.1 யோகம் - சொல் விளக்கம் :**

யோகம் என்ற சொல் **யூச்** என்ற வினைச் சொல்லிலிருந்து பிறந்தது என்பர். அச்சொல்லிற்கு **ஒன்றாகக் கட்டுதல்** அல்லது **ஒன்றாகச் சேர்த்தல்** என்று பொருள். சித்தத்தில் உள்ள விருத்திகளை அடக்குதலே யோகம் என்று பதஞ்சலி விளக்கம் தருகிறார்.

காத, மைத்ராயணி உபநிடதங்கள், **குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து அடக்குவது போன்று புலன்களை அடக்குவது யோகம் என்று குறிப்பிடுகின்றன. இதிகாச புராண காலங்களிலும் யோகம்** என்ற சொல் பலபொருள்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. **பக்தியுடன் செயல்களை அர்ப்பணிக்கின்ற ஒன்றிற்கு யோகம்** என்று பெயர் எனக் கீதை கூறுகிறது.

விடுபடுதல் என்ற பொருளில் பதஞ்சலியால் வழங்கப் பெற்றது யோகம் என்ற சொல். பகவத்கீதை காலத்தில் ஒன்றுதல் என்ற பொருளில் கையாளப்பெற்றது. சாங்கியக் கொள்கைகளையும், யோக சூத்திரங்களையும் ஆழ்ந்து நோக்கின் யோகம் என்ற சொல்லிற்கு விடுபட்டுத் தன்னிலை பெறுதல் என்றே பொருள் அமைகிறது. மேலும், யோகம் என்ற சொல்லிற்கு இலக்கண விதி, முயற்சி, தொழில் குழு, கருவி, மொத்தம் ஆகிய பொருள்கள் உண்டு. யோகம் என்ற சொல் ஒன்றுதல் , அடக்குதல், வெல்ல இயலாததை வெல்லுதல் ஆகிய பொருள்களில் வேதங்களில் பயன் படுத்தப்படுகிறது.

**5.2 இலக்கியங்களில் யோகம் :**

தொல்காப்பிய, சங்க காலங்களில் யோகம் பற்றிய குறிப்புகள் அக்காலத்து இலக்கண, இலக்கியங்களில் ஆங்காங்கே விரவிக் கிடக்கின்றன.

*நாலிரு வழக்கிற் றாபத பக்கமும்*

என்ற தொல்காப்பியத் தொடருக்கு, நச்சினாக் கினியர் உரை செய்யுமிடத்தில், அவ்வறிவர் கூறிய ஆகமத்தின் வழி நின்று வீடுபெற முயல்வாருக்கு உரியவாகிய எண்வகை மார்க்கத்துத் தவம் புரியும் கூறு, வழக்கென்றதனான் அந்நாலிரண்டும் தவம் புரிவார்க்கும் உரியனவும், தவம் செய்து யோகம் செய்வார்க்கு உரியனவும் என இருவகை என்று கொள்க என்று கூறுகிறார்.

பத்துப்பாட்டின் திருமுருகாற்றுப் படையில் **நால்வேறு இயற்கை** எனவரும் தொடருக்கு, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்று கூறப்படுவனவற்றின் யோகப்பயனாம் சாரூப பதமுத்தியை

நச்சினாக்கினியர் குறிக்கிறார். நிலத்தில் புகுதல், வானம் மீதேறுதல், கடலில் செல்லல் என்ற மூன்று சித்திகளைக் குறுந்தொகையும் அகநானூறும் குறிக்கின்றன. சங்க இலக்கியங்களில் யோகம் என்ற சொல் குறிக்கப்படவில்லை என்றாலும் யோகத்தால் பெறும் சித்திகளைப் பற்றிய குறிப்புகளைக் காண முடிகிறது.

சிலப்பதிகாரத்தில் அரிமா யோகம் என்ற சொல் பயின்றுவரினும் அதற்கு மருந்து என்றும் அரைப்பட்டிகை என்றும் உரையாசியர்கள் பொருள் கூறுகின்றனர். இட்டசித்தி எய்துவீராயின் இட்டசித்தி எய்துவீர் நீரே என்ற சிலப்பதிகார வரிகளில் சித்தி என்ற சொல் நினைத்த பொருள் களைப் பெறுதல் என்ற பொருளைத் தருகிறது.

மணிமேகலையில்தான் "யோகம்" என்ற சொல் அதற்குரிய பொருளில் பயன்படுத்தப் பட்டுள்ளது. "உண்டு தெளிந்து யோகத்து உறுபயன்" என்று சாத்தனார் குறிப்பிடும் யோகம் என்ற சொல்லிற்கு மருந்து என்றும், சேர்க்கை என்று உரையாசிரியர் பொருள் கூறினும், யோகம் என்பதற்குச் சேர்க்கை, சேர்தல் என்று அதனின் மூலப்பொருளோடு பொருத்திப் பொருள் கொள்ளலாம். நிலத்தில் குளித்து நெடுவிசும்பேறிச் சலத்தில் திரியுமோர் சாரணர் என்று மணிமேகலை சுட்டும் சாரணர் என்போர் சமண சமயத்தில் சித்திகள் பெற்றோராவர்.

இவ்வாறு தொல்காப்பியர் காலம் முதல் மணிமேகலை காலம் வரை உள்ள நூல்களில் சித்திகள், சித்தர்கள், சாரணர் பற்றிய குறிப்புகள் இருப்பினும், அவை பெரும்பான்மையும் பௌத்த, சமண மதங்களின் வழி வந்தவையே ஆகும். இந்து சமய பதஞ்சலி யோகமுறை தொல்காப்பியர் காலத்தில் சிறந்து, சங்க காலத்தில் தேய்ந்து, பின்னர் திருமூலர் காலத்தில்தான் எழுச்சி பெற்றது என்பதை அறிய முடிகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் தமிழ் யோக நெறிகளைச் செம்மையுடன் பகரும் முதல் நூல் திருமந்திரமே. பதஞ்சலி யோக நூலினோடு ஒத்தும் மாறுபட்டும் காணப்படுகின்ற திருமந்திர யோகப்பகுதி, தமிழ்யோக நெறியாகத் தனிநிலை பெற்றது எனலாம்.

### 5.2.1. திருமுறைகளில் யோகக் கூறுகள்

தேவார, திருவாசகங்களில் யோகநெறிகளின் முறைகளும் கொள்கைகளும் முழுமையாகக் கூறப்படவில்லை. யோகச் செய்திகள் சில ஆங்காங்கே குறிப்பாகச் சுட்டப் பெற்றுள்ளன. இதற்குச் சமயக் குரவர்கள் நால்வரும் பக்தி நெறியையே தங்கள் வாழ்வின் குறியாகவும் நெறியாகவும் கொண்டமையே காரணமாகும். யோகத்தைப் பக்திக்குத் துணையாகக் கொண்டமை யாலேயே இவர்கள் பாடல்களில் யோகக் கருத்துகள் அருகி உள்ளன.

நியம நெறிகளை ஓதியானை தொழற் பாலதே என்று நியமத்தையும் பிரானன், அபாணன் எனும் இருவாயுக்களையும் மூலத்தில் ஒடுக்கிச் சிவத்தை நினைதல் வேண்டும் என்று பிராணயாமத் தையும் தேவாரம் குறிக்கிறது. திருவாசகத்தில் இருபத்து நான்கு பாடல்களில் யோகம் பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன. யோக உறுப்புகள், சித்திகள், யோகம், நான்கு நெறிகள் என்பனவற்றை மணிவாசகர் சுட்டியுள்ளார். இறைவன் யோகமாயும் யோகத்தின் பயனாயும் விளங்குகிறான் என்பதனை, ஒழிவற நிறைந்த யோகமே என்றும் யோகத்தின் பொலிவே என்றும் ஒண்திறல் யோக என்றும் கூறும் மணிவாசகர் வாக்கினால் அறியலாம். மேலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற இந்நான்கு நெறிகளையும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்ற பெயர்களினால் திருவாசகம் குறிப்பிடுகிறது.

### 5.2.2. வைணவத்தில் யோகம்

வைணவ நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முப்பத்திரண்டு பாடல்களில் யோகம் பற்றிய குறிப்புகள் உள்ளன. யோகு, யோகம், சித்தர், யோகிகள், யோகிநித்திரை என்பன போன்ற குறிப்புகள் காணப்பெறுகின்றன. நான்கு மறை களையும் ஓதுவோர் நல்ல யோகத்தினார் வணங்குவது, பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பத்பநாபனையே என்று திருமழிசையாழ்வார் கூறுகிறார். ஊழிகள் தோறும் ஆலினிலைமேல் யோகநித்திரை செய்கிறான் திருமால் என்று

பெரியாழ்வாரும் துழாய் மாலை அணிந்த திருமால் தூய்மையான யோகமாய் விளங்குகிறான் என்று திருமழிசையாழ்வாரும் கூறுகின்றனர்.

**5.2.3 சித்தாந்த யோகம்**

சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பதினான்களுள் உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, வினாவெண்பா, இருபா இருபஃது என்ற நான்கு நூல்கள் தவிர ஏனைய பத்து நூல்களிலும் யோகம் பற்றிய குறிப்புகள் எடுத்து ரைக்கப்பெறுகின்றன. ஆதாரயோகம், நிராதார யோகம், ஆனந்த யோகம், சிவயோகம், ஆறாதார யோகம் என்ற ஐந்து நிலைகளில் யோகக் கருத்துகள் விளக்கப் பெறுகின்றன.

1. ஆதார யோகம் - உலகை உண்டாக்கும் திருவருளால் கொடுக்கப்படும் இன்பம் (அல்லது) கருவிகளை நீக்கிக் கரணங்களோடு செய்வது.

2. நிராதார யோகம் - கருவி, கரணங்கள் அனைத்து விடுத்துத் திருவருளால் செய்வது.

3. சிவயோகம் - சிவத்துடன் கூடுதல்.

4. ஆனந்த யோகம் - பேரின்பத்து ஒடுக்கம்.

5. ஆறாதார யோகம் - மூலாதாரம், கொப்பூழ், மேல்வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு என்ற ஆறு ஆதாரங்களில் இறையை நினைந்து, அவனுடன் கூடுதல்.

இறையருளால் தான் யோகம் பயிலவும், அறியவும், அதனாலாய பயன்பெறவும் இயலும் என்பதே சைவ சித்தாந்தக் கொள்கை. உலக இன்பம் நுகராது, சிவனருளை நினைந்தே இருக்கும் சிவ யோகிகள் நாக்கு விழுந்த மணி போன்று செயலற்று இருப்பர் என்று திருவுந்தியார் பாடல் கூறுகிறது.

யோகக் காட்சியின் தன்மையும் சிறப்பும் சிவஞானசித்தியார் சுபக்கத்தில் கூறப்பட்டுள்ளது. அளவைகள் மூன்றனுள் காட்சி வாயிற்காட்சி, மானதக் காட்சி, தன்வேதனைக்காட்சி, யோகக் காட்சி என நான்கு வகையாகக் கூறப்பட்டு அதில் மூன்றாவது யோகக் காட்சி விளக்கப்படுகிறது. அறிவைத் தடுத்து நிறுத்தும் மலங்களை அட்டாங்க யோக சமாதியில் கெடுத்து, ஓரிடத்து ஒரு காலத்து இருப்பன போன்று தோன்றி, மூவிடத்தும் முக்காலத்தும் விரிந்த பொருள்கள் யாவற்றையும் காண்கின்ற காட்சியாய், உயிரினோடு உணர்வாய்த் தெரிவது யோகக் காட்சி எனப்படும் என்று அருணந்தியார் விளக்குகிறார்.

***சரியா கிரியா யோகம் செலுத்திய பின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்***

மூன்று நெறிகளையும் பற்றி அவற்றைக் கடந்த பின்பே, முத்திக்கு வழிகோலும் ஞானத்தை அடைய இயலும் என்பதுடன் நால்வகை நெறிகளில் மூன்றாவது நிலையிலேதான் யோகத்தைச் சைவ சித்தாந்தம் கொள்கிறது என்பதும் விளங்கும்.

**சித்தர் பாடல்களில் யோகம் :**

சித்தர் பாடல்களில் அட்டாங்க யோகமும், குண்டலி யோகமும், ஆறாதார யோகமும் பெரிதும் குறிக்கப்படுகின்றன. ஏமமென்ற பத்தும் சொல்வேன் என்று இயமத்தையும், மகத்தான நேமமென்ற பத்துமாச்சே என்று நியமத்தையும், வாயுதாரணை என்ற பத்து குறட்பாக்களில் பிராணயாமத்தையும், செயல்களிலிருந்து விடு பட்டுத் தன்னில் தானாக இரு என்று பிரத்தியா காரத்தையும், மாயை, மாயை இன்பம், சுத்த சைதன்யம் என்ற மூன்றையும் அறிதலே தாரணை என்று தாரணையையும் மனத்தை அலையவிடாது சிவன் பால் வைத்திரு என்று தியானத்தையும், தத்வல்யச் சமாதி சவ்விகற்பச் சமாதி, நிருவிகற்பச் சமாதி, அனுபோக நிருவிகற்பச் சமாதி, ஆருடச் சமாதி என்று ஐந்து நிலைகளில் சமாதியையும் சித்தர்கள் அட்டாங்க யோகத்தில் குறிக்கின்றனர்.

**5.2.4. தாயுமானவர் கூறும் யோகம் :**

தாயுமானவர் பாடல்களில் நூற்றிரண்டு பாடல்களில் யோகம் பற்றிப் பேசப்படுகிறது. தாயுமானவர் முறையாகத் திருமூலரைப் போன்று யோகப் படிநிலைகளையும், யோக முறைகளையும் இயம்பவில்லை. ஆனாலும், யோகக் கொள்கை களையும், முறைகளையும், குண்டலி சக்தியையும், யோகச் சித்திகளில் குறைபாடுகளையும், யோகத்தின் பயனையும் ஆன்மீக வாழ்வில் அதன்

செயல்திறன் பற்றியும் தம் பாடல்களில் கூறியுள்ளார். சித்திகள் அடைவது யோகத்தின் பயனன்று எனவும் யோகத்தால் ஞானம் பெற்று அதனால் மோன (மௌன) நிலையடைவதே யோகத்தின் பயன் எனவும் தாயுமானவர் தம் பாடல்களில் கூறுகிறார்.



பதஞ்சலி முனிவர் (தியாகேசர் முன் மண்டபத் தூணில் உள்ள சிற்பம்)

**5.3. பதஞ்சலியின் யோகக் கலை :**

உடல் மனத்தின் மீதும், மனம் உடலின் மீதும் ஆதிக்கம் செலுத்துகிறது. இவ்விரண்டையும் மனிதன் தன் கட்டுப்பாட்டில் கொண்டு வரும் போதே மனிதன் மனிதனாக வாழ இயலும். அத்தகு நிலைக்கு மனிதனைக் கொணர்வதற்கு யோகமே அடித்தளமாக அமைகிறது. யோகத்தைக் குறித்து விளக்கமாகப் பதஞ்சலி முனிவர் யோக சூத்திரம் என்ற நூலை வடமொழியில் எழுதியுள்ளார்.

தத்துவ, தர்க்க, உளவியல், அறிவியல், சமய அடிப்படையில் ஆன்மீகத்தைப் புகட்டுகிறது யோகம். மனிதனின் அனுபவத்திற்கும் சாத்திரக் கோட்பாட்டிற்கும் அது முற்றிலும் ஒத்துள்ளது. சிதறுகின்ற மனத்தின் ஆற்றல்களை ஒருங்கிணைத்து, ஆன்மீகப் பாதையின் கண்செலுத்தி விடுதலை அளிப்பது இராசயோகமாகிய பதஞ்சலி யோகம். இதனை அட்டாங்க யோகம் என்றும் கூறுவர். பதஞ்சலியின் யோக தத்துவம் பிரகிருதி (உலகம்), புருடன் (உயிர்) என்ற இருபொருள் உண்மையின் அடிப்படையில் எழுந்ததேயாகும். பிரகிருதியைப் படைப்புக்குள்ளாக்குவதும், புருடனை விடுதலை பெறச் செயல்களைச் செய்கின்றவனும் இறைவன். இவன் இவற்றுடன் தொடர்பற்றுக் காலவேறு பாட்டிற்குள் அகப்படாமல் இவ்விரண்டிற்கும் துணையாய் இருக்கிறான் என்பதே பதஞ்சலியின் யோக தத்துவக் கொள்கை.

உலகம், உயிர், இறை என்ற இம்மூன்றைக் கொண்டு பதஞ்சலியின் யோகத்துவம் உலகின் தோற்றத்தையும் ஆன்மாவின் இயக்கத்தையும் வாழ்வின் பொருளையும் அது இறுதியில் சென்றடையும் இடத்தையும் ஆராய்கிறது. இவ்வுலகம், மனித வாழ்வு, வாழ்வின் போராட்டங்கள் என்ற இவையாவும் பிரகிருதி யினால் தளைக்குட்பட்ட புருடன் விடுதலை பெற்றுத் தன் உண்மை நிலை உணர்தற்கேயாம் என்று பதஞ்சலி கூறுகிறார்.

**5.3.1. பதஞ்சலியும் திருமூலரும் :**

யோகக் கருத்துகளை தமிழில் செம்மையாக முதலில் தந்தவர் திருமூலரே. திருமந்திர நூலில் யோகக் கருத்துகள் நிரம்ப பேசப்படினும் ஒன்பது தந்திரங்களில் மூன்றாம் தந்திரம் முழுவதும் யோகத்தை விரிவாகக் கூறுகிறது. பதஞ்சலியின் யோகத்திற்கும் திருமூலர் யோகத்திற்கும் அடிப்படையில் சில வேறுபாடுகள் உள்ளன. பதஞ்சலி முழுமுதலற்ற இறையுடைய யோகம் கூறிப் புருடன் பிரகிருதியிடமிருந்து விடுதலைப் பெற எண்படி நிலைகளைக் கூற, திருமூலர் சிவனை முழுமுதல் இறையாகக் கொண்டு உயிர் பாசங்களினின்று விடுபட்டு முத்தி பெற அவற்றைப் பயன்படுத்தினார்.

பதஞ்சலியும் திருமூலரும் நந்தியிடம் யோகம் பயின்ற ஒரு சாலை மாணாக்கர்கள் (67) பின்னர் அவர்கள் திசைக்கொருவராகச் சென்று தங்கள் யோகக் கருத்துகளைப் பரப்பினர். முதலில் பதஞ்சலி வடக்கில் வடமொழியில் யோக சூத்திரம் செய்தார். பின்னர் கயிலையிலினின்று தெற்கே வந்த

திருமூலர் தமிழில் திருமந்திரம் செய்தார். ஒரே ஆசிரியரிடத்தில் கற்கும் இருமாணவர் தம் கருத்துகள் மாறுபடுதல் போல் திருமூலரும் பதஞ்சலியும் மாறுபடுகின்றனர்.

பதஞ்சலி யோகத்தை இயம்பி இதுவே வாழ்வின் முழுமையை அளிக்கும் என்றார். அதற்குப் பின் வந்த திருமூலர் அதைச் சிவயோக மாகக் கூறினார். பதஞ்சலி யோக சூத்திரப் பிழிவாகவே யோகத்தைக் கூறியுள்ளார். திருமூலர் தம் குருவாகிய நந்தி கூறிய ஆகமங்களின் வழி ஆகமப் பிழிவாகச் சிவயோகத்தைக் கூறியுள்ளார் எனலாம். பதஞ்சலி முனிவர், யோகத்தையும் அதன் கூறுகளையும் முதன் முதலில் கையாண்டவரா யினும், திருமூலர் அதைத் தாம் கொண்ட நெறிக்கேற்ப மாற்றிக் கொண்டமையும், அவர் கூறியதிலிருந்து மாறுபட்டு அவற்றைத் தமக்கேற்பத் தொகுத்தும், விரித்தும், குறைத்தும், விடுத்தும் புகன்றமை விளக்கமுறுகின்றது.

**5.4. திருமந்திர யோகம் :**

திருமூலர், ஐந்தாம் தந்திரத்தில் நன்னெறி நான்மையதான சீலம். நோன்பு, செறிவு, அறிவு எனும் நெறிகளைக் குறிப்பிடுகிறார். இச்சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கையும் முறையாக ஒழுகினால்தான் இறைவனை அடைய முடியும் என்பது திருமூலர் கருத்து (1507). மறைமொழியாகிய மந்திரத்தின் உண்மையினையும் அதனை விளக்கும் தந்திரமாகிய சிவாகம உண்மையினையும், அதன்வழிப் பயிலும் செறிவு நிலையாம் யோகத்துத் தன்மையையும், அதன் வழிப்பிறக்கும் அறிவு நிலையாம் ஞானத்து இயல்பினையும் பற்றிய அறிவுச் செந்நெறி, சீவன் சிவனாவதற்கு வேண்டுமென்பர் திருமூலர் (2045). இந்நான்கு நெறியினையும் தனித்தனியே ஒழுகுவோரும் ஒருங்கே பயில்வோரும் சிவன் திருவடியை அடைவர்.

இந்நான்கு நெறிகளையும் திருமூலர் சமநிலையில் கருதவில்லை. நால்நெறிகளை ஒரு படிமுறை வளர்ச்சி நிலையாகவே கொண்டார் என இயம்பலாம். ஒன்றினின்று ஒன்று உயர்ந்து நிற்கும் அதே நிலையில், மற்றதன் வளர்ச்சிக்கும் உறுதி பாட்டிற்கும் அதற்குக் கீழுள்ள நெறிகள் அடிகோலுகின்றன என்றே கருதுகிறார். இவற்றைத் தனித்தனியாகப் பற்றுவோர் அவ்வவற்றிக்குரிய பத முத்திகளைப் பெறுவர். ஆனால் நான்கையும் ஒருங்கு பயில்வோர் நான்கையும் பெற்று, இறுதியானதும் உயர்ந்ததுமான பர முத்தியை இறுதியில் பெறுவர். நால்நெறிகளையும் ஒருங்கே பயில்வது சிறந்தது என்பது திருமூலர் கருத்து, இவ்வுலகத்து மக்கள் நன்னெறியில் நின்று சிவனருளில் கலக்கச் சிவவுலகினின்று நந்தி, சீலம் முதலான நால்நெறிகளையும் படைத்தான் என்று திருமூலர் கூறுகிறார் (1477).

பதஞ்சலி, யோகத்தையே சிறந்த நெறியாகவும், அதுவே இறுதிப் பேற்றை அளிக்கும் என்றும், அதுவே சாலும் என்றும் கருதினார். அனைவரும் அவர்களின் மனநிலைகளும் வாழ்வியல் அமைவுகளும் எவ்வாறு இருந்தாலும், பயில வேண்டியது யோகமொன்றே என்றார். பதஞ்சலிக்கு ஒரே நெறி; ஒரே பேறு.

ஆனால் திருமூலர் மக்களின் மன, வாழ்வியல் நிலைகளை உணர்ந்து ஒரே நெறி அனைவருக்கும் உகந்ததாய் இராது என, அவர்களை நான்கு பிரிவுகளாகப் பகுத்து நான்கிற்கும் நான்கு நெறிகளையும் வழங்கியுள்ளார். அவரவர் பின்பற்றும் நெறிக்கேற்பப் பயன்கிட்டும் எனவும் செப்பினார். திறமையுள்ளோர் நான்கையும் பற்றத் தடையேதும் விதிக்கவில்லை. மாறாகப் பற்ற வேண்டும் என்றே விரும்பினார். ஆயினும் யாவற்றினும் உயர்ந்தது ஞானம் என்றும், அது அளிக்கும் பயனே இறுதியானது என்றும், பிற மூன்றும் இதற்கு அடிப்படையை அமைக்கின்றன என்றும் கொண்டார். வாழ்வியல் அடிப்படையில் அனைவருக்கும் உகந்த நெறிகளாம் இவை எனக் கொள்ளலாம்.

இக்கோட்பாட்டுடன் திருமூலர் பிறிதொன்றனுக்கும் அடிப்படை அமைத்திருக் கிறார் எனலாம். நான்கு நெறிகளும் ஒன்றுடன் ஒன்று கலந்து பதினாறு பிரிவுகளாகும் என்றதொரு புதிய கொள்கையையும் வகுக்கிறார்.

**நால்வகை நெறிகள் (1473-1475)**

| சரியை | கிரியை | யோகம் | ஞானம் |
|---|---|---|---|
| சரியையில் | கிரியையில் | யோகத்தில் | ஞானத்தில் |
| சரியை | சரியை | சரியை | சரியை |
| சரியையில் | கிரியையில் | யோகத்தில் | ஞானத்தில் |
| கிரியை | கிரியை | கிரியை | கிரியை |
| சரியையில் | கிரியையில் | யோகத்தில் | ஞானத்தில் |
| யோகம் | யோகம் | யோகம் | யோகம் |
| சரியையில் | கிரியையில் | யோகத்தில் | ஞானத்தில் |
| ஞானம் | ஞானம் | ஞானம் | ஞானம் |

இவற்றுள் பதினாறாவதாக விளங்கும் ஞானத்தில் ஞானமே சிறந்ததாகவும் இறுதியானதாகவும் திருமூலர் பகர்கிறார்.

**5.5. எண்ணுறுப்பு யோகம் :**

இந்திய சமய தத்துவ நூல்களை வரலாற்று நோக்கில் கூறுமிடத்து யோகத்தை முறையாகச் செம்மைப்படுத்தி அமைத்தவர் பதஞ்சலியே. அவர் தம் யோக சூத்திரத்தில் நூற்றுத் தொண்ணூற்று நான்கு சூத்திரங்களில் அட்டாங்க யோகம் என்ற எண்ணுறுப்பு யோகத்தையும், அதன் செயல் முறைகளையும் தத்துவங்களையும் விரிவாகக் கூறியுள்ளார்.

திருமூலர் அட்டாங்க யோகத்திற்குத் தமக்கேற்ப விளக்கமளித்து, அவையாவும் முழு முதலாம் சிவனை நோக்கியே செய்யப் பெற வேண்டும் என்றும் யோகத்தின் குறி, சிவனாயிருத்தல் வேண்டுமேயன்றி ஆன்மாவைப் பற்றியதாக இருத்தல் கூடாது என்றும் கருதினார்.

பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் சிவனை அறிய இயலாது என்பதும் பதிஞானம் ஒன்றினால்தான் சிவனை அடைய இயலும் என்பது திருமூலரின் சைவ சித்தாந்தக் கொள்கை. இதனையே பின்வந்த சித்தாந்தவாதிகளும் கொண்டனர். பதஞ்சலி யோகம் பசுஞானம் தருமேயன்றிப் பதிஞானம் தராது. ஏனெனில் யோகம் குறியாகப் பதியைக் கொள்ளாமையினால் என்பது விளங்கும்.

அதனால் அட்டாங்க யோகத்தைத் திருமூலர் சிவன் துணைநாடி அவனையே பற்றி அவன்பால் செய்யவேண்டும் என்று கருதினார். தாம் ஆகமம் வழி கண்ட யோக முறைகளையும் பதஞ்சலியின் அட்டாங்க யோக முறைகளையும் இணைத்துச் சிவயோகம் என்ற புதிய யோக முறையைத் திருமூலர் வெளிப்படுத்தினார். சிவயோகம் என்ற சொல் முதன் முதலில் காணப்பெறுவது திருமந்திர நூலில் தான். சிவயோகம் என்பதற்குச் சிவனைக் கண்ணாகக் கொண்ட யோகம் எனலாம். இப்புதிய யோகமுறையைத் திருமூலர் தமிழுக்குத் தந்தது தனிச்சிறப்பு. இதுவே திருமூலரின் அட்டாங்க யோகம் பற்றிய கொள்கையாகும்.

அந்நெறி நன்று. இந்நெறி நன்று, என்று அலைந்து அழியாமல், அட்டாங்க யோகத்து நன்னெறியில் உறுதியுடன் நின்றால் அதன் இறுதி நிலையான சமாதி பெறலாம். இந்நெறி செல்வோர் ஞானத்தில் செல்வரேயன்றி மீண்டும் பிறப்பில்லை. இதுவே சமாதியின் பயன்; அதனால் முத்தி பெற்றுய்யலாம் என்பது திருமூலர் கருத்து (551).

இவ்வட்டாங்க யோகத்தின் எட்டுப் படிநிலைகளாகத் திருமூலர் கூறுவன

1. இமயம்
2. நியம்
3. எண்ணிலா ஆதனம்
4. நயமுறும் பிராணாயாமம்
5. பிரத்தியாகாரம்
6. சயமிகு தாரணை
7. தியானம்
8. சமாதி.

இங்குக் கூறப்பட்ட எண்ணிலா, நயமுறும், சயமிகு என்ற அடைமொழிகள் எண்ணிக்கையும் சிறப்பும் நோக்கித் திருமூலரால் கூறப்பட்டவை. முதலில் யோகத்தைப் பகர்ந்த பதஞ்சலி எண் உறுப்புகளின் சிறப்பையும் தொகையையும் பெரிதாகக் கருதவில்லை. அவருக்குப் பின்வந்தோர் யோக உறுப்புகளை வளர்த்தனர். அதனால் ஆதனங்கள், பிராணாயாமம், தாரணை என்பவற்றின் எண்ணிக்கையும், சிறப்பும் வளரலாயின. எந்த ஒரு பொருளின் மீதும் அன்றி இறை மீது மனம் பதிந்தால்தான் தியானம் செய்து சமாதி பெற

இயலும். இறுதி வெற்றிக்குத் தாரணையே வழி கோலுகிறது என்பதனால்தான் சயமிகு தாரணை என்றார் திருமூலர்.

**5.5.1 இமயம் (தீதகற்றல்) :**

எண்யோக உறுப்புக்களில் முதலாவதாக உள்ள இமயம் என்பது தீயனவற்றில் சிந்தை செலுத்தாதிருத்தல் ஆகும்.

தேகேந்திரியங்களில் உண்டாகும் இன்பம் நிலையற்றது என்ற வைராக்கியமே இயமம் என்று திரிசிகி உபநிஷத், தரிசன் உபநிஷத், சாண்டில்ய உபநிஷத், சூதசங்கிதை போன்ற வடமொழி நூல்கள் குறிப்பிடுகின்றன. கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிரம்மச் சரியம், ஏற்காமை என்ற ஐந்தும் இயமம் என்று பதஞ்சலியும், பொய், கொலை, களவு, காமம், பொருள் நசை என்ற இவ்வகை ஐந்தும் அடக்கியதே இயமம் என்று நச்சினார்க்கினியரும் கூறுகின்றனர்.

திருமூலர், இயமம் என்பதில் பதினொரு அருஞ்செயல்களை அடக்கி இருபாடல்களில் கூறுகிறார் (553, 554) 1. கொல்லாமை 2.பொய்யாமை 3. களவாமை 4. எண்குணம் 5.நல்லான் 6. அடக்கமுடைமை 7.நடுவுநிலைமை 8.பகுத்துண்ணல் 9.மாசிலாமை 10.கள்குடியாமை 11.காமமின்மை.

யோகநெறியை மட்டுமே முத்திக்கு வழியாகக் கொண்ட பதஞ்சலி கூறிய இயமம் ஐந்திலிருந்து மாறுபட்டு, திருமூலர் தாம்கொண்ட நெறிக்கும் கோட்பாட்டிற்கும் ஏற்ப தொகுத்தும், விரித்தும், குறைத்தும், விடுத்தும் கூறுகின்றனர். பதஞ்சலி இயமம் ஒவ்வொன்றிற்கும் தனித்தனிப் பயன் கூற, திருமூலர் பதினொன்றனுக்கும் ஒரே பயனைக் கூறுகிறார். இயமத்தான் விருப்பமறிந்து சிவனருளுவன்; இந்திர உலகினை எய்துவர் (632). என்பது இயமத்தின் பயன்.

**5.5.2. நியமம் நோன்றாற்றல் :**

நியமம் என்பது ஒழியாது மேற்கொள்ளுதல் ஆகும். ஒழிதல் எனும் பொருள்தரும் யமம் என்பது நி என்ற இடைச்சொல் பெற்று ஒழியாமை என்ற பொருள் தரும். பதஞ்சலி தூய்மை, மனத்திருப்தி, தவம், அறிவுநூல் கற்றல், இறை நம்பிக்கை என்ற ஐந்தையும் நியமவிதிகளாக் கூறுவர். ஆனால் திருமூலர் பத்து நியம விதிகளைக் கூறுகிறார். **அவற்றின் இயல்புகளும் பயன்களுமாவன :**

| | |
|---|---|
| 1. தவம் | விரதங்களால் உடலை உலர்த்தல்<br>பயன் : காயசித்தி, அணிமாசித்தி |
| 2. செபம் | திருவைந்தெழுத்தை மானசிகம், வாசிகமாக உச்சரித்தல்<br>பயன் : இட்டதெய்வம் வெளிப்படல் |
| 3. சந்தோடம் | பெற்றதில் மகிழ்தல்<br>பயன் : நிரதிசய இன்பம் எய்தல் |
| 4. ஆத்திகம் | சாத்திரங்களில் நம்பிக்கை வைத்தல்<br>பயன் : இருமை பலன்கள் எய்தல் |
| 5. தானம் | சிவனடியார்க்கு ஈதல்<br>பயன் : செய்த தீ வினைகள் குறைதல் |
| 6. சிவவிரதம் | சிவனுக்குரிய விரதங்களை மேற்கொள்ளல்<br>பயன் : இந்திரியம் அடங்குதல், பதிபோகம் மிகுதல் |
| 7. சித்தாந்தக் கேள்வி | முப்பொருள் உண்மைகளை இடைவிடாது கேட்டல்<br>பயன் : பசு, பாச ஞானங்கள் அறிதல் |
| 8. மதம் | சிவவேள்வி செய்தல்<br>பயன் : சிவனருள் பெறல் |
| 9. சிவபூசை | சிவனுக்கு அபிடேக ஆராதனைகள் புரிதல்<br>பயன் : சாமீப பதவி பெறல் |
| 10. தானம் | வேதாகம கிரியைகளில் சிரத்தை<br>பயன் : நல் கன்மம் உடைமை |

**5.5.3 ஆதனம் (இருக்கை) :**

ஆதனம் என்பது யோகம் புரிவதற்கு உகந்த முறையில் கை, கால் முதலிய உடலுறுப்புகளைத் தக்கவாறு அமைத்து அமர்ந்திருக்கும் முறை. நோய், யோகத்தில் வன்மையின்மை, ஐயம், அலட்சியம், திரிபுணர்ச்சி, சமாதிக்குரிய இடம் கிடையாதிருத்தல், கிடைத்த இடத்தில் சித்தம் நிலையாயிருத்தல், முதலியன இல்லாமல் நிறைபேற்றினை அளிப்பதே ஆதனம் என்பர்.

ஆதனங்கள் பலஉள எனக் குறித்த திருமூலர் எட்டு ஆதனங்களை மட்டுமே சுட்டுகிறார். அவையாவன, 1.சுவத்திகாசனம் 2.பதுமாசனம் 3.பத்திராசனம் 4.குக்குடாசனம் 5.சிம்மாசனம் 6.கோமுகாசனம் 7.வீராசனம் 8.சுகாசனம் இவற்றுள் முதல் ஐந்து ஆதனங்களில் விளக்கம் கூறிய திருமூலர் பின் மூன்று ஆதனங்களில் பெயர்களை மட்டுமே குறிக்கிறார்.

2.சுவத்திகாசனம் என்பது முழந்தாளுக்கும் தொடைக்கும் நடுவில் இருபாதங்களையும் வைத்து உடல் நிமிர்ந்து செவ்வையாக அமர்ந்திருப்பதாகும். 2. பதுமாசனம் என்பது வலது தொடையின்மேல் இடது பாதத்தையும், இடது தொடையின் மேல் வலது பாதத்தையும், உள்ளங்கால் மலர நன்றாக இழுத்துப் பொருத்தி, அதன்மேல் இருகைகளையும் மலர்த்தி வைப்பதாகும். 3. குக்குடம் என்பது கோழி. குக்குடாசனம் செய்யும்போது உடல் வளைந்து கோழி போன்று இருப்பதால் இப்பெயர் பெற்றது. பாதங்கள் இரண்டையும் தொடையின் மேல் மாறி ஏற்றி, உடலை முழங்கைகளின் மேல் நிறுத்தி அசையாமல் இருத்தலே குக்குடாசனம். பதுமாசனத்திற்கும் குக்குடாசனத்திற்கும் உள்ள வேறுபாடு, கைகளைத் தொடைக்கு நடுவே செலுத்திக் கீழே ஊன்றி, உடலை முழங்கைக்கு மேல் முக்கித் தூக்குவது ஒன்றேயாம். 4. பத்திராசனம் என்பது வலக்காலைத் தோன்றுமாறு மேல்வைத்து, முழந்தாளின் மேல் கைகளை நீட்டி தளர்ந்த உடலைச் செவ்வையாக நிமிர்த்தியிருப்பது. இவ்வாதனம் கோரக்கச் சித்தரால் பயிலப் பட்டமையால் கோரக்காசனம் என்றும் கூறுவர். 5.சிங்காதனம் என்பது இருகைகளையும் இரு முழந்தாள்களிடையே புகச் செலுத்தி, இரு பாதங்களிலும் படுமாறு நீட்டி, வாயைத் திறந்து கொண்டு இருகண்களும் மூக்கு நுனியை நோக்கியிருப்பதாகும்.

ஆதனங்கள் செய்வதில் வெற்றி பெறின் இருமைகள் நம்மை தடைப்படுத்த மாட்டா என்று பதஞ்சலி கூறுகிறார். ஆனால் திருமூலர், ஆதனம் செய்வோர் தவம் செய்பவரோடு ஒப்பர் என்றும், அமராபதிச் செல்வனாவர். இன்னிசை இசைத்து ஈசனருளால் விருந்தின்பம் பெற்றார்போல் மகிழ்ந்திருப்பர் என்றும் பயன் கூறுகிறார்.

### 5.5.4. பிராணாயாமம் :

பிராணாயாமம் என்பது பிராணனாகிய மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்துதல் என்ற பொருளைத் தருகிறது (பிராணன்-மூச்சுக் காற்று) ஆயாமம் -கட்டுப்படுத்துதல்) இதனைத் திருமூலர் பதினாறு பாடல்களில் விளக்குகிறார். பிராணா யாமம் பற்றி ய அறிவாராய்ச்சிக்கு முன்னர் அதன் தொடர்பான சில அடிப்படைச் செய்திகளை அறிந்து கொள்ளல் இன்றியமையாததாகிறது.

நல்ல நிலையிலுள்ள ஒரு மனிதனுக்குச் சாதாரணமாக இருநாசித் துவாரங்களில் ஏதேனும் ஒன்றில்தான் சுவாசம் நடைபெற்று கொண்டிருக்கும். நோயற்ற உடலுடையோர்க்கு ஒரு நிமிடத்திற்கு பதினைந்து சுவாசம் நடைபெறுகிறது. அந்த வகையில் ஒரு மணிக்குத் தொள்ளாயிரம் சுவாசமும் ஒரு நாளைக்கு 21600 சுவாசமும் நடைபெறுகின்றன.

நம் உடலில் பத்து நாடிகள் உள்ளன. அவையாவன

| | | |
|---|---|---|
| 1. இடைகலை | - | இடப்பக்க நரம்பு மூலாதாரம் தொடங்கி உச்சந் தலை செல்லும் இடது நாசியில் நடைபெறும் மூச்சு |
| 2. பிங்கலை | - | வலப்பக்க நரம்பு மூலாதாரம் முதல் உச்சந்தலை வரை வலதுநாசியில் நடைபெறும் மூச்சு |
| 3. கழுமுனை | - | நடுநரம்பு மூலாதாரம் தோன்றிப் பிரம்ப கபாலம் சென்றடைகிறது |
| 4. சிகுவை | - | உள்நாக்கு நரம்பு மூலாதாரம் தொடங்கி உண்ணாக்கில் நிற்கும்உணவை விழுங்கச் செய்யும் |

| | | |
|---|---|---|
| 5. புருடன் | - | வலக்கண் நரம்பு மூலாதாரம் முதல் வலக்கண் வந்து நிற்கும் |
| 6. காந்தாரி | - | இடக்கண் நரம்பு மூலாதாரம் தொடங்கி இடக்கண் வரை |
| 7. அத்தி | - | வலச்செவி நரம்பு, மூலாதாரம் முதல் வலதுகாசு வரை வந்து நிற்கும் |
| 8. அலம்புடை | - | இடச் செவி நரம்பு மூலாதாரம் தோன்றி இடதுகாது வரை வந்து நிற்கும் |
| 9. சங்கினி | - | கருவாய் நரம்பு |
| 10. குரு | - | மலவாய் நரம்பு |

**பிராணாயாமத்தில் நான்கு நிலைகளைக் கூறுகிறார் பதஞ்சலி :**

1.மூச்சை உள்ளிழுத்தல் (பூரகம் - அப்யந்திர விருத்தி)

2.மூச்சை வெளிவிடல் (ரேசகம் - பாவரிய விருத்தி)

3.மூச்சை அசைவற நிறுத்தல் (கும்பகம் - ஸ்தம்பர விருத்தி)

4.புறத்திலோ அகத்திலோ உள்ள செய்திகளைச் சிந்தித்துக் கொண்டே செயல்படுதல்.

இவற்றுள் பூரகம், ரேசகம், கும்பகம் என்ற மூன்றையும் காலம், இடம், எண்ணிக்கைகளால் நீட்டவும் குறுக்கவும் செய்யலாம். ஆனால் திருமூலர் எட்டு முறைகளைக் கூறுகிறார்.

1. இடமூக்கால் 16 மாத்திரையளவு காற்றை உள்ளிழுத்து 64 மாத்தியரையளவு உள்ளடக்கி 32 மாத்திரையளவு வெளிவிடவேண்டும். இவ்வாறு வலமூக்கில் உள்ளிழுத்து செய்தல் வேண்டும். இதை மாறி மாறிச் செய்யவேண்டும். ஒரே மூக்கு வழியாகச் செய்தல் கூடாது. இதுவே பிராணாயாம முறையாகும்.

2. உடலின் மேல், நாடு, கீழ் எனும் முப்பகுதிகளும் நிறையுமாறு காற்றை உள்ளிழுத்து குறிப்பிட்ட அளவிற்கு மேல் வெளியிடாமல் உள்ளே பதிவித்தல் வேண்டும். இதனை உந்தியில் செய்யவேண்டும்.

3. பத்து நாடிகளிலும் காற்றை இழுத்து மலக்காற்றினை (அபானன்) யும் தடுத்து நிறுத்தினால், இறப்புத் தள்ளிப் போகும்.

4. மூலாதாரத்திலுள்ள நடுநாடி வழியே காற்றைமேலைத் துவாரமாம் கபாலத்தில் ஏற்றினால் சிவனருள் கிட்டும்.

5. முறையான மூச்சுப் பயிற்சியால் ஐம்புலன்களைத் தன்வயப்படுத்தலாம்.

6. தத்துவமசியிடை பிராணனைச் செலுத்தி பயிற்சி செய்யின் செம்பரநிலைக்கு அது வழியாக அமையும்.

7. உயிர்ப்பையும் நாட்டத்தையும் முறைப்படுத்தி ஒருமுகப்பட்ட மனத்தால் எண்ணிப் பற்றற்றவிடத்து பற்றற்று, சிவன் திருவடியைப் பற்ற வேண்டும்.

8. உயிர்ப்பினைப் பிராணாயாமப் பயிற்சியால் அடக்கி, மூலத்தீயை நடுநாடி வழியாக மேலேற்றிச் சந்திர மண்டலத்து அமிழ்தினை உண்டோர் உலகியல் தேறலை விரும்பார்.

இவ்வெட்டும் இறையருளை வேண்டியும், பிராணனை அடக்கச் சிவனருள் வேண்டியும் செய்தல் வேண்டும். பிராணாயாமம் செய்வது சத்திகளைப் பெறுவதற்கு அன்றிச் சிவனிடத்து அன்பு செலுத்தி அவனடி சேர்தல் வேண்டும் என்ற சிவசிந்தனையும் நிகழ்தல் வேண்டும் என்பது திருமூலர் கருத்தாக அமைகிறது.

**பிராணாயாமப் பயன்கள் :**

பிராணாயாமத்தை முறைப்படி செய்தால் நிறைவான இன்பம் தரும்; உற்சாகம் பிறக்கும்; பிறப்பு இறப்பு இல்லை: உடல் இளமையோடு இருக்கும், உடலுக்கு அழிவில்லை, எமபயம் இல்லை : சிவபெருமான் திருவருள் கிட்டும்; உடலுறுப்புகள் சிவக்கும்; உரோமம் கருக்கும்; தோற்றமும் கேடும் இல்லை.

திருமூலர் பதஞ்சலியினும் மாறுபட்ட பிராணாயாம முறையைக் கூறுவது, அவர் காலத்தில் ஒவ்வொரு யோக உறுப்பிலும் ஏற்பட்ட வளர்ச்சி நிலைகளைக் காட்டுவதாய் உள்ளது. பதஞ்சலி, சித்தத்திலுள்ள ஒளியை மூடும் மறைவைத்தான் நீக்க இயலும் என்று கருகிறார். ஆனால் திருமூலர் பிராணாயாமத்தைச் சிவசிந்தனையுடன் செய்வதால், சித்தத்திலுள்ள மறைவு நீங்குவதுடன் அதில் சிவ ஒளியும் வீசும் எனக் கூறுகிறார். பிராணாயாமத்தின் பயன் தாரணைக்குச் சித்தம் தயாராகும் என்று பதஞ்சலி கூற, திருமூலரோ சிவனைச் சேரலாம் என்ற பயனைச் சுட்டுகிறார்.

**5.5.5. பிரத்தியாகாரம் :**

பிர்த்தியாகாரம் என்ற வடசொல்லிற்குத் திருப்புதல் என்று பொருள். அதாவது மனதை ஐம்பொறிகளின் வழியிலிருந்து திருப்பி, ஆறு ஆதாரங்களிலும் நிற்கச் செய்தலே பிரத்தியாகாரம். இதனைத் தொகை நிலை என்று நச்சினார்க்கினியர் தம் தொல்காப்பிய உரையில் கூறுகிறார்.

இப்பிரத்தியாகாரத்தின் இயல்புகளாக நாதபிந்து உந்நிஷத், திரிசிகி உபநிஷத், சாண்டில்யன்உபநிஷத், விஷ்ணு புராணம் முதலானவை கூறுவன.

**பிரத்தியாகாரம் என்பது :**

1. விடய சுகங்களில் சென்று பற்றும் பொறிகளை வலிந்து இழுத்தடக்கல்.
2. எதனையும் சிவமாகப் பாவித்தல்.
3. இறப்பு வரையில் இயற்றும் சுத்தம், அசுத்தம் அனைத்தையும் சிவார்ப்பணமாகச் செய்தல்.
4. பசுகரணங்களைப் பதிகரணங்களாக ஆக்குதல்.
5. சகல விஷயங்களிலும் பாராமுகமாய் இருத்தல்.
6. கால், விரல், குரடு, கணைக்கால், முழந்தாள், தொடை, பாயு, இலிங்கம், நாபி, இருதயம், கழுத்து, மிடறு, அண்ணம், நாசி, கண், புருவநடு, நெற்றி, சிரம் என்ற பதினெட்டு இடங்களிலும் பிராணனை ஏற்றியும் இறக்கியும் நிலைபெறுத்தல்.

உபநிடதங்கள் பிரத்தியாகாரம் இயல்பு களை இவ்வாறாகக் கூற, பதஞ்சலியோ புலன்கள் தம்வழிச் செல்லாமல் மனத்தைப் பற்றுதலே பிரத்தியாகாரம் என்றும் புலனடக்கமே அதற்குரிய பயன் என்றும் கூறுகிறார்.

ஆனால் பிரத்தியாகாரத்திற்குத் திருமூலர் தரும் விளக்கங்கள்

1. புலன்களைப் பல்வேறு நிலைகளில் நிறுத்தல்.
2. பொருட்களின் மேல் செல்லும் புலன்களை இழுத்து அகத்தேயுள்ள சிவனிடத்து நிறுத்தல்.
3. மூலாதாரத்தைத் தூண்டும் ஓம் எனும் பிரணவத்தில் கருத்தை வைத்தல்.
4. பிரமரந்திரத்தில் மனம் வைத்தல்.
5. மாயையையும் பேரொளியாகிய சிவத்தையும் வேறு வேறாகப் பிரித்தறியும் உயிரினை மாயையினின்று பிரித்துச் சிவத்துடன் சேர்த்தல்.
6. இறையையும் ஆன்மாவையும் கரையச் செய்து உணர்த்தல்.
7. இறையை ஆன்மா உணர்வினுள் நோக்கித் தன்மை கெடுதல்.

இவ்வாறு பிரத்தியாகார இயல்புகளைக் கூறும் திருமூலர் அதன் பயன்களையும் கூறுகிறார்.

**பிரத்தியாகாரப் பயன்கள் :**

1. சிவனருளை எய்திச் சிவலோகம் புகலாம்
2. தேவர்கள் உவப்புடன் எதிர்கொள்வர்.
3. பெரும் யோகக் கலை கூடும்; தேகத்திற்கு அழிவில்லை.
4. சிவன் ஒளிவுருவாக உயிருள் கலந்து நிற்பன்.

**5.5.6. தாரணை (பொறை நிலை) :**

தாரணை என்பது மனத்தை ஒருவழி நிறுத்தல் ஐம்புலன்கள் வழிச் செல்லும் மனத்தை அதன்வழி விடாது, ஒருமுகப்படுத்தி சுழு முனை வழியாக வெட்ட வெளியை நோக்குதல் தாரணை என்று திருமூலர் குறிப்பிடுகிறார். மேலும் மண் முதலிய தத்துவங்களை ஒன்றிலிருந்து ஒன்று ஒடுங்குமாறு செய்து சிவனை நினைதல் தாரணை என்றும் கூறுகிறார்.

*அரித்த உடலை ஐம் பூதத்தில் வைத்துப்*
*பொருத்த ஐம் பூதத்தில் தாதியில் போந்து*
*தெரித்த மனாதிசத் தாதியில் செல்லத்*
*தரித்தது தாரணை தற்பரத் தோடே*

இத்தாரணையில் பயனாக அறிவொளி விளக்கத்தைப் பதஞ்சலி கூற திருமூலர்,

1. பிரமன், திருமால் நிலையிலிருந்து உயிர்களுக்கும், தேவர்களுக்கும் வேண்டுவன கொடுக்கும் தன்மை கிட்டும்.

2. மனம் ஒடுங்கும்.

3. இளமையுடன் நீண்டகாலம் வாழலாம்

4. சோதியைத் தரிசிக்கலாம்

5. எண்திசையும் பூமிபோலப் பழகிவிடும்

என்று தாரணையின் பயன்களைச் கூறுகிறார்.

**5.5.7. தியானம் :**

தியானம் என்பது ஒன்றையே தொடர்ந்து நினைத்திருத்தல் என்றும், ஒன்றில் நிலைத்த உள்ள வேறொன்றிலும் சென்று பற்றாமல் பற்றற்றான் பற்றினையே பற்றி நிற்றல் என்றும், தாரணை செய்யப்பட்ட பொருளில் இடையீடில்லாது பொழியும் ஞானவிருத்தி என்றும், மகேஸ்வரனை வேறற்ற நிலையில் இருந்து தியானத்தல் என்றும் பல்வேறு விளக்கங்களைப் பதஞ்சலி யோக சூத்திரமும் சாண்டில்யமும், யோக தத்துவமும் குறிக்கின்றன.

மூர்த்தியைத் தியானத்தல் தியானம் என்றும், மனதை அலையாது சிவனிடம் வைத்தல் என்றும் பரப்பிரம்மத்திடம் விருப்பம் வைத்து அதைத் தொய்வின்றி நெஞ்சில் நினைதல் தியானம் என்றும், குண்டலியின் உள்ளமர்ந்த சிவனைச் சிந்தித்துச் சூரிய, சந்திர, அக்னி மண்டலங்களைப் பார்த்தல் தியானம் என்றும் சித்தர் பாடல்களின் விளக்கங்கள் அமைகின்றன. இறையருளை உணர்தலே தியானம் என்று திருக்களிற்றுப் படியார் சாத்திர நூல் கூறுகிறது. இவ்வாறு திருமூலர் காலத்திற்கு முன்னும் பின்னும் தியானம் பற்றிய கருத்துக்கள் பல உள. ஐம்புலன்களையும் புத்தியையும் விடுத்து நிற்கிற தியானம் இருவகைப்படும் என்பர்.

| | | |
|---|---|---|
| 1. சகுணத் தியானம் | - | உருவத்தைத் தியானித்தல் |
| 2. நிர்க்குணத் தியானம் | - | சோதியைத் தியானித்தல் |

இனி, திருமூலர் தியானம் பற்றி இருபது பாடல்களில் விளக்குகிறார்

கண்கள் இரண்டையும் நடு மூக்காம், மூக்கு நுனியில் வைத்துக் கீழ் நோக்கிப் பார்க்கும் சாம்பவி முத்திரையினால் தியானம் சித்திக்கும் என்று புறநோக்கில் கூறுகிறார். இதனால் உடலுக்கு அழிவில்லை, உயிர்ப்பு புறத்தே செல்லாது. புறப் பொருள்களிடம் செல்லும் உணர்வும் தன்முனைப் பாம் அகங்காரமும் எது நன்று என ஆய்கிற ஆராய்ச்சியும் இருக்காது என்று அதன் பயன்களையும் கூறுகிறார்.

இருகண் பார்வையும் நடுமூக்கில் வைத்து மேல் நோக்கிப் பார்த்துச் சிவனை நினைதல் வேண்டும். புறத்தே செல்லும் வாயுவை உள்ளே ஒடுக்கின் பிறவித் துன்பம் தீரும். இதனைச்சேகர முத்திரை என்பர் இது அகநோக்குடையதாகும். ஓசையின் முடிந்த நிலையை நினைக்கிற சிவன் வெளிப்பட்டுத் தோன்றும் என்கிறார் திருமூலர்.

நிலைத்த ஒன்றில் இடையீடில்லாது செல்லும் அறிவுப் பிரவாகமே தியானம் என்றும் தியானப் பொருள் எதுவாகவும் இருக்கலாம் என்றும் தியானத்தின் பயன் சமாதி என்றும் பதஞ்சலி விளக்கம் கொடுக்கிறார்.

ஆனால் திருமூலர், ஆறு ஆதாரங்களில் உயிர்ப்பை அடக்கிச் சிவனை நினைதலே தியானம் என்றும், எந்தெந்த இடங்களில் தியானம் எவ்வாறு செய்யவேண்டும் என்றும் சிவன் மட்டுமே தியானப் பொருளாக இருத்தல் வேண்டும் என்றும் தியானத்தின் பயன் முத்தொழில் வன்மையும் முத்தெய்வ நிலையும் இந்திரவாழ்வும் கிட்டும் என்றும் கூறுகிறார்.

**5.5.8 சமாதி :**

சமாதி என்பது உயிரும் இறையும் இரண்டற ஒன்றிச் சங்கற்ப விகற்பங்கள் இன்றி இருக்கும் நிலை

என்றும், அதனைத் திருமந்திரம் அன்றி ஏனைய நூல்கள் அப்பொடு பெய்த உப்பே போல உயிரினிடமாக மனம் ஒன்றும் நிலை என்றும் சீவாத்துமா, பரமாத்மாக்களின் நெருக்கம் என்றும் உரைப்பார் அறிஞர்.

**பதஞ்சலி கூறுவன :**

1. தியானத்தால் குறித்த பொருளின் தன்மையை அறிவது சமாதி.
2. தியானத்திற்கு ஒரு பொருளாகவும், சமாதியில் சென்றடைவது ஒரு பொருளாகவும் அமையும்.
3. கைவல்யம் பெறுவதே சமாதிப் பயன்.

**திருமூலர் கூறுவன :**

1. மனமடக்கிச் சிவனைக்கண்டு திருவடிப்பேறு எய்வது சமாதி.
2. தியானப் பொருளாகவும் சமாதியில் சென்றடையும் பொருளாகவும் இருப்பது சிவனே.
3. சிவனைச் சேர்தலே சமாதிப் பயன்.

மேலும் அகத்தே மட்டும் நிகழும் பிரத்தியாகாரம் முதல் சமாதி வரையிலான யோகக் கூறுகளை இணைத்து திருமூலர் கூறுவன.

1. பிரத்தியாகாரம் என்பது பொறிவழியே சென்று ஆறு ஆதாரங்களிலும் செலுத்துதல் என்றும், தாரணை என்பது அவ்வாறு சென்ற மனத்தை மீண்டும் பொறிவழியே செல்லாமல் தடுத்து அவ்வாதரங்களிலே நிறுத்துதல் என்றும் அவ்விடங் களிலெல்லாம் ஊன்றி நினைத்தல் தியானம் என்றும் அத்தியான முயற்சியால் தன்னை மறந்து அவ்வாதார பொருளேயாய் விடுதல் சமாதி என்றும் கூறுகிறார்.

சிவத்தை அன்பு செய்து புறப்பொருளின் மீது விளையும் ஆசையை ஒடுக்கிச் சென்று உச்சக் கொம்பாகிய சுழுமுனையில் சென்று கும்பகம் செய்து கலந்திருப்பதே சமாதியாகும் என்பர் திருமூலர்.

*கற்பனை அற்றுக் கனல்வழியே சென்று*
*சிற்பனை எல்லாம் சிருட்டித்த பேரொளிப்*
*பொற்பனை நாடிப் புணர்மதி யோடுற்றுத்*
*தற்பரமாகத் தரும்தண் சமாதியே*

என்று சமாதி விளக்கம் தரும் திருமூலர் அச் சமாதியின் பயன்களாக கூறுவன.

1. சமாதி கூடினால் அந்தமிலாத அறிவின் அரும் பொருளாகிய சுந்தரச்சோதி தோன்றியருளும்.
2. சமாதி கூடினால் காலன் என்ற வார்த்தை கனாவிலும் இல்லை.
3. சமாதியிலே நிற்பார் திருவடி ஞானம் சேர்வர்
4. சமாதி செய்வார்க்குப் பல யோகங்கள் சித்திக்கும், அறுபத்து நான்கு கலைகளும் சித்தியாகும்; சிவத்தோடு ஒன்றியிருக்கலாம்.



சுவாமி விமானம் மேல் தளம் - மூன்று கோபுரங்கள்

# துறைசைச் சிற்றிலக்கியக் கட்டுரைகள்



அகத்திய மாமுனிவர் (கருவறை தென்புறச்சுவரில்)

# கோவை காட்டும் துறைசை

கி.வா. ஜகந்நாதன்.

(திருவாவடுதுறை ஸ்ரீகோமுக்தீசுவரர் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் (1972) பக்.59ல் வெளிவந்தக் கட்டுரை)

சிவம் பெருக்கும் திருத்தலமாயும் தமிழ் வளர்க்கும் திருக்கோயிலாகவும் விளங்குவது திருவாவடுதுறை. சைவசமயாசாரியர் நால்வரும் பாடிய பெருமை பெற்றது இத்தலம். மூவாயிரம் பாடல்களாகிய திருமந்திரத்தை இத்தலத்தில் தவம்கிடந்து திருமூலநாயனார் பாடியருளினார். சித்தராகிய திருமாளிகைத் தேவர் எழுந்தருளியிருந்த திருப்பதி. நவகோடி சித்தர்கள் வாழ்ந்தமையின் இதற்கு நவகோடி சித்தவாசபுரமென்ற பெயர் உண்டாயிற்று. படர் அரசிருத்தலின் அரசவனம், அரசூர் என்ற திருநாமங்கள் அமைந்தன.

பசுவடிவம் பெற்ற அம்பிகை இங்கே வழிபட்டுத் தன் வடிவம் மாறி இறைவனால் அணைக்கப்பெற்றாள். அதனால் இத்தலத்துக்கு ஆவடுதுறை என்ற பெயர் வந்தது. ஆவின் வடிவத்தை நீக்கிய இடம் என்பது அதன் பொருள். அதுவே கோமுத்தி, கோகழி எனவும் வழங்கும். அம்பிகையை அணைத்தெழுந்த காரணத்தினால் இறைவனுக்கு அணைத்தெழுந்தநாயகர் என்ற திருநாமம் அமைந்தது. அந்தக் கோலத்தில் அந்தத் திருநாமத்துடன் உள்ள உற்சவ மூர்த்தியை இத்தலத்தின் திருக்கோயிலில் காணலாம். முசுகுந்த சக்கரவர்த்திக்குத் தியாகேசராகத் தோன்றி மகப் பேறடையும் வரம் தந்தமையின் புத்திரத்தியாகர் என்ற திருப்பெயருண்டாயிற்று. ஞானசம்பந்தர் தம் தந்தையார் வேள்விசெய்தற் பொருட்டுப் பொன் வேண்டியபொழுது ஆயிரம் பொன் இறைவன் அருளினான். கழுமல வூரர்க் கம்பொன் ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே, என்று அப்பர்சுவாமிகள் இதனைச் சிறப்பித்துப் பாடுவார். இதனால் சொர்ணத்தியாகர் என்ற திருநாமம் எழுந்தது.

இங்கு எழுந்தருளிய பெருமானுக்கு மாசிலா மணியீசர் என்பது திருநாமம். அம்பிகையின் திருநாமம் ஒப்பிலாமுலை அம்மை; அது வடமொழியில் அதுல்யகுசாம்பிகை என்று வழங்கும்.

இதற்குப் பழைய புராணம் உண்டு. ஒரு கோவையும் கலம்பகமும் இருக்கின்றன. ஓர் அந்தாதியும் உண்டு. சிவஞான முனிவருடைய மாணாக்கராகிய தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றியது திருவாவடுதுறைக் கோவை. அதை மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயராவர்கள் பதிப்பித்திருக்கிறார்.

சொற்பொருட்சுவை நிரம்பிய அந்தக் கோவையில் இந்தத்தல சம்பந்தமான பல செய்திகளை இணைத்துப் பாடியிருக்கிறார் சுப்பிரமணிய முனிவர். கோவையில் வரும் கதைப் போக்கினிடையே உள்ள காட்சிகளோடு பொருந்தி யமையும்படி அந்தச் செய்திகளைச் சமற்காரமாக இசைத்துப் பாடிய திறம் போற்றி மகிழ்வதற்குரியது. அவற்றை இனிப்பார்க்கலாம்.

கோவையில் உள்ள துறைகளில் ஒன்று இடையூறு கிளத்தல் என்பது. அதை நாணிக் கண் புதைத்தல் என்றும் சொல்வதுண்டு. அடுப்பாரும் கொடுப்பாரும் இன்று அறிவினாலும் திருவினாலும் எழிலாலும் ஒத்துநின்ற ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இறைவன் திருவருளால் தனியே ஒரு பூம்பொழிலில் சந்திக்கிறார்கள். அவர்கள் இடையே காதல் முகிழ்க்கிறது. அவன் அவளை அணுகுகிறான். அப்போது அந்தப் பெண் நாணத்தினால் தன் கண்ணை மூடிக்கொள்கிறாள். அப்போது காதலன், உன் கண்ணை மட்டுந்தானே மூடுகிறாய்! மற்ற அங்கங்கள் என் உள்ளத்தைக் கவர்கின்றனவே! என்று சொல்கிறான். இது தான் இடையூறு கிளத்தல் என்னும் துறை.

கண்ணைக் கைகளால் பொத்திக் கொண்டவளைப் பார்க்கிறான் காதலன். அவள்

மார்பு திறந்திருக்கிறது. கண்ணைமூடி மார்பைக் காட்டுகிறாயே! என்று சொல்ல வருகிறான். திருவாவடுதுறைக் கோவையில் வரும் காதலன் நீ இங்குள்ள சிவபெருமானைப் போல ஆகி விட்டாயே! என்று சொல்கிறான். சிவபெருமான் செய்த காரியத்தையே இவளும் செய்கிறாள். சிலேடையாகப் பேசி இரண்டுபேரும் செய்தது ஒன்றே என்று சொல்கிறான். சிவபெருமான் தம் திருக்கரத்தினால் அம்பிகையின் பசு வடிவத்தை மறையச் செய்து, ஒப்பிலாமுலையம்மையை வெளிப்படுமாறு காட்டியருளினார். கோ- என்ற சொல் கண்ணையும் குறிக்கும்; பசுவையும் குறிக்கும். இறைவன் கோவை மறைத்தான்; இவளும் கோவை மறைக்கிறாளாம். அவன் ஒப்பிலாமுலையைக் காட்டினான். இவளும் ஒப்பிலாமுலையைக் காட்டுகிறாளாம். இறைவனு க்குச் சொல்லும்போது அத்தொடர் அம்பிகையைச் சுட்டுகிறது. காதலிக்குச் சொல்லும்போது அது அவள் அங்கத்தைக் குறிக்கிறது.

காதலன் சொல்கிறான். ஒருவரோடு ஒருவர் பொருதுகின்றபோது தோற்றவர் காட்டுக்கு ஓடிவிடுவார்கள். இங்கே காதலியின் கரம் தாமரையைவிட அழகாக இருக்கிறது. அதன் அழகுக்குப் பங்கேருகமாகிய தாமரை தோல்வி யடைந்துவிட்டது. அது வனத்துக்குப் போய் விட்டதாம். அவள் கை தாமரையை வனத்துக்கு ஓட்டிவிட்டதாம். வனம் என்பதற்கு நீர் என்றும் காடு என்றும் பொருள்கள் உண்டு. காட்டுக்கு ஓட்டிவிட்டது என்ற பொருள் தொனித்தாலும், தாமரை நீரிலே நிற்பதையே அவ்வாறு சிலேடை நயத்தால் தோன்றும்படி சொன்னான். அத்தகைய கையால் நீ உன்கண்ணை மூடியிருக்கிறாய், என்று சொல்கிறான். கண் என்பதற்குரிய சொல்லாகிய கோ என்பதைச் சொல்லிப் பசு என்னும் பொருள்பட வைக்கிறான். இனிப்பாட்டைப் பார்க்கலாம்.

*பாட்டு அரி ஆலிக்கும் பங்கே*
*ருகத்தைப் பழித்துவனத்து*
*ஓட்டிய அத்தத்தில் கோவைக்*
*கரந்துஒப்பி லாமுலையைக்*
*காட்டிநின் றீர்மட வீர்: அத*
*னால்கவி னார்துறைசை*
*ஆட்டினர் சொர்ம்பொற் தியாகேச*
*ரேஎன் ஆயினிரே.*

(பாட்டுக்களைப் பாடும் வண்டுகள் ஆரவாரம் செய்யும் தாமரையைத் தம் அழகினால் பழ பெறும்படி செய்து வனத்துக்கு (காட்டுக்கு, நீருக்கு) ஓட்டிய கைகளில் கோவை (கண்ணை, பசுவை) மறைத்து ஒப்பிலாமுலையை நான் காணும் படி காட்டிநின்றீர்; பெண்ணே! அழகு நிரம்பிய திருவாவடுதுறையில் திருநடனம் செய்த சொர்ணத் தியாகேசரே நீர் என்றும் சொல்லும்படி ஆயினீர்.)

இந்தப் பாட்டில் இறைவன் இறைவியின் பசு வடிவத்தை மாற்றி இயல்பான உருவத்தை எடுக்கச் செய்த திருவிளையாடலைச் சிலேடையினால் பெறவைத்தார் ஆசிரியர்; இறைவனைச் செம் பொற்றியாகேசர் என்ற பெயரால் சுட்டுகிறார். திருஞானசம்பந்தருக்குப் பொற்கிழி அளித்ததனால் வந்த திருநாமம் அது. அந்தத் திருவிளையாட லையும் நயம்பட இணைப்பார் ஆசிரியர்.

காதலன் காதலியை அணைத்து இன்புறுகிறார். அந்த இன்ப மயக்கத்தில் அவளைப் புகழ்கிறான். அவளுடைய பருவச் சிறப்பைக் காட்டும் நகில்களைப் புகழ்கிறான். சிற்றின்ப மயக்கத்தில் உள்ளவனாதலின் இன்னது சொல்கிறோ மென்பதை உணராமல் சொல்கிறான் என்றாலும் இத்தலத்து இறைவன் செய்த திருவிளையாடலை நினைக்கின்றான். திருஞானசம்பந்தருக்குச் சொர்ணத் தியாகர் முன்பு அளித்த உலவாக்கிழியில் பொற்றனம், குறைந்தாலும் உன் பொற்றனம் ஒரு நாளும் குறையாது என்று புகழ்கிறான்.

*துறைசையுள் மேவிய சொர்ணத்*
*தியாகர்முன் தோணிபுரத்து*
*இறையவ னார்சொன்ன செந்தமிழ்க்*
*காக இனிதுஅளித்த*
*நிறைஉல வாக்கிழிச் செம்பொன்*
*தனமது நேரிழையால்*
*குறையினும் உன்பொன் தனம்ஒரு*
*நாளும் குறைவிலேதே.*

(தோணிபுரத்து இறைவனார் - திருஞான சம்பந்தர், செந்தமிழ் - இடரினும் தளரினும் எனத் தொடங்கும் ;திருப்பதிகம்; இது இத்தலத்தின் பொன் வேண்டிச் சம்பந்தப் பெருமான் பாடியது. நிறை - நிறைந்த உலவாக்கிழி - எடுக்க எடுக்கக் குறையாத பை, செம்பொற்றனம் - சிவந்த பொன்னாகிய செல்வம், செம்மையாகிய பொலிவு பெற்ற நகில்.)

இது புகழ்தல் என்னும் துறையில் அமைந்த பாட்டு. காதலன் காதலியை யாரும் அறியாமல் கண்டு அளவளாவிச் செல்கிறான். இதனால் அச்சமும் சோர்வும் காதலிக்கு உண்டாகின்றன. அவளுடைய ஆருயிர்த் தோழி, காதலனிடம் குறிப்பாக எதையாவது சொல்லிக் காதலியைத் திருமணம் செய்து கொள்ளும்படி செய்யவேண்டு மென்று நினைக்கிறாள். ஒரு நாள் அவனைக் கண்டு, அயலார் இவளுக்குப் பரிசம்போட்டுத் திருமணம் செய்துகொள்ள எண்ணுகிறார்கள். அதற்குமுன் இவளை நீ மணம் செய்து கொள்வாயாக என்கிறாள். பிறர் வரை வுணர்த்தி வரைவு கடாதல் என்னும் துறை இது. வரைவு - திருமணம். கடாதல் - எண்ணத்தைச் செலுத்தல்.

மிகவும் அழகாகவும் சமற்காரமாகவும் பேசுகிறாள் தோழி. உன்னுடைய நாட்டில் எங்கும் திருமணக் காட்சியாகவே இருக்குமே! காவிரியால் வளம் பெறும் நாடன் நீ. உன் நாட்டில் வயல்களில் அன்னங்கள் ஆணும் பெண்ணுமாக இணைந்து மணம் புரிவனபோலக் காட்சியளிக்கின்றன. மக்கள் எரிவளர்த்து அதில் பொரிசிந்தி மந்திரமோதித் திருமணம் செய்வது போலவே அந்தக்காட்சி அமைந்திருக்கிறது. ஆம்பல் மலர் தீயைப்போலச் செக்கச்செவேலென்று மலர்ந்திருக்க, அதன் மேல் கரையிலுள்ள புன்கரத்தின் பூவானது பொரியைப்போல விழுகிறது. அங்கே வண்டு ஒலிப்பது மந்திரம் ஓதுவதுபோலத் தோற்றுகிறது. இப்படி உள்ள பொன்னிநாடனே! என்று தொடங்குகிறாள் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று சொல்ல வருகிறவள்; அதற்கேற்ற வருணனையைச் சொல்லித் தொடங்குகிறாள்.

*வயல் ஆம்பல் புன்குஅலர் வண்டுஒலி*
*தீப்பொரி மந்திரமா*
*இயலாய் அனம்மணம் செய்பொன்னி*
*நாட.........*

(வயல்களில் ஆம்பல் தீயாகவும் புன்கு மலர் பொரியாகவும் வண்டின் ஒலி மந்திரமாகவும் இருக்க, இயல்பாக அன்னங்கள் மணம்செய்து கொள்கின்ற பொன்னி பாயும் சோழ நாட்டுக்குத் தலைவனே.)

அடுத்தபடி அயலார்கள் பரிசம்போட்டு அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள எண்ணியிருப்பதைச் சொல்ல வருகிறாள். அங்கேதான் தலவரலாற்றை இணைத்துப் பேசுகிறாள். சொர்ணத்தியாகர் பொன் நல்கியது போல அயலார் இவளுக்குப் பொன்னை வழங்கக் கருதுகின்றனர் என்று அச்செய்தியை உபமானமாச் சொல்கிறார்.

*.....எழில் துறைசை*
*கயலாய கண்ணிக்குச் சொன்னத் தியாகர்*
*காணம் நல்க*
*அயலார் கருதுகின்றார்.......*

(அழகிய திருவாவடுதுறையில் வாழும் கயலைப் போன்ற கண்ணையுடைய உன் காதலிக்குச் சொன்னத்தியாகரைப் போலப் பொன்னைப் பரிசமாக வழங்க அயலார் எண்ணுகிறார்கள்.)

ஆகவே நீ செய்யவேண்டியதை இப்பொழுதே செய்வாயாக...என்று உரைக்கிறார் தோழி.

**முயல்வாய் உன்னின் ஆவது இன்றே**

(உன்னால் ஆகவேண்டிய திருமண முயற்சியை இன்றைக்கே செய்வாயாக.)

பாட்டு முழுவதையும் பார்க்கலாம்.

*வயல் ஆம்பல் புன்கு அலர் வண்டுஒலி*
*தீப்பொரி மந்திரமா*
*இயலா அனம்மணம் செய்பொன்னி*
*நாட எழில்துறைசைக்*

*கயலாய கண்ணிக்குச் சொன்னத்*
*தியாகரிற் காணம்நல்க*
*அயலார் கருகின்றார் முயல்வாய்*
*உன்னின் ஆவதுஇன்றே.*

இயற்கைக் காட்சிகளிலே திருமண நிகழ்ச்சியைக் காணத்தக்க நாட்டையுடைய நீ விரைவில் திருமணம் செய்து கொள்வாயாக என்று வற்புறுத்துகிறார்.

பின்னும் ஓரிடத்தில் செருந்திமரத்தை வருணிக்க வந்த ஆசிரியர் அதன்மலர் பொன்போல் இருப்பதைக் கருதி, அது சொர்ணத்தியாகர் தருகிற உலவாக்கிழி போலப் பொன்னைத் தருகிறது, என்று பாடுகிறார்.

*வண்டு ஆர் செருந்தி தியாகேசர்*
*நல்குஉல வாக்கிழிபோல்*
*தண்டாது அவிழ்பொன் தரும்அர சூரர்.*

(உலவாக்கிழி - எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழி. தண்டாது - குறையால், அரசூரர் - திருவாவடுதுறையில் உள்ளவர்.)

வேறு ஓரிடத்தில், சண்பை ஆண்டகைக் கோர், ஆயிரம் பொன் அருள் சொர்ணத்தியாகர், என்று பாராட்டுவார்.

தன் காதலியை மணந்து இல்லற வாழ்வை மேற்கொள்கிறான் காதலன். அப்போது பொருள் ஈட்டுவதற்காகச் சிலகாலம் அவளைப் பிரிந்துபோக எண்ணுகிறான். பொருள் இன்றியமையாதது என்பதைத் தோழியினிடம் சொல்லுகிறான். தான் பொருள் ஈட்டப் போக வேண்டியது அவசிய மென்பதை அதனால் குறிப்பிடுகிறான்.

விசாலமான திருவாவடுதுறையிலுள்ள பெண்ணே, நல்ல கஸ்தூரி வாசனை கமழும் கூந்தலை உடையவளே! என்று தோழியை விளித்துச் சொல்லத் தொடங்குகின்றான். இந்த உலகத்தில் பொன்னைவிடச் சிறந்த பொருள் எதுவும் இல்லை. அதை ஈட்டினால் அதனால் யாவரும் மிக்க சிறப்பை அடைவார்கள். ஒப்பிலாமுலை நாயகராகிய சிவபெருமான்கூட பொன்னால் அல்லவா சொன்னத் தியாகர் என்ற புகழையுடைய பேரைப் பெற்றுத் தம் அரசை ஆண்டனர்? என்று சொல்லி முடிக்கிறான்.

*இந்நா விலத்துஇல்லை, ஏமத்தின்*
*மேம்பட்டது; ஈட்டில் அது*
*நன்னால் எவரும் சிறப்பின்*
*மிக்கு ஆவர்; தடந்துறைசை*
*நல்நாவி அம்குழ லாய், ஒப்பி*
*லாமுலை நாயகரும்*
*பொன்னால்அன் றேபுகழ்ப் பேர்படைத்து*
*ஆண்டனர் பொற்பு அரசே.*

(ஏமம் - பொன், மிக்கு ஆவர் - மிகுந்து ஆக்கம் பெறுவர், நாவி - மயிர்ச்சாந்து, பொற்பு - பொலிவு; சிறப்பு.)

காதலி தன் காதலனுடன் அளவளாவி இன்புற்றுவிட்டு வருகிறாள். அப்போது தோழி அவளைப் பார்க்கிறாள்; அவளிடத்தில் சில மாற்றங்கள் தோற்றுகின்றன. நீ எங்கே போய் வந்தாய்? என்று தோழி கேட்டபோது காதலி, ஒரு சுனையில் ஆடி வந்தேன் என்று சொல்கிறாள். அப்படியா! உன்னிடத்தில் உண்டாகியிருக்கும் இந்தச் சிறப்புக்களை அருளும் சுனை சித்துச்சுனை என்றுதான் சொல்லவேண்டும். நவகோடி சித்தர் இருக்கும் திருவாவடுதுறைச் சிவபெருமானுக்குரிய மலையில் இப்படி ஒரு சித்துச்சுனை இருந்தாலும் இருக்கலாம். நானும் அதில் நீராடலாம் என்று நினைக்கிறேன் என்று தோழி குறிப்பாகப் பேசுகிறாள். அங்கே திருவாவடுதுறைக்கு நவகோடி சித்தவாசபுரம் என்ற பெயருள்ளதை எண்ணுகிறாள். சுனை வியந்துரைத்தல் என்னும் துறையில் அமைந்த பாடல் அது.

*பருக்கும் தனச்சந் தனமும்ஐம்*
*பாலின் பரிமளமும்*
*குருக்கும்மெய் வேர்வும் பெறலாம்*
*எனின் நவகோடிசித்தர்*
*இருக்கும் துறைசைப் பதிமாசி*
*லாமணி ஈசர்வெற்பில்*
*உருக்கும்அச் சித்துச் சுனைநானும்*
*ஆடுவன் ஒண்ணுதலே.*

(பெருத்திருக்கும் நகிலில் சந்தனத்தையும், கூந்தலில் நறுமணத்தையும், நிறமுடைய உடம்பில் வேர்வையையும், பெறலாம் என்றால், நவகோடி

சித்தர்கள் வாசஞ்செய்யும் திருவாவடுதுறையில் எழுந்தருளிய மாசிலாமணி ஈசுவரர் மலையில், மனத்தை உருக்கும் அச்சித்துத் தன்மையை உடைய சுனையில் நானும் நீராடுவேன், ஒளிபடைத்த நுதலையுடைய பெண்ணே!

ஐம்பால் - கூந்தர், குருக்கும் - நல்ல நிறம் பெற்றிருக்கும், வேர்வு - வேர்வை.)

காதலனைக்கண்டு அவன் பூசிய சந்தனத்தையும் அவன் சூட்டிய மாலையையும் அணிந்து அவனை அணைந்து அதனாலுண்டான வேர்வை தோன்ற வந்திருக்கிறாள் காதலி; அந்த தோற்றத்தைக் கண்டே இவ்வாறு பகடியாகப் பேசுகிறாள் தோழி.

இத்தலத்தின் விருட்சம் அரசு. அது மிகச் சிறப்பானது; புனிதமுடையது; அதை வலம்வந்தார் நலம் பெறுவர். இவற்றை எண்ணிச் சில பாடல்களைப் பாடியுள்ளார். ஆசிரியர்.

காதலனும் காதலியும் அளவளாவுவதை மாற்றித் திருமணம் செய்விக்க வேண்டுமென்று தோழி கருதுகிறாள். காதலியைப் பெற்ற தாயிடம் குறிப்பாக அவள் ஓராடவன்பால் காதல் கொண்டிருப்பதைச் சொல்லுகிறாள். அவள் அதைத் தெரிந்துகொள்ளவில்லை. இவர்கள் இந்தத் திருமணத்தை முடிக்கமாட்டார்கள் என்று எண்ணிய தோழி காதலனிடம், காதலியை அவனூருக்கே இரவில் யாரும் அறியாமல் அழைத்துச் சென்று அங்கே திருமணம் செய்து கொள்ளும்படி சொல்கிறாள். அவ்வாறே அவன் தன் காதலியை அழைத்துக்கொண்டு போய்விடுகிறான். தன்மகள் தன் காதலனுடன் போய்விட்டதை தாய் அறிந்து வருந்துகிறாள்; மற்றவர்களும் வருந்து கிறார்கள். இப்பகுதிக்கு உடன் போக்கு என்று பெயர்.

அந்தப்பகுதியில் ஒரு துறை, தன் மகள் சென்றுவிட்டதை அறிந்து அவளைப் பெற்ற தாய் புலம்புகிறாள். நற்றாய் அயலார் தம்மொடு புலம்பல் என்பது இந்தத் துறையின் பெயர்.

நான் தவம் செய்து இந்த மகளைப் பெற்றேன். முசுகுந்தனுக்குப் புதல்வனே அருளிய புத்திரத்தியாகரை வழிபட்டேன்; அவர் திருக்கோயிலில் உள்ள அரசமரத்தின்கீழ் வரங் கிடந்து இவளைப் பெற்றேன். அவள் தன் காதலனோடு, நினைத்தாலும் உள்ளத்தைச் சுடும் பாலைவழியே சென்றுவிட்டாளே. இந்தப் பெண்ணை வருந்திப் பெற்றதனாலல்லவா இந்தத் துயரம் வந்தது? பிள்ளையே பெறாத மலடிகளுக்கு இத்தகைய துயரமே கிடையாதே இப்படிப் பெண்ணைப் பெறவும் வேண்டாம்; பெற்றுப் பிரிந்து தவிக்கவும் வேண்டாம், என்கிறாள் பெற்ற தாய்.

*அரங்கவை யேகொண்ட புத்ரத்*
*தியாகர் அரசடிக் கீழ்*
*வரம்கிடந்து ஏழை உயிர்த்தேன்*
*ஒருமகள்; மற்று அவள்தோள்*
*உரம்கெழு காளையின் உள்ளினும்*
*உள்ளம் கடும் கொடுதீச்*
*சுரம்கடந் தாள்அம்ம! வந்திஎன்*
*பார்க்குஇத் துயர் இல்லையே!*

(அரங்கு அவை - நடமாடும் அரங்காகிய சபையை, ஏழை - ஏழையாகிய யான், உயிர்த்தேன் - பெற்றேன், மற்று: அசை, தோள் உரம் கெழு - தோள் வலிமைபெற்ற , உள்ளினும் - நினைத்தாலும், சுரம் - பாலைநிலம், வந்தி - மலடி.)

இவ்வாறு இத்தலத்தின் பிற சிறப்புக் களையும் அங்கங்கே நயமாக இணைத்துக் காட்டும் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் புலமையைத் திருவாவடுதுறைக் கோவையை ஆய்ந்து தோய்ந்து பார்ப்பவர்கள் நன்கு அறிவார்கள். அவற்றை முழுதும் இங்கே எடுத்துக்காட்ட இடம் ஏது?

# துறைசை யமக அந்தாதி - ஓர் அறிமுகம்



சைவத்தமிழ்ச் செம்மல், புலவர். **சரவண.சதாசிவம்**, எம்.ஏ., எம்.எட்., காஞ்சிபுரம்.

(இக்கட்டுரை ஆசிரியர், காஞ்சி குமர கோட்டப் புலவர். 36 ஆண்டுகளாக காஞ்சிபுர ஆன்மீக அமைப்புகளில் சமயப் பணிபுரிபவர்; சமய சாத்திரச் சொற்பொழிவாளர்; கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் (ஆதீன வெளியீடு) முதலான பல நூல்களை எழுதியும் பதிப்பித்தும் வருபவர்கள். சைவ நன்மணி, சபாரஞ்சிதம் முதலான பல பட்டங்களைப் பெற்றவர்கள்)

**நுழைவாயில் :**

பூவினுட் பதுமம் போலும், காவினுள் கற்பகம் போலும், பாவினுள் வெண்பாப் போலும், நாவினுள் மெய்ந்நாப் போலும் எல்லாச் சிறப்புகளுக்கும் இடனாகி விளங்குவது சோழநாடு. அந்த நாட்டுக்கு அணி சேர்ப்பது காவிரியாறு. கடலானது, சிவபெருமான் உண்ண நஞ்சு அளித்ததனால் கடல் வயிறு நிறைக்காத, சிவனடிப் பேரன்பு கொண்டது. (பெரிய.புரா.திருமூலர்). "வம்புலா மலர் நீரால் வழிபட்டுச், செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்து, எம்பிரானை இறைஞ்சலில் ஈர்ம் பொன்னி, உம்பர் நாயகர்க்கு அன்பரும் போன்றது". காவிரியாறு, பாயுமிடங் களில் உள்ள தலங்களின் பெயர்கள் வெவ்வேறா னவை. குரங்காடுதுறை, மயிலாடுதுறை, இவற்றுக் கிடையில் உள்ளது ஆஅடுதுறை. (கோமுத்தீசர் திருக்கோயில்). அன்று பசுக்கள் அத்துறையை அடுத்து, நீர் பருகி, ஆங்குள்ள சோலைகளில் இளைப்பாறும். இன்றோ, பக்குவம் பெற்ற ஆன்மாக்கள், அத்துறையை அடுத்து, மெய்கண்டார் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானுவாகிய, குருநமச்சிவாய தேவரின் மரபில் விளங்கும் குருமகா சந்நிதானங்களின் உபதேச நீருண்டு, ஞானவேட்கை தணிந்து, தாள் நிழலாம் தண்ணிழலில் இளைப் பாறுகின்றன. அரசவனத்து அறநிலையமாகிய திருமடத்தைக் காணும் அயல் நாட்டார், "இது என்ன சிவராஜதானியோ, பல்கலைக் கழகமோ என்று வியப்படைவார்கள்'' என்று உ.வே.சா அவர்கள் குறித்துள்ளார்கள்.

**திருவாவடுதுறை :**

இப்பதி திருமூலர் தவம் செய்து தமிழ் வளர்த்த இடம். இங்குத் தமிழ் மணம் கமழ்கிறது என்று திருஞான சம்பந்தர் கூறியதாக ஒரு வழக்கு உண்டு. பின்னர்த் திருமாளிகைத் தேவரும் அங்குக் கோயில் கொண்டார். அதனை ஒட்டியே நமச்சிவாய மூர்த்திகளும் எழுந்தருளி அருள்பாலிக் கின்றார்கள். அந்த வளாகமே இன்று அரசவனத்து அறநிலையமாகத் திகழ்கிறது.

வளரும் நந்தி, படரும் அரசு, இவை திருவாவடுதுறையின் சிறப்புகள் என்பர். திருமடத்தின் பீடத்தில் எழுந்தருளி அருளாட்சி புரிவோரெல்லாம் சிவஞானச் செல்வர்களாக விளங்கியதோடு, புலமை நலம் உடையவர் களாகவும் விளங்கினர். மெய்கண்ட சாத்திரங் களின் பின் பண்டார சாத்திரங்களும் இங்கே தோன்றின. சிவஞான பாடியம் செய்த சிவஞான சுவாமிகளும் ஆதீனத்து அடியார் கூட்டத்தில் ஒருவரே.

**மகாவித்துவான் பிள்ளையவர்கள் :**

இந்தத் திருமடத்தின் ஆதீனவித்வானாகப் பெயர் பொறித்த பேராளர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் ஆவர். அவர்கள் கவிக்கடலாக விளங்கியவர்கள். அவர்கள் கவிதை எழுதும்போது சொற்கள் எல்லாம் வந்து "எனை வைத்தி எனை வைத்தி எனப் பதங்கள் இடைநின்று இரந்து வேண்ட, இனிவைப்பாம் இனிவைப்பாம் என்று சொல்லி" நாளொன்றுக்கு 400 கவிதைகள் வீதம்பாடி நற்றமிழ் வளர்த்த நல்லிசைக் கவிஞர். "நினைவுற்ற ஒரு கடிகைக்கு அளவில் கவித்தொடை

புனையும் கவிஞர்'' என்று அவரைக் கூறுவர். புராணம் 22, பிள்ளைத்தமிழ் 10, அந்தாதி 14, மாலை 4, கோவை 3, கலம்பகம் 2, உலா 1 எனப் பன்னூல் பாடி, அந்நூல்களில் சமயக் கருத்துக் களையும், பக்திச் சுவையையும் நிறைத்த நீர்மையாளர். அளவற்ற நூல்களை அவர் பாடியிருந்தாலும், அவருடைய புகழை இன்றளவும் இயம்பிக் கொண்டிருப்பது சேக்கிழார் பிள்ளைத் தமிழ் ஒன்றே ஆகும்.

கவிதைகளை, விரைந்து பாடுதல், இனிமையாகப் பாடுதல், திறமையாகப்பாடுதல், விரிவாகப் பாடுதல் (ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி) என்று நான்காகப் பகுத்துரைப்பர். இந்த நால்வகைக் கவிகளையும் பாடிய நற்றமிழ் நாவலர், பெருங்கவிஞராக இருந்தும் ஒரு பெருங்காப்பியமாவது படைக்கவில்லை. புராணங் களில் பெரியபுராணம் பெருங்காப்பிய நலன்களை உடையது. புராணம் என்று பெயர் பெற்றாலும் அது ஒரு வரலாற்று நூலே. மற்ற புராணங்கள் எல்லாம் கூறும் செய்திகள் இல்லாது புனைதலாகவும் இருக்கும். இருப்பினும் புராணங் களைப் பாடுவது அந்தத் தலைமுறையின் தேவையாக இருந்தது. அவற்றினுள்ளும் பிள்ளைய வர்களின் கவித்திறம் விளங்கவே செய்யும். மயூரவனப் புராணத்தில் நாவினுள் மெய்ந்நாப் போன்றது சோழநாடு என்று கூறி, வான்பொய்ப் பினும் தான் பொய்யாக் காவிரிநாடு என்பதை நயமாக உணர்த்து கின்றார். அவரது பேச்சில் கூட நயம் திகழும். ஒருமுறை அவரை எண்ணெய் தேய்த்துக் குளிக்கச் சொன்னபோது, அவ்வாறு சொன்னவர்களிடம் 'எண்ணெய் தேய்த்துக் கொள்ள எனக்கு இருகை போதாது; என்று கூறினாராம். அவர்கள் திகைத்து நின்றபோது, பலகை வேண்டும் என்றனராம்.' இத்தகைய சொல்வித்தகர் இயற்றிய நூல்கள் பலப்பல என்பது மேலே கூறப்பட்டது. இவ்வாறான சிறப்புக்குரிய பிள்ளையவர்கள் பாடியது தான் ''துறைசை யமக அந்தாதி'' எனப்படும் கட்டளைக் கலித்துறையால் ஆன, 102 பாடல்கள் கொண்ட நூலாகும்.

**மூல இலக்கியம் :**

திருஞானசம்பந்தர் வரலாறு கூறும் சேக்கிழார் பெருமான், சீர்காழியில் ஞானசம்பந்தர் தங்கியிருந்தபோது, அப்பர் பெருமான் அவரைக் காணவந்து, அவருடன் உரையாடி, இறைவனை வழிபட்டுப் பின் தம்யாத்திரையைத் தொடர்ந்து மேற்கொண்டு செல்ல, சீர்காழியில் ஞானசம்பந்தப் பெருமான் இறைவனை வணங்கிப் பாடியிருந்தார்.

*செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களான் மொழி மாற்றும்*
*வந்தசொல் சீர்மாலை மாற்றும், வழிமொழி, எல்லா மடக்குச்*
*சந்த இயமகம் ஏகபாதம் தமிழ் இருக்குக்குறள் சாற்றி*
*எந்தைக்கு எழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடி மேல் வைப்பு,*

*நாலடிமேல் வைப்பு மேன்மை நடையின் முடுகும் இராகம்*
*சால்பினில் சக்கரம் ஆதிவிகற்பங்கள் சாற்றும் பதிகம்*
*மூல இலக்கியமாக எல்லாப் பொருள்களும் முற்றி*
*ஞாலத்து உயர் காழியாரைப் பாடினார் ஞானசம்பந்தர்*

- (திருஞான-புரா.பாடல் 276,277)

என்று கூறுவதை இங்கு எண்ணிப் பார்க்க வேண்டும். ஆசுமுதல் நாற்கவியில் ஒன்றான சித்திரகவி என்பதனை பிற்காலத்தே, அறிஞர்கள் தம் அறிவுத்திறமை வெளிப்படுமாறு அமைத்தனர் என்றாலும், அவற்றிற்கெல்லாம் மூல இலக்கியமாக அமைந்தது தமிழ்ஞான சம்பந்தர் வாக்கே என்பதனை இதன் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**யமகம் - அந்தாதி :**

ஒரு பாடலின் இறுதிச்சீர் அல்லது அசை அல்லது எழுத்து வரும் பாடலின் முதலாக (அந்தம் - ஆதியாக) வருவது அந்தாதி ஆகும். அந்தாதித் தொடை சங்ககாலம் முதல் கையாளப் பட்டு வருகிறது. பதிற்றுப் பத்தில், காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய 4ஆம் பத்து அந்தாதியாக அமைந்தது. மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் திருச்சதகம் என்னும் பகுதி அந்தாதித் தொடையாக அமைந்து பத்துப் பத்துப் பாடல்கள் வேறு வேறு கவிதை அமைப்பில் உள்ளமையையும், அவ்வாறே கோயில் திருப்பதிகம், கோயில் மூத்த திருப்பதிகம், நீத்தல் விண்ணப்பம் போன்றவையும் அமைந் துள்ளமையையும் காணலாம். காலப்போக்கில் சொல்லணிகளில் மாற்றம் ஏற்பட்டு, சிலேடையாக வளர்ந்து யமகமாயிற்று எனலாம்.

கவிதைகளைப் படித்துப் பொருளுணர்ந்து சுவை கொள்ளும் வகைகளை, வடநூலார், க்ஷீரபாகம், கதலி பாகம், திராட்சா பாகம், நாரிகேளபாகம் என்று நான்காகக் கூறுவர். நாளிகேரம் என்பது தேங்காய் ஆகும். தேங்காய்ப் பால் பருக எண்ணுவோர், பறித்தல், உறித்தல், உடைத்தல், திருகல், பிழிதல் எனப் பல முயற்சிகளை மேற்கொள்ள வேண்டியதனை அனைவரும் அறிவர். அதுபோலவே யமக அந்தாதியில் உள்ள கவிகளும் முயன்று பொருள் கண்டு இன்பம் அனுபவிக்க வேண்டியவைகளாகும்.

அந்தாதி என்பது சொற்றொடர்நிலை எனப்படும் என்பதனை, மாறனலங்காரம் பின்வருமாறு கூறுகிறது.

*சொல்லால் பொருளால் தொடரும் தொடர்நிலைகள்*
*எல்லாம் அவற்றுள் எழுத்தசைசீர் - மல்கும்*
*அடிசொற் றொடர்நிலைகள் அந்தம் முதலாப்*
*படிவைத் தனர்முன் பகுத்து* (பொதுவியல் - 6)

இவ்வாறு அந்தாதியாக வருவன, பன்மணி மாலை, மும்மணிக்கோவை, உதயண குமாரன்கதை, முத்தொள்ளாயிரம், பொய்கையார் முதலாயினார் செய்தனவும் ஆகுமெனவும், வசந்த மாலை, நவமணி மாலை, கலியந்தாதி, ஒலியந்தாதி, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி முதலியன எனவும் யாப்பருங்கலம், பாட்டியல் போன்ற நூல்கள் கூறுகின்றன. இவ்வமைப்பில் வேறு பல நூல்களும் உள்ளன.

**துறைசை யமக அந்தாதி :**

பக்தி மணம் கமழ்ந்து, பல புராணச் செய்திகளை உள்ளடக்கிக் கற்போர்க்கு இன்பத்தையும், இறையருளையும் வழங்கும் இந்த நூல், நமது ஆதீனத்தில் இனிதமர்ந்து, பாடம் சொல்லியும் பாடல்கள் இயற்றியும் தமிழ்ப் பயிரை வளர்த்த, திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பெற்ற சிறந்த நூலாகும். அவர்கள் பதிற்றுப் பத்தந்தாதி 6, திரிபந்தாதி 4, யமக அந்தாதி 3, வெண்பா அந்தாதி 1 ஆகப் 14 அந்தாதி நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் இந்த அந்தாதி நூல் திருவாவடுதுறையில் கோயில் கொண்டருளும் கோமுத்தீசுவரர் என்னும் மாசிலாமணியீசரைப் பரவிப் பாடப் பட்டதாகும். சைவ சமய வரலாறுகள் பலவற்றைக் கொண்டு சாத்திர தோத்திரக் கருத்துக்களைக் கூறும் இந்நூல் ஆசிரியரது பன்னூற் பயிற்சியையும், நுண் மாண் நுழை புலத்தையும் சொற்சுவை பொருட் சுவைகளுடன் விளக்குகின்றது. இந்நூல் கட்டளைக் கலித்துறையில் நூறு பாடல்கள் கொண்டு அமைந்ததால், இது கலித்துறை யந்தாதி என்றும் கூறப்படும். கலித்துறை என்பது ஐஞ்சீரடி நான்காய், முதல் நான்கு சீர்களும் வெண்டளை பிழையாமல், ஐந்தாம் சீர் கூவிளங்காய் கருவிளங்காய் எனக் காய்ச்சீராக வந்து, நேரசையில் பாடல் தொடங்கினால் அடிக்குப் பதினாறு எழுத்துக்களும், நிரையசையில் தொடங்கினால் அடிக்குப் பதினேழு எழுத்துக்களும் பெற்று முடிவதாகும். இதனை,

*"அடியடி தோறும் ஐஞ்சீராகி*
*முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்*
*கடையொரு சீரும் விளங்காயாகி*
*நேர் பதினாறே, நிரை பதினேழென்று*
*ஓதினர் கலித்துறை ஓரடிக்கு எழுத்தே"*
என்ற நூற்பாவினால் அறியலாம்.

"காஞ்சிபுரத்துக்குச் சிவஞான சுவாமிகள் யமகவந்தாதி செய்திருக்கிறார்கள். இத்தலத்துக்கு என்ன காரணத்தினாலோ அவர் செய்யவில்லை. தங்கள் வாக்கினால் இத்தலத்திற்கு ஒரு யமக வந்தாதி இயற்றித் தரவேண்டும்" என்று, திருவாவடு துறையிலிருந்த சில தம்பிரான்களும், வேறு சிலரும் கேட்டுக் கொண்டதற்கேற்ப, இந்நூலை இயற்றியருளினார் என்பர்.

**துறைசை யமகவந்தாதி ஓர் அறிமுகம் :**

இந்நூல் காப்புச் செய்யுள் - 1; குருவணக்கம் - 1; நூல் 100 ஆக 102 பாடல்கள் கொண்டது. இந்நூலில் நவகோடி சித்தர்புரம், அரசவனம், அரசூர், மாளிகைத்தேவர், பஞ்சாக்கரவை, மாசிலாமணி போன்ற இத்தலத்தின் தொடர்புடைய சொற்றொடர்களும், அண்ணாமலை அத்தனை, தக்க சிதம்பரவா, அரசங்க மங்கை, தலையாலங் காடவா என்று பிற தலப்பெயர்களும், மானக்கஞ்சாற, கண்ணப்பரைவரை என நாயன்மார்

பெயர்களும் யமகத்தில் அமைத்து, அவற்றிற் கேற்பப் பொருள் முடித்துக் காட்டியிருப்பது போன்றவை மகாவித்வான் அவர்களின் கவிபுனையும் ஆற்றலை எடுத்துக் காட்டுவதாகும்.

முதற் பாடலாகிய காப்புச் செய்யுளிலேயே, இறைவன் திருமாலைக் கணையாகக் கொண்டது, இறைவனின் பாத தாமரையில் திருமால் தன் தாமரைக் கண்ணை வைத்து வழிபட்டது என இரண்டு செய்திகளைக் கூறி, துறைசைத் தலத்தில் உள்ள, துணை வந்த விநாயகர், அழகிய விநாயகர் என்ற தலவிநாயகர் இருவரும் இந்நூலை இயற்றத் துணையாவர் என்று கூறியருளுவதும் கண்டு மகிழலாம். அடுத்து அமைந்த குருவணக்கத்தில், குரு நாதரின் திருவடி என்தலைமீது வைகி இன்பம் செய்தது என்று கூறும்போது 'துறைசைச்சிவன் முனமாலாவன்' - என்று எழுதி; முனம் மால் ஆவன் (முன்னே திருமாலாகிய இடபவாகனத்தை உடையவன்) எனவும், முனம் ஆல் ஆவன் (முன்னே கல்லாலின் கீழ்எழுந்தருளி இருந்தவன்) என்று பொருள் தருமாறு சிலேடை அமைத்த நயத்தைக் காணலாம். அடுத்து நூலில் உள்ள சில நயமான செய்திகளைக் கண்டு இன்புறலாம்.

அகத்துறைப் பாடல்கள் உள்ளத்தில் அன்பை மிகுவிப்பன ஆதலால், இலக்கியங்கள் அவ்வகைப் பாடல்களைக் கொண்டு விளங்கும். கடவுள் பாடல்களிலும் அவ்வாறு வருவதனை கடவுள் மாட்டு, மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் என்பர். இந்நூலில் அமைந்த பாடல்களுள் பல தலைவி கூற்று, தோழி (பாங்கி) கூற்று, செவிலித்தாய் கூற்று என அகத் துறையில் வருவதனைக் காணலாம். இறையருளை வேண்டிப் பாடும்போது, சாத்திரக் கருத்துக்களை அமைத்துப் பாடுதல் இயல்பு. அவ்வகையில் பிள்ளையவர்களும் இந்நூலில் பல கருத்துக்களைக் கூறுகிறார்.

*"முத்தனை யானைக் கொடியிடை யொப்பில் முலையுவந்த*
*முத்தனை யானைக் கொடியமைத் தானை, முழங்குமவி*
*முத்தனை யானைக் கொடியானை, மூர்த்தி முதனவிலும்*
*முத்தனை யானைக் கொடியேன் துறைசையில் முன்னுவனே"*
- (பாடல் 25)

இந்த யமகச் செய்யுளில் 'முத்தனையானைக் கொடி' என்ற தொடர் 4 அடிகளிலும் வந்து, அடிதோறும் வெவ்வேறு வகையாகப் பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டு, இன்பம் தருவதைக் காணலாம்.

முத்து அனையானை - கொடியிடை ஒப்பில் முலை உவந்த முத்தனை - ஆனை (ஆன்+ஐ)க் கொடி அமைத்தானை - முழங்கும் அவி முத்தனை - யானைக்கு ஒடியானை - மூர்த்தி முதல் நவிலும் மு தனை யானை - கொடியேன் துறைசையில் முன்னுவன் என்று பிரிக்கப்பட்டு,

முத்துப்போலும் வெண்ணிறம் உடையவனை, கொடிபோலும் இடையை உடைய ஒப்பிலாமுலையம்மையை (இத்தலத்து இறைவியின் திருப்பெயர்) விரும்பியேற்று, முத்தி நிலை (முத்தன் - விடுபாடு உடையவன்) அருள்பவனை, இடபத்தைக் கொடியில் தரித்தவனை, பேரொலி நிறைந்த அவிமுத்தத் தலமாகிய காசியில் உறைபவனை, யானைக்குத் தோற்காதவனாய் (அதன் தோலைப் போர்த்து) உள்ளவனை, மூர்த்தி தலம் தீர்த்தம் என்று கூறப்படும் மூன்று அளவுகளிலும் (தனை - அளவு; மு தனை யானை - 3 அளவு உடையவனை) உள்ளவனை, கொடிய வினையுடைய நான் திருவாவடுதுறைத் தலத்தில் (வந்து) தியானிப்பேன் என்று பொருள் தருகிறது. முத்தனையான், உவந்த முத்தன், அவிமுத்தன், முதனையான் - எனப் பலநிலைகளில் பிரிந்து பொருள்தரும் அழகினைப் படித்துச் சுவைத்துப் போற்றி அருள் பெற வேண்டும்.

சிவயநம என்னும் பஞ்சாட்சர மந்திரத்தில், 'ந' திரோதானம் என்னும் மறைப் பாற்றலையும், 'ம' என்பது ஆணவத்தையும் குறிப்பதை நாம் அறிவோம். இறைவன், திரோதானமும் ஆணவமும் நீக்கி நம்மை ஆட்கொள்ளுகிறான் என்று கூறுபவர், நகரமகரம் எனத்தொடங்கி அதனை இயமகமாக்கி அருமையான செய்யுளை ஆசிரியர் இயற்றியருளுகிறார்.

*நகர மகரந் தகர்த்தா ளிறைவர்க்கு நற்றுறை சை*
*நகர மகரந்த கட்குழ லோடு நயந்தமாக்கி*
*நகர மகரந் தகப்பயில் வாரிதி நஞ்செனத்தி*
*நகர மகரந் தகர்மேவு முன்னங்கு நண்ணனன்றே*
- பாடல் 16

எனவரும் செய்யுளில், நகர மகரம் தவிர்த்து ஆள் இறைவன் (திரோதானம் ஆணவம் ஆகியவற்றை நீக்கி ஆட்கொள்ளும் இறைவன்) என்று நேர் பொருள் கூறிப் பின் அடியில், நல்துறைசை நகர் அ மகரந்த கள் குழலோடு, நயந்து அமர் சினகரம், மகரம் தகப் பயில் வாரிதி, நஞ்சு என தினகர மகர் அந்தகர் மேவுமுன் அங்கு நண்ணல்நன்றே என்று பிரித்துப் பொருள் கொள்ள அமைத்தது எண்ணி இன்புறத் தக்கது. இந்தச் செய்தியைப் பாடல் 33இலும் 'அத்தனை.ம.ந.மாய்த்தளிப்பானை' என்று கூறுகின்றார். இதனை,

*'நம என்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச்*
*சிவ என்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்ற ....'*
எனவரும் திருமந்திரம் 2717 ஆம் பாடலுடன் பொருத்திக் காணலாம்.

அவ்வாறே 19ஆம் பாடலில், அண்ணாமலை அத்தனை எனத் தொடங்கி, முதலில் திருவண்ணா மலையில் கோயில் கொண்டருளும் இறைவனைக் கூறி, யாம் அவனை அண்ணாம் (அணைய மாட்டோம்), மலை அத்தனை வினையால், மலை அத்தனை, அலை அத்தனை, அள் நா மலையத் தனை, பல் அமரருக்கும் அண்ணா, மலைய, தனை ஒப்பவா என்று பிரித்துப் பொருள் கொள்ளுமாறு அமைத்துள்ளமை கற்போர்க்குக் களிபேருவகை தருவதாம்.

துறைசைப்பதி மூவர் தேவாரமும் பெற்ற தலமாகும். மூவரும் இத்தலத்து இறைவனைப் பாடிப் பல நன்மைகள் (பொன்பெற்றமை, அருள் பெற்றமை, நோய் நீங்கியமை) அடைந்ததனை அவர்தம் திருப்பதிகங்களால் அறியலாம். அப்பதிகங்கள், பாடுகின்ற நமக்கும் பயன் தருபவை. அவை திருப்பாற்கடலில் தோன்றிய அமுதம் போன்றவை என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'பதிகம் தரங்க அமுதென மூவரும் பாடினர்' என்று, திருப்பாற்கடலில் தோன்றிய அமுதம் என்று சொல்லும்படி, திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தன்மையைப் பாடல் 8இல் பதிவு செய்கிறார்.

திருவாவடுதுறையில் அருள்புரியும் இறைவன், போகர் முதலிய சித்தர்களுக்கும், நவகோடி சித்தர்களுக்கும் அவர்கள் விரும்பிய வண்ணம் அட்டமா சித்திகளையும், பிறவற்றையும் அருளினன் எனவும், சித்தர்கள் பலர் எப்போதும் இத்தலத்தில் தங்கியுள்ளனர் எனவும் கூறப் படுவதனால் இத்தலம் நவகோடி சித்தர்புரம் என வழங்கப்படுதலை, செய்யுள் 29இல் நவகோடி சித்தம் எனத் தொடங்கி இறுதியடியில் 'நவகோடி சித்தர்புர வாச என்னும் நறுநுதலே' என்று முடிக்கின்றார்.

திருவாவடுதுறைத் தலவரலாற்றில் இறைவன் திருஞான சம்பந்தருக்குப் பொற்கிழி அளித்தமை அனைவரும் அறிந்தது. திருஞான சம்பந்தர் 'இடரினும் தளரினும்' எனத் தொடங்கும் பதிகம் பாடி வேண்டி நிற்க, இறைவன் கட்டளையால், பூதம் ஒன்று கோயிலின் முன் உள்ள பலி பீடத்தில் 'மாடொருவர் அறியாமே' பொற்கிழி வைத்து மறைந்தது. அதனைச் சம்பந்தர் பெற்றுத் தந்தையாரிடம் அளித்தார் என்பர். இந்நிகழ்ச்சியைத் திருநாவுக்கரசரும் தம் திருப் பாட்டில், "கழுமல ஊரர்க்கம்பொன் ஆயிரம் கொடுப்பார் போலும் ஆவடுதுறையனாரே" - என்று குறிப்பிடுகின்றார். பொன்வழங்கிய ஆவடுதுறைப் பெருமான். 'கனகத் தியாகம் தந்தவர்' எனப் படுகிறார். இந்த நிகழ்வைப் பாடல் 42இல் குறிப்பிட்டு, இறுதி அடியில் 'துறைசைக் கனகத்தியாகம் தந்தானை அல்லாது கருதிலமே' என்று கூறிப் பதிவு செய்கிறார்.

'வந்திக்கு மண்ணும் பரித்தனரா' - எனத் தொடங்கும் 53ஆம் பாடலில், திருவிளையாடற் புராண நிகழ்வினைக் காட்டி, அதன்பின் இத்தொடரை வேறு பொருள் பட ஆண்டிருத் தலையும், வாரம் படைத்தகை எனவரும் 54ஆம் பாடலில், திருநாவுக்கரசரை, "மகிழும் உழவாரம் படைத்த கையர்" எனக் குறிப்பிடுவதும் எண்ணி இன்புறத்தக்கன. 55 ஆம் பாடலில், மாளிகைத் தேவனை என்னும் சொற்பொருளை வேறுபடுத்தும் அழகும், போகரின் மாணவராகிய திருமாளிகைத் தேவர், காவிரியில் நீராடித் திருமஞ்சன நீர் கொண்டு திருமடத்திற்கு வரும்போது, எதிரே ஒரு பிணத்தை எடுத்துக் கொண்டு சிலர் வர, தம் கமண்டலத்தில் உள்ள நீரை எடுத்து எதிரில் தெளிக்க, அப்பிணம் உயிர்பெற்று எழுந்து சிலஅடிதூரம் நடந்து சென்றது

என்ற வரலாற்றுச் செய்தியைக் குறித்ததும் எண்ணி வியக்கத்தக்கனவாகும். "உமது மகளின் கூந்தல் எமது பஞ்சவடிக்காகும்" என்று மாவிரதியாக வந்த இறைவன் கூந்தலைக் கேட்க, மணப் பெண்ணாக இருந்த தன்மகளின் கூந்தலை அரிந்து கொடுத்த மானக்கஞ்சாறர் வரலாறு, செவிலி கூற்றாக உள்ள பாடல் 59இல் சுட்டப்படுகிறது.

திருவாவடுதுறை ஆதீன முதற் குரவராகிய ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளை மனத்தில் கொண்டு, 'பஞ்சாக்கர ஐ பதம் தொழுமாறு பணி' என, கோமுத்தி மேய பராபரனை வேண்டுவதும், அச்சொல்லை வேறுபடுத்திப் பிரித்து (பஞ்) சாக்கிர அவத்தையில் இன்பம் நுகரும் படிச் செய் என வேண்டுவதும் (பாடல் 65) எண்ணி இன்புறத் தக்கதாம்.

தேவர்கள் அரச மரக் கிளைகளாகப் படர்ந்துள்ளமையால், இத்தலத்தில் உள்ள அரசு, படர் அரசு எனப்படுகிறது. அரசமரம் உள்ள அம்பலம் அரசம்பலம் எனவும், இத்தல இறைவன் மாசிலாமணி ஈசர் எனப்படுவதும், (வானநாடனே வழித்துணை மருந்தே, மாசிலாமணியே - சுந்தரர் தேவாரம்), அரச அன்னமாகிய உமாதேவியைப் பசு வடிவம் நீக்கி, அவளை அணைத்தெழுந்ததனால் 'அணைத்தெழுந்த நாயகர்' என்னும் பெயரைக் கூறுவதும், நீரிடத்து வாழும் அன்னத்தை மலை அரச அன்னம் (ராஜஹம்சம்) என்று கூறிய நயமும், வேறு பல சுவையான பொருள்கள் தோற்றுவதும் பின்வரும் பாடலில் கண்டு மகிழலாம்.

***"அரச வனத்தை மகிழ்மாசி லாமணி யையமலை***
***அரச வனத்தை யணைத்தெழுந் தாயெங்கு மாய் வயங்கும்***
***அரச வனத்தை யணிமா லயன்முத லாயவர்சீர்***
***அரச வனத்தை யவாவேனின் சீர்த்தி யமுதை விட்டே"***

- (பாடல் 68)

கண்ணப்பரை வரையாது வந்தாள்வர் எனும் தொடரை, கண்ண பரை வரையாது வந்து ஆள்வர் எனக் கொண்டு அடியார்கள் யாவரும் கருத, பராசக்தியை நீங்காது அப்போதே வந்து ஆள்வர் - எனப் பொருள் கொள்ள வைத்ததும், கண்ணப்பர் காளத்தி எனும் சொற்களைக் கூறி வரலாற்றை நினைவுபடுத்துவதும், இடையில் அப்பர் பெருமானைக் கடலில் இருந்து கரையேற்றிய செய்தியைக் கூறுவதும் (72) பலமுறை படித்தும் மகிழலாம்.

'தையல் (தலைவி) உறுதுயர்க்குத் தரியாது' துறைசையில் வீற்றிருக்கும் கோமுத்தீசரிடம், இவளது துயரை நீக்கித் தண்ணருள் செய்க என வேண்டும் தோழிகூற்றாக உள்ள பாடலில் (80)

***"தையலை யாதரி யாதெழும் வீழும் தசம்படவத்***
***தையலை யாதரி யாதேகு மோவெனும் ....."***

என்னும் அடிகளை, தையல், ஐயா, தரியாது எழும், வீழும், தசம்படு அவத்தை, அலையாது, அரியாது, ஏகுமே எனும் என்று பிரித்துப் பொருள்கொள்ள வைத்து, அகப்பொருள் இலக்கணம் கூறும், (காட்சி முதலாச் சாக்காடீறாக் காட்டிய பத்தும் - நம்பி அக- அகத்திணை - சூத் 36) 1. காட்சி, 2. வேட்கை, 3. ஒருதலை உள்ளுதல், 4. மெலிதல், 5. ஆக்கம் செப்பல், 6. நாணுவரையிறத்தல், 7. நோக்குவ எல்லாம் அவையே போறல். 8. மறத்தல், 9. மயக்கம், 10. சாக்காடு எனும் 10 அவத்தை (நிலை)களை எண்ண வைத்துச் செய்யுள் செய்த திறம் எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது.

இவ்வாறும் இன்ன பிறவாறும், இந்நூலில் அமைந்துள்ள அரிய செய்திகளைக் கூறிக் கொண்டே செல்ல இடமில்லை. இது ஓர் அறிமுகம்தான். ஆகையால், அன்பர்கள் இந்த நூலைப் பெற்று, முழுமையாகக் கற்றுப் பயன்கொள்ளத் திருவருளும் குருவருளும் துணை செய்ய வேண்டுகிறேன்.

**நிறைவுரை :**

திரிசிரபுரம், மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் அமைத்த சொற்கோட்டையாகிய இந்த யமக அந்தாதி நூலின் உள்ளே செல்லுதற்கு, த.ச.மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் குறிப்புரையே நுழைவாயிலாக அமைந்து வழிகாட்டுகிறது. நூலாசிரியரும் குறிப்புரை யாசிரியரும் ஒரே பெயரினர். இருவரும் ஆதீனப் புலவர்கள். ஒருவர் கோட்டை கட்ட, ஒருவர் நுழைவாயில் அமைக்க, நாம் உள்ளே சென்று கண்டின்புற ஆதீனத்தின் குருவருளே நமக்குத் துணை செய்வதாகும்.

23ஆம் குருமகா சந்நிதானம் அவர்கள், வண்ணப் பணித்து என்னை வா என்ற வான் கருணையினால் இந்தக் கட்டுரையினைச் சிந்தித்து எழுதும் பேறு கிட்டியது. உள்ளிருந்து உணர்த்தி, ஊக்குவிக்கும் குருவருளைச் சிரமேற்கொண்டு - அவர் சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்து உய்வோமாக.

திருச்சிற்றம்பலம்

# துறைசைச் சிலேடை வெண்பா - ஓர் அறிமுகம்

திருமுறை மணி. புலவர். எ. வேலாயுதனார், எம்.ஏ., புதுப்பேட்டை.



(இக்கட்டுரை ஆசிரியர், காஞ்சி குமர கோட்டப் புலவர். 36 ஆண்டுகளாக காஞ்சிபுர ஆன்மீக அமைப்புகளில் சமயப் பணிபுரிபவர்; சமய சாத்திரச் சொற்பொழிவாளர்; கலசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் (ஆதீன வெளியீடு) முதலான பல நூல்களை எழுதியும் பதிப்பித்தும் வருபவர்கள். சைவ நன்மணி, சபாரஞ்சிதம் முதலான பல பட்டங்களைப் பெற்றவர்கள்)

*மாமா சிலாமணியே மன்னும் துறைசை வளர்*
*ஆமா வளர்மூலர் அன்புசிவம் : பூமேவு*
*செந்திருவே செந்தமிழே சேர்ந்தோங்க வானுலகும்*
*வந்தணையும் மெய்கண்டார் வாழ்வு*

செந்தமிழும் சைவமும் தழைத்தோங்கும் வண்ணம் திருவாவடுதுறை யாதீனம் செய்து வருகின்ற திருப்பணிகள் பற்பலவாகும். அரும் பெருமை வாய்ந்த அருள் நலங்களாகும். குறிப்பாகத் தமிழின் செய்யுள் நலஞ்சிறக்கச் செந்தமிழைப் பேணிப் போற்றும் ஆதீன கர்த்தர்களின் பேரருட் சிறப்பும் தமிழ் கூறும் நல்லுலகமே தலை வணங்கிப் போற்ற வருவனவாகும். அத்தகு வரிசையில் மு. பொன்னுசாமிச் செட்டியார் அவர்கள் இயற்றிய துறைசைச் சிலேடை வெண்பா சு. பொன்னோதுவார் அவர்களின் குறிப்புரையுடன் 1926 இல் ஆதீனம் பதிப்பித்து வெளியிட்டருளியது என்று நூல்முகப்பு தெரிவிக்கின்றது.

நூலாசிரியர் வித்துவான் மு.பொன்னுசாமிச் செட்டியாரவர்கள் துறைசை யாதீனத்தின் வளர்ந்த செந்தமிழ்த் திருவினர் என்பதும் ஆதீனத்தின் தமிழ்த் தொண்டர் என்பதும் துறைசைச் சிலேடை வெண்பாவினை ஒருமுறை படிக்கின்றபோதே தெரிகின்றது. நூல் முகவுரையும் தெரிவிக்கின்றது.

திருவாவடுதுறை ஆதீனம் (பதிப்பு) வெளியீடாக வருகின்ற செந்தமிழ் நூல் தமிழறிஞர் போற்றும் தனிப்பெருமையுடையன என்று சொல்லவும் வேண்டுமோ?

வெண்பா, வெண்டளையான் இயன்றது. செப்பலோசையின் சீர்மையுடையது. பாக்களின் முன்னிற்பது. இவ்வெண்பாவியற்றுதற்குச் செந்தண்மை இயல்பின் செந்தமிழின் சொல்வளம் இனிமையுணர்வொடு எழல் வேண்டும். இத்தகு வெண்பாவில் சிலேடையாக - இரட்டுற மொழிதல் ஆக வருசொல்லாற்றலால் பொருள் வளம் பெருகப்பாடுதற்கு புலமை நலம் மிக்கவர்க்கே மிகவும் சாலும்.

இத்தகைய மொழிவளமுடன் பாடுகின்ற புலமை நலம்; ஆதீனக் குருமூர்த்திகள் குருவருளும், ஒப்பிலாமுலையம்மையுடனாய மாசிலாமணியீசர்த் திருவருளும் நூலாசிரியர் மு. பொன்னுசாமி அவர்கட்குப் பெரிதும் வழங்கியுள்ளதனை நூல் கற்போர் தெளிவாகத் தெரிவர். சிலேடை (இரட்டுற மொழிதல்) செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என்று இரு வகைப்படும். அணியிலக் கணத்தின் ஒன்றாக வைத்து வழங்கப்பெற்றது. இது மேலும் சொற்பொருள் இரட்டுற மொழி வளம் பெருக்கும். வெண்பாவில் யமகமும் திரிபும் பின்னிரண்டடிகளில் அமைத்துப் பாடுந் திறம் தனிச் சிறப்பாகவும் வருகின்றது. இந்நிலையில் நூறு வெண்பா இயற்றுதல். கற்பனை வளமும் கருத்தாக்கமும் பொருள் திறமும், சொல்லாற்றலும் வேண்டும், என எண்ணுவார்க்குத் தெரியும். நூலாசிரியர் பெரும்புலமை உணரவரும். மற்று, சிலேடை வெண்பாவினைத் தெரிந்துணரப் பொருள் நிலையும் மொழித் திறமும் ஓரளவேனும் தெரிய வேணும். தற்காலம் மக்கள் எதனையும் வாழைப் பழத்தின் தோலுரித்துத் தந்தாற் போலத்தான் உண்போம் என்னும் நிலையில் உள்ளனர். பலாப் பழச் சுளைகளாக விளங்கும் சிலேடை வெண்பாவின் பொருள் நயமும் சிறப்பும் இனிமையும் குறிப்புரை எழுதிய திருவினர் வித்துவான் சு. பொன்னோதுவார் அவர்களின்

புலமை நலத்தால் ஓரளவேனும் கற்போர்க்குத் தெரியவரும் எனலாம். மேலும் விரித்துரை பதவுரையுடன் எழுதி உலகினர்க்கு உதவியாக அளிக்கப் பெறின் நூற்பெருமையும் சிறப்பும் உள்ளவாறே உலகிற்குப் பேருதவி புரியும். திருவாவடுதுறைச் சீர்மையும் சிறப்பும் ஒப்பிலாமுலையம்மையுடனாய மாசிலாமணி ஈசர் மலரடித் திருவும் மணம் பரப்பி மெய்ம்மையருள் புரியும்.

*"பன்மாண் கவிஞரையும் பாங்காரிளைஞரையும்*
*சொன்மா தவரென்றுறைசையே - புன் சமணர்*
*வெஞ்சபத மாற்றினார் வீறொழித்தார் நட்டமிடக்*
*கஞ்சபத மாற்றினார் காப்பு"*

என்னும் வெண்பா; புலமை நலம் பலவும் மாண்புற்ற கவிஞரை, சொல் மாது அவர் = நாமகள் - சரஸ்வதியே அவர் என்றும்; பாங்குறு இளைஞரை மாதவர் இவர் = திருமால் இவர்; பெருந்தவம் புரிவர் என்றும் போற்றுந் திருவாவடுதுறை என்பது எவ்வளவு பேருண்மை என்பது இன்றுங் காணலாமே! பன்மாண் கவிஞர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனார் முதலிய பலரும் வளர்ந்தோங்கிக் கலைமகள் திருவெனத் திகழ்ந்த திருவாவடுதுறையாதீனத்தின் மாதவச் சிவஞான முனிவர் முதலிய பெருந்தவத்தினர் பெருகிச் சிறப்புறு பெருமாண்பே தெரிவிக்கின்றதைக் காணலாம்.

பானை சோற்றுக்கு ஒரு சோறு பதமென அறிமுகவுரையிற் கண்டோம். நூறு பாடலும் கற்போர் செந்தமிழ் அமுதின் திளைப்பர். செந்தமிழ்ச் சொல் வளமே உண்பர். துறைசையின் திருவருள் மேவுவர்.



தலவிநாயகர்



சேக்கிழார்

# திருமாளிகைத்தேவர் திருவிருத்தங்கள்



சித்தாந்தச் செம்மணி முனைவர். கோமதி சூரியமூர்த்தி, மதுரை.

(இக்கட்டுரை ஆசிரியர், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தத்துறையில் விரிவுரையாளராகவும் இணைப் பேராசிரியராகவும் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். 2007-ல் ஆதீனத்தில் நடைபெற்ற மாதவச் சிவஞான சுவாமிகள் சித்திரை – ஆயில்யத் திருநாளில் நடைபெற்ற கட்டுரைப் போட்டியில் முதல் பரிசு பெற்றவர். பல சைவத் தமிழ் நூல்களை எழுதி வெளியிட்டு வருபவர்கள்)

### திருமாளிகைத்தேவர் - சிறுகுறிப்பு :

திருமாளிகைத்தேவர் திருவிடைமருதூரில் வாழ்ந்து வந்த சைவராயர் வழியில் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. மாட மாளிகை சூழ் தில்லையம்பலம் திருச்சிற்றம் பலவனைப் போற்றிய தவவாழ்க்கை வாழ்ந்தவர். ஆதலால் திருமாளிகைத்தேவர் என்ற காரணப் பெயரால் அழைக்கப்பட்டார். ஒன்பதாம் திருமுறையில் முதல் நான்கு திருவிசைப்பாப் பதிகங்களை அருளியவர் இவரே. திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்துள் திருமாளிகைத் தேவருக்குத் தனிக்கோயில் உள்ளது. அவருடைய திருவுருவம் நான்கு திருக்கைகளோடு கூடியதாய் அமைந்துள்ளது.

### திருமாளிகைத்தேவர் திருவிருத்தங்கள் :

தொட்டிக்கலை மதுரகவி சுப்பிரமணிய முனிவர், திருமாளிகைத்தேவர் மீது தனித் தோத்திரச் செய்யுட்களும், தோத்திர பஞ்சகமும் விருத்தப் பாவில் அருளிச் செய்துள்ளார். அவையே திருமாளிகைத் தேவர் திருவிருத்தங்கள் எனப்படும்.

### நூலாசிரியர் பற்றிய சிறு குறிப்பு :

சுப்பிரமணிய முனிவர் சிதம்பரம் அருகிலுள்ள காட்டுமன்னார்கோயிலில் பிறந்தவர். சிவஞான முனிவரின் மாணாக்கர். அவரிடம் சமய, தமிழ் இலக்கிய இலக்கணப் பயிற்சி பெற்றவர். திருவாவடுதுறை ஆதீனத்தின் 12 ஆம் பட்டம் திருச்சிற்றம்பல தேசிகர் காலத்தில் சின்னப் பட்டத்திலிருந்த அம்பலவாண தேசிகரிடம் (இவர் 13 ஆவது குருமகா சன்னிதானமாயிருந்து அருளாட்சி செய்தவர்) சைவ சந்நியாசமும், சிவதீட்சையும், ஞானோபதேசமும் பெற்றவர். இவரது செய்யுட்களின் இனிமை கருதி 'மதுரகவி' எனப் பட்டார். தொட்டிக்கலையிலேயே (கலசை) வாழ்ந்தமையால் தொட்டிக்கலை மதுரகவி சுப்பிரமணிய முனிவர் என அழைக்கப்பட்டார். (தம்பிரான், வித்துவான் என இருவகைக்கும் மேலானவர்கள் முனிவர் எனக் கூறப்படுவர் - ஊரன் அடிகள்). முனிவர் அருளிச் செய்த நூல்கள் 25 ஆகும்.

### தனித்தோத்திரச் செய்யுட்கள் :

இவை 3 திருவிருத்தங்கள் ஆகும். முதற்பாடலில் திருமாளிகைத்தேவர் ஆற்றிய அற்புதங்களைத் தொகுத்துக் கூறி அவரைப் போற்றுகின்றார்.

திருமாளிகைத்தேவர் ஒருநாள் காவிரியில் நீராடி, பூசைக்குரிய நறுமலர்களை எடுத்துக் கொண்டு தம் திருமடத்திற்குச் சென்று கொண்டிருந்தார். எதிரே பிணப்பறை முழங்கச் சிலர் ஒரு பிணத்தைச் சுடுகாட்டுக்கு எடுத்துக் கொண்டு வந்தனர். குறுகிய வழியாயிருந்ததால் விலகிச் செல்ல முடியவில்லை. சிவபூசைக்குக் கொணர்ந்த மலர்கள் தூய்மை இழக்காதபடி பூக்குடலையை அந்தரத்தில் நிற்கப் பணித்து வழியின் மேற்புறத்தில் எழுந்தருளியிருந்த பிள்ளையாரைத் துதித்தார். பிள்ளையார் அருளால் பிணம் உயிர் பெற்று எழுந்து சுடுகாட்டிற்குச் சென்றது. இந்த அற்புதத்தை நினைத்து,

*"குடங்கர் விசும்பிடை நிறுவிக் குணபம் நடந்திட இயக்கி"* என்கின்றார். (குடங்கர் - குடலை, குணபம் - பிணம்).

திருமாளிகைத்தேவர் ஒருசமயம் திருவீழி மிழலையில் மக்களால் இழுக்க முடியாது ஓடாதிருந்த தேரை வடத்தைக் கழற்றிவிட்டுத் தானே அத்தேரினை ஓடுமாறு செய்தார். இவ்வற்புதத்தை ''கொடிஞ்சிப் பொற்றேர் வடங்கழற்றி ஓட்டி" என்று சுப்பிரமணிய முனிவர் குறிப்பிடுகின்றார்.

கருவுற்ற பெண்கள் யாரை அதிகம் சிந்திக்கிறார்களோ அவர்கள் சாயலில் குழந்தைகள் பிறக்கும் என்பது விஞ்ஞான உண்மை. பெண்களுள் சிலர் இவரைத் தியானப் பொருளாகக் கொண்டமையால் இவரை ஒத்த சாயல் அமைந்த புதல்வர்களைப் பெற்றனர். அதனைக் கண்ட அந்தணர்கள் சிலர் ஐயுற்றுத் தங்கள் மன்னனான நரசிங்க மன்னனிடம் முறையிட்டனர். அதைக் கேட்ட மன்னன் சினந்து திருமாளிகைத் தேவரைக் கட்டி இழுத்து வர ஏவலர்களை அனுப்ப, அவர்கள் மதிமயங்கித் தங்களில் ஒருவரை ஒருவர் கயிற்றால் கட்டிக்கொண்டு அரசனை அடைந்தனர். திருமாளிகைத்தேவர் வராதது கண்டு மன்னன் சினமுற்று "அவரை வெட்டிக் கொணர்மின்" எனக் கட்டளையிட்டு ஏவலாளர்களை அனுப்ப, அவர்கள் திருமாளிகைத் தேவரை வெட்டுவதாக எண்ணித் தங்களில் ஒருவரையே வெட்டிக் கொணர்ந்தனர். வெகுண்ட மன்னன் திருமாளிகைத்தேவரைக் கொல்லக்கருதிச் சேனையுடன் புறப்பட்டான். இதனை உணர்ந்த திருமாளிகைத்தேவர் ஒப்பிலா முலையம்மையிடம் விண்ணப்பம் செய்தார். அம்பிகை மதில் நந்திகளை யெல்லாம் அழைத்து ஒரு நந்தியாக்கி, நரசிங்க மன்னனை இழுத்துவரப் பணித்தாள். நந்திதேவரும் அவ்வாறே சென்று அரசனது படைகளை அழித்து அரசனையும், அமைச்சர்களையும் இழுத்து வந்து நிறுத்தினார். அரசன் திருமாளிகைத்தேவரின் பெருமையை உணர்ந்து அவரை வணங்கித் தன் குற்றம் பொறுக்க வேண்டினான். திருமாளிகைத் தேவரும் மன்னனுக்கு அருள்புரிந்து திருவருளை எண்ணி வியந்து குருநாதரின் திருவடிகளைச் சிந்தித்து வணங்கினார். இவ்வற்புதத்தை நினைந்து "நந்திகளை வரவழைத்து" என முனிவர் குறிப்பிடுகின்றார்.

திருமாளிகைத்தேவர் ஒருசமயம் ஊர்எல்லையில் உள்ள சுடுகாட்டில் எரிந்து கொண்டிருந்த சவத்தின் புகையை நறுமணம் கமழும்படிச் செய்தார். இதனை, "வரைநற்காட்டின் உடம்பின் எழு புகை மாற்றி'' என முனிவர் குறிப்பிடுகின்றார்.

கொங்கணவர் என்ற சித்தருடைய கமண்டலத்தில் என்றும் வற்றாத தண்ணீரை வற்றச் செய்ததை நினைத்து, ''கொங்கணவர் பாத்திரம் சுவற்றி" என்கின்றார்.

சிவபெருமானுக்கு நிவேதனமாகித் தமக்கு வந்த பயிற்றஞ் சுண்டலைத் தம் திருமடத்தில் பாத்தி கட்டி விதைத்துத் திருமாளிகைத்தேவர் பலன் பெறச் செய்ததை நினைத்து "உணவதாய் வெந்திடும் பயறு முளை செய்து" என்று குறிப்பிடுகின்றார்.

இத்தகைய அற்புதங்கள் செய்தவரும், அடியார்கட்கு அருள் புரிபவருமான திருமாளிகைத் தேவரின் இரண்டு திருவடிகளையும் முனிவர் போற்றி வணங்குகின்றார்.

தம் குருவான போகநாத சித்தரின் திருவடிகளை வணங்கும் புனிதரான திருமாளிகைத் தேவர், ஒரு சமயம் தன் குருநாதர் திருப்புகலூருக்குச் சென்றிருந்தபோது அவருடைய பாதுகையை, மாசிலாமணியீசர் கோயிலுக்குத் தென்புறமுள்ள திருமடத்தில் வைத்துப் பூசித்துச் சிவத்தொண்டு புரிந்தார். குருபக்தி மிக்கத் திருமாளிகைத்தேவர் ஆற்றிய அற்புதங்கள் வாக்காலும், மனத்தாலும் அளத்தற்கு ஒண்ணாதவை. புற இருளை நீக்கும் சூரியனைப் போன்று மாந்தர்களின் அக இருளை நீக்கும் அருளுடையவர். எண்டிசை மக்களும் வணங்கிப் பெருகும் பேரின்பத்தால் உய்யும்படி அருளுருவாய்த் திருவாவடுதுறையில் எழுந்தருளி இருக்கும் திருமாளிகைத்தேவரை மனத்துள் வைத்து வழிபடுவோம் (தனித்தோத்திரச் செய்யுள், 2).

மதிப்பிடற்கரிய பல அற்புதங்களின் தெய்வத் தன்மையை உணர்வோர் எங்கும் நிறைந்த சிவபெருமானின் சிவானந்தத்தில் திளைப்பர். குறைவற்ற மெய்யடியார்களின் கூட்டம் ஓங்கி வளர்ந்து வழிபடத் திருவாவடுதுறையில்

வீற்றிருந்தருளும் திருமாளிகைத்தேவரின் தாமரை போன்ற இரு திருவடிகளைத் துதிப்போம் (தனித் தோத்திரச் செய்யுள், 3).

**திருமாளிகைத்தேவர் தோத்திர பஞ்சகம் :**

சுப்பிரமணிய முனிவர் திருமாளிகைத் தேவர் மீது பாடிய 5 விருத்தப்பாக்களைக் கொண்டது பஞ்சகம். பாடல் இறுதிதோறும் "திருமாளிகைத் தேவ சிகாமணியே அன்பர் வாழ்வே" என்பது மகுடமாய் அமைந்துள்ளது. அன்பர்களின் இனிய வாழ்விற்குத் திருமாளிகைத்தேவர் முதல்வராக அருள் புரிகின்றார்.

கருணை பொழியும் திருமுகம். சற்குருவின் பொன் போன்ற திருவடிகளையே காணும் கண்கள். அகன்ற மார்பு. உயிர்களோடு பிரிப்பற்ற அத்துவித தொடர்பு. செங்கையில் சின்முத்திரை. தெய்வீக மணம் கமழும் சிவந்த இருதிருவடிகள். இத்தகைய திருவுருவை மனத்தில் எழுதி வணங்கி வாழும் தொண்டர்கட்கு அருள்புரிய வீற்றிருந்தருள்கின்றார் திருமாளிகைத்தேவர். அன்பர்களின் வாழும் பொருளானவர். (பஞ்சகம்,1). சின்முத்திரை என்பது சுட்டு விரலானது ஏனைய மூன்று விரல்களையும் நீக்கிக் கட்டை விரலின் அடியைத் தொடுதல். கட்டைவிரல் பதி. சுட்டுவிரல் பசு. ஏனைய மூன்று விரல்கள் ஆணவம், கன்மம், மாயையின் குறியீடு. இறைவனின் திருவுருவை உள்ளக்கிழியில் எழுதி ஆன்மாவை அன்புடன் அவனுடன் சமர்ப்பித்து அவனை உணரும் அடியார்கள் மும்மலங் களிலிருந்து நீங்கி அவனது திருவடி வியாபகத்தில் அத்துவிதமாய்ப் பிரிப்பின்றி அடங்கி நிற்பர்.

பிறப்பெடுக்குமுன் உள்ள கேவலநிலையில் உயிர்கட்கு அறிவு, இச்சை, செயல் யாதுமில்லை. அஃது இருள் எனப்படும். கருவிகரணங்களோடு கூடிய பிறப்பு எடுத்த நிலையில் உயிர்களின் அறிவு திரிபுணர்ச்சி உடையதாய் இருக்கும். அந்நிலை மருள் எனப்படும். அப்பொழுது மனம் உயர்ந்த பொருளில் நாட்டம் கொள்ளாது இழிந்த பொருட்களில் நாட்டம் கொள்வதால் மனத்தைக் கயவர் என்கின்றார். அது செய்யும் வஞ்சனையை அறுத்து, உன்னை சேமிப்பு நிதியாக உள்ளத்தில் வைத்து போற்ற, அறிவில் தெளிவு பிறக்கும். இத்தகைய தெளிந்த அறிவுடைய அடியார்களின் மனக்குறையைத் தீர்க்கும் குணக்குன்று நீ. காவேரி புறஞ்சூழ், அறம், பொருள், இன்பம், வீடு பயக்கும் தெய்வீகத் தன்மை வாய்ந்த திருவாவடுதுறையில் எழுந்தருளி அருள்புரியும் திருமாளிகைத் தேவ சிகாமணியே அன்பர் வாழ்வே. (உன்னைத் துதிக்கின்றேன்) என்று முனிவர் பரவுகின்றார். (பஞ்சகம், 2).

ஈன்று வளர்த்திடும் தாயும், சான்றோன் ஆக்கும் தந்தையும் இல்லாத இளஞ்சிறார்க்குத் தோன்றாத் துணையாய் உன்னைத் தவிர வேறு யார் உளர்? அதுபோல உனக்குத் தொண்டு செய்யும் உள்ளம் உடைய நாங்கள் மனந்தளர்ந்திடின் நீயன்றி எங்களைக் காத்தருள வல்லவர் உன்னைத் தவிர மற்றொருவர் உண்டோ? புகழ்மிக்கத் திருமாளிகைத் தேவ சிகாமணியே அன்பர் வாழ்வே நீ எனக்குச் சொல்வாயாக என்று சுவாமிகள் விண்ணப்பம் செய்கின்றார் (பஞ்சகம், 3).

வானுலகத் தேவகணங்கள் வணங்கிடும் திருமாளிகைத்தேவ சிகாமணியே! அன்பர் வாழ்வே! மனைவி, மக்கள், உரிமையுடைய சுற்றத்தார், பொருள், மற்றும் பிறவும் துறந்து உன் குளிர்ந்த பொன் போன்ற திருவடிகளையே சரணாகச் சார்ந்திருக்கும் எங்கட்கு ஒரு குறை உண்டானால் யாரிடம் எடுத்துரைத்து ஆற்றிக் கொள்வது உரைத்தருள்வாயாக என முனிவர் வேண்டுகின்றார் (பஞ்சகம், 4).

காவிரி நதி பாயும் திருவாவடுதுறையில் வீற்றிருந்தாலும் திருமாளிகைத்தேவ சிகாமணியே! அன்பர் வாழ்வே! பூக்கொண்டு சிவபெருமானின் பொன்னடியைப் பூசை செய்த மார்க்கண்டேயரைக் கவரவந்த யமன் பட்ட பாட்டை நினையாது, உனக்கு வழித் தொண்டு செய்யும் நாங்கள் எங்கட்குப் புகலிடம் இல்லாததுபோல் வருந்துவது உனக்கு அழகாகுமா? நீயே எங்கட்குப் புகலிடம். நீயே எங்களைக் காத்தருள வேண்டும் என்று திருமாளிகைத் தேவரை முதல்வராகக் கருதி வேண்டுகின்றார் முனிவர் (பஞ்சகம், 5). அதனால் இப்பஞ்சகம் துன்பம் நீக்கும் வேண்டுகோள் பதிகமாகக் கருதப்படும். இன்றைக்கும் ஆதீனத்

தம்பிரான்கள் மனத்துன்பம் ஏதாவது வந்தால் திருமாளிகைத்தேவர் சந்நிதியில் வேண்டும் பழக்கம் உண்டு.

நாமும் திருவாவடுதுறைக்குச் செல்லும் போது திருமாளிகைத் தேவர் சந்நிதியில் நின்று வணங்கி நம் குறைதீர வேண்டுவதுடன், இன்றைய நிலையில் நாட்டில் நிலவும் தீவிரவாதம், வன்முறைகளை ஒடுக்கிச் சமுதாயச் சீர்கேடுகளைக் களைந்து, நாடனைத்தும் ஒன்றுபட்டு, உலகம் அன்பால் இணைந்து இன்பலோகமாக விளங்க அருள்புரியும்படி விண்ணப்பம் செய்வோமாக.

திருச்சிற்றம்பலம்.

**தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் இயற்றியது :**

**தனித்தோத்திரச் செய்யுட்கள் :**

குடங்கர்விசும் பிடைநிறுவிக் குணபநடந்
திடவியக்கிக் கொடிஞ்சிப் பொற்றேர்
வடங்கழற்றி யோட்டிமதி ளந்திகளை
வரவழைத்து வரைநற் காட்டி
னுடம்பினெழு புகைமாற்றிக் கொங்கணர்பாத்
திரஞ்சுவற்றி யுணவ தாய்வெந்
திடும்பயறு முளைசெய்தெமக் கருடிருமா
ளிகைத்தேவ ரிணைத்தாள் போற்றி. 1

பொருளிலதாம் போகநாத சித்தர்பதம்
பூசிக்கும் புனிதர் நாளு
மருவுபதி யதிசயங்கள் வாக்காலு
மனத்தாலு மதிக்கொ ணாதா
இருளகன்ற பானுவென வெண்டிசையும்
பணித்துய்ய வின்பா யோங்கி
யருளுருவாய்த் துறைசைவரு திருமாளிகைத்
தேவை யகத்துள் வைப்பாம். 2

புறமைத்த கர்த்தான மதிப்பருமற்
புதமாந் தன்மை பலவிளக்கி
நிறைவுற் றிருக்குஞ் சிவானந்த
நிலைபெற் றிருக்கு மெம்பெருமான்
குறைவற் றிருக்கு மெய்யடியார்
கூட்டங் கலந்து வளர்ந்தோங்குந்
துறைசைத் திருமாளி கைத்தேவன்
றுணைத்தாட்கமலந் துதிப்பாமால். 3

**தோத்திர பஞ்சகம் :**

கருணைபொழி திருமுகமுஞ் சற்குருபொற்
பதமலரே காணுங் கண்ணுந்
திருமருவு தடமார்பு மத்துவித
முணர்த்துசின் முத்திரைச் செங்கையு
மருமலர்ச்சே வடியிணையு மனத்தெழுதி
வைத்திறைஞ்சி வாழுந் தொண்டர்க்
கருள்புரிய வருதிருமா ளிகைத்தேவ
சிகாமணியே யன்பர் வாழ்வே. 1

மருள்பெருக்கு மனக்கயவர் வஞ்சனையைத்
துமித்துனையே வைப்பாய்ப் போற்றுந்
தெருள்பெருக்கு மனத்தடியார் குறைதீர்க்குங்
குணக்குன்றே சிறந்த வோர்நாற்
பொருள்பெருக்குந் தெய்விகப்பூம் பொன்னிபுறஞ்
சூழ்துறைசைப் பொலிந்து மேவி
யருள்பெருக்கு மொருதிருமா ளிகைத்தேவ
சிகாமணியே யன்பர் வாழ்வே. 2

ஈன்றுவளர்த் திடுதாயு மிதம்புரிதந்
தையுமல்லா திளஞ்சி றார்க்குத்
தோன்றுதுணை யாயொருவ ருண்டோவங்
கதுபோலுன் றொழும்பா யுள்ளேம்
மான்றுமணந் தளர்ந்திடினீ யன்றி
யளித்தருள வல்லார் மற்றுமுண்டோ
வான்றபுகழ் பெறுதிருமா ளிகைத்தேவ
சிகாமணியே யன்பர் வாழ்வே. 3

பெண்டிருமக் களுமுரிமை பெருக்குகிளை
யரும் பொருளும் பிறவுநீத்துன்
றண்டளிர்ப்பொற் றிருவடியே சணாகச்
சார்ந்திருக்குந் தமியேங் கட்கு
முண்டொர்குறை யெனிலெவர்மாட்டுரை த்தாற்றிக்
கொள்வதுரைத் தருள்வாய் வானத்
தண்டர்கணம் பணிதிருமா ளிகைத்தேவ
சிகாமணியே யன்பர் வாழ்வே. 4

பூவலர்கொண் டெந்தை பெம்மான்
பொன்னடிப்பூ சனையியற்றும் புதல்வதற்காக
மாவலித்தோண் மறலிபட்ட பாட்டையுன்னிப்
பாராதுன் வழித்தொண் டானே
மேவுமொரு புகலிலர்போல் வருந்துவதுன்
னழகேவெண் டிரைநீர்ப் பொன்னி
யாவடுதண் டுறைதிருமா ளிகைத்தேவ
சிகாமணியே யன்பர் வாழ்வே. 5

# ஒப்பிலாமுலையம்மை பிள்ளைத்தமிழ் - ஓர் அறிமுகம்



வே. சீதாலெட்சுமி, திருப்பனந்தாள்.

(இக்கட்டுரை ஆசிரியர், திருப்பனந்தாள் திருமடத்து கலைக்கல்லூரியில் தமிழ்த்துறை இணைப் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்; பெரிய புராணத்தில் இலக்கணக் கூறுகள் குறித்து ஆய்வு செய்தவர்கள். சிறந்த கட்டுரையாளர்; ஆன்மீகச் சொற்பொழிவாளர்)

காவிரி பாய்ந்தோடும் சோழ நாட்டுத் தலங்களுள் புராண, வரலாற்றுச் சிறப்பு மிக்க தலம் திருவாவடுதுறையாகும். இங்கு கலை நயம்மிக்க, சிற்பவேலைப்பாடுகளுடன் கூடிய பழமையும், பெருமையும் வாய்ந்த கோமுத்தீஸ்வரர் ஆலயம் உள்ளது. வானளாவிய கோபுரமுடைய இக்கோயிலில் அருள்பாலிப்பவர் மாசிலாமணியீசர் அம்மை பிள்ளைத் தமிழின் பாட்டுடை நாயகி ஒப்பிலாமுலையம்மை. கயிலையில் சிவனுடன் சொக்கட்டான் ஆடி மகிழ்ந்த அன்னை பசு உருப்பெற்று, இத்தலம் வந்து ஈசரை வழிபட்டாள். பின் பசு வடிவம் நீங்கப்பெற்று, ஈசனின் இடப்பாகத்து அணைத்தெழுந்த நாயகி, நாயகராகக் காட்சி தருகிறாள். இதனால் இவ்வூருக்கு கோமுத்தி, கோகழி எனப் பெயர் வந்தன. இத்தலவிருட்சம் படர் அரசின் கீழிருந்து திருமூலர் திருமந்திரம் பாடியதாகத் தலபுராணமும், பெரியபுராணமும் குறிப்பிடுகின்றன. முசுகுந்த சக்கரவர்த்திக்கு இத்தலயீசன் திருவாரூர்த் தியாகேசராகக் காட்சியளித்ததால் வீர சிங்காதனப் பொன் தியாகேசராகக் கோயில் கொண்டுள்ளார். ஞானசம்பந்தர் தனது தந்தையின் சிவவேள்விக்கான பொன்னை இத்தல இறைவன் மீது பதிகம்பாடி ஆயிரம் பொற்காசுகளைப் பெற்றுத்தந்த வரலாறு உள்ளது. போகர் முதலான சித்தர்கட்கு அட்டமா சித்திகளையும் இத்தலத்தில் இறைவன் அருளினார்.

**பிள்ளைத்தமிழ் :**

சிற்றிலக்கிய வகைப்பாடு 96. அவற்றுள் பிள்ளைத் தமிழும் ஒன்று. பிள்ளைத்தமிழ் வித்தார கவியின் பாற்பட்டது. ஆசிரிய விருத்தப்பா வகையிற் பாடப்படுவது. பிள்ளைக் கவி, பிள்ளைப்பாட்டு எனவும் வழங்கப்பெறும். 'குழவி மருங்கினும் கிழவதாகும்' எனும் தொல்காப்பிய நூற்பா பிள்ளைத்தமிழ் இலக்கணத்தைச் சுட்டுகிறது. ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும் பாட்டியல் நூல்கள் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளன.

*'காப்பொடு செங்கீரை தால்சாப்பாணி*
*யாப்புறு முத்தம் வருகவென்றல் முதல்*
*அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்'*

எனப் பன்னிரு பாட்டியல் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கும்

*தெரிவையர்க்குப் பெருங்கழங் கம்மானையூசல்*
*பெறுமூன்று முதலிரு பத்தொன்றுள்*

எனப் பரஞ்சோதியார் பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கும் இலக்கணம் கூறுகின்றார். பெண்பாற் பிள்ளைத்தமிழ் மிகுதியும் அம்மானை, நீராடல், ஊசல் என அமையும். இஃது முதல் ஏழுபருவங்கள் ஒன்றாக அமைய இறுதி மூன்றே மாறுபடுவன.

பிள்ளைத்தமிழ் குழந்தையின் மூன்றாம் மாதம் தொடங்கி இருபத்தொன்றாம் மாதம் வரை பத்துப் பருவங்களாகப் பகுத்து, பருவத்திற்கு பத்துப் பாடல்கள் வீதம் 100 பாடல்களாகவும், கடவுள் வாழ்த்தைச் சேர்த்து 101 பாடல்களாகவும் அமையும். தெய்வம், அரசன், வள்ளல்கள், சான்றோர் இவர்களைப் பாட்டுடை நாயக, நாயகியராக்கி குழந்தைப் பருவ நிகழ்வுகளில் பாடப்படுவதே பிள்ளைத் தமிழ்.

**பருவ அமைவுகள் :**

காப்புப் பருவம் குழந்தையின் மூன்றாம் மாதத்தில் பாடப்படுவது. குழந்தையை தெய்வங்கள் காக்குமாறு வேண்டிப் பாடுவது. செங்கீரைப் பருவம் ஐந்தாம் மாத நிகழ்வு. ஒரு காலூன்றி,

ஒருகால் மடக்கி, கைகளைத் தரையில் ஊன்றித் தலையை நிமிர்த்தி ஆடுவது. தாலப்பருவம் ஏழாம் மாத நிகழ்வு, குழந்தை உறங்குவதற்காகப் பெற்றோரும், மற்றோரும் நாவசைத்துப் பாடுவது. சப்பாணிப் பருவம் ஒன்பதாம் மாத நிகழ்வு. குழந்தையை அதனுடைய இரு கைகளையும் இணைத்துக் கொட்டி ஒலி எழுப்புமாறு வேண்டுவது. முத்தப்பருவம் பதினோராம் மாதம் நிகழ்வது. குழந்தையை முத்தம் தருமாறு யாவரும் வேண்டுவது. வருகைப்பருவம் பதின்மூன்றாம் மாத நிகழ்வு. குழந்தையை இனிதே நடந்து வருமாறு அழைப்பது. அம்புலிப் பருவம் பதினைந்தாம் மாத நிகழ்வு. அம்புலியைச் சாம, பேத, தான, தண்ட முறையில் குழந்தையுடன் விளையாட வருமாறு அழைப்பது. சிற்றில் சிதைத்தல் அல்லது கழங்கு அல்லது அம்மானை ஆடல் பதினேழாவது மாத நிகழ்வு. நீராடல் அல்லது சிறுபறை கொட்டல் என்பது பத்தொன்பதாவது மாத நிகழ்வு. குழந்தையை நீராட அல்லது பறை கொட்ட வேண்டுவது சிறுதேர் உருட்டல் அல்லது ஊசல். இருபத்தொன்றாம் மாத நிகழ்வு; குழந்தை தேர் உருட்ட அல்லது ஊஞ்சாலடுமாறு வேண்டுவது.

**ஒப்பிலாமுலையம்மை பிள்ளைத்தமிழ் :**

பாட்டுடை நாயகி உறையும் கோமுத்தீஸ்வரர் ஆலயம் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாட்சிக்கு உட்பட்டது. இவ்வாதீனத்தில் சைவமும் தமிழும் செழித்தோங்கி வளருகின்றது. இலக்கிய, இலக்கண, சைவ, ஆகம நுட்பங்களும், சைவத் தொண்டு நெறியும் பெரிதும் போற்றப் படுகின்றன. சித்தாந்த சைவ சமய செயற்பாடுகளும் எங்கும் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. இவ்வாதீனத்து 23-ஆவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளி, ஞான அருட்செங்கோலோச்சி வரும் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களது அருளாணையின் வண்ணம் இக்கோயிலுக்கு 26-1-11 அன்று குடமுழுக்கு இறையருளால் நடக்கவிருக்கின்றது. இவ்வாதீனத்தின் கீழ் இயங்கிவரும் சரசுவதி மகால் நூல்நிலையத்தில் 'ஒப்பிலாமுலையம்மை பிள்ளைத்தமிழ்' ஓலைச் சுவடிகளாக இருந்தன. இதில் முதல் ஏடும் இறுதி சில ஏடுகளும் கிடைக்கப்பெறவில்லை. இதனால் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 96 பாடல்களே உள்ளன. இறுதி நான்கு பாடல்கள் வேறு ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டுள்ளன. இசையாகப் பாடும் வகையில் இப்பாடல்கட்குச் சந்தங்கள் தரப்பட்டுள்ளன. ஒப்பிலாமுலையம்மை பிள்ளைத் தமிழ் மூர்த்தி, தலம், தீர்த்தச் சிறப்புக்களையுடையது.

**மூர்த்திச் சிறப்பு :**

தன்னைப் பக்தியுடன் நாடிவரும் பக்தர்கட்கு ஒப்பிலா முலையம்மை அருள் வழங்குபவள். காரண, காரிய அடிப்படையில் இவ்வம்மைக்கு எண்ணற்ற பெயர்களை இந்நூலாசிரியர் கூறுகின்றார். அம்மையை நூலில் அறிமுகம் செய்யும் பொழுதே,

***"மாசிலா மணிக்கண்ணுதலி டப்பாகம் வாழ்
காம்புநிகர் தோள் ஒப்பிலாமுலைப் பெண் கொடிக் கவுரி"***

எனப் போற்றுகின்றார். இமையனுதவிய புத்ரி, காதளவு நீண்ட விழிக் காமாட்சி, திருமாலினுக் கிளைய பூங்கொடி, மூன்று தொழிற்குங் காரணமாம் முதல்வி. கோமுத்தியீசன் நேசிக்க வருமோகப் பசுமஞ்சுகம், அருந்தவம் முதிர்ந்தவள், உலகுயிர்க் கன்னை, வேதச்சிரத்திலுறு சோதிப் பராசக்தி, ஐந்தொழிலுக்குரிய சக்தி, அமரர்கள் பணிந்திடு சரண சவுந்தரி, துறைசை வள நகரிறைவி, போதமிகு மாதவர்கள் ஓது கருணாகரீ, சிதானந்த சுக சொப்பனத்தி, வரந்தரு துரந்தரி, சோதிமயமான பூரண கடாட்சி, காசியில் விசாலாட்சி, ஆலவாயில் எழிலங்கயற்கண்ணி, ஏற்றமிகு காஞ்சி காமாட்சி, தில்லையில் இனிய சிவாகமவல்லி, அண்ணாமலைப் பதி உண்ணாமுலை, சேதுமலைவல்லி, அகிலாண்ட நாயகி, ஆணிப்பொன், அபிராமி, கவுரி, திரிபுரை அமுது, சுந்தரி, புரந்தரி, நிரந்தரி, கருணாகடாட்சி, ருத்திரி, பார்வதி, சிவசங்கரி, துறைசைச்செல்வி, ஆதிசக்தி, வாலாம்பிகா, பரிபூரணி, வாலை, சவுந்தரி, கண்ணின்மணி, அனவரதகல்யாணி, பார்ப்பதி, சிறுபாலி, மனோன்மணி, மகமாயி, அன்னபூரணி பரை என அம்மையின் பெயர்கள் ஆசிரியரால் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

**தலச்சிறப்பு :**

தலமானது கோமுத்தி, கோகழி, துறைசை எனப்பெயர் பெறுகின்றது. நீர்வளம், நிலவளம், இயற்கையழகு, வாழும்மக்கள், அவர்தம் பக்திமை, கல்வியாவும் தலச்சிறப்புடன் இணைத்து பாடப் பட்டுள்ளன. 'புண்ணியங்கள் தந்து புதுமை பெறும் துறைசை, புவி புகழ வரும் துறைசை, தமிழ் வளஞ்சேர் புலவர்களும் நிறைதுறைசை, மிகுமகிமை துறைசை அழகொழுகு துறைசை. ஆனந்தியாந் துறைசை, துறைசை நகர், ஐதிகழ்ந்திடு துறைசை, அலர்ந்தமலர் ஏலங்கமழும் பொழில் துறைசை, அட்டதிசை புகழ்துறைசை, எவரையும் அஞ்செலென வருந் துறைசை, அனுதினமும் இன்பம் பெருகும் துறைசை, எத்தாரணியும் புகழ் துறைசை, ஓங்குபுகழ் துறைசை, உத்தமர்கள் உறை துறைசை, விண்ணுலகமென்று துன்னரும் பலவதிசயங்கள் மலிவாந்துறைசை, உலகர் புகழ் துறைசை, அந்தரத்து அமரர் பரவுந்துறைசை, அரசவனம் வளர் துறைசை, தருமமிகும் துறைசை, தலைமை கொள் துறைசை, தினமும் விருந்தூட்டும் துறைசை, செந்நெல் விளைக்கும் வயல் துறைசை, திருவளர் துறைசை, திருமருவு துறைசை, வியன்மலிந்திடு துறைசை, திருத்தகு வரிசை பெறு துறைசை, துறைசைக் கடிநகர், கோமுத்தி நகர், முதிரும் தமிழ்க்கோர் முத்திநகர்' என இத்தலத்தின் சிறப்புகள் அழகுற எடுத்தியம்பப்பட்டுள்ளன.

**தீர்த்தச் சிறப்பு :**

இறைநெறியையும், பக்திமேம்பாட்டையும் விளக்குவது தீர்த்தச் சிறப்புகளாகும். மேனிலைத்தவர் குடையும் முத்தித்தடாகம், மேதகுங் கோகனக முத்தித்தடாகம், விண்ணவர்கட்கும் அருள் முத்தித் தடாகம், வெம்பிறவி நோய் தீர்த்த முத்தித்தடாகம், வேரி நிறை கோகனக முத்தித்தடாகம், வீசு புகழ்க் கோகனக முத்தித் தடாகம், வேதச்சிரத் தமரிம் முத்தித் தடாகம், விந்தையருள்கின்ற கோமுத்தி தடாகமெனக் காரண, காரிய சிறப்புகளுடன் தீர்த்தச் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது.

**பிள்ளைத் தமிழின் பருவச் சிறப்புகள் :**

நூற்காப்பு துணைவந்த விநாயகர் மேல் பாடப்பட்டுள்ளது. இவர் ஒப்பிலாமுலையம்மை கயிலாயத்தினின்று பசு உருவில் இத்தலம் வந்தபோது துணை வந்தவர்.

**காப்புப் பருவம் :**

திருமால், சிவபெருமான், விநாயகர், முருகன், பிரமன், இந்திரன், திருமகள், கலைமகள், துர்க்கை, பலதேவர்கள் எனப்பதின்மரை வேண்டி, இப்பாட்டுடை நாயகி ஒப்பிலாமுலையம்மையைக் காக்குமாறு பாடப்பட்டுள்ளன. அம்மை உலக முழுவதையும் ஈன்றவள். உயிர்களது வினைக்கீடாகப் பிறவியளித்து, அவ்வினை பொசிந்திட அவ்வவ்வுயிர் கட்கும் அருளுபவள். மீண்டும் அவ்வுயிர்கள், வினையிற் சாராதவாறு அருள் வாழ்வளிப்பவள்.

*உலகமுழுவதும் அருளி .அவரவர்*
*ஊழுக்குளானதை நாடிப் பொசித்திட*
*உதவுதிரிபுரை கவுரி என வினை*
*ஊசற்படாதருள் வாழ்வைப் பதித்திடு.*

ஐந்தாம் பாடல், அன்னை கவுணியச் சிறுவன், ஞானசம்பந்தர்க்கு கோதகன்ற ஞானக் குருமணி தனத்தின் பாலதருளிய திறத்தைச் சுட்டுகிறது. அத்துடன் அம்மை அவர்க்குத் தமிழ்வேதமாம் திருமுறைகளைப் பாட அருளிய திறமும் கூறப்படுகின்றது. ஆறாம் பாடல் அட்டமூர்த்தியாம், இறையைப் பிரியாதுறையும் ஒப்பிலாமுலையை எனக் கூறுகிறது.

**செங்கீரைப் பருவம் :**

இரண்டாம் பாடல். சிவன் மும்மூர்த்திகளாகத் திகழ்வதும் இருபத்தைந்து வழிபடு மூர்த்தங்களாகத் திகழ்வதும் கூறப்படுகிறது. நேசித்தவர் நெஞ்சில் நீங்காதுறைபவன், நேசியார்க்கு இறை அந்நியன், சச்சிதானந்த சின்மயரூபன், நிருமலன், நிருத்தன் எனவும் புகழப்பாடுகிறான். அம்மை மலயத்துவச பாண்டியன் மற்றும் இமவானும் மனமகிழவரும் அரும் புதல்வியாவாள். 3ஆம் பாடல் அம்மையானவள் ஐந்தொழில்களை நிகழ்த்த ஐந்து மூர்த்திகளைப் படைத்து அவரவரக்குத் துணையாக ஐந்து சக்திகளையும் படைத்து அவரவர் தொழில்கள் முட்டின்றி நடைபெற உதவிய ஆதி சக்தியாவாள். பக்தி மிக்க அடியார் தம் வினை பொடிபட கடைக்

கண் நோக்கும் அருளன்னை. மாசிலாமணியீசர் மகிழவரும் கிருபாகரச் செல்வி என்கிறது. 4ஆம் பாடல் அம்மை ஆன்மாக்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் பயின்று அதனால் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல் என்பதன் வழி பதிஞானம் சார்ந்து உய்யத் தனதிரு முக்தித் தாளிணை நல்குவள் என்கிறது.

**தாலப்பருவம் :**

முதலிரு பாடல்களில் இயற்கைக் காட்சி காணப்படுகின்றது. கரும்பு ஆலையின் அடு புகையும், வேதியர்களது ஆகுதிப் புகையும், வானகமெங்கும் நிறைய, அதனை முகிலெனக் கருதிய மயில் ஆடியது. பலாக்கனி பிளந்து அதன்சாறு காவிரிவழி சென்று குளங்களை நிரப்ப, அந்நீரை மள்ளர்கள் வயலுக்குள் பாய்ச்சச் செந்நெல் விளைந்தது. வானுலக சுரபிகள் திருவாவடுதுறை வயலில் நீண்டு வளர்ந்த கரும்புகளை அங்கிருந்தே உண்டு இளைப்பாறின. இங்குள்ள வண்டுகள் வானுலகில் கற்பகத்தரு பூக்களின் மதுவுண்டு மயங்கின என்றும், 4ஆம் பாடல் வேளாளர்கள் மனம் வாக்கு செயல் மறவாது 32 தருமங்களும் வழுவறச் செய்தனர்; நாளும் விருந்தினர்க்கு அன்னமும் கறியமுதும், பால், கனி, சிற்றுண்டி வகைகளும் அளித்துச் சிறப்பித்தனர் என்கிறது. மேலும் தேவாரப் பாடல்களைப் பண்ணிசைத்துத் தமிழ் வல்லார்பாட, அவற்றைப் பூவைகளும் கிளிகளும் கேட்டுப் பாடின. வண்டுகளின் இசைச் சுருதியைக் கின்னரர் மிதுனர் கேட்டு இன்புற்றனர்.

**சப்பாணிப் பருவம் :**

2-ஆம் பாடல் அங்காங்கி பாவத்தை அதாவது தேகமும் தேகியும் போலப் பிரிவின்றி நிற்கும் தன்மையைக் கூறுகிறது. அம்மை உயிர்கள் மேல் கருணை கடாட்ச வீட்சணம் வைத்து இரட்சிப்பவள் என்கிறது. 4ஆம் பாடல் ஆறு குழந்தைகளான முருகனைச் சேர்த்தணைத்து அறுமுகச் சரவணபெருமானாக அம்பிகை ஒன்றாக்கிய திறத்தைக் காட்டுகிறது. 8-ஆம் பாடல் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை எனும் 6 ஆதாரங்கள் பற்றிக் கூறுகிறது. மேலும் இரவும் பகலும் சிவயோகிகள், சிவஞானிகள் அம்மையைத் தியானித்து வணங்க இன்பமளிப்பவள் என்கிறது.

**முத்தப் பருவம் :**

2ஆம் பாடல் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளை நீக்குதல், பிறவி நோய் நீக்கல், பேரானந்தத்தில் அழுந்தச் செய்தல் எனும் அம்மையின் அருளைக் காட்டுகிறது. 7ஆம் பாடல் உயர்ந்த மதில்களில் கருமுகில்படிய, அது கண்டு மயில் நடனமாட வண்டுகள் இனிய இராகம் இசைப்பதையும், தன்னிடத்தே ஊடிய மந்தியின் ஊடல் தணிக்க முசுக்கலை அதற்குக் கனி பறித்துக் கொடுத்தது என்கிறது. 9ஆம் பாடல் வெள்ளிசபை, தாமிரசபை, பொற்சபை, சித்திரசபைகளைக் குறிப்பிடுகிறது. அம்மை பரசமயமும், பழைய சிவசமயமும் பணியும் பார்வதி; அருமறைகள் ஓலமிட்டு அறிய இயலாத அரிவை என்கிறது. 10ஆம் பாடல் பலவகை மணிகளின் சிறப்பை விளக்குகிறது.

**வருகைப்பருவம் :**

3ஆம் பாடல் கோட்டுமலர், கொடிமலர், நீர்மலர், நிலமலர் எனும் நால்வகை மலர்களையும், மலர்களைத் தூய்மையாய்ப் பறிக்க நாட்காலே நீராடி, புலருமுன் அன்றலரும் பூக்களைக் கையால் தடவிப் பார்த்து பறித்தலையும், அவற்றை மாலை, இண்டை, கண்ணி அலங்கலென அமைப்பதையும் சுட்டுகிறது. 4ஆம் பாடல் திருக்கோயிலை நாட்காலையில் அலகிடல், மெழுக்கிடல், கங்கை நீர் தெளித்துக் கோலமிடல், தாமரைத் தண்டு திரியால் நெய் தீபமிடல், நான்கு வீதிகளிலும் உழவாரம் செய்தல் எனும் சரியை நெறியைக் கூறுகின்றது. 5ஆம் பாடல் தேவர்களது மலர் வழிபாட்டையும் 8ஆம் பாடல் சலந்தரனைப் பிளந்ததையும், 9ஆம் பாடல் சூரனை அழித்த முருகனது வீரமுகத்தையும், 10ஆம் பாடல் எமனை உதைத்த வரலாற்றையும் விளக்குகின்றன.

**அம்புலிப் பருவம் :**

அம்மை அருந்தவம் புரிந்தவள். உயிர்ப்பொருள், உயிரல் பொருள் யாவற்றின் இயக்கமாக அம்மையே இருக்கிறாள் என்பதும் கூறப்படுகிறது. 8ஆம் பாடலில் முட்டின பின்னே தலைகுனிவது என்ற பழமொழி இடம் பெற்றுள்ளது.

**அம்மானைப் பருவம் :**

2ஆம் பாடல் உயிர்வர்க்கத்தையெலாம் ஈன்றருளிய சோதிப்பரத்திலுறு சோதிப் பராசக்தி என்கிறது. 6ஆம் பாடல் முத்தொழில்கள் அம்மையின் சக்தி விளையாட்டென்றும், அம்மை கழங்காடுவது அண்டங்களையே அம்மனைக் காய்களாகக் கொண்டு ஆடுவதாக உள்ளது என்கின்றது.

**நீராடற் பருவம் :**

அம்மை நீராடும் முக்தித்தடாகம் யாவர்க்கும் முக்தி அளிப்பது. அம்மையிடத்து ஆசகலவந்த உயிர்களை அவள் மீண்டும் அன்னை வயிற்றில் சேராது, கோகன முத்தித் தடாகத்தில் மூழ்க வைத்து முக்தியிற் சேர்ப்பவள். சாதகப் பட்சிபோல சதாதன்னை உள்ளத்துள் தியானிக்கும் சற்சனர்கட்கு அருமறைகளும் காணாத திருவடியைக் காட்டுபவள். உயிர்கள் சத்து, அசத்து வேறு பாடறிந்து அசத்தில் சாராது நற்சத்தினில் சைதன்யமாகக் கலக்கச் சிவஞானம் அருளுபவள்.

**ஊசற்பருவம் :**

1,5ஆம் பாடல்கள் அம்மை ஊஞ்சலாடும் அழகினை வருணிக்கின்றன. அம்மை சிவநேசச் செல்வர்களது செயலைத் திருவருட் செயலாக்குவாள். இறைவனது ஆனந்தத் தாண்டவத்தை அம்மை காண்பது உயிர்கட்கு முக்தியளிக்கவே ஆகும். 6ஆம் பாடல் இரத்தம், மேதை, மூளை, சதை, எலும்பு, மஜ்ஜை, தோல் ஆகிய உடலின் ஏழு தாதுக்களைக் குறிப்பிடுகிறது. 10ஆம் பாடல் அம்மை பல்வேறு பெயர்களில், பல்வேறு தலங்களில் அழைக்கப்பட்டாலும் அவள் ஒருத்தியே, அவளே பராபரை என விளம்புகிறது.

**அடியார்கள் சிறப்பு :**

அம்மையப்பர் தம் திருவடிக்கண் அகலாது பற்றுக் கொண்ட அருந்தவ அடியார்களின் பெருமையை வருகைப்பருவ 2ஆம் பாடல் கூறுகிறது. உயிர்களிடத்து கருணையும், தவமகிமையும், மாட்சிமையுடைய திருநீற்றின்மீது உண்மை பக்தியும், விருப்பமான வேத ஆகமங்கள் மீது எக் காலத்தும் பொருந்திய சிந்தையும், சிவச் சின்னங்கள் தாங்கிய சிவவார வேடமும, தம்முடலை வருத்திச் சிவபணிகள் செய்தும், ஒரு நாளைக்கு, ஒருவேளை மட்டும் உண்டும், முக்காலமும் இறைநினைவில் மகிழ்வுறும் செந்நெறிச் செல்வர்களைக் கண்டால் எமதூதர்கள் அவர்கள்முன் தெண்டனிட்டுப் பணிவார்கள், அருளாளர்கள் இட்டபணியை எமதூதர்கள் சிரமேற் கொண்டு செய் தொழுகுவர் என்றும் அடியார்களது சிறப்பு விதந்தோதப்படுகின்றது.

இவ்வாறு ஒப்பிலா முலையம்மை பிள்ளைத்தமிழ் எல்லா நலன்களும் ஒருங்கே அமையப்பெற்ற இனிய, எளிய தமிழ் நடையில் பாடப்பெற்றதாகும். இந்நூற்பயனை அறிந்து பெருமக்கள் இன்பம் அடைவாராக.

---



## அருள்திரு திருமாளிகைத்தேவர்

மாதவ ருடனே மிக்க மாளிகைத் தேவர் போதி
நாதனை யுணர்ந்து ஞான நிட்டையுள் நணுகி முன்பு
கோதிலாக் குருவின் பாதம் கும்பிடுங் கொள்கை யோடும்
ஏதகு திரும டத்தின் மேவிவீற் றிருந்தா ரென்றும்.

-திருவாவடுதுறைப் புராணம் (2144)

# வேதசிவாகமக் கட்டுரைகள்



திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில் நந்தி மண்டபம்

# ஆத்மார்த்த சிவபூஜை

சிவாகம செல்வர், கயிலைமாமணி, திருக்கோலக்கா என்.இராமநாத சிவாச்சாரியார்



(இக்கட்டுரை ஆசிரியர், திருக்கோலக்கா வேத சிவாகமப் பாடசாலையில் பலநன் மாணாக்கர்களை உருவாக்கி வருபவர்கள்; ஆதீனத்தில் அறக்கட்டளை ஒன்று நிறுவி ஆதீனக் குருமுதல்வர் குருபூசையில் தக்கவர்களுக்கு மகாசன்னிதானம் அவர்களால் விருதுகள் பெறச் செய்பவர்கள்)

*ரூபம் ஸம்பத்து தீர்க்கமாயுர் சுகிர்தம் வித்யா விவேகம் தானம்*
*ஞானம் சௌர்ய முதார மங்களகரம் ப்ரௌடாங்கனா ஸங்கமம்/*
*அன்னம் வஸ்த்ர சுகந்த பூஷணதரம் புத்ராதி சௌக்யப்ரதம்*
*திவ்யாந்தோளண வாஹனாதி ஸு்கிருதம் போகம் சிவார்ச்சாபலம்//*

உலகத்தில் உள்ள எல்லா உயிரினங்களும் நன்மைபெற வேண்டி இறைவன் ஸ்ரீ உமாதேவியை திருமணம் செய்துகொண்டு ஸ்ரீகல்யாணசுந்தரனாக காட்சி தந்தருளினார். பர்வதராஜன் தன்மகளான உமாதேவியான பார்வதியின் திருமணம் முடிந்தது. புருஷன் வீட்டிற்கு செல்லும் எந்தப் பெண்ணும் தன் புருஷனுடைய விருப்பங்களை அறிந்து நடந்தாளானால் இரு குடும்பங்களுக்கும் பெருமை ஏற்படும் என்று கூறி அனுப்பி வைத்தார். கைலாயம் சென்ற பார்வதியாரிடம் அவர் விருப்பங்களைக் கேட்டு அறிவது என்று யோசித்தாள். பிறகு இறைவனிடமே நேரில் தங்களுக்கு மிக விருப்ப மானவற்றை அறிய ஆசைப்படுகிறேன் எனப் பார்வதிக் கேட்டாள். இறைவன் தனக்கு மிக விருப்பமானது தன்னை பூசிப்பதுதான் என்று கூறினார். இதனை சேக்கிழார் சுவாமிகள்,

*எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்*
*உண்மையாவது பூசனை என உரைத்தருள*
*அண்ணலார்தமை அர்ச்சனை புரிய ஆதரித்தாள்*
*பெண்ணின் நல்லாவள் ஆயின பெருந்தவக்கொழுந்து*

என்பார்.

இதனைக்கேட்ட உமாதேவியார் தன் தோழிகளான அனந்திதை, கமலினியை பார்க்க அவர்கள் பூஜைபொருட்களுடன் வந்தார்கள். தேவி இறைவனிடம் பூசனை செய்ய அனுமதிக் கேட்டாள்.

*"தேவ தேவ ஜகந்நாத ஜகதா நந்தகாரணா*
*தவபூஜா விதாநார்த்தம் அனுக்ஞாம் தேஹிமே ப்ரபோ"*

என்று ப்ரார்த்தித்துக் கேட்டாள். இறைவன் எனக்கு விருப்பமான பூஜையை பூலோகத்தில் செய்தால் அதன் பயனை கயிலாயத்தில் அடையலாம் என்றார்.

தேவி, பூலோகத்தில் எந்த இடத்தில் பூஜை செய்யவேண்டும். மேலும் பூஜை முறைகளை உபதேசித்தருள வேண்டும் எனப் பணிவன்புடன் கேட்டுக் கொண்டாள்.

இறைவன் : பூலோகத்தில் (நகரேஷு காஞ்சி) காஞ்சிபுரத்தில் பூஜை செய்யுமாறு கூறியதுடன், பூஜை முறைகளை தனது ஊர்த்துவ முகமான ஈசான முகத்திலிருந்து சிவஞானத்தைத் தரக்கூடிய காமிகம் முதலான இருபத்தியெட்டு ஆகமங்களையும், கிழக்காவுள்ள தத்புருஷ முகத்திலிருந்து இருபத்தோரு பேதங்களையுடைய இருக்கு வேதத்தையும், தெற்காகவுள்ள அகோர முகத்திலிருந்து நூத்தியொரு பேதங்களையுடைய யசுர் வேதத்தையும், வடக்கு முகமாக வாம தேவத்திலிருந்து ஆயிரம் சாகைகளையுடைய சாமவேதத்தையும், மேற்குமுகமான ஸத்யோஜாத முகத்திலிருந்து ஒன்பது பேதங்களையுடைய அதர்வ வேதத்தையும், தேவிக்கு உபதேசமாக அருளினார். இதனை ஸ்காந்த புராணத்தில் உள்ள அகஸ்திய ஸம்ஹிதை

*பிரணவாத்யா மகாமந்திரா: அகாராத்ய க்ஷராணிச*
*சிவஞானானி த்ரவியானி காமிகாதினி பூசுரா :*
*ஸ்ரீமத் ஹாலாஸ்யநாதஸ்ய ஸம்பவ தூர்த்த வக்தரக:*
*புரஸ்த்வ தேவ தேவஸ்யதத்புருஷாக்யேந வக்த்ர:*
*ஏகவிம்சதி பேதேன யுக்தம் ரிக்வேதம ப்ரவீது*
*யஜு்ர்வேத ஏகசத பேதயுக்த மகோரத :*
*ஸஹஸ்ரசாகா ஸம்யுக்தம்*

*சாமவேதத்து வாமத : அதர்வம் நவதா பின்னம் ஸத்யோஜாதேந*
*சாப்ரவீது*

இதனையே திருஞானசம்பந்தர்,

வேதமும் பொருள்களும் அருளி அங்கயற்கண்ணிதன்னொடும்
அமர்ந்த ஆலவாயாவதும் இதுவே என்பார்.

பூஜை செய்யவேண்டிய முறைகளை காரணாகமம் ...

*"ஸிகதம் தண்டுலம் சான்னம் நதீமிருத் கோமயம் ததா நவநீதஞ்ச ருத்ராக்ஷம் சந்தனம் கூர்ச்ச மேவச புஷ்பமாலா குளம் பிஷ்டம் க்ஷணிகம் த்வாதசோச்யதே"*

அதாவது பன்னிரெண்டுவகை க்ஷணிக லிங்கம் வைத்து ஆத்மார்த்த சிவபூஜை செய்யக் கூறுகிறது. 1.ஆற்றுமணல், 2.அரிசி, 3.அன்னம், 4.நதிமண், 5.கோமயம், 6.வெண்ணை, 7.ருத்ராக்ஷம், 8.சந்தனம், 9.கூர்ச்சம், 10.புஷ்பமாலை, 11,வெல்லம், 12.மாவு. இந்த பன்னிரெண்டில் எதைக் குரு எடுத்து தருகிறாரோ அதனை ஆத்மார்த்த லிங்கமாக பூஜிக்க வேண்டும். தேவி முதலாவதான ஆற்று மணலையே லிங்கமாக வைத்து பூஜை செய்யத் தொடங்கினாள்.

தினம் முறையாக பூஜை செய்து வந்தாள். ஒருநாள் தேவியைப் பரிட்சிக்க எண்ணி, தன்தலையில் உள்ள கங்கையை இறைவன் தேவி பூஜிக்கும் இடத்திற்குச் சற்று மேற்கில் இருந்து அவிழ்த்து விட கங்கை ஓ என்ற இரைச்சலுடன் வந்தது. கங்கையை (கம்பா நதியை) த்யானத்திலிருந்த தேவி பார்த்து, தன் இருகைகளாலும் லிங்கத்தை அணைத்துக் கொண்டாள். மேற்கேயிருந்து வந்த கங்கை கம்பாநதி என்ற பெயரோடு இரண்டு பகுதியாக பிரிந்து பிறகு ஊருக்குக் கிழக்கே ஒன்றாகச் சேர்ந்து செல்வதை இன்றும் காணக்கூடியதாக உள்ளது. இதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

*"எள்கல் இன்றி இமையவர் கோனை ஈசனை*
*வழிபாடு செய்வாள் போல்*
*உள்ளத்துள்கி உகந்து உமைநங்கை வழிபடச்*
*சென்று நின்றவா கண்டு*
*வெள்ளங்காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி*
*ஓடித் தழுவ வெளிப்பட்ட*
*கள்ளகம்பனை எங்கள் பிரானைக் காணக்கண்*
*அடியேன் பெற்றவாறே"*

என்பார்.

ஸ்ரீதேவியின் பக்தியைக்கண்டு மகிழ்ச்சியுற்ற இறைவன் உனக்கு என்ன வரம் வேண்டுமெனக் கேட்க, தங்களை விட்டு என்றும் பிரியாமல் தங்களிடத்தில் இருக்கும் பெரும்பேறு கிடைக்க அருள்பாலிக்க வேண்டும் என்று கேட்க இறைவன் உமையொரு பாகனாக ஆனார். ஸ்ரீதேவியானவள் இறைவனிடம் தங்களுக்கு மிக விருப்பமான பூசனை என்றும் தடைப்படாமல் தொடர்ந்து நடைபெற்று வர அருள்பாலிக்க வேண்டிட இறைவன் தன் ஐந்து முகங்களிலிருந்து ஐந்து ரிஷிகளை சிருஷ்டித்து அவர்களுக்கு சிவதீட்சை செய்து ஆன்மார்த்த சிவபூஜை செய்து வருவதுடன், பல சிஷ்யர்கள் மூலம் சிவதீட்சையும் ஆன்மார்த்த சிவபூஜையும் பரவச் செய்திட அருள்பாலித்தார். அந்தச் சிவ சிருஷ்டியில் உண்டானவர்கள் ஆதிசைவர்களாகிய ஐந்து ரிஷிகள் ஆவார்கள். 1.கௌசிகர், 2.காசிபர், 3.பாரத்வாஜர், 4.கௌதமர், 5.அகஸ்தியர் என்ற ஐந்து ரிஷிகளும் சிவபெருமானால் சிவதீட்சையும் ஆன்மார்த்த சிவபூஜையும் செய்து வைத்திடும் பெரும்பேறு பெற்றவர்கள் ஆவார்கள் என்று காரணாகமம் கூறுகிறது. இந்த ஐந்து ரிஷிகளும் ஆதிசைவ பரம்பரையை விரிவடையச் செய்தும், சிவதீட்சை ஆன்மார்த்த சிவபூஜையுடன் பரார்த்த பூஜையில் பிரதிஷ்டாதி உத்ஸவாந்தம் உத்ஸவாதி பிராயச்சித்தார்த்தம் செய்து வரவும் நாலுவர்ணத்த வர்களுக்கும் சிவதீட்சை செய்து ஆன்மார்த்த பூஜை செய்து வரச் செய்யவும்நாலுவர்ணத்திலுள்ள பெண்களுக்கு சிவதீட்சை செய்து ஆன்மார்த்த பூஜை செய்து வரச் செய்யவும் அருள்பாலித்தவர்கள். இதனைச் சிவதீட்சைப்பெற்ற நாலுவர்ணத் தவர்களும் ஆன்மார்த்த சிவபூஜை செய்யலாம். ஆனால் பரார்த்தபூஜை செய்யக் கூடாது என்று மகுடாகமம் கூறுகிறது.

சிவதீட்சை பெற்ற நாலுவர்ணத்துப் பெண்களும் ஆன்மார்த்த பூஜை செய்யலாம்.

ஆனால் பரார்த்தபூஜை செய்யக் கூடாது என்றும் மாதவிடாய் காலத்தில் மூன்று நாட்கள் அந்தர்யாகம் செய்து நாலாம் நாள் காலையில் ஸ்நானம் செய்து பஞ்சகவ்ய பிராசனம் செய்து ஆன்மார்த்தசிவபூஜை செய்ய அம்சுமதி ஆகமம் கூறுகிறது. ஆன்மார்த்த சிவபூஜை செய்ய நல்ல குருநாதர் மூலம் சிவதீட்சைப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

சமயாச்சாரியர்கள் சிவதீட்சை பெற்றே சிவனருளை பெற்றுள்ளார்கள். சீர்காழியில் இறைவன் குருலிங்க சங்கம வடிவமாக உள்ளார். குருவாக தோணியப்பரும் லிங்கமாக பிரும்ம புரிசுவரரும் சங்கமமாக ஸ்ரீசட்டைநாதரும் உள்ளார். தோணியப்பர் சம்பந்தருக்கு பால் கொடுக்கும் போதே தீட்சை தந்தருளினார் என்பதை ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் தீட்சையின் பயன் சிவஞானம் பெறுவதாகும்.

*"சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம்*
*பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்*
*உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்*
*தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்".*

இது கேட்காமலேயே திருஞான சம்பந்தருக்குக் கிடைத்தது. திருநாவுக்கரசு சுவாமிகள் கேட்டுப் பெற்றார்.

*"பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு*
*விண்ணப்பம் போற்றிச் செய்யும்*
*என் ஆவி காப்பதற்குஇச்சை உண்டேல்*
*இருங்கூற்று அகல*
*மின் ஆரும் மூஇலைச் சூலம் என்மேல் பொறி*
*மேவு கொண்டல்*
*துன்னார் கடந்தையுள் தூங்கானை*
*மாடச்சுடர்க் கொழுந்தே"*

என்று விண்ணப்பம் செய்து கேட்க, அவருக்குத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான நல்லூரில் திருவடி தீட்சைப் பெற்றார் என்பதைச் சேக்கிழார் சுவாமிகள்,

*"நன்மை பெருகு அருள் நெறியே வந்தணைந்து நல்லூரில்*
*மன்னுதிருத்தொண்டனார் வணங்கி மகிழ்ந்து எழும்பொழுதில்*
*உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம் என்றவர்தம்*
*சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்"*

என்பார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கேட்காமலே பெற்றார். திருவதிகை சித்தவட மடத்தில் இரவு துயில் கொள்ளும் பொழுது இறைவன் வயோதிக அந்தண வடிவில் பக்கத்தில் படுத்திருந்து தன் திருவடிகளை சுந்தரரின் தலைமேல் வைக்க சுந்தரர் துயில் களைந்து பெரியவரே சற்று நகர்ந்து படுத்துக்கொள்ளுங்கள் என்று கூறிச் சுந்தரர் சற்று தள்ளி படுத்து துயில் கொள்ளும்போது மீண்டும் அவர் தலைமேல் திருவடிகளை வைத்ததை அறிந்து சற்று கோபமாக நீ யார் என் தலைமேல் மீண்டும் மீண்டும் பாதத்தை வைக்கும் நீ யார் என்று கேட்க என்னை தெரியவில்லையா என்று கூறி மறைந்துள்ளார். இதனை ஸ்ரீ சுந்தரர்,

*"தம்மானை அறியாத சாதியார் உளரோ சடைமேல் கொ[illegible]*
*பிறையானை விடை மேற்கொள் விகிர்தன்*
*கைம்மாவின் உரியானைக் கரி காட்டில் ஆடல் உடையானை*
*விடையானைக் கறை கொண்ட கண்டத்து*
*அம்மான் தன் அடிக்கொண்டு என் தலைமேல் வைத்திடும்*
*என்னும் ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்*
*எம்மானை எறிகெடில வீரட்டானத்து உறைவானை*
*இறை போதும் இகழ்வன் போல் யானே"*

என்பார்.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுக்கு சிவதீட்சை திருப்பெருந்துறையில் குருந்த மரத் தடியிலே இறைவனே ஞானகுருவாக அமர்ந்து தீட்சையும் ஞான உபதேசமும் செய்தருளினார் என்பதை,

*"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனை*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்*
*சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட*
*அத்தன் எனக்கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே"*

என்பார். அருணகிரியாருக்கு ஆவினன்குடியில் தீட்சையும் மந்திர உபதேசமும் பெற்றதை,

*"அபகார நிந்தை பட்டுழலாதே*
*அறியாத வஞ்சரை குறியாதே*
*உபதேச மந்திர பொருளாலே*
*உனைநான் நினைந்தருள் பெறுவேனோ*
*செபமாலை தந்த சற்குருநாதா*
*திருவாவினன்குடி பெருமானே"*

நாமும் சிவதீட்சைப் பெற்று ஆன்மார்த்த சிவபூஜை செய்து சிவனருள் பெற்று எல்லா நலன்களுடன் பல்லாண்டு வாழ்ந்து வருவோமாக.

நமது அன்பிற்கும் போற்றலுக்கும் உரிய திருவாவடுதுறை ஆதீன குருமஹா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்ரகாச தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் அவர்கள் பெருங்கருணை உள்ளத்தோடு சைவ பெருமக்கள் சிவநெறியில் சென்று சிவானந்த பெருவாழ்வு பெறவேண்டி நல்ல குருமார்கள் மூலம் சைவசித்தாந்தத்தை அறிந்திட ஆண்டுதோறும் பல ஊர்களிலும் உள்ள அன்பர்களுக்கும் வகுப்புகள் நடத்தி தை மாதம் குருபூசை நாட்களில் அவர்களுக்கு விருதுகள் அளித்து சைவ சமயத்தை வளர்த்து வருகிறார்கள் என்பது உலகம் அறிந்ததே. அன்பர்கள் சைவ சித்தாந்தம் கற்றதின் பயனாக அவர்களில் பெரும்பாலோர் நல்ல குரு மூலம் சிவதீட்சையும் ஆன்மார்த்த சிவபூஜையும் செய்து வருகிறார்கள் என்பது மகிழ்ச்சியடையக் கூடியதாக உள்ளது. மேலும் நமது ஸ்ரீ குருமஹா சன்னிதானம் அவர்கள் எல்லா கலைகளும் சிறந்து விளங்க அந்தந்த கலைகளை சார்ந்த சான்றோர்களுக்கு விருதுகள் அளித்து பாராட்டி வருவதுடன் ஆதீனத்தின் நிர்வாகத்தில் உள்ள ஆலயங்களில் உள்ள பழுதுகளை நீக்கி புதுப்பித்து கும்பாபிஷேகம் செய்து வருவதில் இப்போது பல சிறப்புகளுடன் விளங்கி வரும் திருவாவடுதுறை அருள்தரும் ஸ்ரீ ஒப்பிலாமுலையம்மை உடனாய ஸ்ரீ கோமுக்தீசுவர சுவாமி ஆலய மஹாகும்பாபிஷேகத்தின் சிறப்பாக கும்பாபிஷேக சிறப்பு மலரில் "ஆன்மார்த்த சிவபூஜையில் பெருமை" என்ற தலைப்பில் கட்டுரை எழுதும் பெரும் பாக்யத்தை அருளிய சீர்வளர்சீர் குருமஹா சன்னிதானம் அவர்களுக்கு எனது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டு நிறைவு செய்கிறேன்.

*"திங்களணி திருவாலவாய் யெம்மண்ணில்*
*திருவிளையாட்டிவை அன்பு செய்து கேட்போ*
*சங்கநிதி பதுமநிதி செல்வமோங்கி*
*தகைமைதரு மகப்பெறுவர்*
*மங்கல நன்மணம் பெறுவர் பிணி வந்தெய்தார்*
*வாழ் நாளும் நனி பெறுவர் வானாடெய்தி*
*புங்கவராய் அங்குள்ள போக மூழ்கி*
*சிவனடிக் கீழ் நன்னி வாழ்வாரே"*

திருச்சிற்றம்பலம்.



*சீர் வளர் சீர் குருமகா சன்னிதானம் அவர்கள் திருவாவடுதுறை திருத்தலப் பதிக கல்வெட்டுக்களைத் திறந்தருளல்*

# சைவாலயங்களில் நைமித்திக பூஜை



சிவாகமத் திருத்தொண்டர் சிவஸ்ரீ வித்யாசங்கர சிவாசார்யர்

(இக்கட்டுரை ஆசிரியர், வேத சிவாகமங்களைக் கற்றமையுடன் சங்கரன்கோவில் ஆ.ஈஸ்வர மூர்த்தி பிள்ளை அவர்களிடம் சைவசித்தாந்தப் பாடல்களைக் கேட்டார்கள். சிவஞான மாபாடியம், காஞ்சிப் புராணம் எனும் பொருளில் பயிற்றுவித்தவர்கள்)

சைவாலயங்கள் என்று குறிப்பிடப்படுபவை கணபதி, ஸ்கந்த ஆலயங்களும் உள்ளடக்கியதே. ஆனால் இக்கட்டுரை சிவாலயங்களை மையமாக வைத்தே எழுதப் பட்டவை. சைவாலயங்கள் சிவாகமங்களின்படியே அமைக்கப்பட்டவை களாகும். அவ்வாகமங்களின்படியே பூசை, திருவிழாக்கள் நடைபெற வேண்டும். அவ்வாறே நடைபெற்றும் வந்து கொண்டிருக்கின்றன. அப்பூசை முறைகளை நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்றாக வகுத்திருக்கின்றன. ஓர் ஆலயத்தில் நாள்தோறும் நடைபெற வேண்டிய பூஜாமுறைகள் நித்தியம் என்று சொல்லப்படும். நாள்தோறும் காலை, மாலை இரண்டு வேளையும் நடைபெறுகின்ற ஸ்ரீபலி நாதர் எழுந்திருத்தாகி பலிபோடுவது நித்யோத்ஸவம் என்று சொல்லப் படும். ஒருநாள் பூஜையென்பது காலையில் நடைதிறந்ததும் பைரவ பூஜையில் தொடங்கி மீண்டும் இரவில்பைரவ பூஜையில் முடிக்க வேண்டும்.

அடுத்து நைமித்திகம், திதி, வாரம், நட்சத்திரம் இவைகளை முன்னிட்டு நடத்தப் படுவது. ஒவ்வொரு மாதமும் நடைபெறவேண்டிய மாத பூசைகளும் இதனுள் அடங்கும்.

*"நீதியினால் நித்திய நைமித்திக*
*காமியத்தின் நிறுத்தி"*

என்பது ஆன்றோர் வாக்கு. நைமித்திக பூசைகளும் தவறாது கடைப் பிடிக்க வேண்டியவைகளே.

ஸோமவாரம், சுக்ரவாரம் முதலியன வாரங்களை முன்னிட்டும், அமாவாஸை, பௌர்ணமி, பிரதோஷம், மாத சிவராத்திரி முதலியன திதிகளை முன்னிட்டும், மாகோற்சவம் பிரம்மோத்ஸவம் முதலியன நட்சத்திரங்களை முன்னிட்டும் நடத்தப்படும் நைமித்தகமாகும். கிரஹண கால பூஜைகளும் இதனுள் அடங்கும்.

एकमासे द्विनक्षे तु अन्यर्क्षे व्रतमाचरेत्

ஒரு மாதத்தில் இரண்டு நட்சத்திரங்கள் வந்தால் இரண்டாவது நட்சத்திரத்தில் நடத்தப்பட வேண்டும் என்று காரணாகமம் கூறுகிறது. ஆனால் அம்சுமாகமத்தில்

एकमासे द्विनक्षे द्वयोरपि च कारयेत्

ஒரு மாதத்தில் இரண்டு நட்சத்திரங்கள் வந்தால் இரண்டு நட்சத்திரங்களிலும் நடத்தபட வேண்டும் என்று கூறப்படுகிறது. மாத பூஜா விஷயங்களில் ஆகமங்களில் ஒற்றுமை காணப் படவில்லை. சில ஆகமங்களில் மாத பூசைகள் சொல்லப்படவேயில்லை. ஆனால் மாத பூசைகள் செய்யப்படவில்லையெனில் பூசைகள் பலன் தராது என்று சொல்லப் பட்டிருக்கிறது.

मासपूजा विनान्यैश्च पूजनैर्निष्फलं भवेत्

*மாஸபூஜா விநான்யைஸ்ச பூஜநைர் நிஷ்பலம் பவேத்*

என்று கூறப்பட்டிருக்கிறது.

நீண்ட ஆயுள், நோயின்மை, செல்வம், மக்கட்பேறு, புகழ், வறுமை விலகுதல், அபமிருத்யு விலகுதல், அம்மைநோய் முதலிய நோய்கள் விலகுதல் இவைகள் மாத பூஜையின் பலன்கள்.

நித்தியமும் நைமித்திகமும் தவறாது கடைப்பிடிக்க வேண்டியவைகளாகும். இங்கு நான் எடுத்துக் கொண்டது மாத பூஜா விஷயங்கள் பற்றி அதனைச் சிறிதே விளக்குவாம்.

நாட்டில் நடைபெறும் பஞ்சம், மழையின்மை, பகைவரால் துன்பம், தனிப் பட்டவர்களின் வேண்டுதல் முதலியவற்றுக்காகச் செய்யப்படும் பூசைகள் காமியம் எனப்படும்.

1.சித்திரை மாதத்தில் வஸந்தோற்சவம் நடத்தப்படவேண்டும். சித்திரை மாதம் முழுவதுமோ அல்லது சில குறிப்பிட்ட தினங்களோ தொடர்ந்து நடத்தப்பட வேண்டும். வஸந்த மண்டபத்தில் ஸ்வாமி, தேவியை எழுந்தருளச் செய்து சிறப்பாக அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனை, தீபாராதனை, பானக நைவேத்தியம் இவைகளைச் செய்து வேத பாராயணம், திருமுறைப் பாராயணம், நாட்டியம், வாத்யம் இவைகளுடன் சூர்ய அஸ்தமன சமயத்தில் ஸ்வாமி அம்பாளை வலம் வரச் செய்ய வேண்டும். இவ்வஸந்த காலத்தில் தமன பூஜையும் விதிக்கப்பட்டிருக்கிறது. தமனம் என்றால் மரிக்கொழுந்து. லிங்கம் முழுவதையும் மரிக்கொழுந்தினால் மூடப்பட வேண்டும். இத்தமனோற்சவம் தவறாது செய்யப் படவேண்டும் என்று ஆகமங்கள் வலியுறுத்துகின்றன.

2.வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரம் கூடிய நன்னாளில் சுவாமியின் சிரசில் சீத கும்பம் எனும் ஜலதாரை வைக்க வேண்டும். சிரசிற்கு நேராக ஒரு முக்காலியிட்டோ அல்லது சிரசிற்கு மேல் ஓர் உறியில் உலோகத்தினாலான தாரா பாத்திரத்தைத் தொங்கவிட்டோ அதில் ஜலத்தை நிரப்பிச் சிரசின் உச்சியில் தைலதாரை போன்று விழச் செய்ய வேண்டும். பதினான்கு நாள், இருபத்தியொரு நாள், அல்லது மாதம் முழுவதும் செய்வது நல்லது. சுவாமியின் சிரசில் ஜலதாரை விழும் பொழுது வேத விற்பன்னர்களைக் கொண்டு ஸ்ரீருத்ராதி சூக்தங்களைச் செபிக்கச் செய்வது நல்லது. கர்நாடகா, ஆந்திரா முதலிய மாநிலங்களில் நாள் முழுவதும் ஜலதாரை வைக்கின்றார்கள். கோடை காலங்களில் அதிக உஷ்ணத்தால் ஏற்படும் வெப்பு நோய், அம்மை நோய்கள் வராமல் தடுக்கப்படும். இம்மாதம் கோடைகாலமானதினால் சுவாமியின் குளிர்ச்சிக்காகச் செய்யப்பட வேண்டும்.

3.ஆனி மாதம் மூலநட்சத்திரம் கூடிய நன்னாளில் செய்ய வேண்டிய பல (பழ) பூஜாவிதி பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சாமிருத பழங்களால் லிங்கம் முழுவதும் மூடும்படியாக நிரப்ப வேண்டும். அடுத்த பூஜாகாலத்திலோ மறுநாளோ பழங்களை நீக்கி வெளியில் கொண்டு வந்து பக்தர்களுக்கு விநியோகிக்க வேண்டும். இதனால் நினைத்த காரியம் கை கூடும்.

4.ஆடி மாதம் பூர நட்சத்திரத்தினை யொட்டி, தேவிக்கு உத்ஸவம் நடத்தப் படவேண்டும். பல ஆலயங்களில் ஆடிப்பூரத் திருவிழாவாக நடத்தப்படுகிறது. இவ்வுற்சவம் அடியார்களின் தீமைகள் விலகவும், பாவங்கள் அகலவும் சகல காரியங்களும் நிறைவேறவும் நடத்தப்படுகிறது. சாக்தர்கள் இம்மாதத்தில் ஆஷாட நவராத்திரியாகக் கொண்டாடுகிறார்கள்.

5.ஆவணி மாதம் பவித்ரோத்ஸவம் நடத்தப்பட வேண்டும். ஓர் ஆண்டின் இடையில் நித்திய, நைமித்திக, காமிய பூஜைகளில் நம்மையறியாது மந்திர, கிரியா, பாவனைகளில் ஏற்பட்ட குற்றங்களைக் களைந்து அருள் செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டது. இதனை அவசியம் எல்லா ஆலயங்களிலும் நடத்தபட வேண்டும்.

पतनात् त्रायते यस्मात् तस्मात् एदत् पवित्रकम्

***பதநாத் த்ராயதே யஸ்மாஸ்த் தஸ்மாத் ஏதத் பவித்கம்***

மனம் வாக்குக் காயங்களினால் ஏற்பட்ட குற்றங்களை எது போக்குகிறதோ அது பவித்ரம் எனப்படும். இதனைப் பெருஞ்சாந்தி என்று கூறுவர்.

***கருஞ்சோலை சூழ்ந்த கபாலீசுரத்தமர்ந்தான்***
***பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்***

என்று ஞானசம்பந்தர் கூறுகிறார்.

***பொருந்தும் வகை புரிந்துஆடி பூரட்டாக்குள்***
***புகழ்பதினான்கு அட்டமிகள் ஒன்றில் பூசை***
***தரும் தகுதி மிகுதி குறை தவறு நீங்கத்***
***தந்து ...................... பவித்திரத்தைப் பயில்வித்து***

என்று கோயிற் புராணம் கூறும்.

6. புரட்டாசியில் தேவிக்கு நவராத்திரி உற்சவம் நடத்தப்பட வேண்டும்.

7. ஐப்பசியில் திருக்கல்யாண உற்சவம் நடத்தப்படும்.

8.கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தன்று கார்த்திகை தீபம் என்னும் திருவிழா நடத்தப்படவேண்டும். இதனை ஆகமங்கள் தீபாரோபண உற்சவம் என்று கூறும். சுவாமி திருமுன்பு கார்த்திகை தீபம் ஏற்றப்பட வேண்டும். வெளியில் நான்கு வீதிகளிலும் தீபர்ரோபணம் எனப்படும் சொக்கப்பனை ஏற்றப்படவேண்டும்.

9.மார்கழி மாதம் முழுவதும் தனுர்மாஸ பூஜை மிகச் சிறப்பாகச் செய்யச் சொல்லப் பட்டிருக்கிறது. இம்மாதமே திருப்பள்ளி எழுச்சிக் காலமாகும். இம் மாதத்தில்தான் எம்பெருமா னுக்கேயுரிய திருவாதிரைத் திருவிழாவும் வருகிறது. மார்கழி மக நட்சத்திரத்தன்று நெய்யுடன் கூடிய பாயஸம் அம்பிகைக்கு நிவேதிக்கப்பட வேண்டும். சில ஆகமங்களில் நெய் அபிஷேகம் அல்லது குங்குமப் பூவால் அபிஷேகம் செய்யச் சொல்லப் பட்டிருக்கிறது.

10.தை மாதம் புஷ்ய நட்சத்திரத்தன்று ஸ்வாமிக்கும் அம்பாளுக்கும் தேன் அபிஷேகம் செய்யச் சொல்லப்பட்டிருக்கிறது. பல ஆலயங்களில் தைப்பூசத்தன்று தீர்த்தவாரி உத்ஸவம் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

11. மாசி மாதத்தில் கிருதகம்பள பூஜாவிதி மிகச் சிறப்பாகச் செய்யப்பட வேண்டும். இது தவறாது செய்யப்பட வேண்டும் என்று வலியுறுத் தப்பட்டிருக்கிறது. மாசிமாதம் மக நட்சத்திரத்தன்று சுவாமிக்கு விசேஷ அபிஷேகங்கள் செய்து சிவலிங்கம் முழுவதும் நெய்யினால் மூடப்பட வேண்டும். பின் அடுத்த காலத்திலோ அல்லது மறுநாளோ அகற்றப்பட வேண்டும்.

இம்மாதத்தில்தான் சைவர்களுக்கேயுரிய சிவராத்திரி வருகிறது. மாசி மாத கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியன்று இரவு நான்கு யாமங்களிலும் சிவபெருமானுக்கு நல்ல முறையில் பூஜைகள் செய்யப்படவேண்டும். ஒவ்வொரு காலத்திலும் அபிஷேகம் அர்ச்சனை, நைவேத்தியங்கள், தோத்திரங்கள் செய்யப்படவேண்டும்.

12.பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தன்று கந்த பூஜாவிதி சொல்லப்பட்டிருக்கிறது. நல்ல சந்தனத்துடன் அகில், பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ மற்றும் வாசனைத் திரவியங்களைச் சேர்த்து சிவலிங்கம் முழுவதும் பூசவேண்டும். சுவாமியின் குளிர்ச்சிக்காகக் கந்தலேபனம் கூறப்பட்டிருக்கிறது.

இவைகள் தவிர பல ஆலயங்களில் பிரம்மோத்ஸவம் எனப்படும் பெருந்திருவிழா நடத்தப்படும். ஒவ்வொரு ஆலயத்திலும் ஏதாவதொரு மாதத்தில் இவ்விழா நடத்தப்படும். இது பேரிதாடனம் முதல் என்றும் அங்குரார்ப்பணம் முதல் என்றும், த்வஜாரோகணம் முதல் என்றும் பல திறப்படும். அவ்வவ்வாலயங்களில் எது வழக்கமோ அவ்வழக்கப்படி நடத்தப்பட வேண்டும். இவ்வுற்சவத்தில் சுவாமி, அம்பாள் இருவரும் காலை, மாலை இரண்டு வேளைகளிலும் வீதிவலம் வருவார்கள். வீதிவலம் வருவதின் நோக்கம்

***புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி***
***பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்***
***கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்***

இருக்கின்ற தீட்சையினால் அருள்பெற முடியாத உயிர்வர்க்கங்களுக்கும், சாமான்யர்களுக்கும் திருநோக்கம் - சக்ஷுதீக்ஷை - செய்து அருள் செய்வதற்காகவே. இதனை

अदीक्षितानां धूर्तानां पक्षिणां मृगदारुकम् ।
भक्तानां दीक्षितानाञ्च सर्वेषां संहृतिप्रदम् ॥

அதீக்ஷிதாநாம் தூர்தாநாம் பக்ஷிணாம் மிருகதாருகம்
பக்தாநாம் தீக்ஷிதாநாஞ்ச ஸர்வேஷாம் ஸம்ஹ்ருதிப்ரதம்
என்று ஆகமம் கூறுகிறது.

நித்திய, நைமித்திக பூசைகள் தவறாது செய்து வேண்டும் பயன்களைப் பெறுவோமாக.

# உயர் காயத்திரிக்கு உரிப் பொருள்

சைவசித்தாந்தபிரவீண தி. கணேசன், புதுச்சேரி.



(இக்கட்டுரை ஆசிரியர், சமஸ்கிருத மொழியில் முதுகலைபட்டமும், முனைவர் பட்டமும் பெற்றவர்கள்; புதுச்சேரி பிரெஞ்சு இந்திய ஆராய்ச்சி நிறுவனத்தில் சைவசித்தாந்தத் துறையில் பணியாற்றி வருபவர்கள். பல கருத்தரங்குகளில் ஆய்வுக் கட்டுரைகளைச் சமர்பித்தவர்கள்)

மந்திரங்களுள் தலையாயதான காயத்திரி மந்திரத்தின் உட்பொருள் சிவபெருமான் ஒருவரே என்பது வேதத்தினுடைய கொள்கையே. இதைப் பல சைவ ஆசாரியர்கள் தத்தம் நூல்களில் அவ்வப்பொழுது திறம்பட நிறுவி வந்துள்ளனர்.

அச்சைவ ஆசாரியர்களுள் மிகவும் உயர்வாகக் கருதிப் போற்றப்படுபவரான ஹரதத்தாசாரியர் தமது சுலோகபஞ்சகம் என்னும் நூலில் சிவபெருமானை ஏனைய தேவர்கள் வழிபட்டு அருள் பெற்றமை மற்றும் சிவபெருமானின் மிகவும் முக்கியமான அற்புத லீலைகள் ஆகிய 22 காரணங்களைப் பட்டியலிட்டு, அப்பெருமைகளை உடைய காரணத்தினால் சிவபெருமான் ஒருவரே எல்லாக் கடவுளர்களினும் மேலானவர் என்று அறுதியிட்டுக் கூறுகிறார். இக்கருத்துக்களையே மிகவும் விரிவாக்கி, அனைத்து வேதஸம்ஹிதைகளும், குறிப்பாக தைத்திரீய ஆரண்யகத்தின் ஒரு பகுதியான மஹாநாராயணமென்னும் நாராயணோபநிஷத்தின் முழுப்பகுதியும் சிவபெருமான் ஒருவரையே ஒப்பற்ற தனிப்பெரும் கடவுளாகப் போற்றுகின்றன என்று 151 சுலோகங்களைக் கொண்ட சுருதிஸூக்திமாலாவிற்கு சதுர்வேததாத் பர்யஸங்க்ரஹம் என்னும் விரிவான உரையைத் தெலுங்கு சோழ வமிசத்தைச் சேர்ந்த சிவலிங்கபூபதி எனும் சிவபக்திச் செல்வம் வாய்ந்த அரசர் இயற்றியுள்ளார். சுருதிஸூக்திமாலாவானது திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவானாயிருந்த யாழ்ப்பாணத்து வடகோவைச் சபாபதி நாவலர் அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

சுலோகபஞ்சகத்தின் முதல் சுலோகத்தின் முதல் அடியிலேயே இக்கருத்தைப் பின்வருமாறு எடுத்துரைக்கிறார் ஹரதத்தாசாரியர்.

गायत्रीवल्लभत्वाद्दशरथतनयस्थापिताराधितत्वात्

शौरेः कैलासयात्राव्रतमुदिततयाभीष्टसन्तानदानात् ।

नेत्रेण स्वेन साकं दशशतकमलैर्विष्णुना पूजितत्वात्

तस्मै चक्रप्रदानादपि च पशुपतिः सर्वदेवप्रकृष्टः ।।

இதைத் தமிழில் மொழிபெயர்த்த சிவஞானசுவாமிகளும்

*"உயர்கா யத்திரிக் குரிப்பொருளா கலிற்*
*றசரதன் மதலை தாபித்தேத்தலிற்*
*கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்*
*புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்*
*றனாது விழியுட னொராயிரங் கமலப்*
*புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலி*
*னாங்கவற் கிரங்கி யாழியீந் தருடலின் ....."*

எனத் தமது நூலில் கூறுகிறார்.

சிவஞானசுவாமிகளின் இந்த நூலுக்கு சுலோகபஞ்சகவிஷயம் என்னும் தலைப்பில் தாம் எழுதிய மிக விரிவானதோர் உரையைச் சித்தாந்த பண்டிதபூஷணம் என்னும் தலையாய விருது பெற்றவரும், சைவசாத்திரங்களைப் பலருக்கும் கற்பித்து வந்தவருமான திருநெல்வேலி பேட்டை ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்னரே பதிப்பித்துள்ளனர். அவ்வுரையில் பல உபநிஷத்துக்கள், வேதஸம்ஹிதைகள், புராணங்கள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளனர்.

அவ்வுரையின் சில பகுதிகளைச் சுருக்கமாகக் கீழே காண்போம்.

இறுதியில், சுருதிஸூக்திமாலாவின் 56லிருந்து 70ஆவது சுலோகம் வரையில் இதே காயத்திரி மந்திரப் பொருளின் விரிவை ஹரதத்தாசாரியரின் உரைவாயிலாகக் காண்போம்.

இனி, திரு பிள்ளை அவர்களின் உரை :

***"உயர் காயத்திரிக் குரிப் பொருளாகலின்"***

**பொருள் :**

மந்திரங்களுக்குள் மேலான காயத்திரீ மந்திரத்தின் பொருளாக விளங்குவதால் என்பது.

**காயத்திரி மந்திரம் :**

***தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய***
***தீமஹி. தியோ யோ ந: ப்ரசோதயாத்.***

**பொழிப்புரை :**

எவன் நம்முடைய புத்திகளை நன்றாக நடத்துவானோ அந்தச் சூரியனிடத்திலுள்ள பர்க்கனாகிய தேவனுடைய பெருமையைத் தியானிப்போம்.

இதன் கருத்து யாதெனில், 'சூரியனுக்குள் அந்தர்யாமியாய் விளங்கும் பர்க்கன் என்னும் தேவனே இங்கு தியானிக்கப்படும் கடவுளாக விளங்குகிறான்' என்பது.

மைத்ராயணீஸம்ஹிதையில் காயத்ரீ மந்திரத்தை விளக்கும் பகுதியில்
'பர்க்கன் எனும் பெயருடையவன் ருத்திரன் என்று பிரஹ்மவாதிகள் கூறுகின்றனர்' எனும் வாக்கியம் காணப்படுகிறது.

அமரகோசம் என்னும் பண்டைய நிகண்டுவிலும்
हरः स्मरहरो भर्गः -ஹர: ஸ்மரஹரோ பர்க்க:
என்று சிவபெருமானுடைய திருநாமங்களுள் ஒன்றாக பர்க்கன் என்பதும் கூறப்படுகிறது. மற்றொரு நிகண்டு,
भीमो भर्गः कृत्तिवासाः - பீமோ பர்க: க்ருத்திவாஸா:
என்று அவ்வாறே கூறுகிறது.

பிருஹதாரண்யகோபநிஷத் 3:7:9 பகுதியில்
य आदित्ये तिष्ठन्नादित्यादन्तरो यमादित्यो न वेद यस्यादित्यः शरीरं य आदित्यमन्तरो यमयत्येष त आत्मान्तर्याम्यमृतः ।

என்னும் மந்திரத்தில் "எவனுக்கு ஆதித்தியன் சரீரமோ, எவன் ஆதித்தியனுக்குள்ளிருந்து அவனை இயக்குகிறானோ, அவனே அனைத்து ஆத்மாக்களுக்கும் அந்தர்யாமி, அவனே அமிர்தன்" என்று காண்கிறோம். அவ்வாறு அமிர்தன் என்று வழங்கப்படும் கடவுள் யாரென்று ஆராய்ந்தால் முண்டகோபநிஷத், ஜாபாலோபநிஷத் முதலியவற்றின் அடிப்படையில் சிவபெருமான் ஒருவரே அவ்வாறு அமிர்தன் என்று வழங்கப்படுவது உறுதியாகிறது.

இனி, சுருதிஸூக்திமாலாவில் விரிவாக ஆராயப்படும் கருத்து :
இதன் 56ஆம் சுலோகம் கூறுவதாவது :

"आदित्यो वा एष एतन्मण्डलं तपति . . . एषोन्तरादित्ये हिरण्मयः पुरुषः"

என்னும் மந்திரத்தின் அடிப்படையில் நோக்குங்கால், சூரியமண்டலத்தைக் கையால் காட்டி இதனுள் ஒளிபொருந்தி விளங்குபவனும், அனைத்து ஜீவராசிகளுக்கும் ஒரே தலைவனாக விளங்குபவனுமான புருஷனானவன் பொன் வண்ணமானவன் என விளக்கமாகக் கூறுகின்றது.

அடுத்து 57ஆம் சுலோகத்தில் அந்தப் பொன்வண்ணமான புருஷன் யாரென்று விளக்கத்தை நாம் காண்கிறோம்.

नमो हिरण्यबाहवे हिरण्यवर्णाय हिरण्यरूपाय हिरण्यपतये म्बिकापतये पशुपतये नमो नमः ।

என்னும் மந்திரம் அவ்வாறு பொன் வண்ணமாயும், பொன்னான உடலுறுப்புக்களையும் கொண்டவன் அம்பிகாபதியும், உமாபதியும், பசுபதியாயும் விளங்கும் சிவபெருமானே என எவ்வித ஐயப்பாட்டுக்கும் இடம் கொடாமல் விளக்கமளிக்கிறது.

58ஆம் சுலோகத்திலும் இக்கருத்தே இன்னும் விளக்கமாக வலியுறுத்தப்படுகிறது.

59ஆம் சுலோகம் மேற்சொன்ன கருத்துக்களை உள்ளடக்கி, வேதங்களை நன்கு கற்றவர்களுக்குக் காயத்ரீ மந்திரத்திற்குரிய கடவுள் சூரியனா அல்லது சூரியனுள் விளங்கும் பர்க்கனாகிய சிவபெருமானா என்னும் ஐயம் எழாது. ஏனெனில்,

आदित्यो वा एष एतन्मण्डलं तपति . . . एषोन्तरादित्ये हिरण्मयः पुरुषः ।

என்னும் மந்திரம் காயத்ரீ மந்திரத்தின் உட்பொருள் சூரியமண்டலத்தில் விளங்கும் பொன்மயமான பரமேசுவரனே என்று விளக்குகிறது.

60ஆம் சுலோகம் ஸ்கந்தபுராணம், ஆதித்யபுராணம், ஆகியவற்றின் அடிப்படையில் பர்க்கன் எனும் பெயர் எவ்வாறு சிவபெருமான் ஒருவரை மட்டுமே குறிக்கும் என எடுத்துரைக்கிறது.

61, 62, 63ஆம் சுலோகங்களில், 'காயத்ரீ' மந்திரத்தில் பர்க்கஸ் என ஆண்பாலுமின்றி பெண்பாலுமின்றி அலிப்பாலாகப் பிரயோகம் செய்யப்படவில்லை. அவ்வாறு பொருள் கொண்டால் இலிங்கபேதம் - மாறான பாலைக் குறிக்கும் சொற்களைப் பயன்படுத்திய குற்றம் வேதமந்திரத்திற்கு ஏற்படும். எனவே, பர்க்க: என ஆண்பால் பெயர்ச் சொல்லாகத்தான் சொல்லாட்சி காணப்படுகிறது. இக்கருத்துக்கு மேலும் உதவியாயிருப்பது மைத்ராயணீ ஸம்ஹிதையிலுள்ள भर्गो देवस्य धीमहि எனத் தொடங்கும் மந்திரமும், அம்மந்திரத்தில் பர்க்கன் எனும் பெயருக்கான விளக்கமுமாகும் எனும் கருத்து விளக்கப்படுகிறது.

64ஆம் சுலோகத்தில், இதே கருத்தை விளக்கும் ஸாமவேதபிராஹ்மணத்தில் காணப்படும் வாக்கியம் மேற்கோளாகக் காட்டப்படுகிறது. 65ஆம் சுலோகம் மேற்கூறிய விளக்கத்தின் அடிப்படையில் காயத்ரீ மந்திரத்தின் பொருளை எடுத்துரைக்கிறது.

இவ்வாறு சுருதிஸூக்திமாலாவில் "உயர் காயத்திரிக்குரிப் பொருள்" சிவ பெருமான் ஒருவரே என்று வேதம், உபநிஷத்துக்கள், புராணங்கள் ஆகியவற்றின் ஆதாரத்தில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாமல் நிறுவப்பட்டுள்ளதைச் சுருக்கமாகக் கண்டோம்.

சுவேதாசுவதரோபநிஷத்திலும் 4 18,

यदा तमस्तन्न दिवा न रात्रिर्न सन्न चासच्छिव एव केवलः ।

तदक्षरं तत्सवितुर्वरेण्यं प्रज्ञा च तस्मात् प्रसृता पुराणी ।

*யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரிர்ந சாஸச்சிவ ஏவ கேவல:.*
*ததக்ஷரம் தத் ஸவிதுர்வரேண்யம் ப்ரஜ்ஞா ச*
*தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ.*

எனும் மந்திரத்தில் சிவபெருமானே ஸவிதுர்வரேண்யம் - ஸவிதா என வழங்கப்படும் சூரியனைக் காட்டிலும் மேலானதாக சிறந்த கடவுளாகச் சுட்டிக் காட்டப்படுகிறார்.

இதையே அப்பயதீக்ஷிதரும் ஆனந்தலஹரீ, சிவதத்துவவிவேகம் முதலான நூல்களில் நிறுவுகிறார்.

மேற்கூறிய கருத்துக்களுக்கு ஆதாரமாக ஏராளமான புராண சுலோகங்கள் ஆங்காங்கே மேற்கோள்களாக எடுத்தாளப்படுகின்றன. அவற்றை மிகுதியும் சுருதிஸூக்தி மாலாவின் உரையிலும், அப்பயதீக்ஷிதரின் நூல்களிலும் காணலாம். இக்கட்டுரையின் அளவை மனதில் கொண்டு அவை ஈங்குக் குறிப்பிடப்படவில்லை.

---

வேதநெறி தழைத்தோங்க அருள்வாய் போற்றி!
மிகுசைவத் துறைவிளங்க அருள்வாய் போற்றி!
நீதிமிகுந் தருமநெறி அருள்வாய் போற்றி!
நின்னடிமைத் திறம்விளங்க நினைவாய் போற்றி!
ஏதமற நாயேனை உனக்கெந் நாளும்
இடபவா கனமாய்க்கொண் டருள்வாய் போற்றி!
மாதவர்கள் போற்றுதிருத் துறைசை மேவி
வளருமருள் மாசிலா மணியே போற்றி!

- திருவாவடுதுறைப் புராணம் - 1022

# யாகசாலை தத்துவம்



- சிவத்திரு. ஏ.வி. சுவாமிநாதச் சிவாச்சாரியார்,
முதல்வர், சிவபுரம் வேதசிவாகம பாடசாலை, மயிலாடுதுறை.

(இக்கட்டுரை ஆசிரியர், மயிலாடுதுறை, சிவபுரம் வேத சிவாகம பாடசாலையின் நிறுவனர் மற்றும் முதல்வர். சிவாகம கலாநிதி, சிவாகமச் செல்வர், சைவ சித்தாந்தச் சரபம் முதலிய பட்டங்களைப் பெற்றவர்கள். சர்வ சாதகராக இருந்து பல திருக்குடமுழுக்குப் பெருவிழாக்களை நடத்தியவர்கள்)

கும்பாபிஷேகம் என்ற சொல்லே புனித நீரை அபிஷேகம் செய்வதையும், யாகசாலை அமைத்துப்பூஜிப்பதையுமே குறிக்கிறது. கருவறை தள வரிசை மற்றும் சுவர்களில் பழுது பார்க்கும் வேலைகள் செய்யும் பொழுதும் இறைவனுடைய திருமேனியைத் தூய்மை செய்து பீடத்தில் அஷ்ட பந்த மருந்து சாத்தும் பொழுதும் தினசரி நடைபெறும் பூஜைகள் தடைபடுகின்றன. நமது வீட்டை முழுவதுமாகப் பழுது பார்க்கும் பொழுது நாம் வேறு வீட்டில் குடியிருந்து கொள்வது போல கருவறைத் திருப்பணிகள் செய்யும் பொழுது சுவாமியை யாக சாலையில் எழுந்தருளச் செய்து பூஜிக்க வேண்டும்.

சாதாரண மனிதர்களாகிய நாமே நமது இருப்பிடத்தை விட்டு வேறு இருப்பிடத்தை மாற்றிக் கொள்ளும் பொழுது அதற்கேற்ற வசதிகளை ஏற்படுத்தி கொள்ள விரும்புகிறோம். உலக நாயகனாகிய சுவாமி மூலஸ்தான கருவறையை விட்டு வேறு இடத்தில் எழுந்தருள வேண்டுமென்றால் நாம் அதற்குரிய தெய்வீகமான இடத்தை அமைப்பதே யாகசாலையின் தத்துவமாகும். இப்படி அமைக்கப்படுகின்ற யாக சாலையில் சுவாமியினுடைய மூலஸ்தான கருவறையில் எந்தெந்த தெய்வங்களையெல்லாம் வழிபடுகின்றோமோ (ஆவரண தேவர்கள் உட்பட) அத்துணை தெய்வங்களுக்கும் வழிபாடு செய்யப்படுகின்ற புனித இடமாகவும் அமைகிறது. எனவே, எந்த தெய்வத்திற்காக நாம் யாகசாலை அமைக்கின்றோமோ அதற்குரிய பரிவார தேவதைகளுக்கும் ஏற்றாற்போல அமைக்க வேண்டும் என ஆகம சாஸ்திரங்கள் கூறுகின்றன.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீஸ்வரப் பெருமானுடைய திருக்கோயில் கும்பாபிஷேகத்திற்காக அமைக்கப் பட்டிருக்கின்றது. ஸ்ரீ கோமுத்தீஸ்வர பெருமானுக்கு ஒன்பது குண்டங்கள் அமைக்கப் பட்டு பஞ்சாசந வேதிகை எனும் மேடை அமைக்கப்பட்டு யாகசாலை அமைந்துள்ளது. அருள்மிகு ஒப்பிலாமுலையம்மனுக்கு தேவீ பிரதிஷ்டாவிதியில் சொல்லப்பட்ட முறைப்படி ஒன்பது குண்டங்களும் ஸ்ரீ சக்ர வேதிகை மேடையும் அமைக்கப்பட்டுள்ளது.

இத்தலத்தில் முசுகுந்த சக்கரவர்த்திக்குப் புத்திர பேறு அருளிய அருள்மிகு தியாகராஜ சுவாமிக்கு ஆகமங்களில் சிறப்பான முறையில் சொல்லப்பட்டுள்ளபடி கிழக்கு முதலான நான்கு திசைகளில் சதுரம்,அர்த்த சந்திரன், வ்ருத்தம், பத்மம் ஆகிய நான்கு குண்டங்கள் அமைக்கப்பட்டும் தென்கிழக்கு முதலான நான்கு கோணங்களிலும் உமாதேவியாருக்கு உரித்தான யோனி குண்டங்களும் பிரதான குண்டமாக வ்ருத்த கண்டமும் ஸ்ரீ ஸ்கந்தருக்காக தனி ஒரு குண்டமும் அமைக்கப்பட்டுள்ள நிலையில் மொத்தம் பத்து குண்டங்கள் உள்ள யாகசாலையின் நடுவில் முகபத்ரம் என்று சில்பசாஸ்திரத்தில் விசேஷமாக கூறப்பட்டுள்ள வேதிகை மேடையும் அமைக்கப்பட்டு யாகசாலை அமைந்துள்ளது.

மேலும் திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆன்மார்த்த பூஜா மூர்த்தியாக ஞானமாநடராஜப் பெருமான் அருள்பாலிப்பதால் இத்திருக்கோயிலின் நடராஜப் பெருமானுக்கு ஒன்பது குண்டங்கள்

அமைந்த யாகசாலை அமைக்கப்பட்டும் இத்திருக்கோயிலில் சிவபெருமானிடம் அமைந்த யாகசாலை அமைக்கப்பட்டும் இத்திருக்கோயிலில் சிவபெருமானிடம் உபதேசம் பெற்று எழுந் தருளியுள்ள நந்தியெம்பெருமானுக்கு ஐந்து குண்டங்கள் அமைந்த யாகசாலை அமைக்கப் பட்டும் மற்றும் விநாயகர், சுப்ரமண்யர், திருமூலர் பெருமான் ஆகிய மூர்த்திகளுக்கு தனித்தனி யாகசாலை அமைக்கப்பட்டும் பெரும் பொருட் செலவில் பிரம்மாண்டமான முறையில் யாகசாலை அமைக்கப்பட்டுள்ளது.

மூலஸ்தானக் கருவறையிலிருந்து யாக சாலைக்குச் சுவாமியை அழைத்து வருவதற்கு ஒரு சாதனமாக இருப்பது கலசமாகும்.இதற்கென ஒரு குடத்தை தெய்வத் திருமேனியாகவே அதாவது சராசரி உடல் போன்று எண்ணி அலங்கரிக்க வேண்டும் என ஆகம நூல்கள் கூறுகின்றன. குடம் நமது உடலைப் போன்றது அதன் மீது சுற்றப்படும் முப்புரி நூல் நாடி நரம்புகள். உள்ளே ஊற்றப்படும் புனித நீர் உடலின் உள் உறுப்புகள் மற்றும் ரத்தம் போன்றது. குடத்தின் உள்ளே போடப்படும் நவரத்தினக் கற்கள், தங்கம், வெள்ளி போன்றவை வீரிய சக்தியைக் குறிக்கிறது. முப்பத்தாறு தர்ப்பைகளை ஒன்றாக முடிந்து குடத்தின் நடுவே வைக்க வேண்டும். இது முதுகு எலும்பாகவும் மாவிலைக் கொத்து கழுத்துப் பகுதி யாகவும், தேங்காய் முகமாகவும் எண்ணி அவற்றிற்குரிய மந்திரங்களைச் சொல்லி அலங்கரிக்க வேண்டும். கும்பாபிஷேகத்தின் யாக சாலை முற்காலத்திற்கு முன்பாக 'கும்பாலங்காரம்' என இந்நிகழ்ச்சியை விரிவாகச் செய்வார்கள். எனவே, புனித நீர் என்பது இறைவன் திருமேனியின் உள் உறுப்புகள் மற்றும் ரத்தம் போன்றது. இதன் நடுவேதான் இறைவனின் தெய்வசக்தி எனப்படும் உயிர்ச் சக்தியை மூல மந்திரம் சொல்லி ஆவாஹானம் செய்து பூஜிக்க வேண்டும்.

இப்படி கும்பாபிஷேகத்தில் யாகசாலையும் அதில் வைத்து பூஜிக்கப்படுகின்ற கலசங்களும் மிகவும் முக்கியத்தும் வாய்ந்தவையாகத் திகழ் கின்றன. இதன் தத்துவங்களை பக்தர்கள் எல்லோரும் புரிந்து கொண்டு பயன்பெற வேண்டும் என்ற திருவுள்ளத்துடன் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் 23 ஆவது குருமஹா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் அருளிய வண்ணம் இக்கட்டுரை எழுதப்பட்டதோடு வரைபடங்களும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.



ஸ்ரீ கோமுக்தீச்வரர் சன்னதிக்குப் போகும் வழி. இடது பக்கத்தில் நால்வர் கோயிலும், வலது பக்கத்தில் ஸ்ரீ ஆதி கோமுக்தீச்வரர் கோயிலும் இருக்கின்றன

உ
சிவமயம்

# அருள்மிகு கோமுக்தீசுவரர் யாகசாலை நவகுண்ட பக்ஷம்




கிழக்கு

உ

சிவமயம்

# அருள்மிகு ஒப்பிலாமுலையம்மை யாகசாலை நவகுண்ட பக்ஷம்



பத்ம குண்டம்



யோனி குண்டம்



பத்ம குண்டம்



யோனி குண்டம்



ஸ்ரீசக்கர வேதிகை



யோனி குண்டம்



பத்ம குண்டம்



யோனி குண்டம்



ந்தர்பிசினி குண்டம்



பத்ம குண்டம்

கிழக்கு

உ

சிவமயம்

## அருள்மிகு ஞானமாநடராஜப் பெருமான் யாகசாலை நவகுண்ட பக்ஷம்




கிழக்கு

உ

சிவமயம்

# அருள்மிகு புத்ர தியாகேசர் யாகசாலை தச குண்ட பக்ஷம்




**கிழக்கு**

உ

சிவமயம்

# ஸ்ரீ மகா நந்தி யாகசாலை




## கிழக்கு

## கிழக்கு


ஸ்ரீ. விநாயகர்
பஞ்ச கோண குண்டம்




ஸ்ரீ. சுவாமி விமானம்
சதுர குண்டம்




ஸ்ரீ. சுப்ரமண்யர்
அஷ்ட கோண குண்டம்




சதுர குண்டம்




ஸ்ரீ. திருமூலர்
சதுர குண்டம்




ஸ்ரீ. அறுபத்துமூவர்
சதுர குண்டம்




ஸ்ரீ. அம்பாள் விமானம்
யோனி குண்டம்




ஸ்ரீ. சண்டிகேஸ்வரர்
சதுர குண்டம்




ஸ்ரீ. பரிவாரங்கள்
சதுர குண்டம்


ஸ்ரீ. ஆதி கோமுக்தீஸ்வரர்
சதுர குண்டம்


ஸ்ரீ. பஞ்ச லிங்கங்கள்
வ்ருத்த குண்டம்


ஸ்ரீ. கொடிமரம்
சதுர குண்டம்


ஸ்ரீ. உற்சவர்
சதுர குண்டம்


ஸ்ரீ. ராஜகோபுரம்
சதுர குண்டம்


ஸ்ரீ. தக்ஷிணாமூர்த்தி
சதுர குண்டம்


ஸ்ரீ. துர்க்கையம்மன்
யோனி குண்டம்

# மாபாடியக் கட்டுரைகள்



மாதவச் சிவஞான சுவாமிகள்



# பாடியத்துள் சிவோகம் பாவனை

- சிவத் தமிழ்ச் செல்வர், ஆ. ஆனந்தராசன், மதுரை.

(இக்கட்டுரை ஆசிரியர், சைவ சித்தாந்தத்தில் ஆழ்ந்த புலமை நலனும், பாடம் சொல்வதில் ஆற்றலும் அனுபவமும் மிக்கவர்கள். மதுரை காமராசர் பல்கலைக் கழக சைவசித்தாந்தத்துறைப் பேராசிரியராக அமர்ந்து பணிநிறைவு பெற்றவர்கள். சிவஞான போதம் வழித்துணை விளக்கம், சிவஞான பாடிய நுண்பொருள் விளக்கம் முதலான சித்தாந்த நூல்களை ஆக்கியவர்கள்)

உயிர் எந்தப் பொருளைத் தான் என்று பாவிக்கின்றதோ அந்தப் பொருளாக ஆகும் தன்மையுடையது. எனவே அது தன்னைச் சிவமாகப் பாவித்துச் சிவமாகும் தன்மையுடையது என்பது புலனாகும். 'சிவன் நான்' என்று பாவிக்கின்ற இப் பாவனை 'சிவோகம் பாவனை' என்று சிவாகம நூல்களில் சொல்லப்படுகிறது.

'சிவன் நான்' என்னும் இச்சிறப்புப் பாவனையையே உபநிடதங்கள் 'அவன் நான்' (சோகம்) என்று பொதுப்படப் பாவிக்கச் சொல்கின்றன.

பொது நூலாகிய வேதத்தை மட்டுமே கொள்ளும் வேதாந்த ஆசிரியர்கள் 'அவன் நான்' என்றே பாவிக்கச் சொல்லுவர். அதனைக் கேட்ட மாணாக்கர் 'சோகம் அஸ்தி' (அவன் நான் ஆகின்றேன்) எனப் பாவிக்கும் பாவனையில் பழகுவர். அப்பாவனை 'சோகம் பாவனை' எனப்பட்டது.

சிறப்பு நூலாகிய சிவாகமத்தைக் கொள்ளும் சித்தாந்த ஆசிரியர்கள் அங்ஙனம் கூறாது 'சிவன் நான்' (சிவோகம்) என்றே பாவிக்கச் சொல்வர். இது சிவோகம் பாவனை எனப்பட்டது.

சிவோகம் பாவனையாகிய இது முத்தி நிலையில் ஆன்மா பாசத்தினின்றும் முற்றும் நீங்கிச் சிவமாந்தன்மையை அடைதற்குச் சிறந்த உபாயமாகச் சொல்லப்படுகிறது.

மாதவச் சிவஞான யோகிகள் தமது பேருரையில் சிவோகம் பாவனை பற்றிய விளக்கங்களைப் பல இடங்களில் தந்துள்ளார். அவற்றுள் ஆறாஞ் சூத்திரப் பேருரையின் இறுதிப் பகுதியில் கூறியுள்ளவை முதலில் நோக்குதற்கு உரியவை.

சர்வ ஞானோத்தர ஆகமமே எல்லா ஆகமங்களினும் மேலானது என்பதும், சித்தாந்தப் பொருளை அது சிறப்பு வகையாகக் கூறுவது என்பதும், அந்நூற் பொருளுக்கேற்ப ஏனைய நூல்களுக்குப் பொருள் கொள்ளல் வேண்டும் என்பதும் யோகிகளின் கருத்தாகும். அந்த ஆகமத்தின் பொருளைப் பலரும் உணர்ந்து பயன்பெறல் வேண்டும் என்னும் கருணையினால் ஆறாஞ் சூத்திரப் பேருரையில் சர்வ ஞானோத் தரத்திற்கு ஒரு சுருக்கவுரை வகுத்தாற்போல அந்நூற் பொருளைத் தொகுத்துத் திட்பமாகவும் தெளிவாகவும் தந்துள்ளார். ஆன்மா சிவோகம் பாவனை செய்யும் முறை, வேறு வகையான பாவனைகளால் பாசம் முற்றும் நீங்கப் பெறாமை, ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் தன்மை, தன்னை உணர்தலாகிய ஆன்ம ஞானத்தின் பெருமை முதலிய பல பொருள்கள் அவ்வாகமத்தின் வழி நின்று இங்கு உணர்த்தப்பட்டுள்ளன.

சிவமும் ஆன்மாவும் பொருள் தன்மையால் இரண்டேயாயினும், வேறுவேறு பொருள்களாகப் பிரித்தறிய வாராத கலப்பினை உடையன. இப்பொருள்கள் அநாதியாதல் போல இவற்றின் கலப்பும் அநாதியேயாம். ஆயினும் அக்கலப்பினை ஆன்மா மல மறைப்பினால் அறியாமல் அம் மலத்தில் அழுந்திற்று.

உள்ளீடாய் விளங்கும் சிவம் ஆன்மாவின் துன்பத்திற்கு இரங்கிக் கலை முதலிய தத்துவங்களைக் கூட்டி ஏகதேச அறிவு விளங்கச்

செய்து, அதனால் மலப்பிணிப்பை நெகிழ்வித்து மலசத்தி முழுதும் தேய்ந்த காலத்துக் குருவடிவம் தாங்கி வந்து உள்ளே விளங்கும் தன்னை நோக்கும் உபாயத்தை அறிவிக்க, அவ்வுபாயமாகிய பாவனையினால் ‘சிவனே நான்’ என உணர்ந்த ஆன்மா, முன்பு இருந்த ஏகதேச நிலை நீங்க, வியாபகமாய் முற்றுணர்வுடையதாய் விளங்கும்.

சிவமும் ஆன்மாவும் வேறுவேறு பொருள்களாய் இருப்பவும், ‘சிவன் நான்’ எனப் பாவிக்கும் பாவனையால் ஆன்மா சிவமேயாதல் எங்ஙனம் கூடும் என்ற ஐயம் நிகழாதவாறு அவ்வாகமத்துள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

‘ஆன்மாத் தன்னியல்பை அறியாது பசுத்துவத்தோடு கூடிய வழிப் பசுவாய் நின்றான்; அதுபோலத் தன்னை அறிந்து சிவத்துவத்தோடு கூடியவழிச் சிவமாய் நிற்பதற்கு ஐயமில்லையாகலான் தன்னையும் தலைவனையும் பராபர பேதத்தானும், தூல சூக்கும பேதத்தானும் எப்பொழுதும் பயின்றறிதல் வேண்டும்’.[1]

இந்தக் கருத்து நன்கு விளங்கும் படியாகப் பின்வருமாறு எளிமைப்படுத்திக் கூறலாம்.

ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் இயல்புடையது. அவ்வியல்பால், பாசத்தோடு கூடிய பொழுது பாசமாய்ப் பசு என நிற்கிறது. அதுபோலவே, பாசத்தினின்றும் நீங்கிச் சிவத்தோடு ஒற்றுமைப்படுமாயின் ஆன்மா சிவமாதற்கு ஐயமில்லை. ஆதலால், ஆன்மா சிவத்தைப் பரமாகவும் (வியாபகப் பொருளாகவும்) தன்னை அபரமாகவும் (வியாபகத்துள் அடங்கிய வியாப்பியப் பொருளாகவும்) சிவத்தைச் சூக்குமப் பொருளாகவும் தன்னைத் தூலப் பொருளாகவும் எப்பொழுதும் உணர்ந்து, சிவமும் தானும் பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற நிலையை இடைவிடாது உணர்தல் வேண்டும்.

ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலைத் தனது இயல்பாக உடைமையினாலேயே, அது அத்துவித பாவனையால் சிவமாய் நிற்றல் கூடுகிறது. ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலைத் ‘தற்றரும தருமி’ என்னும் தொடரால் இவ்வாகமம் குறிப்பிடுகிறது. இத் தொடர் தத், தருமம், தருமி என்னும் மூன்று சொற்களால் ஆனது.

தத் - அது;

அது என்பது ஆன்மாவால் சாரப்படும் பொருள். அஃதாவது, பெத்த நிலையில் பாசமும், முத்தி நிலையில் சிவமும்.

தருமம் - குணம்;

எனவே, தற்றருமம் என்பது ஆன்மாவால் சாரப்படும் பொருளாகிய அதன் குணம் என்று பொருள்படும்.

தருமி - குணத்தையுடையது.

எனவே, ‘தற்றரும தருமி’ என்பதற்குச் சாரப்படும் பொருளாகிய அதன் குணத்தைத் தன் குணமாக உடையது என்பது பொருளாகும்.

ஆன்மா பெத்தநிலையில் பாசத்தைச் சார்ந்து பாசத்தின் தன்மையையே தன்தன்மையாகக் கொண்டிருக்கும் ; முத்தி நிலையில் சிவத்தைச் சார்ந்து அதன் எண்குணங்களைத் தன் குணங்களாகப் பெற்று விளங்கும் என்பதை இத்தொடர் உணர்த்தி நிற்கிறது.

அதுவதுவாய் நிற்கும் தன்மையுடைய ஆன்மாவை அறுவகையாக வகுத்து விளக்குகிறது இவ்வாகமம். பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என்பன அவ்வறுவகைகள்.

1. பூத பரிணாமமாகிய உடம்போடு கூடி அதுவாய் நிற்கும் நிலையில் பூதான்மா.

2. நால்வகை வாக்குக்களோடு கூடி அதுவாய் நிற்குங்கால் அந்தரான்மா.

3. அந்தக்கரணம் முதலிய தத்துவங்களைப் பற்றி அவையே தானாய் நிற்குங் கால் தத்துவான்மா.

4. புருட தத்துவத்துடன் கூடிப் புருடனாய் நின்று பிரகிருதியின் குணங்கள் வழியாக வரும் இன்பத் துன்பங்களை நுகருங் காலத்தில் சீவான்மா.

5. மந்திரங்களைக் கணித்து அவற்றின் மயமேயாகி நிற்குங் காலத்தில் மந்திரான்மா.

6. பரமான்மா என்னும் சிவத்தோடு கூடி அதுவாய் நிற்குங் காலத்தில் பரமான்மா.

இவ் அறுவகைகளையும் விளக்கிக் காட்டிய யோகிகள் அவற்றுள் முன்னர் உள்ள ஐந்து வகைகளும் ஆன்மாவிற்குப் பாசமாகிய சடப் பொருள்களின் சேர்க்கையால் உண்டாகின்ற செயற்கை நிலைகள் எனவும்,

அத்துவித பாவனையால் பரமான்மா என நிற்றலே சித்து என்னும் சாதிப் பொதுமையால் இயற்கை நிலையாம் எனவும் தெளிவு படுத்தியுள்ளார்.[2]

ஆன்மா ஏனையவற்றோடு கூடி நிற்றலாகிய செயற்கை நீங்கும்; பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றலாகிய இயற்கை என்றும் நீங்காது. ஆயினும் செயற்கையோடு கூடி நிற்கும் காலத்து இயற்கை வெளிப்பட்டுத் தோன்றுதல் இல்லை. செயற்கை அறவே நீங்கினவிடத்து இயற்கை வெளிப்பட்டுத் தோன்றும் என்பது உளங் கொள்ளுதற்குரியது.

'தற்றரும தருமி' என மேலே காட்டிய தொடருக்கு, முத்தியில் சிவனது தருமத்தைத் தன் தருமமாகப் பெற்று நிற்பது எனப்பொருள் கூறப்பட்டது. இப்பொருளுக்கேற்ப, தற்றருமத்தால் தருமி என வேற்றுமையுருபு விரித்துக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு கொள்ளின், சிவத்தினிது எண்குணங்களால் தன்னிடத்து விளங்கும் எண்குணங்களை உடையவன் என்ற பொருள் பெறப்படும். இப்பொருளே சைவ சித்தாந்த முறையில் ஏற்கப் படுவது.

சிவசம வாதம் கூறுவோர் தம் கருத்திற் கேற்பத் 'தற்றரும தருமி' என்ற தொடரைத் தற்றருமத்தோடு ஒத்த தருமத்தை உடையவன் என விரித்து, சிவனது குணங்களோடு ஒத்த குணங்கள் ஆன்மாவிற்கும் அநாதியே உண்டு என்பர்; அவை அநாதியில் மலத்தால் மறைக்கப்பட்டிருந்தன எனவும், மலம் முழுதும் நீங்கிய முத்தி நிலையில் அவை விளங்கித் தோன்றும் எனவும், அந்நிலையில் ஆன்மா சிவனோடு சமமாய் நிற்கும் எனவும் கூறுவர்.

சிவசமவாதிகளின் இக் கூற்றுப் பேருரையுள் பின்வருமாறு மறுக்கப்பட்டுள்ளது. எண் குணங்களும் ஆன்மாவிற்கு அநாதியே உள்ளனவாயின் அவற்றுள் ஒன்றான அநாதி போதம் என்னும் தன்மையும் அநாதியே அதற்கு உண்டு என்று கொள்ள வேண்டும். அநாதி போதம் என்பது அநாதியே ஞானம் விளங்குதல். அநாதிபோதம் ஆகிய இக்குணம் ஆன்மாவிற்கு இயல்பிலே உள்ளதாயின் அஃது அநாதியே பாசத்துட்பட்டு அறிவை யிழந்து நிற்றல் எங்ஙனம் பொருந்தும்? எனவே, அநாதி போதம் என்பது அநாதி முத்தனாகிய சிவனுக்கன்றி, அநாதி பெத்தனாய் உள்ள ஆன்மாவுக்கு உரிய குணமாக மாட்டாது என்பது விளங்கும். இவ்வாறே ஏனைய குணங்களும் அதற்கு உரியன ஆகா.[3] முத்தியில் ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையால் சிவனது குணத்தையே தனது குணமாகப் பெற்று நிற்பதன்றித் தனக்கே இயல்பாகவுள்ள குணத்தைப் பெறுவதன்று. ஆதலால் சிவனது குணங்களோடு ஒத்த குணங்கள் ஆன்மாவிற்கும் உண்டு என்பார் கூற்றுப் பொருளற்றதாகும்.

சிவாகமங்களில் ஓரோர் இடங்களில் 'முத்தியில் ஆன்மா சிவசமமாம்' என்று கூறப் பட்டுள்ளது. அச்சொற்குச் சிவசமவாத சைவர் 'முத்தியில் ஆன்மா சிவனோடு ஒப்ப எல்லாம் அறிந்து, எல்லாம் வல்லனாய், ஐந்தொழில் செய்து வாழ்தல்' எனப் பொருள் உரைப்பர்.

இவ்வாறு அவர் ஆகமக் கருத்துக்கு முரணாகத் தமக்கு வேண்டியவாறே பொருள் கொண்டு உரைப்பது சிறிதும் பொருந்தாது.

முத்தி பெற்ற ஆன்மா சிவத்தைப் போலப் பிறப்பு இறப்புக்களுட்படாது என்றும் ஒரு தன்மையனாய் நிற்கும். இது பற்றியே முத்தியில் ஆன்மா சிவசமம் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

சிவசமம் என்பதன் உண்மைப் பொருள் இதுவே என்பதைச் சர்வ ஞானோத்தரமாகிய இவ்வாகமத்துள் உள்ள பின்வரும் வாக்கியம் நன்கு உணர்த்தி நிற்கிறது.

'இங்ஙனம் தன்னுண்மை யறிந்து உபாயங்களைச் செய்வோன்

இங்கே சீவன்முத்தனாய், அகம் புறமெங்கும் வியாபித்துத்

*தற்றரும் தருமியாய், தற்றருமம் எனப்பட்ட*
*முற்றுமுணர்தல்*
*முதலிய எண்குணங்களும் உடையனாய்,*
*இங்ஙனஞ் சிவத்துவத்*
*தைப்பெற்று, சிருட்டிப் படுந்தன்மை*
*முதலியனவின்றிச் சிவசமமாவன்'.*[4]

இவ்வாகம வாக்கியத்தில் 'இங்ஙனம் சிவத்துவத்தைப் பெற்றுச் சிருட்டிப்படும் தன்மை முதலியன இன்றிச் சிவசமமாவன்' என்ற பின்பகுதி சிவசமம் என்பதன் விளக்கமாக அமைந்துள்ளமை காணலாம்.

இனி, தற்றரும தருமி எனக் கூறப் பெற்ற ஆன்மாவுக்குப் படிகம் உவமையாகக் கூறப்படும். படிகம் தன்னை அடுத்துள்ள மாணிக்கத்தின் ஒளியைத் தன்னிடம் முழுவதுமாகப் பெற்று நிற்குமாயின் வேறொன்றன் நிறத்தை அது பற்றமாட்டாது. அவ்வாறன்றி, அப்படிகம் மாணிக்கத்தின் ஒளியைச் சிறிதளவிலே பற்றி நிற்குமாயின், பற்றாத எஞ்சிய பகுதியில் அது மற்றொன்றினைப் பற்றுவதாகும்.

அப்படிகம்போல, ஆன்மா மலம் முழுவதும் நீங்கிச் சிவத்தைச் சார்ந்த பொழுது அதனறிவு சிவம் ஒன்றையே அறியுமன்றி வேறொன்றை அறிய மாட்டாது. மலம் முழுவதும் நீங்காமல் ஓரளவே நீங்குமாயின் அவ்வான்மா சிவத்தையும் உலகத்தையும் மாறிமாறி அறியும் நிலை உண்டாகும். சிவம் ஒன்றையே யன்றிப் பிற பொருள்களையும் அறியுமாயின், அது பந்தத்திற்கு ஏதுவாகும். ஆதலால், சிவத்தையறியும் அறிவு சிறிதும் வேறுபடாது நிலைத்து நிற்றற் பொருட்டு ஆன்மா சிவோகம் பாவனையில் உறைத்து நிற்றல் வேண்டும்.[5]

ஆன்மா செய்யும் சிவோகம் பாவனைக்கு உவமையாக மாந்திரிகன் செய்யும் கருட பாவனை கூறப்படும். யோகிகள் இவ்விடத்தில் கருட பாவனை பற்றிய விளக்கம் தருகிறார்.[6] ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு மந்திரம் உண்டு என்றும், அம்மந்திரத்திற்கு அதிதெய்வம் உண்டு என்றும் மந்திரநூல் கூறும். அம்முறையில் உலகிற் காணும் கருடனுக்கு உரிய மந்திரம் மந்திர கருடன் எனப்படும். மாந்திரிகன் அம்மந்திர கருடனை நாள்தோறும் தியானித்துப் பழகிவரின், அம்மந்திரமே தானாய் நிற்கும் அநந்நிய பாவனை அவனுக்குக் கைவரும். அவ்வாறு அம்மந்திர வடிவாய் நிற்கின்ற நிலையில் விடம் ஏறிய ஒருவனைத் தன் மந்திரக் கண் கொண்டு நோக்குவானாயின் விடம் நீங்குதல் உறுதி. 'கருடன் நான் ஆகின்றேன்' என்னும் பாவனையில் முதிர்ந்து நின்ற மாந்திரிகனால் விடம் நீங்குதல் போல, 'சிவன் நானாகின்றேன்' என்னும் பாவனையில் முதிர்ந்து நின்ற ஆன்மாவை மலம் பற்றாது நீங்கியொழியும்.

சிவோகம் பாவனை நீங்காது நிலை பெறுதற்குத் துணை புரிவது முத்தி பஞ்சாக்கரம். ஆன்மா தனது உடம்பில் இதய கமலத்தில் சிவனை அஞ்செழுத்து வடிவில் கண்டு அருச்சித்து, உந்தியிடத்தில் ஓமம் செய்து, புருவ நடுவில் முத்தி பஞ்சாக்கரத்தை 'சிவன் யான்' என்னும் பொருள்பட உணர்ந்து சிவனைத் தியானித்தால் சிவமாம் தன்மையைப் பெற்றுச் சிவனுக்கு ஆளாகும்.

முத்தி பஞ்சாக்கரத்தைத் 'தத்துவ மசி' என்னும் மகாவாக்கியப் பொருள்பட உணரும் முறையைப் பேருரையில் பின்வருமாறு காட்டியுள்ளார் யோகிகள்.

'புருவ நடுவில் சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப் பொருளும், துவம் பதப் பொருளும், அசி பதப் பொருளுமாம் முறைமையின் அவ்வஞ்செழுத்தாற் சிவோகம் பாவனை செய்யின் அப்பொழுதே அங்ஙனம் விளங்கித் தோன்றும் முதல்வனுக்குச் சேட சேடிய பாவத்தால் ஆகற் பாலதாகிய அடிமையாம் என்க! என்பது, அப் பேருரைப் பகுதியாகும்'.[7]

தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தில் தத்(அது) என்னும் பதமும், துவம் (நீ) என்னும் பதமும், அசி (ஆகின்றாய்) என்னும் பதமும் உள்ளன.

முத்தி பஞ்சாக்கரத்தில் சிகாரம் தத் பதப் பொருளையும், யகாரம் துவம் பதப் பொருளையும், வகாரம் அசி பதப் பொருளையும் தரும்.

இவ்வாறு உணர்ந்து சிவோகம் பாவனை செய்பவன் சிவமே யாதலை 'வா சி யருளி யவ்வை வாழ்விக்கும்' எனத் திருவருட்பயனும் குறித்துள்ளமை காணலாம்.

இனி, சிவோகம் பாவனையால் வியாபகமாகிய தன்னியல்பைப் பெற்ற முத்தான்மாக்கள் சிவத்தின் தன்மைகளெல்லாம் தம்மிடம் விளங்கப் பெற்று நிற்கும்; அந்நிலையில் முதல்வனுக்குரிய இயல்பைத் தம் இயல்பாக அவை கூறும். காட்டாக, வாமதேவ முனிவர் 'யானே உலக மாயினேன்' என்று கூறினாற்போல அமைந்த வாக்கியங்கள் உபநிடதங்களில் உள்ளன. அவற்றைக் காணும்போது உயிர்களும் முதல்வன் போல எல்லாப் பொருள்களிலும் அத்துவிதமாய் இயைந்து நிற்கும் தன்மை உடையனவோ என்ற ஐயம் நிகழும். அதனை நீக்கித் தெளிவிக்கின்றார் பாடியகாரராகிய சிவஞான யோகிகள்.

பாசங்களினின்றும் நீங்கி வியாபக நிலையைப் பெற்றுள்ள காலத்தில் உயிரின்கண் முதல்வன் புகுந்து வேற்றுமையின்றி விளங்குதலால் அவ்வொற்றுமை பற்றி 'நானே உலகெலாம் ஆயினேன்' என்று கூறப்பட்டதாம். சிவோகம் பாவனையால் சீவான்மா பரமான்மாவாய் நிற்கும் நிலையில் அது யான் என்று கூறுவதற்குப் பொருள் முதல்வன் என்பதேயாகும். எனவே எல்லாப் பொருள்களிலும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் தன்மை முதல்வனுக்கேயன்றி உயிர்களுக்கு இல்லை என்று விளக்கிய யோகிகள்[8] கண்ணன் அருச்சுனனுக்கு அறிவுறுத்திய நிலையை எடுத்துக் காட்டுகிறார்.

'ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக' என்று கண்ணன் உபதேசிக்க, அங்ஙனமே செய்வதாக உறுதி கூறிய அருச்சுனன் அவன் கூறிய கருத்துணர்ந்து இறுதிவரை சிவபூசையே செய்து வந்தான். மேலும், அருச்சுனன் கண்ணனையே சிவலிங்கமாக வைத்துப் பூசித்துப் பின் கயிலைக்குச் சென்று பார்த்தபோது, கண்ணன் மேல் இட்ட பூக்கள் சிவன்மேல் காணப்பட்டன என்று பாரதத்தில் வருகிறது. இதனால் விளங்குவது, கண்ணன் சிவோகம் பாவனையில் சிறந்திருந்தான் என்பதும், சிவத்தின் தன்மைகளெல்லாம் தன்னிடம் விளங்கப் பெற்று நின்றான் என்பதும் ஆகும். கண்ணன் உபமன்னியு முனிவர்பால் சிவதீக்கை பெற்றவன் என்பது நூல்களால் அறியப்படுவது.

மேற்கூறியவாற்றால், சிவோகம் பாவனை சித்தாந்தச் செந்நெறியில் பெறும் சிறப்பிடமும், அதனை மாதவச் சிவஞான யோகிகள் தமது பேருரையில் ஆங்காங்கே விளக்கிச் சென்றுள்ள திறமும் நன்கு புலனாகும்.

**அடிக்குறிப்புகள் :**

(பக்க எண்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாகிய சிவஞான பாடிய நூலில் உள்ளபடி தரப்பட்டுள்ளன)

1. பாடியம் ப. 360
2. பாடியம் ப. 361
3. பாடியம் ப. 367
4. பாடியம் ப. 360
5. பாடியம் ப. 367
6. பாடியம் ப. 441
7. பாடியம் ப. 444
8. பாடியம் ப.118



திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான அருள்திரு மெய்கண்டார் ஞானசமாதி திருக்கோயில், திருவெண்ணெய்நல்லூர்.

# பாடியத்துள் சிவபரத்துவம்

- சித்தாந்த வித்யாநிதி க. சண்முகம், விக்கிரமசிங்கபுரம்.



(இக்கட்டுரை ஆசிரியர், ஆதீன சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மைய ஆசிரியராகவும் திருமுறை நேர்முகப் பயிற்சி மைய ஆசிரியராகவும் பணிபுரிந்து வருகின்றார். வி.கே.புரம் சைவநெறிக் கழகத்தின் தலைவர்)

**சுருக்கம் :**

இக்கட்டுரையில் பரம்பொருளின் அளத்தற் கரிய தன்மை, அவன் மூவர்க்கும் முதலாகிய சிவசத்து என்பது, ஐந்தொழில் செய்வது, குருவாயும், சிவமாயும் காட்சி தருவது, ஆன்மாவைச் சிவயோகத்திலும், சிவபோகத்திலும் இருத்துவது போன்றவை கூறப் படுகின்றன.

சிவபரத்துவம் என்பதாவது, (சிவம் - மங்கலம், நன்மை, இன்பம் என்பது, பரம் - உயர்ந்த, துவம் - தன்மை) ஆன்மாக்களுக்குப் பரமப்பிரயோசனம் அருளும் தன்மையாகும்.

**அளத்தற்கரிய தன்மை :**

சிவபரத்துவம் கூற 'அல்லை யீதல்லை யீதென அறைகளு மன்மைச் சொல்லி னாற்றுதித் திளைக்கும் சுந்தரன்' என்றும், 'மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றும் குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்ற இறைவனார் கமலபாதம் இன்று யான் இயம்பும் ஆசை நிறையினார் குணத்தோர்க்கு எல்லாம் நகையினை நிறுத்தும் அன்றே' எனறும் பரஞ்சோதி முனிவர், அருள்நந்திசிவம் போன்றோர்களே அஞ்சி நிற்ப சிறு நாயினும் கடையேன் கூறப்புகுதும் என்பது நகைப்பிற் கிடமாகுமென்பது தெற்றென விளங்கினும். நம் முதல் பஞ்சாக்கரதேசிகநாதன் வடிவாய் திருஆவடுதுறைக்கண்ணின்று ஆணை தந்தமையால் அவனதாளெனும் புணைபற்றி, அவனுள்ளின்று செலுத்தின் சிறுதுரும்பும் செயற்கரிய செயுமென்பதுபற்றி சீர் வளர் சீர் குருமகா சந்நிதானத்தின் திருவடிகளைத் திரிகரண வணக்கம் செய்து புகுதும்.

உலகமாந்தர் அகவிருள் நீங்கி ஆனந்தம் பொருந்துதற் பொருட்டு, தென்முகக்கடவுள் தம் செங்கையிற் கொண்ட சிவாகமப் பொருளொருமை உணர்த்தும் அதிநுட்பம் சிவஞானபோதமதைத் தண்டமிழில் தந்துவந்தார் திருவெண்ணெநல்லூர்த் தேசிகனாம் மெய்கண்டசிவம். பிறவிப் பிணிதீர்க்கும் திவ்விய ஔடதமாம் அதன் பொருண்மை உணரமாட்டா, மாந்தர்க்கு, பரமோப காரமாக அதன் வளம் அனைத்தும் மாபாடியத்தால் திறந்தளித்தார் நம் ஆதீனக்குலதெய்வமாய், பார்வையென மாக்களைப் பற்றிப் பிடித்தற்கு, நெற்றிக்கண்ணும், நீலகண்டமும் கரந்து வந்த கடவுளாய், அகத்தியனார் வரத்துதித்த வள்ளலாம் சிவஞானயோகிகள்.

**நூன்முகம் :**

மாபாடியத்தின் வணக்கச் செய்யுள்கள் ஐந்து. 1.முதற்கண் சங்கற்பம் போல் (நூற்பயன் கூறும்) அமைந்த அரன் நாமம் சூழ்தலால் தீயதெல்லாம் ஆழ்ந்து (பாசநீக்கம்) வையத்து மக்களின் பிறவித்துயர் தீரும் எனக்கூறும் ஞானசம்பந்தப் பெருமானின் திருப்பாசுரத்தை அமைக்கிறார்.

2. ***"வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினைதீரின் அன்றி விளையா - வினைதீர ஞானத்தை நாடித்தொழவே அதுநிகழும் ஆனத்தால் அன்பின் தொழு"*** - என்பதால் அவ்வாறு பிறவித்துயர் தீர்தற்கு வினை தீரவேண்டும் எனக்காட்டுகின்ற திருவாசகத்தின் சிவபுராணப் பகுதியை அடுத்து அமைக்கிறார்.

*3.* அடுத்து ஞானப்பொருளாய் உள்ள முதற்கடவுள் யார்? என்பதை நூற்பா ஒன்று முதற்கண் பொதுவாய்க் கூறி, இறுதியிற் சிறப்பாய்த் தெளித்துக் கூறுவது போல் அமைந்த திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பகுதியின் முதற்பாடல 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு' என்பதை அமைக்கிறார். அது முதற்கடவுளை

எழுத்துக்களுக்கெல்லாம் ஆதாரமாய் இருக்கின்ற அகரம் போல் என ஒப்பால் பொதுவாய்க் காட்டி, பின் காமிகத்திலே ''மகேசுவரருடைய சக்தியார் பவானி எனவும், சதாசிவருடைய சத்தியார் மனோன்மணி எனவும், சிவனாருடைய சத்தியார் ஆதி'' எனவும் கூறப்படுதல் பற்றி ஆதிசக்தியோடு கூடிய பகவன் என அடையால் தெளித்துக் காட்டும் பாடலை வைக்கிறார்.

4. அடுத்து ஒரு பொருளை அதன் குணத்தைக் கொண்டே அறியமுடியும் என்பது பற்றி அவன் கருணையைக் கற்பகமாக வழங்குவான் எனக்காட்டும் கற்பகவிநாயகர் துதியை அமைக்கிறார்.

5. அக்கருணை சகலவர்கத்து ஆன்மாக்களாகிய நமக்குக் குருமூலமாகவே அமைதல் பற்றிக் குருமரபு வாழ்த்து அமைக்கிறார். திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் என மூன்று முறை கூறி அது மும்மலம் நீங்க மூன்று தீக்கைகளால் அமைவதெனக் காட்டுகிறார். எனவே இப்பகுதியில் பரம்பொருள் யார் என்பதாகவும், அவன் திருக்கருணை எவ்மாண்பினது என்பதூவும், அது நமக்கு எவ்வாறு வரும் என்பதூவும் காட்டப்படுகிறது.

### பெரும் பெயர்க் கடவுள் :

பாயிரத்துள் ''பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு - மயர்வற'' என்ற பகுதியின் விளக்கத்தால் அப்பரம்பொருள் சைவர்களின் பிரமாணநூலான நால்வேதக் கருப்பொருளாய், (அயமாத்மா பிரஹ்ம, ப்ரக்ஞானம் ப்ரஹ்மம், தத்துவ மசி, அஹம் பிரஹமாஸ்மி) அஞ்செழுத்தின் உட்பொருளாய் இருக்கிறான் என்பதையும், அவ்வாறிந்து கொண்டு அவன் மலமும், மலவாசனையும் கடவுள் நீக்கிச் சீவனைச் சிவமாக்குகிறான் என அவன் பரத்துவத்தையும் கூறுகிறார். மேலும் ''பெரும் பெயர்க் கடவுள் என ஞேயமொன்றே பெரும் பெயர்க்குப் பொருளாகக் கூறினார் ஏனையவற்றைத் தன்னுளடக்கி நிற்றலிற் தலைமைபற்றி யென்றுணர்க'' என்பதால்,

*''எம்பிரான் என்றதே கொண்டு என்னுள்ளே புகுந்து நின்று இங்கு*
*எம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர்வேனை*
*எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்குமென்றால்*
*எம்பிரான் என்னினல்லால் என்செய்கேன் ஏழையேனே'*

- என நாவுக்கரசர் கூறியது போல சிவம் ஆன்மாவைத் தன்னுள்ளே கரந்து நின்ற தன்மை கூறுகிறார். இதையே ''யானாகிய என்னை விழுங்கி வெறும் தானாய் நிலைநின்றது தற பரமே'' - எனக் கந்தரனுபூதியும், ''தான் நின்று எனைத் தனக்குள்ளே யொளிக்கும்'' - எனப் பண்டார மும்மணிக் கோவையும், ''ஆனந்த வெள்ளத்து அழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக் கொண்டு ஆனந்த வெள்ளத்திடை திளைத்தால் ஒக்கும்'' - எனக் கோவையாரும், ''மூன்றாய தன்மை அவர்தம்மில் மிகமுயங்கித் தோன்றாத இன்பம்''- எனத் திருவருட் பயனும், ''ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டும் இன்றாகாமல்''- என இருஃபா இருபதும், ''பேசா அநுபூதி பிறந்ததுவே'' - எனத் திருப்புகழும், ''பெரு வான்பொருள் தன் பெரும் பெயரே பெயராக வந்த ஒரு வாய்மை தன்னை நினையினும் உள்ளம் உருகுதே''- எனப் பஞ்சாக்கர அந்தாதியும், ''தான் என்றவர் முன் ஒளித்தோடித் தன்னை இழந்தவர் முன் யான் என நின்றிடும் காசிப்பிரான்'' - எனக் காசிக் கலம்பகமும், ''உயிருண்ணி''-எனத் திருவாசகமும் கூறும் கருத்தினைக் கூறி ஞேயமாகிய சிவமே ஏனையவற்றைத் தன்னுள் அடக்கிக் கொண்டு நிற்கின்ற அத்தலைமைப் பண்பாகிய அவன் பரத்துவம் கூறுகிறார்.

### மங்கலவாழ்த்து :

இங்கே ''கல்லானிழலில் எழுந்தருளியருந்து வீடு பேறும், மலையை வில்லாக வளைத்துப் பகைவரை வென்று போகமும் அளித்தருளியோர்'' என்றும், ஐந்தொழிலுக்கும் வினைமுதல் என்றும் கூறி அவனது பரத்துவம் பேசுகிறார்.

### அவையடக்கம் :

இவ்விடத்து ''தமையுடைய தன்'', ''எம்மையுடைமை'' - என்பவற்றால் அவனது தலைமைப் பண்பும், நம்முடைய அடிமைப் பண்பும் உணர்த்தப் படுகிறது. 'தம்மையுணர்ந்தார் தன்னுணர்வார், தம்மையுணரார் தன்னுணரார்' - என்பதால் அவனதுயர்வும், அவனை உணர்ந்தார துயர்வும் கூறி, அவனை உணராரது இழிவும் உடன் கூறுகிறார்.

### மூவர்க்கும் முதல் :

சூத்திரம் - 1; பதியுண்மை கூறப்புகுந்த மெய்கண்ட சிவம் நூற்பாவின் வார்த்திகப்

பொழிப்பில் 'சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம்' எனக் கூறுவார். அப்பகுதியைச் சுவாமிகள் விளக்குமிடத்து ஐவகைச் சங்காரங்களையும் கூறி, அவற்றுள் ஈண்டைக்கேற் புடையது இறுதிக்கண்ண தாகலின் எனக்கூறி, அவன் முப்பத்தாறு தத்துவபுவனங்களையும் ஒருசேரச் சங்கரிக்கும் பரமசிவன் என்றும், அவன் ஏகதேச சங்காரம் செய்யும் அயன், மாலுக்கு மேற்பட்ட இருபத்து நாலு பிரகிருதி தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் குணிருத்திரனுக்கும், வித்யா தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் அநந்ததேவர்க்கும் மேம்பட்டவனாய்ச் சிவன், சதாசிவன், மகேசனெனப் பெயர் பெற்று நின்று இலயம், போகம், அதிகாரம் என்னும் மூன்றவத்தை யினும் முறையே அருவம், அருவுருவம், உருவமென்னும் மூன்று திருமேனி கொண்டு சத்தன், உத்தியுத்தன், பிரவிருத்தன் எனப் பலபெயர் பெற்று நிற்பினும் இவன் தொழிலால் வேறுபடுதலின்றிப் பொருளால் வேறுபடுவானல்லன் என்பதையும், இம்மயக்கம் தெளித்தற் பொருட்டு நம் சாத்திர, தோத்திரக் குரவன்மார்களின் ''நம்மவரவரே மூவறென் றெயெம் பிரானொடு மெண்ணி விண்ணாண்டு மண்மேற் றேவறென்றே இறுமாந்து என்ன பாவம் திரிதவரே'' என மணிவாசகர் போன்றோர் மொழிகளைப் பிரமாணமாகக் காட்டுவார். மேலும் அரதத்தாசாரியாரின் சுலோக பஞ்சகவிஷயம் கூறும் இருபத்திரண்டு ஏதுக்களையும் காட்டிப் பரமசிவனே பரம் பொருளென்பது தெளிப்பார். இச்சூத்திரத்தின் இறுதியதிகரணத்து 'சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது இறுதியதிகரணத்து சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான் எனக்கூறிய மொழிகளைக் காட்டி பரமசிவனொருவனே சுதந்திரன், கடவுள் என்பதையும், ஏனையோரெல்லாம் பரதந்திராகிய உயிர்வர்க்கமே என்பதையும் உணர்த்துவார். சுட்டுணர்வே சுதந்திரம் இன்மைக்கும், சுட்டுணர்வின்மையே சுதந்திரம் உண்மைக்கும் காரணமாயதைக் காட்டுவார். ஒன்றலா ஈரே முதல் அதில் ஈறலா ஒன்று பலவாறே தொழும்பாகும்' என்பதை விளக்குமிடத்து அநேகேசுரவாதிகள், சிவசமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி. ஆவேசவாதி மதங்களை மறுத்து உலகமாகிய காரியப்பிரபஞ்சம் சடமாகலானும், உயிர்களாகிய சேதனப்பிரபஞ்சம் அறியாமையைச் செய்யும் ஆணவத்திற் கட்டுப்பட்டுச் சுட்டுணர்வுடையதாய் நிற்றலானும், உலகமும் உயிருமாகிய இவற்றுள் உலகை அசைப்பிற்கும், உயிருக்கு அறிவித்தற்கும் இவ்விரண்டின் வேறாய் ஒரு முதற்கடவுள் வேண்டும் என்பது பெறப்படுகிறது. படவே பிரபஞ்சம் விசித்திரமாய் நம் அறிவெல்லை களையும், கற்பனைகளையும் கடந்து செயல் படுதலால் இவ்வுலகம் அசிந்திதனாகிய ஒருவனால், முற்றுணர்வும் முடிவில்லாற்றலும் பேரருளும் தன்வயமும் ஆகிய நிரதிசய குணங்கள் நிறைந்த ஒருவனாலேயே ஆவது என்பதும் அவன் சங்காரக் கடவுளாகிய சிவமே என்பதும் காட்டுவார். வீடுபேற்றின் கண்ணும் அவனால் முத்தி பெற்ற ஆன்மாக்கள் சிவசமமாதலின்றி அவனுக்குப் பலவகையிலும் அடிமையேயாம் என அவனது பரத்துவத்தை உணர்த்துவார். அதுபற்றியே மகாவித்துவான் அவர்களும் ஞானசம்பந்தப் பெருமானை, ஒற்றைத் தேவனைச் சுட்டிக் காட்டிய வெற்றிக் குழவியென்பார்.

**உற்பவம் :**

சூத்திரம் - 2: இங்கே அப்பரம் பொருள் உலகோடும், உயிர்களோடும் அத்துவிதமாய் நின்று, அவ்வுயிர்களின் ஆணவமலநீக்கத்தின் பொருட்டு உலகைப் படைத்து, மாயாமலம் பக்குவமாதற் பொருட்டுக் காத்து, கன்ம மலம் பக்குவமாதற் பொருட்டு ஒடுக்குவதைக் கூறுவார். அவ்வாறு கூறுமிடத்து இயைபு பற்றி முதல் உற்பவமும் உடன் கூறப்புகுந்து "விச்சதின்றியே விளைவு செய்குவாய் விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" என்ற ஒரு வாசகமே திருவாசகமாகக் காட்டி, அவன் ஒருவனால் மட்டுமே வித்தின்றியும் விளைக்க முடியும் என்பதையும், அவனே சகலத்தையும் ஒடுக்கித் தோற்றுவிப்பான் என்பதையும் காட்டி அவன் பரத்துவம் விளக்குவார். இறுதி அதிகரணத்தின் கண் அவன் சர்வவியாபியாய் அனைத்து உயிர்களையும் அவனுக்கு அடிமையாகவும், அனைத்து சடப் பொருள் களையும் அவனதுடைமையாகவும் கொண்டு நிற்பது கூறப்படுகிறது. இதுவும் அவனது முதன்மையை விளக்குவதே.

**முதல் உபகாரம் :**

சூத்திரம் - 5 : ஆன்மாக்கள் உய்தற் பொருட்டு பரம்பொருள் தநு, கரண, புவன, போகங்களைக் கொடுத்தால் முந்தைய நூற்பாவில் (நூற்பா - 4) சொன்னது போல் அவை அரசன் போல் நின்று அவற்றைச் செலுத்தி உலகை அறிய முடியுமோ? எனில் முடியாது. அவன் அனைத்து உயிர்களுடனும், அவை அநுபவிக்கின்ற தநு கரண புவன போகங்களுடனும் அத்துவிதமாய் (திரோதான சக்தி ரூபமாய்) நின்று வினைக்கீடாய்ச் செலுத்தினாலன்றி அவை ஒன்றையும் அறிய மாட்டா என அனது காட்டும் உபகாரம் உணர்த்துவார்.

அவனது பேரியல்புகளை விளக்க மன்னுசிவன். சொன்னசிவன், எண்ணான்சிவன் என்ற சொற்களால் தொகுத்துக் காட்டுவார். மன்னு சிவனாவது நிலைத்த சிவன் என்பது. அதாவது நிலைபெறாது போக்கு வரவும், நினைப்பும் மறப்பும், இன்பமும் துன்பமும் அடையும் உயிர்கள் போலன்றி என்றும் இன்ப வடிவினன் என்றாகி அவனை அடைதலினாலேயே எவர்க்கும் நிலைபேறும், நிலைத்த இன்பமும் உண்டாகு மாதலால் பேரின்பத்திற்குக் காரணம் என்பதூவும், நிலைபேறின்றிய உலகங்கள் தொழிற்படுதற்கு நிலைபேறுடைய பொருளின் துணைவேண்டு மென்பதூவும், எனவே உலகமும் உயிர்களும் சேட்டிக்கச் செய்தற்குரிய சம்பந்தம் அவனுக் குண்டென்பதூவும் அதனால் அவன் பரத்துவமும் பெறப்படும்.

அடுத்து, சொன்ன சிவன் என்பதால் வேதத்துட் புகழ்ந்து சொன்ன சிவன் என்றாகிறது. ஆகவே, தன்னின் மேம்பட்டதொன்றைப் புகழ்தலேயன்றித் தன்னோடொத்ததையாவது கீழ்ப்பட்டதையாவது புகழ்தல் எவ்விடத்தும் இல்லை என்பதூவும், மேம்பட்டதெனவேத் தன்னை அடக்கி நிற்கின்ற பொருள் என்பதூவும் பெறப்படும். வேதத்தைச் சொன்னவன் சிவன் என்பதால் வேதம் அவனுள் அடங்குவதென்றாகும். ஆகவே விதிவிலக்குகளையும் அவற்றின் பயன் களையும் வரையறுத்துக் கூறும் வேதத்தைச் செய்தற்குரிய முற்றுணர்வினன் என்பதூவும் சிற்றறிவுடைய பொருள் ஒன்றை அறிதற்கு முற்றறி வுடைய பொருளின் துணை வேண்டும் என்பதூவும், அதற்குரிய சம்பந்தம் அவனுக்குண்டென்பதூவும், அதனால் அவனது பரத்துவமும் பெறப்படும்.

எண்ணான்சிவன் என்பது அசத்தாகிய உலகை அவன் அநுபவியான் என்பது. இவ்வாறு உலகம் முனைத்துத் தோன்றாமைக்குக் காரணம், அவ்வாறு தோன்றுதற்குரிய மூலமலம் இன்மையாலும், அஃதங்ஙனமின்மையால் அவன் பரிசுத்தன் என்பதூவும், எல்லாப்பொருளும் அவனது வியாபகத்துள் வியாப்பியமாய் நிற்றலால் அவனுக்கு வேறாய்ச் சுட்டியறியுமாறு எப்பொருளுமில்லை என்பதூவும், அசத்தாம் பொருள்களை எண்ணாமைக்குரிய சம்பந்தம் உண்டென்பதுவும், அதனால் அவன் பரத்துவமும் பெறப்படும். இவ்வாற்றால் அவன் பேரின்பகாரணன், முற்றுணர்வினன், தூயதன்மையன் என்ற குணங்கள் அறியப்படுகின்றன. இவ்வாறு உலகையும், உயிர்களையும் அவனது அருள் கொண்டு செலுத்தி நிற்குமிடத்து அவனது சக்தியினின்றும் பிரியாது, அவ்வாறு செலுத்துவதால் விகாரமும் அடையாது, நிர்விகாரியாய் தன்வயத்தனாய் நிற்பன். இத்தகு பேரியல்பெல்லாம் சித்தாந்தநெறி உணர்ந்து, அவனால் தத்துவஞானம் பெற்றார்க்கன்றி விளங்காதென்பார், 'அருட்கண்ணார் கண்ணுக் கிரவிபோல் நிற்குமரன் ஏய்ந்து' என்பார். இவ்வாற்றால் அவனது பெருமையும், நுண்மையும், பேரருளும் பெறப்படும்.

**சிவசத்து :**

சூத்திரம் - 6: தன் உணர்வின் தமி பசுஞான பாசஞானங்களுக்கு (எட்டுவன அசத்தாதலான்) எட்டாமல் நிற்றல்பற்றிச் சிவம் (சித்து) என்பதும், சிவஞானத்தால் உணரப்படுதல் பற்றி இல்பொரு ளாகாது சத்து என்பதும் காட்டப்படுதலால் அவனது பேற்றின் அருமை புலப்படும். ஏனைய உலகப்பொருட்கள் போல அவன் நூல்களைப் படிக்குமிடத்தோ அல்லது அவனைப் பற்றிப் பிறர் மூலம் கேட்குமிடத்தோ புத்தி விருத்தியிற் பரிணமித்துத் தோன்றி ஆன்மாவின் கண் வந்து பொதுவகையானும் உணரவாரான். அநாதி முத்தனாகிய ஒருதன்மையேயாய் மேம்பட்டு நிற்றல் பற்றி எவ்வாற்றானும் சத்தாதலும், எவ்வாற்றானும் சித்தாதலும் உடைய தனி இலக்கணம் உடையான்.

அவனுக்கு எல்லாப் பொருளும் ஞேயமாதலின்றி ஆன்மாவுக்குப் போல் பிரமேயமாதலில்லை. இதை ஏழாம் நூற்பாவில் சத்துப் பொருளிடத்து அசத்துப் பொருள் சுட்டி அறியுமாறு வேறாய் நில்லாது என்றும் அன்னியமிலான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாய் காணான் என்றும் கூறுவார். அவனால் கொடுக்கப்படும் முத்தி இன்பம் வினைக்கீடாய் வரும் சுகதுக்க ரூபமான அநித்திய இன்பமாதலின்றி நித்யாநந்த ரூப பரமசுகமென்னும் சித்தின்பமாம் என்றும் அவனது பரத்துவம் காட்டுவார். ஆன்மாத் தன்னை அறிந்து, பின் தன் உணர்வின் தமியையும் அறிந்து கூடிய வழியும் பராபர பேதத்தானும், தூல சூக்கும பேதத்தானும் அவனுக்கு ஒரு காலத்தும் (முத்தியினும்) சமமாகாதென்பதும் கூறி அவனது பரத்துவம் உணர்த்துவார்.

**சிவகுரு தரிசனம் :**

நாம் இவ்வுலகத்தில் காண்கின்ற பற்பல சமயங்களில் அச்சமயத்தை ஏற்படுத்தியவர் ஒருவராயும், அவர் காட்டுகின்ற கடவுள் ஒருவராகவும், ஞானாசிரியர் ஒருவராகவுமே காணப்படுகின்றனர். ஆனால் நம் மேன்மைகொள் சைவத்தின் கண்ணோ இதை ஏற்படுத்தியவரும் இதன் கடவுளும் ஞானாசிரியரும் ஒருவனாகிய அப்பரம் பொருளே. நாம் பல பிறவிகளில் செய்த தவத்தின் பயனால் அத்தவத்தை முற்றுவித்த காலத்து அம்மன்னவன் அகத்து நின்று உணர்த்துவ தோடு கூட புறத்தும் மானிடப் போர்வையோடு ஞானாசிரியனாய் வருகிறான். அவன் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய ஒருபெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒருபெருஞ் சுடர்முடியும், எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒருபெருஞ் சிங்காதனமும் பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றிப், பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ் செல்வ முழுதுந் தனதேயாகக் கொண்டு அநுபவிக்கும் சுதந்திர முடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொருமையும் பற்றி ஆன்மாவை மன்னவ குமாரனாகவும் ஆகமம் கூறும். மேலும் அவனது திருவடியடைந்த ஆன்மாக்களுக்கு மீட்சியில்லை என்பதை, "சிறைவிட்டு, அலைகடலில் சென்றடங்கும் ஆறுபோல் மீளாது உலைவு இல் அரன் பாதத்தை யுற்று" என்பதால் காட்டுவார். எனவே ஆன்மாக்கள் அவ்விடத்தையுற்று மீளாமைக்கு அதன் சாமர்த்தியம் காணமல்ல, பெருமானுடைய உலைவுஇல் (கேடில்லா) மாற்றமில்லாக் கருணையே காரணமென்பதைப் புலப்படுத்தி, அதுபற்றியே அத்திருவடிகள் அவ்வான்மாக்களை தானாக்கிக் கொள்கிறது என்பதை உணர்த்துவார். பிராரத்தவினையின் வலிமை காரணமாக ஒருவேளை பிரபஞ்சமாம் அசத்து காட்சிப்படுமாயின் ஆன்மாக்களை விட்டு இறைப்பொழுதும் நீங்காத அவனை, உள்ளத்தின் கண்ணாய கள்வனை (கண்ணாகிக் கரணங்கள் காணாமல் நிற்றல் பற்றிக் கள்வன் என்றார்) நினைக்கின் உடனே அக்காட்சியை மாற்றுவான் என அவனது அருட்டிறம் உணர்த்துவார்.

**சிவதரிசனம் :**

ஆசிரியன் (சிவகுரு) அறிவுறுத்த உபதேசப் பொருளினுறைத்துநின்று (சிவத்துவமசி என்றறிவுறுக்குஞ் சித்தாந்த மகாவாக்கியப் பொருளை நாடோறும் பயின்று சிவோகம் எனப்பாவித்து) அட்டகுணம் எட்டுசித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவுபதம் எல்லாம் வெறுத்துச் சாதனத்தின் உறைத்துநின்று, ஞானக் கண்ணினால் சிந்தையில் நாடினால் நிர்க்குணனாய், நின்மலனாய், நித்யானந்தனாய், தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் அற்புதம் போல் ஆனாஅறிவாய் அளவிறந்து தோன்றுவான். இதை "ஈசன் பரம் எவ்வுயிரும் தானாகும் நேசன் உயிர்க்குயிராய் நித்தியமாய்ப் பேசும் அருவுருவம் அன்றாய் அகண்டிதமாய்ப் பொற்பாய் நிருமலமாய் நிர்க்குணமாய் நேரே வருமறிவில் ஆனந்தமாய்ப் பெரிதாய் ஆராயின் நுட்பமதாய்த் தானந்த மானிடத்தே தங்குமவன்" - அம்பலவாணதேசிகர் கூறுவார். இங்கே நிர்குணன், நின்மலன், நித்யானந்தன் என்ற மூன்று சொற்களால் அவனது பெருமையனைத்தும் காட்டுகிறார் அவனை முக்குணரூபமான சகலநிலையில் நின்று குணரூபனாகிய சகலராகவும், அல்லது இதனின் மேம்பட்ட முக்குணபந்தம் (மாயாபந்தம்) நீங்கிய

கலப்புமாயையில் பிரளயாகலராகவும், மாயை கன்மங்களின் சேட்டையொழிந்த சுத்ததத்துவ விஞ்ஞானகலராகவும் அறியப்படுமாறு போல் அறியப்படாது அவ்வுயிர்களுக்கு மேலாய் தத்துவாதீதனாக நிற்பன். எனவே அவனைத் தத்தவாதீத நிலையில் நின்றே (சிவச்சார்பு கொண்டே) காணவேண்டும். அவ்வாறு காணின் இதுவரை நாம் கண்டிராத பேரின்பமாய் வந்து தோன்றுவான். இச்சாதனம் (பிரபஞ்சம் காட்சிப் படாது) நிலைத்தற்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தை பாசம் ஒருவி ஞானக்கண்ணால் சிந்தையில் நாடி சுத்தமானதமாய் ஓதவேண்டும்.

**சிவயோகம் :**

மேலே ஓதுமுறை கூறிய ஆசிரியர் பின் ஓதும்போது நிற்குமுறையையும் கூறுகிறார். வாசனாமலத்தின் காரணமாகத் தெளியாத அக்காட்சி தெளிதற்பொருட்டு சூத்திரம் இரண்டில் அவன் இவனாய் தன்னைக் காட்டாது நின்றது போல் இங்கே இவன் அவனாய் தற்சேட்டை (யானெனதென்னும் செறுக்கு) ஒழிந்து நமக்கெனச் சுதந்திர அறிவில்லை, செயலில்லை என்பதை அநுபவமாய் உணர்ந்து, காண்பான், காட்சி, காட்சிப்படுபொருள் என்ற திரிபுடி நிலை நீங்கி அவனோடு அத்துவிதமாய் அடங்கவே மலவாசனை நீங்கி காட்சி தெளிவாகும். வியாபக அறிவு விளக்கம் ஏற்படும்.

**சிவபோகம் :**

பாடியம் இரண்டாம் நூற்பாவில் முதல்வன் "அவையே தானேயாய்" நின்று தூல ஐந்தொழில் செய்யுமா றுணர்த்து முகத்தானும் பொதுவகையாற் பெறப்பட்ட அத்துவித நிலையை அவ்வதிசூக்கும வைந்தொழிற்கட்படும் விசேடத்தின் மேலிட்டுச் சிறப்பு வகையாற் பெறுவிக்குமுகத்தானே பெத்தம் முத்தி இரண்டினும் ஆன்மாக்களுக்கு வரும் பயனை முதல்வனே உடனாய் நின்று ஏற்றுகொண்டு அவரவர் செய்திக்குத் தக்க பயன் விளைத்து நிற்பன் என்பது விளக்கி, பெத்தர்க்கு வரும் பயனும் உடனாய் நின்று ஏன்று கொள்ளும் முதல்வனே, உடல் பொருள் ஆவி முழுவதும் அவனுடைய உடைமை என தானஞ்செய்தொழித்துப் "பரமே பார்த்திருப்ப" ரன்றிப் "பதார்த்தங்கள் பாரா" ராகிய சீவன்முத்தருக்கு அவருடம்பு கொண்ட வினைப் பயன் ஒருவாற்றானும் அவர்க்குத் தமதாதல் செல்லாமையின், எவ்வாற்றானும் அவனே ஏன்று கொள்கிறான். இதனால் அவனுடைய அருட்டிறம் விளங்கும். மேலே காட்டிய (சிவயோகம்) துரியநிலையில் பெற்ற விளங்கிய அறிவு கொண்டு அறிந்த பொருளில் அழுந்த அழுந்த ஆநந்தம் (சுவாநுபூதி) முற்றுப்பெறும் துரியாதீத நிலையைத் தலைப்படும். இவ்விடத்து ஆன்மஅறிவு இறைவன் பெரும் கருணையை, நாம் அவனை அறியாக் காலத்தும் அவன் நமக்குக் காட்டியும் உடனாயிருந்து நம்பொருட்டு கண்டும் உபகரிப்பதை மீளமீள நினைந்து நினைந்து அயராது நிற்கும். ஆன்மஇச்சையோ அந்நினைப் பால் அவன் மீது அளவற்ற அன்பைச் செலுத்தி உறுகி நிற்கும். ஆன்மசெயலோ அன்புற்ற அத்திருவடியை விடாது ஆர்வமுடன் சிக்கெனப் பற்றி நிற்கும். ஆன்மசெயலோ அன்புற்ற அத்திருவடியை விடாது ஆர்வமுடன் சிக்கெனப் பற்றி நிற்கும். இதுவே பரமுத்தி எனப்படும். நிர்விகற்ப நிட்டையாகும். உடம்போடு கூடிய நிலையில் இந்நிலையெய்தின் பிராரத்த வினை காரணமாக இந்நிலையினின்று மீண்டு சவிகற்ப நிட்டைக்கு வருதலும் உண்டு. அவர்களது மீட்சியின் பொருட்டு இறைவன் அவனது மெய்அடியாரிடத்தும், அவர்தம் விபூதி, கண்டிகை போன்ற திருவேடப் பொருள்களிடத்தும் விளங்கித்தோன்றி, அதில் அவர்கள் சிவத்தைக் கண்டு வழிபட்டு மீளவும் நிர்விகற்ப நிட்டை எய்தற்கு ஏதுவாய் நிற்பன். எனவே இவ்வாறு நம்மைப் பேதித்துப் படிமுறையில் வளர்த்து, தன்னையும், தலைவனையும் உணர்த்திச் சிவமாக்கிய அவனது பெருங்கருணையை மறவாது அடிமைதிறம் பூண்டு அவனுக்கு அடங்க அடங்க இன்பம் வலுப்படும். இவ்வாறு பரம்பொருளின் பரமகாருண்யத்தையும், பரத்துவத்தையும் பாடியம் பலபடிக் கூறுகிறது. அதில் தாலிபுலாக நியாயம்பற்றிச் சிலவே நாம் இதுவரை கண்டது.

# இருவினைவிளக்கம்

- மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன்



(இக்கட்டுரை ஆசிரியர், தமிழ் வித்துவான் தேர்விலும், பேராசிரியர்களுக்கிடையே நடந்த சாத்திரத் தேர்விலும் மாநிலத்திலேயே முதலிடம் பெற்ற சிறப்புக்குரியர். ஆதீன மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் நினைவுப் பரிசில் விருதுபெற்றுள்ளவர். வருகின்ற மகரத் தலைநாள் குருபூசை விழாவில் குரு மகாசன்னிதானம் அவர்களால் ஆதீனப் புலவர் பட்டம் பெற உள்ளவர்கள். பல்வேறு அறிஞர்களுக்கும் ஆசிரியராக விளங்கும் சிறப்புக்குரியவர்கள்)

இறைவன் வேண்டுதல் வேண்டாமை இலான் என்பது வள்ளுவர் வாக்கு. விருப்பு வெறுப்பு அற்றவனாகிய இறைவன் பட்சபாதம் இல்லாதவனாகிய இறைவன், பேரருள் உடையவனாகிய இறைவன், உயிர்களுக்கு நன்மை புரிவதையே நாட்டமாக உடைய முதல்வன். கேவல நிலையில் (ஆணவம் மட்டுமே கூடிய நிலையில்) உள்ள ஆன்மாக்களைப் பிறப்பிக்கின்றான் என்றால் எல்லா உயிர்களும் ஒரே மாதிரியான பிறப்பை அடைய வேண்டும் அல்லவா?

**கன்மம் என்றால் என்ன:**

அப்படியில்லாமல் உலகில் உயிர்களின் வாழ்வில் பலவித ஏற்றத் தாழ்வுகள் காணப் படுகின்றன. செல்வ மிகுதி, வறுமை, உயர்ந்த பதவிகள், எதுவும் இன்மை, நீண்ட ஆயுள், குறைந்த ஆயுள், உயர்ந்த மனிதர் தேவர் போன்ற பிறவி, தாழ்ந்த விலங்கு, பறவை, புழு முதலிய பிறவி என உயிர்களிடத்திலே காணப்படும் வேற்றுமைகளுக்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்தால் அதுவே கன்மம் எனப் புலப்படும்.

கேவல நிலையில் உள்ள உயிர்களுக்கு இறைவன் தனது கருணையால் சூக்கும உடம்பினைத் தருவான். இது குருடனுக்குக் கோல் கொடுப்பது போல். இந்த சூக்கும தேகம் கன்மம் காரணமாக வந்ததன்று; இந்த தேகம் எல்லா உயிர்களுக்கும் ஒரே மாதிரியாக இருப்பது. முத்தி அடையும் வரை எத்தனை பிறவிகளை உயிர்கள் எடுத்தாலும் இந்த தேகம் ஒன்றாகவே உயிருடன் இருந்து முத்தி அடையும் போது நீக்கமுறும். இப்படிப்பட்ட ஒரு தன்மையான தேகத்தை எல்லா உயிர்களுக்கும் சமமாக இறைவன் தருவதிலிருந்து முதல்வன் எல்லா உயிர்களுக்கும் சம நோக்குடையோன் என்பது வெளிப்படும்.

இறைவன் அருளால் சமமான சூக்கும உடம்பைப் பெற்ற எல்லா உயிர்களும் பின்னர் ஏற்றத்தாழ்வுகள் அடைவதற்குக் காரணம் என்ன? அதுவே கன்மம் ஆகும்.

**மூல கன்மம் :**

கன்மம் என்பது முயற்சியின் விளைவு அல்லவா? முயற்சி செய்த பிறகு உண்டாகின்ற கன்மத்தினால் ஏற்றத்தாழ்வுகள் உண்டாவது பொருந்தும். முயற்சி என்பது உடம்பின் மூலமாகச் செய்யப் பெறுவது - இன்னும் சொல்லப் போனால் மனம் - வாக்கு - காயம் என்ற மூன்றாலும் செய்யப் பெறுவது. மனம் - வாக்கு - காயம் என்ற மூன்றும் தூல உடம்புக்குரியவை. முயற்சியாகிய கன்மம் முத்தியா? முயற்சி செய்தற்குதவும் தூல உடம்பு முந்தியா? என்ற வினா இங்கு எழுகிறது.

இந்த வினாவிற்கு ஒரே விடை கன்மந்தான் முந்தி. கன்மத்தால் உண்டாகின்ற பிறவி (உடல்) வேறுபாடுகள் பிந்தி என்பதே. உடலிருந்தால்தானே முயற்சியாகிய கன்மம் செய்ய இயலும். உடலே இல்லாத உயிர்கள் கன்மம் செய்ய வாய்ப்பில்லை. ஆகவே கன்மத்துக்கேற்ப ஏற்றத் தாழ்வான பிறவிகள் உயிர்க்கு வர வாய்ப்பில்லை என்பது இங்கே தோன்றும் ஐயமாம்.

இறைவன் வேண்டுதல் வேண்டாமை இலான் என்பது போல உயிர் அநாதியே வேண்டுதல்

வேண்டாமை உடையதாக உள்ளது என்பதை இங்கு அறிந்து கொள்வது நல்லது. இறைவன் விருப்பு வெறுப்பற்றவன். உயிர் விருப்பு வெறுப்புடையது. இந்த விருப்பிலாத இறைவனிடம் இல்லாமைக்கும் உயிரினிடத்தில் இருப்பதற்கும் என்ன காரணம்?

அந்த காரணம் உயிரைப் பற்றி நிற்கின்ற அறியாமை என்கின்ற ஆணவமே. ஆணவத்தின் பிடியில் கிடக்கின்ற உயிர் தன்னைப் பற்றி நிற்கின்ற ஆணவத்தின் வன்மை மென்மைகட் கேற்ப விருப்பு வெறுப்புடையதாகிறது.

விளக்கு ஒளிதருவது. ஆனாலும் திரி கிட்டம கட்டிக் கொள்ளும்போது கிட்டத்தின் தன்மைக் கேற்ப ஒளிமங்குகிறதன்றோ அது போலவே அறிவு வடிவாகிய உயிரை அறியாமையாகிய ஆணவம் அநாதியே பற்றி நிற்கின்ற காரணத்தினால் அதற்கேற்ப உயிரினிடத்தில் விருப்பு வெறுப்பு உண்டாகிறது.

இந்த விருப்பு வெறுப்பு சித்தாந்த்தில் 'மூலகன்மம்' என்று கூறப்படும்.

இந்த மூலகன்மமாகிய விருப்பு வெறுப்பைப் பின்னே ஆகாமிய விருப்பு வெறுப்புக்குத் தொடர்ச்சி செய்து வைப்பது இறைவனால் அளிக்கப்படும் சூக்கும உடம்பு.

சூக்கும உடம்பு பெற்ற உயிர் தன் விருப்பு வெறுப்பின் தன்மைக்கேற்ப முதற்பிறவியைப் பெறுகிறது. அப்பிறவியால் விளையும் ஆகாமிய வினைக் கேதுவாகிய விருப்பு வெறுப்பு தொடர்கிறது. அதனால் கன்மம் உருவாகிறது.

கேவல நிலையில் உள்ள உயிரின் விருப்பு வெறுப்பிற்கும், சகல நிலையில் உள்ள உயிரின் விருப்பு வெறுப்பிற்கும் வேறுபாடு உண்டு.

குழந்தை பசிக்கு உணவாகிய பாலை வேண்டி அழுகிறது. கிழவரும் பசிக்கு வேண்டிய உணவின்பொருட்டு அழுகிறார். இந்த இரண்டுக்கும் வேறுபாடு உண்டு. குழந்தை பசி என்பது இன்னது என்றே தெரியாமல் அழுகிறது. கிழவரோ பசியால் இத்துன்பம் நேர்கின்றது என்று உணர்ந்தே அழுகிறார்.

குழந்தையின் பசித்தன்மைக்கேற்ப அதனைத்தான் உணர்ந்து பால் தருகிற தாய்போல மூலகன்மமாகிய உயிரின் விருப்பு வெறுப்புக்கேற்ப இறைவன் தக்க தூல உடம்பை உயிர்க்குத் தருகிறான். கிழவர் பசி என்பதை உணர்ந்தே அழுகிறார். ஆகையால் பசிக்கேற்ற உணவையும் அவரே தேடி அடைகின்றார். தூல உடம்பு எடுத்த உயிர்கள் நம்முடைய விருப்பு வெறுப்புக்கேற்ப மன-வாக்குக்-காயங்களினால் வினைகளைச் செய்து அதற்கேற்ப பிறவிகளை அடைகின்றன.

உயிர் அறிவற்கு மறுதலையாக அறியா மையைச் செய்யும் ஆணவம் ஏதுவாக அதனால் உயிரிடத்து உளதாகும் விருப்பு வெறுப்பாகிய மூலகன்மம் விளைகிறது. இம்மூலகன்மத்திற்கேற்ப சூக்கும உடம்பிலிருந்து தூல உடல் இறைவனால் தரப்படுகிறது. இத்தூல உடலில் இருந்து உயிர் மன-வாக்குக் காயங்களினால் செய்யும் முயற்சியாகிய வினையின் விளைவே கன்மம் எனப்படுகிறது. இந்தக் கன்மமும் பிறவியும் காரண காரியத் தொடர்ச்சியாய்த் தொடர்கிறது.

ஆணவ மலம் - இயற்கை மலம். அது சகசமலம் எனப்பெறும் மூலமலம் என்றும் சொல்லப்பெறும். அதனை நீக்குதற் பொருட்டு கன்ம மலமும் மாயாமலமும் உயிர்களுக்கு உண்டாயின. உயிர் செய்யும் முயற்சியின் விளைவு கன்மமலம். இறைவன் கருணையால் உயிர்களுக்கு அளித்த உபகாரம் மாயாமலம் என அறிக. இவ்விரண்டு மலங்களும் பின்னர் ஏற்பட்டவை. ஆதலின் ஆகந்துக மலம் எனப்பெறும்.

ஆணவமலம் நீங்கும்போது இவையும் உயிரைவிட்டு நீங்கும்.

ஆணவமலம் உயிரை நேரே தடைசெய்து அறியாமையைச் செய்வது அது பிரதிபந்தம் எனப்பெறும். ஆணவத்தால் ஏற்பட்ட பந்தமாகிய விருப்பு வெறுப்பின் பயனை உயிர்களுக்கு அடையும்படி கன்மம் செய்து நிற்றலால் கன்மம் 'அநுபந்தம்' எனப்பெறும். மாயை, கன்மத்தால் தொடர்புபடுத்தப்பட்டு ஆன்மவோடு கூடுவதால் 'சம்பந்தம்' எனப்பெறும்.

**கன்மம் அநாதி ஆமாறு :**

உயிர்கள் இயற்கையில் தூய்மை உடையனவாய் இல்லை; இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன், இயல்பாகவே பாசங்களோடு கூடித் தூய்மை இழந்து நிற்றலால் உயிர்களுக்குக் கன்மம் முதலா? பிறவியாகிய மாயை முதலா? என்ற கேள்வி எழ இடம் இல்லை.

***உயிர் உண்டாவே உளது மலம்; மலம் உளதா ஒழிந்த எல்லாம் நெல்லின் முளை, தவிடு, உமி போல் அநாதியாக நிறுத்திடுவர்'***

என்ற உமாபதி சிவாசாரியார் கருத்துப்படி கன்மமும் அநாதியாகும். கன்மம் காரியமாய்ப் பின் வினையினும் அதற்குரிய காரணம் ஆணவ மிதலன் அது முன்னதே உயிரிடத்துள தாதலன் காரண வகையால் கன்மமும் அநாதி எனப்பெற்றது.

ஆணவத்தோடு ஒப்ப அநாதியாகச் சொல்லப்பெறும் கன்மம் மூலகன்மமே. ஆணவ பந்தத்திற்கேற்ப மூலகன்ம பந்தம் உயிர்களுக்கு உளவாகும். சூக்கும உடம்பு பெற்ற உயிர்கள் ஆணவ பந்தம் சிறிது நீங்கப் பெற்று தம் மூலகன்ம பந்தத்திற்கேற்ப அறிவு இச்சை செயல்கள் விளங்கப் பெறும். அவ்வாறு விளங்கப் பெற்ற போது உயிர்களுக்கு உண்டாகும் விருப்பு வெறுப்புகளே நல்வினையும் தீவினையுமாய் முடியும். அவ்வினைக் கேற்ப இறைவன் தூல உடம்பைப் படைத்துத் தருவேன்.

**கன்மம் பெயர்பெறும் முறை :**

உயிர்கள் சூக்கும உடம்பைக் கொண்டு நினைப்பவற்றைத் தூல உடம்பைக் கொண்டு செய்து நல்வினை தீவினைகளை ஈட்டுமே. அவற்றின் பயனாகிய இன்பத் துன்பங்களை அனுபவித்தல் செய்யும். செய்யும்போது நல்வினை, தீவினை எனவும் சேர்க்கும்போது புண்ணியம், பாவம் எனவும், அனுபவிக்கும்போது சுகம், (இன்பம்) துக்கம் (துன்பம்) எனவும் கன்மம் பெயர்பெறும்.

**கன்ம வகை :**

கன்மம் மனம்-வாக்கு-காமம் என்ற மூன்றாலும் செய்யப் பெறும். மனத்தாற் செய்யப் பெறுவன மானதம். வாக்கால் செய்யப் பெறுவன வாசிகம். காயத்தால் (உடம்பால்) செய்யப் பெறுவன காயிகம் எனப்பெறும்.

மனத்தால் செய்யப்பெறும் நல்வினை, அன்பு, அருள், பொறுமை, நீதி, நடுவு நிலைமை முதலிய பற்றிய நல்ல நினைவுகளாகும். தீவினை, அழுக்காறு, அவா, வெகுளி காரணமான தீய நினைவுகள், வாக்கால் செய்யப்படும் நல்வினை, வாய்மை, பாராட்டு, இன்சொல், உறுதிச்சொல் முதலியன. தீவினை, பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் - உடம்பால் செய்யும் வினைகளில் நல்வினை, வகாரம், ஈகை, இன்னாசெய்யாமை, புலால் உண்ணாமை முதலியன - தீவினை. கொலை, களவு, கள், காமம், புலால் உண்டல் முதலியன. பிறவற்றையும் இவ்வாறே கண்டு கொள்க.

கன்மம் அறிந்து செய்வன, அறியாது செய்வன என இருவகைப்படும். புத்திபூர்வம், அபுத்தி பூர்வம் எனப்பெறும் அறியாது செய்யினும் அது வினையாகும்.

*"மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்*
*அறம் சூழும் சூழ்ந்தவன் கேடு"*

என்ற குறள் அபுத்தி பூர்வ வினையாயினும் அறம் உரிய பயனைத் தருதலின் தப்பாது எனக் கூறுதல் காண்க. அமுதமும் நஞ்சும் அறிந்து உண்ணினும், அறியாது உண்ணினும் தமக்குரிய பயனைத் தராதொழிதல் இல்லையன்றோ. அறியாது செய்த பாவத்தாலும்; புண்ணியத்தாலும் தீமை, நன்மை அடைந்தோர் வரலாறுகள் பல புராணங்களில் உளவாதலை உணர்க.

அறியாது செய்யும் வினைகள் மென்மை உடையன அதிகம் நலியா. அறிந்து செய்யும் வினைகள் வன்மை உடையன பெரிதும் நலியும் என்பதே அவற்றின் வேறுபாடாகும்.

அறிந்து செய்யும் வினைகளை உயிர்கள் ஓரளவு முற்றுப் பெறச் செய்யும். அறியாது செய்யும் வினைகள் ஓரளவே செய்தொழியப்பெறும். முற்றுப் பெறச் செய்யா என இவற்றின் வேறுபாடும் அறிதல் தகும்.

அறியாது செய்யப்பெறும் பாவங்கள் கழுவாய் உடையனவாதலும் அறிந்து செய்வன கழுவாய் இன்றி நிலைபெறுதலும் உடைமையும் அறிதற்பாற்று.

இருவினையாகிய கன்மம் செய்யும்பொழுது தூல கன்மம் எனப்பெற்றது. பின்னர்ச் சஞ்சிதமாம் துணையே சூக்கும கன்மம் என்றாகும்.

**மூவகை வினை :**

தூலமாகச் செய்யப் பெறும்போது 'ஆகாமியம்' எனப் பெறும். அதாவது ஏறுவினை. அதுவே சூக்குமமாய் நிலைபெறும்போது 'சஞ்சிதம்' எனப்பெறும் தொகுவினையாம். மீண்டும் இன்ப துன்பங்களாய் அனுபவிக்கும்போது, 'பிராரப்தம்' எனப்பெறும் நுகர்வினையாகும்.

நல்வினை, தீவினை எனப்பெற்று இரு வகையாயினும், விரியால் கணக்கிறந்தன கன்மம், சடமாயும் பலவாயும் உள்ள இவை அனைத்தும் காரியம். தோற்றமும் அழிவும் உடையன. மூல கன்மமே உயிரோடு ஆணவம்போல ஒட்டிநின்று காரண கன்மமாக தோற்றமும் கேடும் இல்லாமல் நிற்கும். அதுபற்றியே 'கன்மமும் மூலம் காட்டிக் கான்மிய மலமாய் நிற்கும்' என்றார் ஆசிரியர்.

**ஊழ் முயற்சி :**

உயிர்களுக்கு வரும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணம் எது? என்று ஆராயும் பொழுது அது கன்மமே என்பதில் வந்து நிற்கும். இன்ப துன்பங்களுக்குக் காரணம் முயற்சியும் முயற்சியின்மையும் என்று உண்மை உணராது உலகியல் பற்றிக்கூறுவார் உளர் ஆயினும் முயற்சி உடையார் எல்லாம் செல்வம் உடையோராய் இன்பம் அனுபவித்தலும், முயற்சி இல்லார் எல்லாம் வறியராய்த் துன்பம் அனுவித்தலும் ஒருதலையாக வேண்டும். அவ்வாறின்றி அவை மாறியும் நிகழ்தல் கண்கூடாக உலகில் காண்கின்றோம். ஆதனால் 'வினை' உண்டு என்பது ஒருதலை என்க. எனவே ஊழ் (வினை) முதற்காரணம், முயற்சி துணைக் காரணம் என்று கொள்ளலாம். முதற்காரணம் இல்வழி துணைக்காரணம் போதிய பயனைத் தராது என்பதை,

*"தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன் மெய் வருத்தக் கூலி தரும்"*

என்னும் குறளிற் காண்க.

**கன்மம் நாசோற்பத்தி :**

செய்வினையாகிய ஆகாமியம் சேர்ந்து தொகுவினையாகிய சஞ்சிதமாய்க் கிடப்ப, அவற்றுள் பக்குவப்பட்டவை நூகர் வினையாகிய பிராரப்தமாய் வர. அவற்றிற்கேற்ப பிறவிகள் உயிர்கள் அடைந்து அனுபவிக்கும். அவ்வாறு அனுபவிக்கும் பொழுதே உண்டாகின்ற முனைப் பின் காரணமாக புதிய ஆகாமிய வினைகள் உண்டாகுமானால் அவை சஞ்சிதத்தில் சேரும். இதனால் கன்மம் 'நாசோற்பத்தி' உடையதாகும். வினையால் பிறப்பும், பிறப்பால் வினையும் தொடர்ந்து வருதலின் கன்மத்துக்கு 'பிரவாக நித்தம்' என்றும் பெயர் உண்டு.

**வினை உயிர்களை அடையுமாறு :**

சஞ்சித வினைகள் நுகர்வினையாக வரும்பொழுது செய்த முறையிலே வரும் என்பது இல்லை. முன்செய்தது பின்னும், பின்செய்தது முன்னும் அவற்றின் வன்மை மென்மைகளுக்கேற்ப வரும்.

வினை, விதி, பால், ஊழ் என்பன ஒருபொருள் உடையன. கன்மம் என்பது செய்யப் படுதலின் பெற்ற பெயர்.

வினைகள் சடமாதலின் அவை தாமே உயிரைச் சென்று அடையா. உயிர் சிற்றறிவு உடையதாய் ஆணவத்தால் மறைப்புண்டிருத்தலின் தாமே தாம் செய்த வினைகளை அறிந்து எடுத்து நுகருமாறில்லை. அன்றியும் உயிர்கள் இன்ப துன்பங்களை உலகில் அனுபவித்தலைப் பார்க்கும்போது தாமே வினைகளை எடுத்து நுகர்ந்தால் இன்பம் தரும் நல்வினைகளைத்தானே எடுத்து நுகரும் துன்பம் தரும் தீவினைகளை எடுத்துக் கொள்ளாவன்றோ. இன்ப துன்ப நுகர்ச்சி இரண்டும் உயிர்கள் அடையக் காண்டலின் உயிர்கள் தாமே வினையை எடுத்து நுகருமாறில்லை என்பது காட்சியளவையானும் அறியக் கிடத்தல் உணர்க.

எனவே வினையை அறிந்து உயிரோடு கூட்டுவிப்பான் இறைவனே. அவனும் 'நியதி' தத்துவத்தின் மூலம் அதனைச் செயற்படுத்துவன் என்று சித்தாந்தம் கூறும்.

தொல்காப்பியம் ''பால்வரை தெய்வம்'' என்று கூறியதும் இதனையே என அறிக. "ஒன்றி உயர்ந்த பால தாணையின்" என்று கூறிய நூற்பாலில் பால்வரை தெய்வமும் ஆணையின் வழிச் செயற்படுவது என்பதைக் குறிப்பால் புலப் படுத்தியுள்ளமை அறிக.

எனவே இறைவன் ஆணைவழி நிகழும் 'நியதி'யின் மூலம் உயிர் தாம் தாம் செய்த வினைப்பயனை நுகரும் என்பது அறிக.

வினையின் பயனைக் கூட்டுவிப்பான் இறைவன். ஆதலன் ஒருவன் பிறரது தீவினைப் பயனைத் தான் ஏற்றுக் கொள்ள விரும்பினும் தன் நல்வினைப் பயனைப் பிறர்க்குத் தர விரும்பினும் இறைவன்; ஆணை அவற்றை முற்றுலிக்கும் என்பதும் உணர்க.

**கன்மம் செயற்படுமாறு :**

உயிர்கள் எண்ணிறந்தன. அவைகள் படைப் புறும்போது அவைகட்கு ஏற்ற உடல்களை மாயா காரியம் கொண்டு இறைவன் கூட்டுவன். அவ்வுடல்களில் உயிர்கள் இருந்துகொண்டு பல்வேறு வகையான நுகர்வுகளை அடைவதற்கு ஏற்றவாறெல்லாம் கன்ம மலமானது புத்தி தத்துவத்தே சூக்குமப் பட்டுக் கிடந்து பின்னர்க் காரண மாயையிலே கிடந்து, பின்பு உயிர்களிடம் வந்து சேர்கிறது. எனவே நாம் செய்யும் வினையின் தொடர்ச்சி நம்மிடையே இருந்து வரும்படி இறைவன் ஆணை செய்து வருகிறது என்பது சித்தாந்த உண்மையாகும். உயிர்கள் கேவல அவத்தையிலிருந்து நீங்கியது முதல் முத்தி அடையும் வரையிலும் இடையீடின்றித் தொடர்ச்சியாய் வருவது கன்மம்.

கன்மம், மனம், வாக்கு, காயம் என்ற மூன்றினாலும் ஆறு அத்துவாக்களின் இடமாக செய்யப்படுவதாகும். அது தூலகன்மம் ஆகி ஆகாமியம் எனப் பெயர் பெறும். பிறகு அது பக்குவமாகும் பொருட்டுச் சூக்கும கன்மாகிப் புத்தி தத்துவத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு மாயையிலே கிடக்கும். அப்போது அது சஞ்சிதம் எனப் பெயர் பெறும். அதற்குப் பிறகு அது அதி சூக்கும கன்மம் எனப்பெறும் பிராரத்தம் ஆகும். இந்தப் பிராரத்தம்தான் எடுத்துள்ள பிறப்பில் அனுபவிக்கக் கொள்ளப்பட்ட பக்குவப்பட்ட கன்மம்.

**கன்ம அனுபவம் :**

இது அனுபவத்துக்கு வரும்போது சாதி-ஆயு-போகம் என்னும் மூன்று விதங்களுக்குக் காரணமாகும். இதை சனகம்-தாரகம்-போக்கியம் என்பர். கனகம் உயிர்கட்கு உரிய உடம்பு முதலியவற்றை உண்டாக்குவது. தாரகம்-இவ்வளவு காலம் இவ்வுயிர் இவ்வுடம்பின்கண் நிற்றற்குரியது என்பதாகும். போக்கியம் என்பது விளய ரூபமாகும். அனுபவிக்கப்படும் விளயங்கள். இப்போது எடுத்துள்ள உடம்பில் அனுபவிக்கக் கூடிய இன்ப துன்பங்களுக்கும் காரணமான செல்வ வறுமை, உயர்வு இழிவு, இன்ப துன்பம் இப்பிறப்பில் செய்யும் முயற்சியால் விளைந்தன அல்ல. சூக்குமமாய்க் கருவினுள் அமைந்து கிடந்தன. அவைகள் நம் முயற்சியால் இப்போது நம்மை வந்து கூடுகின்றன. ''ஊழ் அல்லது உணவாகாது'' என்ற ஆசிரியர் வாக்கும் காண்க.

**அனுவத்தில் ஆகாமியம் :**

நாம் இப்போது மேற்கொள்ளும் முயற்சி பிராரப்த கன்மத்தை ஊழின்வண்ணம் நம்மை அனுபவிக்கச் செய்வதோடு ஆகாமியத்தை உண்டாக்கிச் சஞ்சிதத்தைச் சேரவும் செய்கிறது. முயற்சி செயல்வகையால் பிராரப்த அனுபவத்தைச் செய்கிறது. 'நான் செய்தேன்' என்னும் கருத்து வகையால் சஞ்சிதமாகி மேலைக்கு வித்தாகிறது. பிராரப்த கன்மம் புசிப்பாக வரும்பொழுது தைவகம், பவுதிகம், ஆன்மிகம் என்கின்ற மூன்று தன்மைகளாக வந்து சேரும் இயல்பினது.

**ஆதி தெய்விகம் :**

கருப்பை வேதனை, பிரசவ வேதனை, முப்புத் துன்பம், அறிவின்மையால் வரும் சங்கற்ப வேதனை, மரண வேதனை, நரகத் துன்பம்.

**ஆதி பவுதிகம் :**

குளிர், மழை, கோடைவெயில், காற்று, மின்னல், இடி, வெள்ளம், நில நடுக்கம் எனச் சடப்பொருள் காரணமாக வருவன.

**ஆத்தியான்மிகம் :**

உடம்பைப்பற்றி, மனத்தைப்பற்றி என இருவகை. சடத்தோடு கூடிய சேதனம் பற்றி வருவன. உயிர்ப்பொருளாகிய விலங்கு, பறவை, மனிதர் முதலியவர்களால் ஏற்படுவதை இதில் அடக்கலாம். இம் மூன்றாலும் நன்மை, தீமை இரண்டும் நிகழும்.

இவ்வாறு நாம் செய்த வினைகள் உயிர்ப்பொருள், உயிரல் பொருள் என இரு வகையாலும் வருகிறபொழுது அவற்றுக்குக் காரணம் அப்பொருள்கள் அல்ல நம் ஊழ் தான் என்றுணரின் வினை புசிப்பாய்ச் செல்லும். அப்பொருள்கள் காரணம் என்று அவற்றின் மேல் செற்றம் கொள்ளின் அது ஆகாமியமாய் மீண்டும் ஒரு புது வினையாக ஆகும்.

**வினையின் பல்வேறு வகை :**

உயிர்கள் பல்வேறு வகையான நல்வினை, தீவினைகளைச் செய்து கொண்டே உள்ளன. நல்வினையாயினும் அகங்காரத்தால் செய்யப்படின் தீவினையாக மாறிவிடும். மேலும்-உலகம் -வைதிகம்-அத்தியான்மிகம்-அதிமார்க்கம்-மாந்திரம் எனக்கூறும் வினைகளும் உள.

உலகவினை என்பது பொதுநல உதவி. கிணறு, குளம், சோலை, பள்ளிக்கூடம் - இத்தன்மச் செயல் நிவிர்த்திகலையில் அடங்கிய புவன போகம் புசிப்பு-வைதிக வினை-வேள்வி முதலியன. பிரதிட்டா கலையில் அடங்கிய புவன போகங்கள். இந்த இரண்டும் அசுத்தகன்மங்கள் எனப்பெறும்.

**அத்தியான்மிகம் :**

வேத நெறியால் செய்யப்படும் பூசனை முதலியன. வித்தியாகலையில் அடங்கிய புவனபோகம் மிச்சிரகன்மம்.

**அதிமார்க்கம் :**

இயம நியமம் முதலிய யோகப்பயிற்சி சாந்தி கலையில் அடங்கிய புவனபோகம்.

**மாந்திரம் :**

சுத்த மந்திரக் கணிப்பு ஞானப்பயிற்சி.

**சாந்தியதீதகலை :**

சுத்த கன்மம்.

எவ்வினையும் செய்பவனது கருத்துக்கும் முயற்சிக்கும் கட்டுப்படாமல் இறைவன் ஆணைக்கக் கட்டுப்பட்டு விளைகின்றன என்பது உணரத்தக்கது.

**வினைபோக வழிகள் :**

வினை மனம்-வாக்கு-காயங்களினால் செய்யப்படுவன ஆயினும் ஒன்றால் செய்யப்பட்ட வினையை அதனாலேயோ வேறொன்றாலேயோ செய்யப்படும் வினையால் போக்க இயலாது. புண்ணியம் செய்தால் பாவத்தைப் போக்கி விடலாம் என்ற மக்கள் கருத்து தவறானது - இரண்டையும் தனித்தனியே அனுபவித்துத்தான் போக்க வேண்டும் என்பது நியதியாகும்.

எனினும் மனம் தளர வேண்டாம் என்று வைதிக சைவநெறி உபாயம் கூறுகிறது. நன்றிகோறல் என்ற கொடிய வினையைத்தவிர மற்றவற்றைப் பிராயச்சித்தத்தால் (கழுவாயால்) போக்கலாம் என்று நூல்கள் கூறுகின்றன. பிறிதொரு நல்வினை சிவத்தின் பெயரால் செய்யப்படும்போது பற்றற்ற நல்வினை கன்மக் கொடுமையைப் போக்குகின்றது. கன்ம அனுபவத்தை இப் பிராயச்சித்த முறை கெடுப்பதால் கன்மம் வலுவற்று விடுகின்றது. மற்றொரு பலசாலியின் துணை கொண்டு ஒருவன் தன் நித்திய விரோதியை வெல்வது போன்றதாகும். இவ்வாறு வலுவற்ற கன்மம் வறுபட்ட வித்துப் போலாகும். அனுபவத்துக்கு வரும் தகுதியை இழந்து விடுகிறது. வினைக்கு வினை எனது நோய்க்கு மருந்து என்பது போலப் பகைப்பொருள் தொடராகும்.

இதுகொண்டு இப்பர எல்லாவற்றுக்கும் செய்து கன்ம அனுபத்திலிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என எண்ணக்கூடாது. தண்ணீரில் விழுந்து தத்தளிக்கும் நீச்சல் தெரியாத ஒருவனை இன்னொரு நீச்சல் தெரியாதவன் தண்ணீரில்

குதித்துக் காப்பாற்றுதல் இயலாது. பலசாலியும் நீச்சல் தெரிந்தவனும் கருணை உடையவனும் ஆகிய ஒருவன் தூக்கும் விதத்தில் தூக்கி வெளியே கொண்டு வந்தால் அவன் உயிர் பிழைக்கலாகும். அதுபோல நம்முடைய தீவினைப் பயனைப் போக்குபவர் தான் செய்யும் பிராயச்சித்தச் சடங்கின் பயனைத்தான் அனுபவிக்கக் கருதாத நல்ல உள்ளம் உடையவராக இருத்தல் வேண்டும். அதாவது சிவார்ப்பண முறையை உள்ளவாறே செயல் முறையில் மேற்கொள்பவராக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட ஓர் ஆசாரியர் கன்ம மூலத்தை இன்னது எனத் தெரிந்துணரும் ஆற்றல் உடையவராகவும் கன்ம அனுபவத்துக்கும் அஞ்சும் நம்பால் முழு இரக்கம் உடையவராகவும் இருக்க வேண்டும்.

ஆகமங்களிலே இன்ன பாவத்துக்கு இன்ன பரிகார முறை எனக் கூறப்பட்டிருப்பதை நன்கறிந்து அக் கழுவாயை ஆகமம் சொல்லும் முறையிலே ஒழுங்காகச் செய்து வைப்பராயின் அந்தப் பலன் சிவத்தின் ஆணையால் நம்பால் மேவும். பாவ கன்ம நீக்கம் ஏற்படும். ஆசார்யன் சொல்லும் முறையில் கிரியைகளை நாம் உடனிருந்து செய்தல் வேண்டும். மந்திரவாதியின் மந்திர உச்சாடனத்தால் பேய் பிடியுண்டவன் பேயினிடமிருந்து நீங்குவது போன்றது இது.

உடனிருந்து ஆசார்யன் சொன்னமுறையிலே கழுவாய் செய்யின் கன்ம நீக்கம் ஏற்படும். அப்படி உடனிருந்து செய்ய இயலாத நிலையில் ஒருவன் இருந்தால் அவனுக்கும் கன்ம நீக்க வழி உண்டு. கருணையும், பலப் பிரயோசனம் எதிர்பாராத தன்மையும், ஆகம நெறி அறிதலும் உடைய ஒருவரிடம் கழுவாய்ச் செயலை முழுதும் ஒப்படைத்து, அதற்கான கைமாற்றைச் செய்திடினும் பாவம் போக்கிடல் இயலும். இவ்வகையில் ஒரு பொருளை விலை கொடுத்து வாங்கிக் கொள்வது போலச் செய்வது அரிதின் இயல்வது. இடைநிற்பார் அகப்படுதல் அருமைப் பாடு உடையது. வகைப்பட்ட நல்வினையை ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழி நினைந்து நோய்காண் பொழுதின் அறஞ்செய்வாரைத் தேடுதல் பற்றி நூல்கள் கூறும்.

மந்திரம், கிரியை, திரவியம் முதலியவற்றால் கிரியைகளில் ஏற்படுகின்ற தவறுகளை நீக்கச் சொல்லும் கிரியை வாசகங்கள் இவ்வுண்மையை உணர்த்துவனவாம்.

புத்தி பூர்வமாகச் செய்யப்பட்ட பாவத்தை அபுத்தி பூர்வமான புண்ணியம் அவர்களுக்குத் தெரியாமலே பாவக் கழிவு, நல்வினைப் பேறு வாய்க்கும் முறையில் அமைந்து போக்கிவிடுதல் உண்டு.

ஈட்டப்படும் கருமம், பக்குவப்படும் கருமம் இரண்டில் ஈட்டப்படும் வினை வித்துப் போல்வது, பக்குவப் படும்வினை முளை போல்வது வித்து நிலையிலேயே கருமக் கேடு நிகழின் முனையைப் பற்றிய கவலை இல்லை.

நமக்குத் தெரியாமல் எத்தனையோ நல்வினைகள் நம்மால் நடைபெற்று வருகின்றன. அவற்றின் பக்குவப்படாத வித்து நிலையில் உள்ள ஆகாமியம் சஞ்சிதத்தைப் பெருக்க ஒட்டாதபடி அழிந்து போகின்றது. இதை உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாசத்தில் "பண்ணாதும் பலிக்கும்" என்று சொல்லியுள்ளார்.

இப்படி எல்லாம் கழித்தாலும் அனுபவிக்க வேண்டிய கனம மிகுதியாக இருந்தே தீரும். வித்தைக் கெடுத்து விளைவை அழிக்கலாம் குற்றி வைத்த அரிசியைச் சோறாக்கி தின்று தீர்க்கலாம். ஆனால் களஞ்சியத்தில் சேமித்து வைத்துள்ள தானியத்தை அழித்துவிட மனம் வராது; மறுபடியும் கொஞ்சம் கொஞ்சமாக அரிசியாக்கித் தின்றே தீர்க்க வேண்டும். இப்படி நமக்கு பிராரத்துக்கேற்ப பிறப்பு ஏற்பட்டே தீர்கிறது.

இறைவன் ஆணை நமது கன்மக் கழிவுக்கென்றே பல வழிகளை அமைத்துள்ளது- பிராரப்த அனுபவம், சொர்க்க நரக அனுபவம், பிராயச்சித்த சடங்கு செய்கை, அபுத்தி பூர்வ ஏற்பாடு இவை எல்லாம் கன்மக் கழிவு வழிகளே. இப்படி எல்லாம் இருந்தாலும் கன்மங்கள் கழிவு அடைவது முற்றும் அன்று. பெரும்பாலும் இவ்வாறு கழியலாம். இப்படியும் தொலைக் கமுடியாத கன்மங்கள் பிராரத்தமாகி அனுபவித்தே தீர வேண்டுமே. வேறு வழி இல்லை.

இனி இக்கன்மத்தை திட்ட கன்மம் - அதிட்ட கன்மம் - அந்மத கன்மம் (திட்டா திட்ட கன்மம்) என்று மூவகையாகப் பகுத்துக் காண்பதும் உண்டு.

திட்ட கன்மம் என்பது மருந்துண்ணுதல், அரச தண்டனை, நாம் ஒன்றும் செய்யாமல் உள்ளபோதே பகைவர் நமக்கு விளைக்கும் துன்பம், ஆபிசார மந்திர ஏவல் முதலியவற்றால் இப்பிறப்பில் நம்மால் அனுபவிக்கப்படுவது ஆகும்.

அதிட்ட கன்மம் என்பது சொர்க்க நரகங்களில் அனுபவிக்கப் பெறுவது.

அநியத கன்மம் என்பது பரிமேத யாகம், கொடுங்கொலை இரண்டும் ஒரே காலத்துச் செய்யப்பட்டுப் பக்குவம் வந்தபோது இரண்டு மாறான பலன்களையும் சேர்ந்து அனுபவிக்க முடியாமையால் இறைவன் ஆணை வழி நின்று ஒரொருகால் அனுபலிப்பதாமே. இந்த திட்டதிட்ட கன்மம் இம்மையிற் செய்தது இம்மையிலேயே பலிப்பதும் ஆகும்.

## நிறைவுரை :

இதுகாறும் எழுதப்பட்டவற்றைத் தொடர்ச்சியாக பார்த்தால் - இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள வேறுபாடு விருப்பு-வெறுப்பு இன்மையும் உண்மையும். உயிருக்கு விருப்பு-வெறுப்பு உண்மைக்குக் காரணம் உயிரைப்பற்றி நிற்கின்ற சகஜமலமாகிய ஆணவமே ஆகும். ஆணவத்தால் அதன் தன்மைக் கேற்ப உயிரின் மூலகன்மமாகிய விருப்பு வெறுப்பு நிகழ்கிறது. உயிர்கள் எல்லாவற்றுக்கும் முத்தியின் போது நீங்குவதாகிய சூக்கும உடம்பைத் தருகின்ற இறைவன் விருப்பு வெறுப்பின் அளவுக்கேற்ப பலவேறு வகைப் பிறவிகளுக்கேற்ற உடம்புகளைத் தருகிறான். அவ்வுடம்புகளால் வனையும், பின்னர் வினையால் உடம்பும் காரண காரியத் தொடர்ச்சியாகக் கரையின்றி வந்து பிறந்திறந்து தடுமாறும் உயிர் மனோவாக்குக் காயங்களால் வினை செய்வதும் - செய்வதிலேயே அனுபவிப்பதும் ஆகி நிகழ்கிறது - உயிர், செய்வினைகளை சஞ்சிதத்தில் தொகுத்து பிராரத்தத்தில் எடுத்து அனுபவித்து, அனுபவத்தில் ஆகாமியத்தை உண்டாக்கி வினையிலிருந்து மீள வழியின்றி உழல்கிறது.

நான் செய்கிறேன், இவன் செய்தான் என்ற முனைப்பு நிகழாது அனுபவம் மட்டும் நிகழ்கிற போது ஆகாமியம் விளைய வழி இல்லை. உயிர்கள் கன்மத்தைப் போக்கிக் கொள்ளப் பல்வேறு வழிகளை இறைவன் ஆகமங்களின் வழி வகுத்துத் தந்துள்ளான்.

அவற்றால் முற்றக் கன்மங்கள் தொலையா - இருவினைகளும் அநுபவிக்கப்படுங்கால் விருப்பு வெறுப்பின்றி முனைப்பின்றி அனுபவிப்பதால் வினை துலையொத்தல் நிகழும் அவ்விருவினை யொப்பு நிகழ்ந்த வழி ஆணவ மலம் பக்குவப் படும். அப்பக்குவத்திற்கு ஏற்ப திருவருள் உயிரிடத்திலே பதியும். இவ்வாற்றால் ஆகாமியம் ஏற வழி யில்லாமறபோம். இனி இவன் எவ்வினையைக் கொடுப்பினும் விருப்பு வெறுப்பின்றி இருப்பானா தலின் வினைகள் விளைவு செய்யா என ஆசாரியன் கருதி சஞ்சிதத்னதத் தன் பார்வையினாலே பொசுக்குவன். ஆகாமிம் இன்றி சஞ்சிதம் கெட்டு நின்ற உயிர் பிராரத்தத்தை உடல் உள்ள வரை முனைப்பின்றி அனுபவமாய்க் கழித்து தீவிரதர சத்தி நிபாதத்தால் இறைவனோடு அத்துவிதமாய் ஒன்றி ஆனந்தத்தை அனுபவிக்கும் என்பது விளங்கும்.

# புராணம்

- ஆதீன முதுபுலவர் ஆதி.முருகவேள், திருச்சிராப்பள்ளி.



(இக்கட்டுரை ஆசிரியர், குருமகா சன்னிதானம் அவர்களின் திருவுள்ளப்பாங்கின் வண்ணம் சிவஞான பாடியத்தினை ஆதீனப் பதிப்பாகப் பகுதி பகுதியாகப் பதிப்பித்து தம்முடைய நுண்மாண் நுழை புலத்தாலும், சைவத்தமிழ் நூல்களில் தோய்ந்த அறிவனுபவத்தாலும் பல சிறந்த நூல்களை ஆதீன வெளியீட்டிற்காக எழுதியும், சிறந்த கட்டுரைகளை ஆதீனத் திங்களிதழ் மெய்கண்டாருக்காக எழுதியும் வருகின்றார்கள்)

**புராணம் - பழங்கதை**

புராணம் என்பது கதை அல்லது வரலாற்றைக் குறிக்கும். ஆனாலும் எந்தக் கதையும் புராணம் என்று சொல்லப்படாது. புதுக்கதை புராணம் ஆகாது. பழங்கதையாயிருந்தால் அது புராணம் என்று சொல்லப்படும். கந்தன் சூரவன்மாவைக் கொன்றது பழைய வரலாறு. மதுரை மாநகரில் ஆலவாய் அழகன் செய்தருளிய அறுபத்து நான்கு திருவிளையாடல்களும் முற்காலத்து நடந்த நிகழ்ச்சிகள், அறுபத்து மூன்று அடியார்களாகிய அருளாளர்களின் வாழ்க்கை வரலாறுகள் அக்காலத்தன. முக்கணன் முப்புரம் எரித்ததும், இருவர் அடி முடி தேடியதும் முதலான பலவும் பண்டு நடந்த செய்திகள், இவையெல்லாம் புராணங்கள்.

இவைத்தவிரத் தலப் புராணங்கள் என்ற ஒருவகையும் உண்டு. சிறப்புடைய நகரங்களின் பெருமைக்குரிய பழைய செய்திகளை எல்லாம் எடுத்துரைப்பன தலப்புராணங்கள். காஞ்சிப் புராணம், கடம்பவனப்புராணம் போன்றன இவ் வகையைச் சேர்ந்தன.

திருவாசகத்தின் தொடக்கத்தில் சிவ புராணத்தைப் பார்க்கிறோம். அங்குப் புராணம் என்று சொல்லியது என்ன? 'சிவனது அநாதி முறை மையான பழமை' என்ற பொருள் விளக்கக் குறிப் பொன்றை அங்குக் காணலாம் 'அநாதி யுடனாம் நின்மல சிவனுடைய அநாதி முறைமையாகிய பழமை' என்ற அகத்திய மாமுனிவரின் திருவாசக அனுபவச் சூத்திரத்திலிருந்து அதனை எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறோம்? 'புராணம்' என்ற சொல்லுக்குப் 'பழமை' என்பது பொருள். அந்த அடிப்படையில் பழங்கதை, பழைய வரலாறு ஆகியவற்றுக்கும் புராணம் என்ற பெயர் ஆயிற்று.

**புராணன் - சிவபெருமான்:-**

சிவபெருமான் அநாதியே பழமையானவன். ஆதலால் மாணிக்கவாசகர் தமது திருவாசகம் - போற்றித் திருவகவலில் 'புரம்பல எரித்த புராண போற்றி' (போற்றித் திருவகவல் 221) என்று பாடுகிறார். அச்சொல்லுக்கு அதுவே பொருள் என்பதனை நமக்கு உணர்த்தும் பொருட்டு அப்பெருமான் செய்தருளிய புரம் எரித்த பழைய செய்தியையும் உடன் சேர்த்துக் கூறியுள்ள குறிப்பையும் அறியலாம்.

**புராணம் - வடமொழிப்பொருள் :**

வடமொழி அறிஞருங்கூடப் புராணம் என்ற சொல்லுக்கு இவ்வாறே பொருள் கூறுவர். வடமொழியின்படி புராணம் என்ற சொல் 'புரா' 'நவ' என்ற இருசொற்கள் சேர்ந்த ஒருசொல்லாகக் கருதப்படுகிறது. 'புரா' என்பதற்குப் 'பழைய' என்பதும், 'நவ' என்பதற்குப் புதிய என்பதும் பொருள். ஆகவே புராணம் என்பது பழங் காலத்ததாகவே இருப்பினும் அது புதிய நலங்களை உடையதாகவும் இருக்கும்.

**புதுமையில் பழைமை :**

இதே கருத்து தமிழிலேயும் உள்ளது என்பதையும் அறிகிறோம். இறைவனைப் 'பழையோன் காண்க' (திருவாசகம் திருவண்டப் பகுதி -39) என்று 'புராணன்' என்ற சொல்லுக்குப்

பொருள் காட்டினார் மாணிக்கவாசகர். இனி அப்பழைமை புதுமையையும் உடையது என்று உணர்த்தவந்தார். 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே' (திருவெம்பாவை-9) எனப் புராணன் இயல்பை விளக்கியுரைத்தார். முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருள் என்பதனைப் புராண காரணன்' (போற்றித் திருவகவல்,224) எனக் கூறிய நயமும் காண்க. இவ்வுண்மையால்தான் கந்த புராணம், பெரிய புராணம் முதலிய புராணங்களெல்லாம் பழங் கதையானாலும் புதிய சிந்தனையாளர்களுக்கும் விருந்தளித்துக் கொண்டிருக்கின்றன.

**ஐந்து இயல்பு :**

இனி, புராணங்கள் சிறப்பாக ஐந்து இயல்புகளைக் கொண்டனவாகவும் இருக்கும். உலகின் படைப்புப் பற்றிக் கூறும்; முனிவர்கள் தலைவர்கள் ஆகியோரின் வரலாற்றை உரைக்கும்; வேறு வேறு மனுக்களின் காலம்பற்றி விளக்கும், மற்றும் சில அரசரின் மரபுவழிபற்றிக் கூறும், இவ்வாறு அமரகோசம் என்னும் வடமொழி நிகண்டு கூறுகிறது.[3] மேலும் புராணங்களை வேதங்களின் விரிவுரைகள் எனவும் சொல்லுவர். புராணங்கள் தேவர் சித்தர் ஆகியோரின் கதைகள் எனவும் கூறப்படும்.[4] இவ்வாறு புராணங்கள் பல இயல்புகளை உடையனவாயிருக்கும் இங்குக் கூறுப்பட்ட இயல்புகளெல்லாம் நம் தமிழ்ப் புராணங்களில் அமைந்திருக்கக் காணலாகும்.

**புராணங்களின் தொன்மை :**

இனி, இத்தகைய புராணங்கள் எக்காலத்துத் தோன்றின என்பதைக் காண்போம். 'வேதங்கள், உபநிடதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் இவ்வாறு முறையாகத் தோன்றின. வேதங்களின் பொருளை விளக்குவதற்காகவே புராணங்கள் தோன்றின' என்று இவ்வாறு பலர் கூறுவதும் உண்டு. வேதங்களின் பகுதிகளாகிய பிரமாணங்களில் புராணங்களைப் பற்றிய வாக்கியங்கள் காணப்படுவதாக அறிஞர் கூறுகின்றன.[5]

புராணங்கள் இதிகாசங்களாகும், ஆதலால் அவை ஐந்தாம் வேதமாக அமையும் என உபநிடதங்கள் கூறுகின்றன.[6] இவற்றிலிருந்து புராணங்கள் நம் நாட்டில் வரலாற்றுக் காலத்துக்கும் முந்திய மிகவும் தொன்மை வாய்ந்தன என்பது நினைக்கத்தகும்.

**தமிழ்ப் புராணங்கள் :**

வரலாற்றுக் காலத்துக்கு மிக முற்பட்டது தமிழ்மொழி என்பர் ஆராய்ச்சி அறிஞர். தமிழர் நாகரிகம் பண்பாடு முதலியனவும் மிகவும் தொன்மை வாய்ந்தன. அவ்வளவில் பழமை வாய்ந்த தமிழகத்தில் அக்காலத்தில் தமிழில் புராணங்கள் இருந்திருக்க வேண்டும் என்று கூறுவது மிகையன்று. இன்னும், உலக அறிஞர் முடிபின்படி சிவனும், முருகனும், திருமாலும், சத்தியும் தமிழர் கடவுள் என்றால் அவர்கள் பற்றிய பழங்கதைகளாகிய புராணங்கள் அக்காலத்திலேயே தமிழ்நாட்டு வழக்கத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்று கருதுவதில் தவறு ஒன்றுமில்லை. இக்கருத்தைத் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூலும் உறுதிப்படுத்தும்.

**தொன்மையும் தோலும் (புராணங்கள்)**

பண்டைத் தமிழறிஞரும் புலவர் பெரு மக்களும் அவர் காலத்துக்கு முற்பட்டனவும் மிகப் பழமையானவுமான நிகழ்ச்சிகளைக் கதைகளாகச் சொல்லி வைத்ததுண்டு. அப்படிச் சொல்லிய கதைகளுக்குத் தமிழில் 'தொன்மை' என்ற பெயரை வழங்கியுள்ளனர். இதனைத்தொல்காப்பியம்.

***தொன்மை தானே சொல்லுங் காலை***
***உரையொடு புணர்ந்த பழமை மேற்றே.***

(தொல்காப்பியம் செய்யுளியல். 229)

என்ற நூற்பாவால் உணர்த்துகிறது. இதற்கு உரையெழுதிய உரையாசிரியர், 'தொன்மையாவது உரையொடு பொருந்திய பழமைத்தாகிய பொருள்மேல் வருவன' என்று பொருள்கூறி இராம சரிதமும் பாண்டவ சரிதமும் ஆகியவற்றை எடுத்துக் காட்டியுள்ளார்.

பேராசிரியர் இதற்கு உரை கூறவந்தவர். 'தொன்மை என்பது உரைவிராய்ப் பழைமையாகிய

கதை பொருளாகச் செய்யப்படுவது, அவை பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும் தகடூர்யாத்திரையும் போல்வன என்று உரைத்தார்.

நச்சினார்க்கினியர் சிலப்பதிகாரமும் இதன்பாற்படும் என்பார்.

இதேபோலத் 'தோல்' என்னும் ஒருவகைச் செய்யுளும் தொல்காப்பியத்தில் சொல்லப்படுகிறது. அது பழைய கதையைப் புதியதாகச் சொல்லியது, என்பார் பேராசிரியர் (தொல்காப்பியம், செய்யுள் இயல்.239)

தொன்மொழிப் புலவர் என்ற தொடர்க்குப் பேராசிரியர் உரை செய்த இடத்தில், 'தொன்மொழி என்றார், பழைய கதையைச் செய்தல் பற்றி' என்றார். தோல் - 'பழையகதை' என்றதால் முன்னரையே தமிழகத்து வழக்கில் 'தொன்மை' எனப்பட்ட புராணம் இருந்தது, பின்னர் அக்கதையை மற்றவரும் செய்தனர். அது 'தோல்' என வழங்கப் பட்டது என அறியலாம்.

**புராணங்கள் நமது உடைமை :**

பிரமாணங்களில் புராணங்கள் பற்றிக் கூறப்படுவதால் வடமொழி வேதங்களுக்கும் முற்பட்ட வரலாற்றுக் காலத்துக்கும் முந்திய காலத்திலேயே புராணங்கள் உண்டு என்பதாயிற்று, தற்காலத்து ஆராய்ச்சிகளின் முடிபின்படி சிந்து வெளி நாகரிகம் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தெனக் கூறப்படுகிறது. அது தமிழர் நாகரிகம் எனவும் அவர்க்குச் சிவமே பரம்பொருள் எனவும் சொல்லப்படுகிறது. இவை உண்மையென்றிருக்கு மானால் 'தொன்மை' எனவும் 'தோல்' எனவும் வழங்கப்பட்ட பழங்கதைகளாகிய 'புராணங்கள்' தமிழ் வழக்கிலும் முற்காலத்திலேயே இருந்திருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது. பல நூற்றாண்டுகளை அக்கதைகள் கடந்து வரும்போது இடையிடையே விரவிப்போன சில பல செய்திகளும் இருக்கலாம். அவற்றை வேறறிய வேண்டுவது அறிஞர் கடமையாகும். அல்லாமல் புராணம் என்றாலேயே பொய்யான கட்டுக் கதைகள் என்று முற்றிலும் தள்ளிவிடுவது நம் பழஞ்செல்வதை இழப்பதுபோலாகிவிடும்.

ஆகவே, சைவத் தமிழர்க்கும் உரித்தான புராணங்கள் உண்டு. அவை தொடக்கத்தில் தமிழிலே இருந்தன. சில இன்று வடமொழியில் தான் கிடைக்கின்றன என்றாலும் உண்மைச் செய்திகள் சைவர்க்கு உரியன, தமிழிலேயே சைவப் புராணங்கள் பல இன்றும் உள்ளன. அவற்றைக் கற்க வேண்டும். உண்மை காணவேண்டும். வாழ்க்கைக்குப் பயன்படுத்த வேண்டும்.

**அடிக்குறிப்பு :**

1. The great Sanskrit Scholar Rengacharya has defined purana as 'Pura' 'Nava' (Pura-old) (Nava-new) Meanings which are as good as new through existing from olden times.' - Puranic Encyclopaedia by Vettam Mani-Malayalam. Eng-trans. by Motilal Indological Publishers and Book-sellers. Delhi-7.1.1975)

2. சுவாயம்புலவர் முதலாகப் பதினான்கு மனுக்கள் சொல்லப்படுகின்றன.

சுவாயம்புலவர் முதலாகப் பதினான்கு மனுக்கள் சொல்லப்படுகின்றனர். ஒரு மனுவின் ஆட்சிக் காலம் 4,32,000 மானுட ஆண்டுகள் என்பர். இவ்வாறு பதினான்கு மனுக்களின் காலம் பிரமனுக்கு ஒரு நாளாகும் (ஆறுமுக நாவலர் பால பாடம் 4-ஆம் புத்தகம்164 ஆம் பக்கம் காண்க மேலும் விரிவாக Puranic Encyclopaedia, பாகவதம், விஷ்ணுபுராணம் தேவி பாகவதம் போன்ற நூல்களில் அறியலாம்)

3. The Purana is one which described Sarga, Pratiserga, Manvantara and pratisargn are natural creation and renovation (Cosmogony), Vamsa Means history of sages and Patriarchs, By Manvantara is meant the period of different Manus Vamsannucarita means Geneology of kings (Ibid)

4. Sruthi says that Puranas are commentaries on Vedas .... Mahadhrata has used the term Purane to mean stories about devas and siddhass. (Ibid)

5. Statemant about Puranas are found even in the Brahmanas Therefore it is to be surmised that Puranas exist even before historic times (Lbid)

6. The Upanisads Say that Puranas are It Hasas and as such constitute the fifth veda (Lbid)

7. இவை இதிகாசங்கள் அல்லவா, புராணங்கள் அல்லவே எனக் கருத வேண்டா, முன் அடிக்குறிப்பு 6 காண்க.

8. இவை இரண்டும் தமிழ் நூல்கள்.

9. On the strenght of historical, ethnological researche so far carried on by eminanthmen in these different branches of learning. It is clear that Saivism was Pre-Vedic and non-Aryan religion. since its vestiges have been found in the ancient Indus - Vallay civilization, which dates from the beginning of the neolithic times.

# நடராஜ வடிவம்

- புலவரேறு ந.ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,



(சித்தாந்த இதழ் செப்டம்பர் 1995, பக். 321 – 330, அக்டோபர், பக். 343 – 350)

முன்னுரை :

எல்லாம் வல்ல இறைவன், தனக்கென ஓர் உருவும், ஒரு பெயரும் உடையன் அல்லன். ஆயினும் நம் பொருட்டு, எம் பெருமான் பல உருவமும் பல பெயரும் கொண்டு விளங்கிய ருளுகின்றான். 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்று மிலாற்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ' என்பது திருவாசகம். அங்ஙனம் சிவபிரான் உயிர்களின் பொருட்டுக் கொண்டருளிய திருவுருவங்கள் பலவற்றுள், நடராஜ வடிவம் மிகவும் சிறந்து திகழ்வதொன்று.

'நடராஜ வடிவம்' நலங்கள் பலவும் நிறைந்தது; பழமையும் பெருமையும் வாய்ந்தது; தமிழ்நாட்டின் தனிப் பெருங்கலையியற் செல்வமாகக் கவினுற்றுப் புகழோங்கிப் பொலிவது! நடராஜப் பெருமான் எழுந்தருளி விளங்கும் தில்லைச் சிற்றம்பலம் ஆகிய சிதம்பரம் ஒன்றுமே, ஏனைய எத்துணையோ பல எண்ணிறந்த கோயில்கள் எல்லாவற்றிலும் மிக மேலானதாக, சைவப் பெருமக்கள் அனைவராலும், ஒரு முகமாகக் கோயில் எனச் சிறந்தெடுத்துத் தனிப்பெரு மாட்சிமையுடன், போற்றி வழங்கப்பெறுகின்றது! எனினும் நடராஜத் திருவுருவம் இடம் பெறாத கோயில் எதுவும் இல்லை. நடராஜத் திருவுருவம் எல்லாச் சைவக் கோயில்களிலும் வைத்துச் சிறப்புறப் போற்றி வழிபடப் பெறுகின்றது.

சுந்தரர்:

சைவசமய அருளாசிரியன்மார் நால்வர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லைத் திருச்சிற்றம்பலத்திற்குச் சென்று நடராஜப் பெருமானைக் கண்டு வணங்குகின்றார்! அப்பொழுது அவர் தம் "ஐந்து பேரறிவும் கண்களே கொண்டன; அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆயின; குணம் மூன்றும் திருந்து சாத்துவிகமேயாகிச் சிறந்தன. அந்நிலையில் அவர், நடராஜப் பெருமான் இயற்றும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங் கூத்தினைத் தரிசித்தார்; பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

நடராஜ வடிவத்தினையும், அப்பெருமான் இயற்றும் திருநடனத்தினையும், கண்டு கும்பிட்டு மகிழ்தலினும் சிறந்த பேறு வேறொன்றில்லை. இப்பேறு கிடைக்குமாயின், துன்பம் நிறைந்த மனிதப் பிறப்பும் கூட, மிக மேலான சிறப்பை அளிப்பதாக விளங்கும். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் இவ்வனுபவ மன நிலைமையினைச் சேக்கிழார் சுவாமிகள், பின்வருமாறு செவ்விதின் விளக்கிப் பாடியுள்ளார்.

*"தெண்ணிலா மலர்ந்த வேணியாய்! உன்றன்*
*திருநடம் கும்பிட்டுப் பெற்று*
*மண்ணிலே வந்த பிறவியே எனக்கு*
*வாலிதாம் இன்பமாம்! என்று*
*கண்ணில் ஆனந்த அருவி நீர் சொரியக்*
*கைம்மலர் உச்சிமேற் குவித்துப்*
*பண்ணினால் நீடி அறிவரும் பதிகம்*
*பாடினார்; பரவினார்; பணிந்தார்."*

திருநாவுக்கரசர்:

இவ்வாறே திருநாவுக்கரசு சுவாமிகளும், நடராஜப் பெருமான்பால் எல்லையில்லாத ஈடுபாடு கொண்டு விளங்குகின்றார். நடராஜ வடிவம் கண்டு தரிசித்து மகிழ்தலில், திருநாவுக்கரசர்க்கு இருந்த ஆர்வமிகுதியின் சிறப்பினை,

*"கையும் தலைமிசை புனைஅஞ்சலியன*
*கண்ணும் பொழிமழை ஒழியாதே*
*பெய்யும் தகையன; கரணங்களும் உடன்*
*உருகும் பரிவின: பேறெய்தும்*

*மெய்யும் தரைமிசை விழும்; முன்பு எழுதரும்;*
*மின்தாழ் சடையோடு நின்றாடும்*
*ஐயன் திருநடம் எதிர்கும் பிடும் அவர்*
*ஆர்வம் பெருகுதல் அளவின்றால்!"*

எனச் சேக்கிழார் பெருந்தகை சிறந்தெடுத்துக் கூறிப் பாடி விளக்கியருள்கின்றார்.

திருநாவுக்கரசரின் திருவுள்ளத்தில் நடராஜ வடிவின் முடிகொண்ட மத்தமும், முக்கண்ணின் நோக்கும், முறுவலிப்பும், துடி கொண்ட கையும், துதைந்த வெண்ணீறும், சுரிகுழலாள் படிகொண்ட பாகமும், பாய் புலித்தோலும், குரைகழலும் ஆகியன எல்லாம், 'சரக்கறையோ என் தனி நெஞ்சமே' என்று அவரே பிறிதோர் இடத்திற் பாடுமாறுபோலக் குடிகொண்டு விட்டன.

நடராஜப் பெருமானின் திருநடன தரிசனம் செய்து வியப்பும் விம்மிதமும் மேலோங்கி நின்ற திருநாவுக்கரசர், 'சிற்றம்பலத்துக் கூத்தனிற் கூத்து வல்லார் உளரோ?' எனவும், 'தில்லை அம்பலத்துக் கூத்தனுக்கு ஆட்பட்டு இருப்பதன்றோ நந்தம் கூழைமையே' எனவும் வினவி, வியந்து உருகி மகிழ்ந்தருளுகின்றார்.

நடராஜ வடிவின் நலங்களைக் காண்டலும், கண்டு உணர்ந்து களித்து உள்ளம் கசிந்துருகி மகிழ்தலும், ஒருவருக்குப் பெறலரிய பெரும்பேறு எனலாம். எல்லோர்க்கும் அத்தகைய அரும்பெறற் பெரும் பேறு நேர்தல் அரிது! காணுந் திறன் எல்லோர்க்கும் வாய்த்துளதேயாயினும், காணும் வாய்ப்பும் பேறும் கலையுளமும் எல்லோர்க்கும் கிடைப்பதில்லை. (Sight is faculty, but seeing is an art). நடராஜ வடிவின் நலன்களைக் கண் திளைக்கும் நற்பேறு நணுகுமாயின், நம்முடைய மனிதப்பிறவி நனிமிகச் சிறந்த பயனைக் பெற்றதாகும் எனத் திருநாவுக்கரசர், நயந்துருகிப் பாடி நவிலுகின்றார்!

*குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்,*
*பனித்த சடையும், பவளம் போல் மேனியிற் பால்வெண்ணீறும்*
*இனித்தம் உடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்,*
*மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.*

**திருஞானசம்பந்தர்:**

இவ்வாறே திருஞானசம்பந்த சுவாமிகளும், தில்லைக்குச் சென்றார்; அம்பலத்தை அடைந்தார். இறைவன் தமக்கு அளித்த மெய்ஞ்ஞானமே, அம்பலமாகத் திகழ்தலை அறிந்தார். அதன்கண் இறைவன் இயற்றும் ஆனந்த ஒரு பெருந்தனிக் கூத்தைக் கண்டார். தம் உள்ளத்தில் நிறைந்த ஞானத்தின்கண் அருவாய் அகத்தே நிகழும் திருக்கூத்தே, தில்லையம்பலத்தில் தம் கண்களின் முன்னர்ப் புறத்தே உருவாய்ப் புலப்பட்டுத் தோன்றக் கண்டு, கும்பிட்டுக் களிப்புற்றார். ஐம்பொறிகளுக்கும் எட்டாததாய், நுண்ணியதாய், அருவமாய், மெய்யுணர்வுக்கு மட்டுமே நேர்பெற வரும் சிவபோகத்தினை, உருவமாய்ப் பருப்பொருள் போல ஐம்பொறிகளின் அளவினும் எட்டுமாறு, எளிதிற் கிடைக்கும்படி வழங்கியருளிய இறைவனின் பெருங்கருணையை ஏத்தினார்; இன்னிசைப் பதிகம் பாடினார்; விழிமாரி பொழிந்து வந்தார்.

*அண்ண லார்தமக்கு அளித்த மெய்ஞ்*
*ஞானமே ஆன அம்பலமும், தம்*
*உள் நிறைந்த ஞானத்து எழும்*
*ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தும்,*
*கண்ணின் முன்புறக் கண்டு கும்பிட்டு*
*எழும் களிப்பொடும், கடற்காழிப்*
*புண்ணியக் கொழுந்து அனையவர்*
*போற்றுவார் புனிதர் ஆடிய பொற்பு.*

**கலித்தொகை :**

இம்மட்டோ காரைக்காலம்மையார், சேக்கிழார் முதலிய எத்துணையோ பெருமக்கள் பலர், நடராஜப் பெருமானிடத்தும், அவர்தம் திருவுருவின் மாட்டும் பேரன்பும் பெரும் பத்திமையும் மிக்கவர்களாக விளங்கினர். 'கற்றறிந்தோர் ஏத்தும் கலித்தொகை' என்னும் சங்க கால நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல், நடராஜப் பெருமானைக் குறித்ததாகவே அமைந்துள்ளது.

அதன்கண் சிவபிரான் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத இயல்பினனாயினும், நடராஜ வடிவம் கொண்டு நின்று கட்புலனாந்

தன்மையனாகுந் திறம், கவினுறக் குறிப்பிடப்பட்டுள்ளது. அருமறைகள் பல பகர்ந்தும், கங்கை நீர் சடைக்கரந்தும், திரிபுரம் தீ மடுத்தும், மணிமிடறும் எட்டுக்கைகளும் கொண்டதாய், அத்திருவுருவம் அழகுற விளங்குகின்றது. கொடுகொட்டி, பாண்டரங்கம், கபாலம் என்னும் திருக்கூத்துக்களைப் பெருமான் இயற்றுகின்றான். அழித்தற்றொழிலை நிகழ்த்துகின்ற காலங்களில் இறைவன் இயற்றியருளும் இம்மூன்று திருக்கூத்துக்களுக்கும், ஆண்டுப் பிறர் ஒருவரும் இல்லாமையினால், உமதேவியார் தாம் பாணி,தூக்கு, சீர் என்னும் தாள வகைகளை அருகிருந்து ஒற்றறுத்துத் தருகின்றார்! எனக் கலித்தொகை நூல் கவினுறப் பாடுகின்றது.

**சிலப்பதிகாரம்: -**

செந்தமிழ்ப் பெருஞ்சான்றோர்ஆகிய இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் என்னும் செஞ்சொற் காப்பியத்திலும் கூட, இறைவனின் திருநடனங்களைப்பற்றிய குறிப்புகள் வருகின்றன. புகார் நகரத்தில் நிகழ்ந்த இந்திர விழாவில் மாதவி மக்கள் எல்லோரும் கண்டு களிக்கும்படி, பல்வேறு தெய்வங்கட்கும் உரிய பல்வேறு நடனங்களையும், அவரவர் கொள்கையின் நிலையும் படிதமும் நீங்கா மரபின், விதிமாண் கொள்கையின் விளங்க ஆடிக்காட்டிய செய்திகளைக் கூறும் “கடலாடு காதை” என்னும் பகுதியில், இளங்கோவடிகள் பல வகைக் கூத்துக்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

1. கொடுகொட்டி, 2. பாண்டரங்கம் ... சிவபிரான்
3. அல்லியம், 4. மல்லாடல், 5. குடம் ... திருமால்
6. துடி, 7. குடை ... முருகன்
8. பேடி ... காமன்
9. மரக்கால் ... துர்க்கை
10. பாவை ... திருமகள்
11. கடையம் ... அயிராணி

இவற்றுள் சிவபிரான் ஆடிய கொடுகொட்டி என்பது, திரிபுரம் தீப்பிடித்து எரியும் போது, இறைவி காணும்படி ஆடியது. பாண்டரங்கம் என்பது திரிபுரம் எரிந்து சாம்பரான பின்னர், இறைவன் நான்முகன் காண ஆடியது, இவ்வுண்மை

*திரிபுரம் எரிய தேவர் வேண்ட*
*எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப*
*உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய*
*இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடல்*

எனவும்,

*தேர்முகன் நின்ற திசைமுகன் காணப்*
*பாரதி ஆடிய வியன் பாண்டரங்கம்*

எனவும் வரும் சிலப்பதிகாரப் பகுதியால் உணரலாம்.

மேலும், வடநாடு சென்று கண்ணகிக்கு கோயில் எடுக்க இமயமலையினின்று கற் கொணர்ந்த சேரன் செங்குட்டுவன் தனது தலைநகர் ஆகிய வஞ்சிமாநகரில் இலவந்திமாடம் என்னும் அரண்மனையில் நிலாமுற்றத்தில், மாலை நேரத்தில் தன் தேவி வேண்மாள் என்பாளுடன் வீற்றிருந்த பொழுது, ஆண்டுத் தன் மனைவியுடன் போந்து அரசனை வணங்கிய பறையூர்க் கூத்தச்சாக்கையன் என்னும் சிறந்த நாடகக் கலைஞன், சிவபெருமானுக்குரிய “கொடுகொட்டி” என்னும் கூத்தினை ஆடிக்காட்டினான் என்றும் இளங்கோவடிகள் இயம்புகின்றார்.

*திருநிலச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்*
*பரிதரு செங்கையிற் படுபறை ஆர்ப்பவும்*
*செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்*
*செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்,*
*பாடகம் பதையாது சூடகம் துளங்காது*
*மேகலை ஒளியாது மென்முலை அசையாது,*
*வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது,*
*உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய*
*இமையவன் ஆடிய கொட்டிச்சேதம்*
*பறைதரு நால்வகை மறையோர் பறையூர்க்*
*கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்தான்.*

**அறிஞர்கள் வியப்புரை:**

இங்ஙனம் பண்டைப் பெருநூல்களும் பெரியோர்களும் மட்டுமேயன்றி, இன்றைய உலகிற்

புகழோங்கிய கலைஞர்களும் அறிஞர்களும் கூடக் கண்டு வியந்து மகிழ்ந்து போற்றிப் புகழும் வண்ணம், நடராஜ வடிவம் சிறந்துயர்ந்து திகழுகின்றது. "என் அத்தன் ஆடல் கண்டு இன்புற்றதால் இவ் இருநிலமே" எனத் திருநாவுக் கரசர் பாடுதற்கு ஏற்ப, இன்றைய உலகம் முழுவதுமே நடராஜ வடிவின் நலத்தினை நயந்தினிது பாராட்டி வியந்து இன்புற்று நிற்கின்றது எனலாம்.

1. உலகப் புகழ் பெற்ற கலையிற் பேரறிஞர் ஆகிய திரு. ஆனந்த குமார சுவாமி அவர்கள், "நடராஜ வடிவின் நலங்கள் அளப்பரியன. இத்தகையதொரு சிறந்த வடிவத்தினை, இந்நாளில் எத்தகைய பெருங் கலைஞனும் கூடக் கருதியுணர்ந்து படைத்தல் இயலாது. இது வெறும் கவிதையன்று; அறிவியல் நலம் அமைந்தது. இத் திருவுருவம் பக்தர்களுக்கும், மெய்ஞ்ஞானிகளுக்கும் எல்லாம், பெருவியப்பையும், பேரீடுபாட்டையும் விளைத்து மகிழ்வித்து வருகின்றது. காலமும், இடமும் கடந்து, எல்லா நாடு மொழி சமயம் சார்ந்த மக்களாலும் போற்றப்படத் தகுந்ததாய் திகழ்கின்றது. இத்தகைய அரும்பெருஞ் சிறப்புகள் மிக்க இத் திருவுருவத்தினை முதன் முதற் கருதிப் படைத்துதவிய அருட்பெருஞ் சான்றோர்கள் ஆகிய கலைஞர்களின் நுண்மாண் நுழைபுலம் சாலவும் வியந்து போற்றுதற்குரியது. எனவே எத்துணையோ பல தலைமுறைகளாக நடராஜ வடிவம் மக்கின் உள்ளங்களையெல்லாம் கவர்ந்து நின்று, வழிபடப்பெற்று வருதலில் வியப்பொன்றுமில்லை. எவ்வளவோ ஐயப்பாடுகள் கொள்ளுவதிலும், எத்துணையோ பல குறைபாடுகளைக் காண் பதிலுமே பழகிப் பயின்றுள்ள நாமும் கூட நடராஜரை வழிபட்டுத்தான் வருகின்றோம்."

2. 'உலக முதல்வனின் உருவ வெளிப்பாடே நடராஜ வடிவம் . அருவநிலையில் உள்ள பரம்பொருள், உருவ நிலையிற் கட்புலரனாகும் வண்ணம் குறைவிலா நிறைவாக அமைந்த திருவுருவமே நடராஜர் ஆவார். இலயம், தொழில், இயக்கம் என்பனவற்றை அவர் குறிப்பிடுகின்றார். கடவுள் ஒரு படைப்பியற் கலைஞர்.' எனப் பேரறிஞர் திரு. எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

3. "நடராஜ வடிவம் பற்றிய கருத்துருவாக்கம் இந்திய மக்களின் பேரறிவின் பெருவிளைவாய்ப் பல நலங்கள் பொதிந்ததுஒளிர்வதாகும். கலையியலும் அறிவியலும், தத்துவமும் சமயமும் ஒருங்கே கலந்து இயந்ததன் பயன்தான் அத்திருவுருவம்! உண்மை என்பது வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே யாகுமாயின், நடராஜ வடிவத்தைக் காட்டிலும், ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருங்கே கலந்த சிறந்த நல்ல இணைப்பு வேறு எதுவுமே இல்லை. எல்லாக் காலமும் இடமும், எல்லா இயக்கமும் முடக்கமும், அவனிடத்திலேயே அடங்கிக் கிடக்கின்றன!" என்று, திரு எஸ். வி. இராமமூர்த்தி என்னும் சீரிய அறிஞர் கூறுகின்றார்.

4. சுவாமி விவேகாநந்தர் அவர்களின் மாணவர்கள் பலருள் தலைசிறந்த ஒருவரும், 'பிரபுத்த பாரதம்' என்னும் ஆங்கில இதழின் ஆசிரியருமாக விளங்கியிருந்த திரு. பி.ஆர்.இராஜம் ஐயர் என்னும் பெருந்தகையார், "மனித வடிவில் அமைந்த கடவுளின் திருவடிவங்கள் அனைத்தி னிலும், இதுகாறும் மனிதன் அறிந்தனவற்றுள், நடராஜ வடிவம் மிகவும் சிறந்ததொன்றாகும். ஏனைப்பிற தலங்களில் எல்லாம் எழுந்தருளச் செய்யபெற்றுள்ள நடராஜர் திருவுருவப் படிமைகள் எல்லாவற்றிற்கும், மூல முதற் படிமையாகத் திகழ்வதாய்ச் சிதம்பரத்தில் விளங்கும் நடராஜர் திருவுருவப் படிமமே, நாம் அறிந்தனவற்றுள் மிகவும் தலைசிறந்ததாய்ப் பெரிதும் உள்ளெழுச்சியின்பவுணர்வினை ஊட்டுந்தகைய தாகும். வெறும் கலைநோக்கு ஒன்று மட்டுமே கொண்டு ஆராய்ந்தாலும் கூட, மிகவும் திருத்தமான - உயிர்த்தன்மையுடைய - கவர்ச்சி நிறைந்த இத்திருவுருவினைப் போன்று, வேறொரு படிமத்தினைக் காண்டல் அரிது" எனக் கட்டுரைத்துப் போற்றுகின்றார்.

### தத்துவ நுட்பங்கள்

5. நடராஜ வடிவம் கலைநலம் சிறந்து கவர்ச்சி மிக்குத் திகழ்வது! அதன் ஒவ்வொரு

பகுதியும் கவின் மிக்குப் பலதத்துவ நுட்பங்களை உள்ளடக்கிக் கொண்டு விளங்குகின்றது.

அத்திருவுருவம் பரந்த திருமுக மண்டலம், பனித்த சடை, தரித்த கங்கையும் பிறையும்; குனித்த புருவம், நெற்றிக் கண், கொவ்வைச் செவ்வாய், குமிண் சிரிப்பு, நீலகண்டம், பால் வெண்நீறு, ஒரு கையில் நெருப்பு, ஒரு கையில் உடுக்கை, ஒன்று அமைத்த கரம், மற்றொன்று வீசிய கரம், புலித்தோல் ஆடை, பாம்பு அணிகள், எடுத்த திருவடி, ஊன்றிய திருவடி ஆகிய பலவற்றைக் கொண்டு அழகுற மிளிர்கின்றது.

**1. பரந்த திருமுக மண்டலம்:**

இறைவனின் தலைமை நிலையும், எல்லையில்லா அழகும், இனிய தண்ணளித்திறனும் உணர்த்துகின்றது.

**2. பனித்த சடை :**

'நுண்சிகை ஞானமாம்' எனத் திருமூலர் திருமந்திரம் கூறுமாறு ஞானச் சிறப்பையும் 'சைவம் விட்டிட்ட சடைகளும்' எனத் திருவிசைப்பா பாடல் கூறுதற்கேற்பச் சிவநெறிக்குரிய தவவொழுக்கச் சிறப்பையுங் குறிக்கின்றது.

**3. கங்கையைத் தரித்தல் :**

'நில்லாத நீர் சடைமேல் நிற்பித்தான்' என அப்பர் பாடுதல் போல, இறைவனது பேராற்ற லையும், வேகங் கெடுத்தாளும் வித்தகத்தையும் விளக்குகின்றது.

**4. பிறையணிதல் :**

தன்னைச் சரண் அடைந்தவர்களைத் தாங்கித் தாழ்வு நீக்கிப் பாதுகாக்கும் வள்ளல் என்று அறிவிக்கின்றது.

**5. குனித்த புருவம்**

புருவத்தை வளைத்தல் நெறித்தல் முதலியன, பரதக்கலை வல்லவர்கள் தம் குறிப்புகளை யுணர்த்தும் மெய்ப்பாட்டு வகைகள்ஆகும். தன்பாற் போந்து குறையிரந்து முறையிடும் அடியார்களின் விண்ணப்பங்களைக் கூர்ந்து நோக்கி ஊன்றிக் கேட்டருளும் கருணைத் திறம் காட்டும்.

**6. கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பு :**

தன்பொக்கல் போந்து அடைக்கலம் புகுபவர்களை அருளுடன் வரவேற்று, அவர்கள் செய்த பிழைகளை மன்னித்து, அவர்களுக்கு வாழ்வளித்து மகிழ்ச்சி விளைவிக்கும் மாட்சிமை யுணர்த்தும்.

*சென்று தொழுமின்கள் தில்லையுள்*
*சிற்றம்பலத்து நாட்டம்*
*என்று வந்தாய்? என்னும்*
*எம்பெருமான்றன் திருக்குறிப்பே.*

**7. பவளமேனி :**

பவளம்போற் சிவந்த மேனி, தீவண்ணன் ஆகிய இறைவன் நெருப்புபோல்பவன் என்று நினைப்பிக்கும். நெருப்பானது தன் பால் எய்தும் பொருள்களை எல்லாம் தூய்மை படுத்திப் புனிதம் உறுவிக்கும் அதுபோல இறைவனும் தன் பால் அன்பு செய்வார் மாசுகளையெல்லாம் போக்கித் தூய்மையாக்கி அருள் புரிதலைப் புலப்படுத்தும்.

**8. பால் வெண் நீறு :**

எல்லாப் பொருள்களும் அழிந்து, இறுதியில் நீறு ஆகும். நீறு மற்றொன்றாக மாறி அழியாது. ஆதலின் திருநீறு அழிவலாத் தன்மையையும், தூய இயல்பினையும் காட்டும். இறைவன் "தொழு தெழுவார் வினைவளம் நீறெழ நீறு அணிகின்றான். அவன் செந்நிற மேனியில் வெண்ணீறு" அணியும் கோலம், எவர் நெஞ்சையும் கவர்ந்து பிணிக்கவல்ல பெற்றிமையினைத் தெற்றெனத் தெருட்டும்.

**9. நெற்றிக்கண் :**

"நுதல்விழி நாட்டத்து இறையோன்."நெற்றித் தனிக்கண் ஒருத்தன் "மத்தகஞ்சேர் தனி நோக்கினன்," "கண்ணுதலான்" என்று சான்றோர்கள் போற்றும் நிலையிற் சிவபிரானுக்குரிய சிறப்பு அடையாளம்.

**10. நீலகண்டம் :**

'விண்ணோர் அமுது உண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டும், இருந்து அருள் செய்யும் பெருந்தகை ஆகிய இறைவனின் நயக்கத்தக்க நனி நாகரிக நலனைப் புலப்படுத்தும்.'

**11. உடுக்கை :**

'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்' என்றவாறு நடராஜ வடிவத்திற்கு எட்டும், அதற்கும் மேற்பட்டும் கைகள் அமைக்கப்படுதல் உண்டு . எனினும் பொதுவாக நான்கு கைகள் எங்கும் காணப்படும். அவற்றில் வலக்கை ஒன்றில் உடுக்கை(டமருகம்) ஏந்தியிருப்பது, ஒலியை எழுப்பி அனுத்துகள்களைத் திரட்டி உலகப் பொருள்களைப் படைக்கும் நோக்குடன் இறைவன் பரநாதத்தைத் தோற்றுவிக்கும் பான்மையினைத் தெளிவிப்பது.

**12. நெருப்பு :**

உலகுயிர்களைப் படைத்த இறைவன், அவைகள் பிறந்தும், இறந்தும் துயருற்று வருந்தும் இளைப்பினை நீக்கும் பொருட்டுச் செய்யும் அழித்தற்றொழிலுக்கு அடையாளம். "அழிப்பு இளைப்பு ஆற்றல்" என்பது சித்தியார். இடக்கை ஒன்றில் நெருப்பு இருக்கும்.

**13. அமைத்த கை :**

இதனை'அபயகரம்' எனவும் வழங்குவர். 'நீவிர் அஞ்சற்க! யாம் நும்மைக் காக்கின்றோம்' எனத் தன் அடியவர்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றும் நிலை. ஆதலின் இவ் வலக்கை காத்தற் றொழிலைக் காட்டும்.

**14. வீசிய கரம் :**

இவ் இடக்கை யானையின் துதிக் கையினைப் போன்று நீண்டு வளைந்து திகழ்தலின் 'கஜஹஸ்தம்' எனவும் வழங்கும். இக் கையின் ஒருவிரல் தூக்கிய திருவடியைக் காட்டிக் கொண்டிருக்கும். 'இந்தத் திருவடியை நம்பித் தொழுக! இஃது உம்மை ஈடேற்றும்' என்பது கருத்து. இக் கருத்தினைக் குமரகுருபரர் பின்வரும் பாடலிற் குறிப்பிட்டிருத்தல் காணலாம்.

*'கூடும் கதி; ஒரு காற் கும்பிட்டாற் போது' மென*
*நாடும் அபிநயத்தை நண்ணிற்றால்! - ஓடியகட்*
*காதனார் காணஒரு கால்காட்டிக் கையமைத்து*
*நாதனார் ஆடும் நடம்.*

**15. எடுத்த திருவடி :**

இஃது இறைவனின் இடது திருவடியாகும். எனவே, அஃது அம்மையின் பகுதிக்கு உரியது. அம்மை அருளே உருவமாகத் திகழ்பவள். "அருளது சத்தியாகும் அரன்தனக்கு" என்பது சாத்திரம். "துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்டு தொண்டர் தம்மை இன்பக்கரை முகந்து ஏற்றும் திறத்தன" என அப்பர் தேவாரம் அறிவிக்குமாறு போல, பிறவிக் கடலில் விழுந்து தத்தளிக்கும் உயிர்களை அக்கடலினின்று எடுத்து மீட்டுச் காப்பாற்றும் அருளற்றொழிலுக்கு உரியது.

*தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்*
*ஆட எடுத்திட்ட பாதம் அன்றோ,*
*நம்மை ஆட்கொண்டதே!*

- திருநாவுக்கரசர்

**16. ஊன்றிய திருவடி :**

இஃது இறைவனின் வலக்கால், ஆண்பகுதிக்கு உரியது. இது முயலகன் என்பவனை மிதித்து அடக்கும் வகையில், அவன் மீது ஊன்றிய நிலையில் அமைந்திருக்கும். நன்கு மிதித்து நசுக்கி விடாமலும், மிதியாமலே விட்டு விடாமலும், இடைப்பட இறைவன் முயலகன் மீது நிற்கின்றான். இந்நிலைமை, மலத்தை முழுதாக அழித்து விடாமலும், மலத்தால் உயிர்கள் பெரிதும் வருந்தாமலும், வினைப்பயன்களை உயிர்கள் நுகரச் செய்ய இறைவன் இயற்றும் மறைத்தற் றொழிலைக் குறிக்கும்

*தோற்றும் துடியதனில்; தோயும் திதி அமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்: - ஊற்றமாய்*
*ஊன்றும் மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்; முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு*

**17. முயலகன் :**

இவனைப்பூதம் குறள் அசுரன் அபஸ்மாரன் முதலிய பெயர்களால் நூல்கள் வழங்கும். முயலகன் ஆணவ மலத்திற்கு அறிகுறி. ஆணவமலம் என்றும் அழிவதில்லை. அதுபோலவே முயலகனும் இறைவன் திருவடிக்கீழ் என்றும் விளங்குகின்றான். இறைவனுக்குப் படிநிலையாய் அமைந்து உதவுதல்

போல. முயலகன் காணப்படுகின்றான் அதுபோல ஆணவ மலமும் உயிர்களின் இறையின்ப நுகர்ச்சிக்கு ஓராற்றாற் காரணமாகின்றது. "இத்தை விளைவித்தல் மலம்'' என்பது காண்க. "மாயாதே தன்சத்தி மாய்ந்து" முத்தி நிலையில் உயிர்களின்பால் ஆணவ மலம் அடங்கிக் கிடப்பது போல, முயலகனும் இறைவனின் திருவடிக்கீழ் "மாயாதே தன் சக்தி மாய்ந்து" கிடக்கின்றான் என்க.

**18. தெற்கு நோக்குதல் :**

எல்லாத் திருக்கோயில்களிலும் நடராஜப் பெருமான் திருவுருவம் தெற்கு நோக்கியே அமைக்கப்பட்டிருத்தல் காணலாம். 'நம்பினவர்க்கு நடராஜன் நம்பாதவர்க்கு எமராஜன்' என வழங்கும் பழமொழிக்க ஏற்ப, இறைவன் தன்னை வழிபடும் அடியவர்கட்குத் தெற்கேயிருந்து வரும் எமராஜனால் யாதொரு துன்பமும் நேராமற் காத்தற் பொருட்டே, தெற்கு நோக்கி ஆடுகின்றான் என்பர் பெரியோர். திருவிளையாடற் புராணம் இயற்றியருளிய பரஞ்சோதி முனிவர், செந்தமிழ் மொழியின் மீதும், தென்றற்காற்றின் மீதும் உள்ள விருப்பம் காரணமாகத் தெற்கு நோக்கி இறைவன் நடனம் புரிகின்றான் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

*கடுக் கவின்பெறு கண்டதும்*
*தென்திசை நோக்கி*
*அடுக்க வந்து உவந்து ஆடுவான்*
*ஆடலின் இளைப்பு*
*விடுக்க, ஆரமென் கால் திரு*
*முகத்திடை வீசி*
*மடுக்கவும், தமிழ் திருச்செவி*
*மாந்தவும் அன்றோ?*

**19. மாதொரு பாகம் நோக்குதல் :**

நடராஜ வடிவம் அமைக்கும் சிற்பக் கலைஞர்கள், அதன் முகமானது சற்றுச் சாய்ந்து அருகே நிற்கும் சிவகாமி அம்மையை நோக்கி ஆடுவது போலத் திருவுருவம் அமைப்பார்கள். இறைவன் அங்ஙனம் அம்பிகையை நோக்கி ஆடுதலைச் சேக்கிழார் சுவாமிகளும்,

*"மாதொரு பாகம் நோக்கி*
*மன்னுசிற் றம்பலத்தே*
*ஆதியும் முடிவும் இல்லா*
*அற்புதத் தனித் கூத்தாடும்*
*நாதனார் கழல்கள்............"* - பெரியபுராணம்

என அருளிச் செய்திருக்க காண்கின்றோம். இங்ஙனம் அம்பிகையை நோக்கிய இறைவன் திருநடம் புரியும் இயல்பு குறித்துக் குமரகுருபரர் அழகுற விளக்கியருள்கின்றார். குழந்தையின் குடர் மருந்தைச் செறிக்கும் ஆற்றல் உடையதன்று என உணர்ந்து, ஒரு தாயானவள் அம்மருந்தினைத் தான் உண்டு, அம் மருந்தின் பயனைத் தன் பாலின் வழியாக அக்குழந்தை பெறும்படி செய்து, அதன் நோய் நீங்குமாறு செய்வித்தல் போல, அம்பிகை நடராசப் பெருமானின் திருநடனத்தைத் தான் தரிசித்து, அதன் பயனை உயிர்கள் அடையும்படி செய்விக்கின்றாள்.

*"பாலுண் குழுவி பசுங்குடர் பொறாதென*
*நோயுண் மருந்து தாய் உண்டாங்கு*
*மன்னுயிர்த் தொகுதிக்கு இன்னருள் கிடைப்ப*
*வையம் ஈன் றளித்த தெய்வக் கற்பின்*
*அருள்சூற் கொண்ட ஐயரித் தடங்கண்*
*திருமாண் சாயல் திருந்திழை காணச்*
*சிற்சபை பொலியத் திருநடம் புரியும்*
*அற்பிதக் கூத்தன்.............."* - குமரகுருபாரர்

**திருநடனச் சிறப்பு:**

இறைவன் கலைகளின் முதல்வன்: கலையுருவினன்; கலைகள் அவனிடமிருந்தே தோன்றுகின்றன. இறைவன் ஒரு சிறந்த பெருங் கலைஞன் என்பதனை நடராஜ வடிவம் நலமுற உணர்த்துகின்றது. 'மனிதன் பேசத் தோடங்கும் முன்னரே பாடத் தலைப்பட்டான்; பாடுவதற்கும் முன்னரே ஆடக் கற்றுக் கொண்டு விட்டான்' என ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். அம்முறையில் நோக்கினால், எல்லாக் கலைகளும் முற்பட்டுப் பழமையும் பெருமையும் முதன்மையும் மிக்கதாக விளங்கும் கலை, நடனக்கலையே என்பது தெளிவாம்.

இத்தகைய நடனக் கலையின் தெய்வமாக அமைந்து, அண்ட வெளியினையே நடன மேடையாகக் கொண்டு, தானே காண்பவனும் நடிப்பவனுமாக நின்று, பல்வேறு வகையான நடனத்

திறங்களை இறைவன் செய்தருளுகின்றான். "ஆட்டு வித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்றபடி வான் வெளியில் கோள்களும் (Planets) மீன்களும் (Stars) முதலிய அண்ட கோடிகள் யாவும் அசைவுற்று இயங்கும் பொருட்டு, இறைவன் தான் அசைந்த யாவற்றையும் இயக்குவிக்கின்றான்.

மேலும் தில்லைச் சிதம்பரத்தில் இறைவன் இத்திரு நடனம் இயற்றுதற்குக் காரணம், அஃது இவ்வுலகின் நடுவிடமாக இருத்தலேயாம்.

*"விண்ணுக்கும் மேல்வியன் பாதலக்கீழ்*
*விரிநீர் உடுத்த*
*மண்ணுக்கு நாப்பண் நயந்து*
*தென்தில்லை நின்றேன்"* - திருக்கோவையார்.

என மணிவாசகர் கூறுகின்றார். இவ்வாறே திருமந்திரம், கோயிற் புராணம், திருவாதவூரடிகள் புராணம் முதலியனவும் கூறுதல் காணலாம்.

இங்ஙனம் இறைவன் நடனம் புரிவது, உயிர்களின் நலங் கருதிப் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களையும் இயற்றுதற் பொருட்டேயாகும். இறைவன் ஐந்தொழில் இயற்றும் திறனை நடராஜ வடிவம் உணர்த்துதலைக் குமரகுருபர சுவாமிகள் அழகுறக் குறிப்பிடுகின்றார்.

*பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்*
*நாமநீர் வரைப்பின் நானில் வளாகமும்*
*ஏனைப் புவனமும் எண் நீங்கு உயிரும்*
*தானே வகுத்ததுன் தருமக் கரமே*
*தனித்தனி வகுத்த சராசரப் பகுதி*
*அனைத்தையும் காப்பதுன் அமைத்தபொற் கரமே*
*தோற்றுபு நின்ற அத்தொல்லுலகு அடங்கலும்*
*ஆற்றுவது ஆரழல் வைத்ததோர் கரமே;*
*ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று*
*ஊட்டுவது ஆகும் நின் ஊன்றிய பதமே*
*அடுத்தஇன் னுயிர்கட்கு அளவில்பே ரின்பம்*
*கொடுப்பது முதல்வ! நின் குஞ்சித பதமே!*
*இத்தொழில் ஐந்தும்நின் மெய்த்தொழில்.......*
- சிதம்பர மும்மணிக் கோவை.

தாண்டவங்கள்

இறைவன் பரதக்கலைநூலை அருளி, அதன் விளக்கமாகச் செய்தருளிய 108 வகை நடனங்கள், சிதம்பரம் கோயிற் கோபுரததின் கண் சிறந்த சிற்பங்களாக வடிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் பின் வருபவை ஐந்தொழில் நிகழ்த்துதள்குரிய தாண்டவங்கள் ஆகும்.

1. முனிதாண்டவம் - படைத்தல்
2. கௌரி தாண்டவம் -
சந்தியா தாண்டவம் } காத்தல்
பிரதோஷ நடனம்
3. உருத்திர தாண்டவம் - அழித்தல்
4. திரிபுர தாண்டவம் - மறைத்தல்
5. ஊர்த்துவ தாண்டவம் - அருளல்

இவ்வாறு இறைவன் இயற்றும் திருநடனங்களுக்காக மிகவும் சிறப்பும் புகழும் பெற்றுத் திகழும் தலங்கள் பின் வருவன ஆகும்.

| தலம் | அம்பலம் (சபை) | தாண்டவம் |
|---|---|---|
| 1. தில்லை | பொன்னம்பலம் | ஆனந்தத் தாண்டவம் |
| 2. மதுரை | வெள்ளியம்பலம் | கௌரி தாண்டவம் |
| 3. திருக்குற்றாலம் | சித்திர சபை | திரிபுர தாண்டவம் |
| 4. திருவாலங்காடு | இரத்தினசபை | காளி தாண்டவம் |
| 5. திருநெல்வேலி | தாமிர சபை | முனி தாண்டவம் |

**சைவ சித்தாந்தம்:**

நடராஜ வடிவம் பற்றிய பல தத்துவ நுட்பங்களைக் குறித்துச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்களுள் ஒன்றும் திருவதிகை மனவாசகங் கடந்தார் என்பார் இயற்றியதும் ஆகிய "உண்மை விளக்கம்" என்னும் உயரிய நூல், பின்வருமாறு அழகுற உணர்த்துகின்றது.

1. இறைவனின் உடுக்கையால் ஆக்கல்; அமைத்த கையால்; காத்தல், ஏந்திய நெருப்பினால் அழித்தல்; ஊன்றிய திருவடியால் மறைத்தல் (திரோதம்) எடுத்த திருவடியால் அருளல் (முத்தி, அனுக்கிரகம்) ஆகிய ஐந்து தொழில்கள் நடைபெறு கின்றன.

2. இறைவன் தனது துடியைக் கொட்டுவதால் ஆன்மாக்களின் மாயையினை உதறுகின்றான்; ஏந்திய நெருப்பினாற் கன்ம மலத்தினைச் சுடுகின்றான்: ஊன்றிய திருவடியால் ஆணவ மலத்தினை அழுத்தித் தேய்விக்கின்றான்; தூக்கிய திருவடியால் உயிர்களைப் பிறவிக் கடலினின்று எடுத்து இன்பக் கடலில் திளைக்கச் செய்கின்றான்; இத்தகைய திரு நடனத்தைக் கண்டு விரும்பித் தொழுபவர்களுக்குப் பிறவித் துயர் நீங்கும்.

***மாயைதனை உதறி, வல்வினையைச் சுட்டு, மலம்***
***சாய அமுக்கி, அருள் தான்எடுத்து - நேயத்தால்***
***ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்***
***தான் எந்தை யார்பரதம் தான்***

3. இறைவன் ஐந்தொழிற்றிருக்கூத்து இயற்றுங்கால், அவனது திருமேனி ஐந்தெழுத்தினாலேயே அமைகின்றது. இறைவன் ''மந்திர சொரூபி'' யாதலின், அவன்றன் திருவுருவம் திருவைந்தெழுத்து மந்திரத்தினாலேயே அமைவதாகின்றது. திருவடியில் ந: வயிற்றில் ம: தோளில் சி: முகத்தில் வ: திருவடியில் ய. இவ்வமைப்பு ''தூல பஞ்சாக்கரம்'' எனவும், ''இலயாங்கம்'' எனவும் கூறப்படும்.

4. இனி சிவயநம என்பது சூக்கும பஞ்சக்கரம் என வழங்கும் அது நடராஜ வடிவத்தில் பின் வருமாறு அமைந்து விளங்குகின்றது! துடியில் சி; வீசும் கரத்தில் வ; அபயகரத்தில் ய; ஏந்துகின்ற நெருப்பில் ந; அடிக்கீழ் முயலகனில் ம. இவ்வமைப்பு ''போகாங்கம்'' எனப்படும். பிற திருவுருவங்களிற் போலத் தனியே பிரித்தெடுக்கக் கூடிய நிலையில் இல்லாமல், நடராஜ வடிவத்திற் பிரிவற இயைந்து கூடியே இருக்கும். திருவாசியானது பிரணவம் ஆகிய ஓங்காரத்தையும், அருத்திருவாசியின் சுடர்கள் 51 எழுத்துக்களையும் சுட்டுகின்றன.

**அண்டமும் பிண்டமும் :**

இனி வேறு பலவும் ஈண்டு எண்ணியுணர்வதற்கு உரியனவாக உள்ளன. உலகம் ஆகிய அண்டம் (Macrocosm) அமைந்திருக்குமாறு போலவே, நம் உடம்பு ஆகிற பிண்டம் (Mcrocosm) அமைந்துள்ளது. இறைவன் அண்ட வெளியில் திருநடனம் போலவே, நம் உடம்பினுள்ளே பிண்டத்தின் கண்ணும் நடனம் புரிந்தருள்கின்றான். அண்டவெளி நடனம் தில்லைச் சிதம்பரத்தில் நிகழ்கின்றது. பிண்டத்தினுள் உடம்பின் கண்ணே நிகழும் நடனம் நம்முடை இருதயத்தில் நடைபெறுகின்றது. அண்டத்துக்குச் சிதம்பரம் போல, பிண்டத்துக்கு இருதயம் ஆகிய நெஞ்சப்பை இலங்குகின்றது. இருதயத்தின் அசைவும் இயக்கமும் நின்று விட்டால், உடல் செயலற்றுப் பிணம் ஆகும். அவ்வாறே தில்லைச் சிதம்பரத்தில் இறைவனின் திருநடனம் நிகழாதொழியின், அண்டங்கள் அசைவற்று இயங்காமல் நின்று அழிந்தொழிந்து போகும்.

**சிதம்பரம் :**

சிதம்பரம் கோயிலமைப்பானது பல தத்துவ நுட்பங்களை உட்கொண்டுள்ளது. நான்கு கோபுரங்கள் , நான்கு வேதங்கள், ஆயிரக்கால் மண்டபம், சஹஸ்ரார கமலம் என யோகிகள் உணரும் ஆயிரம் இதழ்த் தாமரை மலர். அடுத்துள்ள சிவகங்கைத் தீர்த்தம். யோகிகளுக்கு சஹஸ்ரார கமலத்தினின்று ஊற்றெடுத்துப் பெருகும் அமுத வாவி. சந்நிதியின் முன்புள்ள 5 படிகள், திருவைந்தெழுத்துக்கள். 96 பலகணிகள், 96 தத்துவங்கள் அங்குள்ள 4 தம்பங்கள், நான்மறைத் தெய்வங்கள். 28 கம்பங்கள், 28 ஆகமங்கள் சிதம்பர ரகசியம் அருவுருவம். பிரணவ பீடம். விமானத்தின் மேலுள்ள 9 கலசங்கள், நவ சக்திகள், 64 சுழிகள், 64 கலைகள் அங்கு வேயப்பெற்றிருக்கும் 21600 பொன் ஓடுகள், நாம் நாள்தோறும் சுவாசிக்கும் 21600 மூச்சுக்கும், அப்பொன்னோடுகளை இணைத்துள்ள 72000 ஆணிகள் நம் உடலில் இருக்கும் 72000 நாடி நரம்புகள், கனகசபை முன்பு அமைந்துள்ள 18 கம்பங்கள்; பதினெண் புராணங்கள். நமக்கு ஐந்து வகையான உடல்கள் உண்டு. அதனைக் குறிக்கும் முறையிற் சிதம்பரத்தில் ஐந்து சபைகள் அமைந்திருக்கின்றன.

1. இராஜ சபை (ஆயிரங்கால் மண்டபம்) - தூலவுடல்
2. தேவ சபை(பேரம்பலம்) - சூக்குமவுடல்,
3. நிருத்த சபை - குணவுடல்
4. கனகசபை - கஞ்சுகவுடல்
5. சிற்சபை - காரணவுடல்.

**மலர்மிசை ஏகினான் :**

சிதம்பரம் கோயில் இங்ஙனம் வியக்கத்தக்க முறையில் அமைந்திருப்பது போலவே, நம் இருதயத்தின் இயக்கமும் அமைப்பும் கூட மிகவும் வியக்கத்தக்க நிலையினதாக விளங்குகின்றது. இருதயம் ஓய்வு ஒழிவு இன்றி இடைவிடாது இயங்கித் துடித்துக் கொண்டே இருக்கின்றது. இருதயத்தின் துடிப்பினால்தான் இரத்தமானது உடம்பு முழுவதும் சென்று பரவிக் கொண்டும், உடனுக்குடன் மாசு நீங்கித் துய்மையுற்றுக் கொண்டும் வருகின்றது. ஒவ்வொரு நிமிடமும் 12000 மைல் நீளமுடைய நாளங்களின் வழியாக உடலில் இரத்தம் பரவவும், மீண்டும் தன்பால் திரும்பி வந்து சேரவும் ஏற்றபடி, இருதயம் சிறிதும் அயராமல் இயங்கிக் கொண்டே இருக்கின்றது. 24 மணி நேரத்தில் 10000 லிட்டர் அளவு இரத்தத்தைத் தன்னிடமிருந்து வெளியேற்றியும், உள்ளிழுத்தும் ஒருபெரும் இயக்க நிலையம் (Pumping Station) போலப் பணிபுரிந்து வருகின்றது.

வியப்பை விளைவிக்கும் இத்தகைய இருதயத்தையே சிதம்பரம் எனவும், அங்குள்ள ஒருபெருந் தெய்வ ஆற்றலையே கூத்தப்பிரான் எனவும்; அதன் இடைவிடாத் துடிப்பையே நடனம் எனவும் கருதியுணர்ந்து பெரியோர்கள் போற்றியுள்ளனர். ஆசிரியர் திருவள்ளுவர்,

*"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்"*

என்னும் திருக்குறளில் "மலர்மிசை ஏகினான்" என்றது அன்பர்களின் உள்ளம் (நெஞ்சப்பை) ஆகிய தாமரை மலரின்கண் எழுந்தருளி இங்ஙனம் திருக்கூத்து இயற்றும் திறம் குறித்தேயாகும் என்று கொள்ளுதல், இழுக்காகாது.

1. தாமரை முகிழ் போன்ற நெஞ்சப்பை (இருதயம்) - ஓங்காரம்

2. நெஞ்சப்பையில் விளங்கும் மின்னொளி - இறைவன்

3. மின்னொளியின் அசைவு - திருநடனம்

4. நெஞ்சப்பையில் விளங்கும் மூல முதல் ஒலி - திருவடிச் சிலம்பொலி

5. நெஞ்சப்பையின் சுற்றுவடிவு - திருவாசியும், அதன் சுடரொளியும்

**முடிவுரை :**

இங்ஙன மெல்லாம் 'சிந்திப்பரியன, சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவன' என்னும் நிலையில், பற்பல உயர்ந்த தத்துவ நுட்பங்களை யுணர்த்தி நிற்கும் நடராஜ வடிவத்தின் மாட்சிமை, அளவிட்டு உரைப்பரிது!

***உலகமே உருவம் ஆக, யோனிகள் உறுப்பதாக,***
***இலகுபேர் இச்சா ஞானக் கிரியையுட் கரணம் ஆக,***
***அலகிலா உயிர்ப்பு லன்கட்கு அறிவினை ஆக்கி, ஐந்து***
***நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்!***

- சிவஞான சித்தியார்.

என அருள் நந்தி சிவாசாரியார் கூறுமாறுபோல, உலகமே உருவமாகவும், பலவகைப் பிறப்பு வகைகளே உறுப்பாகவும், இச்சை ஞானம் கிரியை என்பனவே உட்கருவிகள் ஆகவும் கொண்டு, ஆருயிர்களுக்கெல்லாம் அறிவினை நெறி முறையே வளருமாறு செய்து, ஐந்தொழில்களை இயற்றி வரும் அருட்பெருந் தெய்வம் ஆகிய நடராஜப் பெருமானின் திருவடிகளை இடைவிடாது அன்புடன் வழிபட்டு, நாம் அனைவரும் நலம்பலவும் பெற்றுய்வோமாக!

# சிலம்போசை செவியுற்ற சீரடியார்கள்

- சிவஞான வ. குமாரவேலு



(நால்வர் நெறி, ஆகஸ்ட் 2010, பக்.17 – 19)

"ஈசன் எந்தை இணையடி நீழல் மாசில் வீணையும், மாலை மதியமும், வீசுதென்றலும், வீங்கிள வேனிலும் மூசுவண்டறை பொய்கையைப் போன்று" குளிர்ச்சியைத் தந்து உயிர்களின் பிறவித் தணலைத் தணிக்கும் என்பார் திருநாவுக்கரசர். இறைவனின் போகமாம் பூங்கழல்கள் உயிர்களின் ஐம்புலன்களுக்கும் இன்பம் தருவனவாகும்.

ஒலிதரு கயிலை உயர்கிழவோன், எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி மண்ணும் விண்ணும் வானோர் உலகும் பல்லுயிரெல்லாம் பயின்றனனாகி தில்லை மூதூர் ஆடிய திருவடி வேறு வேறு உருவும் வேறு வேறு இயற்கையும் நூறு நூறாயிரம் இயல்பினனாக இப்புவனியை உய்யக் கூறுடை மங்கையுடன் தமக்குப்பல திருத்தலங்களில் பல்வேறு நிலைகளில் தூவண மேனியின் திருப்பொலிவினைக் காட்டியதாக மாணிக்கவாசகர் கீர்த்தித் திருவகவலில் கூறியுள்ளார். கண்ணுதல் பெருமானின் கணக்கிலாத திருக்கோலத் தினைக் கண்டு களித்த அடிகள் வாதவூரினில் திருச் சிலம்பொலியைக் கேட்டு இன்புற்ற நிலையினை

*"வாதவூரினில் வந்து இனிது அருளி*
*பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்".....*
என்று அருளிச் செய்துள்ளார்.

சிலம்போசையைக் கேட்டலே திரு நடனத்தின் இன்பம் நுகர்தற்கு வழியாகும் என்பதை அப்பெருமானே

*"சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பு ஒலிக்கே*
*ஆராத ஆசை அதுஆய் அடியேன் அகம் மகிழ*
*தேர் ஆர்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடம்செய்*
*பேரானந்தம் பாடிப் பூவல்லிக் கொய்யாமோ"*
என்று பாடிப் போற்றியுள்ளார்

தில்லை நடராசன் திருச்சிலம்பொலித் திருவுடன் தம்மை ஆட்கொண்டருளியதாக வாதவூரர்

*'பொருந்தும் இப்பிறப்பு இறப்பு இவை நினையாது*
*பொய்களே புகன்று போய்க்*
*கருங்குழலினார் கண்களால் ஏறுண்டு*
*கலங்கியே கிடப்போனைத்*
*திருந்து சேவடிச் சிலம்பலை சிலம்பிடத்*
*திருவோடும் அகலாதே*
*அருந்துணையாய் ஆண்டு கொண்டு அருளிய*
*அற்புதம் அறியேனே"* என்று பாடியுள்ளார்

கழறிற்றறிவார் எனும் சேரமான் பெருமாள் நாயனார் நாள்தோறும் சிவவழிபாட்டின் நிறைவில் நட்டம் பயின்றாடும் நாதனின் திருச்சிலம்போசைக் கேட்டு மகிழ்ந்து வந்தார் என்பதை சேக்கிழார் பதிவு செய்துள்ளார்.

*"வாசத் திருமஞ்சனம் பள்ளித்தாமம் சாந்தம் மணித்தூபம்*
*தேசிற் பெருகும் செழுந்தீபம் முதலாயினவும் திருஅமுதும்*
*ஈசற்கேற்ற பரிசினால் அருச்சித்து அருள எந்நாளும்*
*பூசைக்கு அமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார்*
*சிலம்பின் ஒலி அளித்தார்."*

சேரமான் பெருமாள் நாயனார் தில்லை சென்று பொன்னம்பலத்தில் நடமாடும் ஆடல் வல்லானின் சீர்வணச்சேவடி தொழுது "பொன் வண்ணத்தந்தாதி" என்ற பாமாலைப்பாடி ஏத்தினார். தமிழோடு இசை கேட்டு இன்புற்ற இறைவன் இதற்குப் பரிசிலாகப் பொன்னம்பலவாணன் தன் திருச்சிலம்பொலி கேட்கச் செய்தான் என்கிறார் தெய்வப்புலவர் சேக்கிழார்.

*"தம்பிரானார்க்கு எதிர் நின்று தமிழ்ச் சொல் மாலை கேட்பிக்க*
*உம்பர் வாழ் நடமாடும் ஒருவர் அதற்குப் பரிசில் எனச்*
*செம்பொன்மணி மன்றிலெடுத்த செய்ய பாதச் திருச்சிலம்பின்*
*இம்பர் பாட எழுந்த ஒலி தாமும் எதிரே கேட்பித்தார்"*

பரம்பொருளின் ஈறாம் இணையடிகளைப் பற்றி நிற்பவர்க்கு அவரது அகச்செவியில் கேட்கும் அளவில் 'ஓசை' ஆகவும், அவரது உணர்வுக்கும் புலனாகும் சிலையில் 'ஒலி' ஆகவும் இயங்குகின்றது.

உழவாரப் படைவேந்தர் அப்பரடிகள் "ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே'' என்று அருளிச் செய்துள்ளார். சைவ சித்தாந்த சாத்திர நுல்களுள் முதலாக உள்ள திருவுந்தியார்

*"திருச் சிலம்பு ஓசை ஒலி வழியே சென்று*
*நிருந்தனைக் கும் பிடு என்று உந்தீ பற*
*நேர்பட அங்கே நின்று உந்தீ பற"*

- திருவியலூர் உய்யவந்த தேவர்

திருவுந்தியார் பாடலுக்கு ஒத்த கருத்தமைந்த பாடல் ஒன்று திருக்கடவூர் உய்யவந்த தேவர் அருளிய திருக்களிற்றுப்படி யாரில் பொதிந்துள்ளது.

*"ஓசை எலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்*
*ஓசை வழியே சென்று ஒத்த ஒடுங்கின் - ஓசையினில்*
*அந்தத் தானத்தான் அரிவையுடன் அம்பலத்தே*
*வந்து ஒத்தான் நத்தான் மகிழ்ந்து"*

தேன் புக்க தண்பனை சூழ்தில்லை அம்பலத்தில் குருரனாய் வந்து செய்கின்ற அருளையே நடவரசனாய் நின்று செய்கின்றார் என்றார் திருமூலர்.

*"ஆடிய காலும் அதிர்சிலம் போசையும்*
*பாடிய பாட்டும் பலவான நட்டமும்*
*கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்*
*தேடியுளே கண்டு தீர்ந்தற்ற வாறே"*



அருள்மிகு கோமுத்தீசுவரர் — அருள்தரு ஒப்பிலாமுலையம்மை

# சத்தி வழிபாடு

- திருவாவடுதுறை ஆதீனப் புலவர், சைவத்தமிழ் நாவலர், பேராசிரியர் தா.ம.வெள்ளைவாரணம்



(இக்கட்டுரை ஆசிரியர், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்ற பின் திருவாவடுதுறை ஆதீனப் புலவராக இருந்து பல நூல்களை எழுதியமையுடன் ஆதீன சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மைய பேராசிரியராகவும் பணியாற்றியவர்கள்)

**முன்னுரை :**

தமிழகத்தின் நிலப்பரப்பு குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்று ஐந்து திணைகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி வாழ் குறவர்கள் முருகனையும், பாலை வாழ் வேடர்கள் கொற்றவையையும், முல்லைவாழ் இடையர்கள் திருமாலையும், மருதம் வாழ் உழவர்கள் இந்திரனையும், நெய்தல் வாழ் பரதவர்கள் வருணனையும் தெய்வமாக வழிபட்டனர். தமிழகத்தின் ஐவகை நிலத்திலும் உலகின் மற்ற பாகங்களிலும் சிவலிங்க வழிபாடு நிகழ்ந்ததைப் புதைபொருள் ஆய்வு தெரிவிக்கிறது. இதனால் தொடக்க காலத்தில் சிவவழிபாடும், முருக வழிபாடும், கொற்றவை வழிபாடும், திருமால் வழிபாடும் நிகழ்ந்தன என்பதும் அவற்றுள் சக்திவழிபாடும் ஒன்றாக இருந்தது என்பதும் அறியப்படும். பலவற்றுள் ஒன்றாய் இருந்த சக்தி வழிபாடு வர வர எப்படி விரிந்து வளர்ந்தது என்பதை இக்கட்டுரை ஆய்வு செய்கிறது.

**சங்ககாலம் :**

சிலப்பதிகாரத்தில் வேட்டுவரி என்னும் காதையில் கொற்றவை வழிபாடு விரிவாகக் கூறப்படுகிறது. கொற்றவை ஐயை என்ற பெயராலும், அவளுடைய கோயில் ஐயைக் கோட்டம் என்ற பெயராலும் வழங்கியது அறியப் படுகிறது. மற்றும் மதுரையில் சிந்தரதேவி கோயில் என்ற பெயரில் சரஸ்வதிக்கு ஒரு கோயில் இருந்ததை மணிமேகலை கூறுகிறது. மற்றும் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் எழுப்பியதும், பத்தினிக்கடவுள் மழை பெய்விக்கும் கடவுளாகத் தமிழகத்திலும் ஈழத்திலும் விழா எடுத்ததும் சிலப்பதிகாரத்தில் கூறப்படுகின்றன. இதனால் சங்ககாலத்தில் சத்திவழிபாடானது கொற்றவைக்கும் சிந்தாதேவிக்கும் பத்தினித் தெய்வத்துக்கும் ஆக மூன்று வகையாக விரிந்ததை அறியமுடிகிறது.

**இருண்டகாலம் : (களப்பிரர் ஆட்சிகாலம்)**

இக்காலத்தில் காரைக்காலம்மையார், திருமூலர் என்பவர்கள் வாழ்ந்தனர். அம்மையார் தமது பாடல்களில் திருவாலங்காட்டுக் கூத்தப் பெருமான் காளியோடு வாதிட்டுக் கூத்தாடியதைக் குறிப்பிடுகிறார். அங்ஙனம் வாதிட்டுக் கூத்தாடிய காளிக்குத் தனிக்கோயில் இருக்கிறது. எனவே அம்மையார் காலத்தில் காளி வழிபாடு நடந்ததை ஊகிக்கலாம். மற்றும் திருமூலர் யோக மார்க்கம் தழுவிய ஞானி ஆகலின் அவர்தமது திருமந்திரத்தில் சக்திபேதம் திருபுரைச்சக்கரம் சாம்பவி சக்கரம் நவாக்கரி சக்கரம் போன்ற பகுதிகளில் பல்வேறு சக்திகளைக் குறிப்பிட்டுள்ளார். எனவே இக் காலத்தில் காளி வழிபாடும் வேறுசில சக்தி வழிபாடுகளும் பெருகிநடந்திருப்பதை அறிய முடிகிறது.

**பல்லவர் காலம் :**

இக்காலத்தில் சம்பந்தர், அப்பர் சுந்தரர் என்னும் தேவாரமூவர் வாழ்ந்துள்ளனர் இம்மூவரும் சிவவழிபாட்டை முக்கியமாகக் கொண்டவர்கள். ஆயினும் சத்தியைச் சிவத்தோடு சேர்த்துப் பாடியவர்கள் சத்தியைத் தனியாக வைத்துப் பாடல் பாடவில்லை. சம்பந்தர் காஞ்சிபுரம் சென்றபோது ஏகம்பரை வழிபட்ட பிறகு காமக்கோட்டத்தையும் வழிபட்டார் என்றும் பெரியபுராணம் குறிப்பிடுகிறது. இதனால் இவ்விருவரும் சத்தியை வழிபட்டனர் என்று கூறக்கூடாது. சிவத்தோடு சத்தியையும் சேர்த்து வழிபட்டார்கள் என்றுதான் கூறவேண்டும். நாவுக்கரசர் காஞ்சிபுரம் சென்றபோது காமகோட்டத்தை வழிபட்டதாகப் பெரியபுராணத்தில் குறிப்பு எதுவும் இல்லை. இதனால் சத்திக்குத் தனிகோயில் ஏற்பட்டுவிட்டது.

என்பதும் ஆயினும் மக்கள் சிவத்தையும் சத்தியையும் சேர்த்தே வழிபட்டிருக்கிறார்கள் என்பதும் அறிய வருகின்றன.

மாணிக்கவாசகர் "சிவமே பரம்பொருள்" என்னும் கோட்பாடுடையவர். ஆயினும் அவர் பாடிய திருவெம்பாவையானது "சத்தியை வியந்தது" என்று விளக்கம் கூறப்பட்டிருக்கிறது. எனவே மாணிக்கவாசகர் சிவத்தோடு சத்தியையும் சேர்த்து வழிபட்டவர் என்பது தெரியவருகிறது.

**சோழர்கள் காலம் :**

பிற்காலச் சோழர்கள் கொற்றவை, காளி, நிகும்ப சூதனி முதலான சத்திகளுக்குத் தனிக் கோயில்கட்டி வழிபட்டுள்ளனர். மற்றும் முதற் குலோத்துங்கனது கலிங்கநாட்டு வெற்றியைப் புலப் படுத்தக் கலிங்கத்துப் பரணி பாடப்பெற்றது. இப்பரணியில் காளிகோயிலும் காளி வழிபாடும் விவரிக்கப்பட்டுள்ளன. இவ்வாதாரங்களால் சத்தியை வழிபட்டதும் இவ்வழிபாடு கோர மானதாக இருந்ததும் தெரிகிறது. இவர்களின் வழிபாடு சாக்தநெறியைச் சார்ந்த வழிபாடாகப் புலப்படுகிறது.

**சாக்தநெறி :**

"சத்தியே முழுமுதற் கடவுள்" என்ற கோட்பாடு உடைய மார்க்கம் சாந்த நெறியாகும். சாக்தர்கள், "சிவனைவிடச் சக்தி உயர்ந்தவள்" என்னும் கொள்கை உடையவர்கள். இதற்கேற்ற மகாகாளி, சிவனைக்கீழே தள்ளிச் சிவனது மார்பில் வலக்காலை ஊன்றி, இடக்காலைப் பூமியில் ஊன்றி நிற்கும் தோற்றமுள்ளவளாக வழிபடப்படுவாள். பிரமன் திருமால் உருத்திரன் மகேஸ்வரன் சதாசிவன் என்ற ஐவரையும் ஐந்து ஏமத்தைகளாக அடுக்கி அதன்மேல் காளி உட்கார்ந்திருக்கிறாள் என்று சாக்தம் பேசும். இதனைப் "பஞ்சப் பிரேதாஸன்யை நம:" என்ற காளிகா சகஸ்ர நாமம் குறிக்கிறது.

சாக்தநெறியில் சாந்த மார்க்கம் கோரமார்க்கம் என்று இருபிரிவுகள் உள்ளன. ராஜராஜேஸ்வரி, திரிபுரசுந்தரி, புவனேஸ்வரி, கமலாத்மிகா தேவி (கஜலெட்சுமி) என்போர் சாந்த ரூப சக்திகளாக வழிபடப்படுகிறார்கள். சண்டி, காளி, பைரவி, பிரத்யங்கராதேவி முதலியோர் கோரரூப சக்திகளாக வழிபடப்படுகிறார்கள்.

**சக்திகளுக்குத் தனிக்கோயில்கள் :**

மதுரையில் சிந்தாதேவிக்கோயில் என்ற பெயரில் சரஸ்வதிக்குத் தனிக்கோயில் இருந்தது. தற்காலத்தில் திருவாரூர் மாவட்டம் கூத்தனூரில் சரஸ்வதிக்குத் தனிக்கோயில் உள்ளது. திருவேங்கடத்தை அடுத்த திருச்சானூரில் பத்மாவதி அம்மன் கோயில் என்ற பெயரில் இலக்குமிக்குத் தனிக்கோயில் உள்ளது. மைசூரில் சாமுண்டீஸ்வரிக்குத் தனிக்கோயிலும், மருவத்தூரில் ஆதி பராசக்திக்குத் தனிக்கோயிலும், ஐயாவாடி என்ற ஊரில் பிரத்யங்கராதேவிக்குத் தனிக் கோயிலும், நேபாளத்தில் குஹ்யேஸ்வரிக்குத் தனிக்கோயிலும் திருக்குற்றாலத்தில் சித்தேஸ்வரி க்குத் தனிக்கோயிலும் உள்ளன.

கிராமங்கள் தோறும் மாரியம்மன், காளியம்மன், அங்காளம்மன், வீரியம்மன், பிடாரி, சப்தமாதர், ரேணுகாதேவி, தீப்பாய்ந்தாள் அம்மன் என்போர் கோயில்கள் காணப்படுகின்றன. சாதாரண வாழ்க்கை உடைய மக்கள் இக்கோயில் களில் மிகுந்த நம்பிக்கையோடு வழிபட்டு வருகிறார்கள். இதனால் சக்திவழிபாடு மக்களிடம் மிகுதியாகக் காணப்படுவதை அறியமுடிகிறது. சத்தி வழிபாட்டிலும் சிறுதெய்வங்களான சத்தி வழிபாடுதான் மிகவும் பரவலாகக் காணப்படுகிறது.

**முடிவுரை :**

"எந்த தெய்வத்தை யார் வணங்கினாலும் அந்த வணக்கம் சிவனையே சாரும்" என்று நாராயண உபநிடதம் கூறுகிறது. "எப்பரி சாயினும் ஏத்து மின்ஏத்தினால் அப்பரிசு ஈசன் அருள்செய்யுமாறே" என்று திருமூலர் கூறி உள்ளார். "ஆர் ஒருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்" என்று அப்பர் கூறினார். "யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்" என்று சிவஞான சித்தியார் கூறுகிறது. இங்ஙனம் உபநிடதமும், தோத்திரமும் ஒருமித்து ஒத்துக்கொண்டபடி யார் எந்தச் சத்தியை வைத்து வழிபட்டாலும் அங்கே சிவனே அனுக்கிரகம் செய்வார் என்ற உறுதியை அனுசரித்து சத்தி வழிபாட்டில் ஏற்றத்தாழ்வு காணாமல் சம நோக்கமாக இருப்போமாக.

# சைவம்

- திருமுருக. கிருபானந்தவாரியார்.



(திருவாவடுதுறை ஸ்ரீகோமுக்தீசுவரர் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் (1972) பக்.29ல் வெளிவந்தக் கட்டுரை)

சைவமென்பது சிவசம்பந்தமுடையது. தில (எள்) சம்பந்தமுடையது தைலம். சிலா சம்பந்தமுடையது சைலம். அதுபோல் சிவசம்பந்த முடையது சைவம். எனவே சிவம் என்று உளதோ அன்றே சைவம் உளது. ஆகவே தொன்மையும், நன்மையும் படைத்தது. ஏனைய சமயங்கள் ஒவ்வொரு குருமார்களால்; தோன்றியவை; அதனால் அந்தச் சமயங்கள் அந்தந்த குருமார்களின் பெயர்களாலேயே அமைந்துள்ளன.

சைவ சமயம் எல்லாச் சமயங்களையும் தனக்கு அங்கமாகக் கொண்டு தாயகமாக விளங்குவது. எந்தச் சமயத்தையும் புறக்கணிக்காது தழுவி நிற்கும் சமரசமுடையது. ஒரு தாய் தன் குழந்தைகளைத் தழுவுவது போல் என அறிக. இச்சமயத்தின் பெருமையை அனுபூதிமானாகிய தாயுமானார் அருளிச்செய்த தண்டமிழ் வாக்கால் அறிக.

*சைவ சமய மேசமயஞ்*
*சமயா தீதப் பழம்பொருளை*
*கைவந் திடவே மன்றுள்வெளி*
*காட்டு மிந்தக் கருத்தைவிட்டு*
*பொய்வந் துழலுஞ் சமயநெறி*
*புகுத வேண்டாம் முத்திதரு*
*தெய்வ சபையைக் காண்பதற்குச்*
*சேர வாருஞ் சகத்தீரே.*

*இயல்பென்றுந் திரியாமல் இயம மாதி*
*என்குணமுங் காட்டியன்பால் இன்ப மாகிப்*
*பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்*
*பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி*
*மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி*
*மற்றங்க நூல்வணங்க மௌன மோலி*
*அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங்கத்தில்*
*அமர்ந்ததுவை திகசைவம் அழகி தந்தோ.*

*அந்தோஈ ததிசயமிச் சமயம் போலின்*
*றறிஞரெல்லாம் நடு அறிய அணிமா ஆதி*
*வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்*
*வைத்திருந்த மாதவர்க்கும் மற்றும் மற்றும்*
*இந்த்ராதி போகநயம் பெற்ற பேர்க்கும்*
*இதுவன்றித் தாயகம்வே றில்லை இல்லை*
*சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்*
*தக்கநெறி இந்நெறியே தான்சன் மார்க்கம்.*

சிவம் என்பது அன்பின் வடிவமாகும். அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே என்பர் திருமூலர். எனவே சைவ சமயம் என்பது அன்புச் சமயமாகும்.

*எவ்வுயிரும் என்னுயிர்போல்*
*எண்ணி இரங்கவும் நின்*
*தெய்வ அருட்கருணை*
*செய்யாய் பராபரமே.*

என்பதுதான் சைவ சமயத்தின் உயிர்நாடி.

எல்லா உயிர்களும் ஈசன் தங்கியிருக்கும் கோயில்களே ஆகும். எனவே ஈசன்மேல் பட்ட அடி எல்லா உயிர்களின் மேலும்பட்டதென்று மகா பாரதமும், திருவிளையாடற் புராணமும் கூறுகின்றன. விஜயன் வில்லால் அடித்த அடி அணுமுதல் அகிலாண்டம் வரை, புழு முதல் உருத்திரன்வரை எல்லோர் மீதும் எல்லாவற்றின் மீதும் பட்டது. பாண்டியன் வையையாற்றின் கரையில் வந்திக்கு ஆளாகவந்த பரமனைப் பிரம்பால் அடித்தபொழுது அவ்வண்ணமே எங்கும் அவ்வடிபட்டது. இதனால் இறைவன் எல்லா உயிர்களிலும் உயிருக்கு உயிராய் நிறைந்திருக் கின்றான் என்பதனை அறிக.

பரஞ்சோதி முனிவர் அடியிற்கண்ட இரண்டு அழகிய பாடல்களில் இதனை விளக்குகின்றனர்.

*வன்னல்தன் கோபங்கண்ட*
*மாறுகொள் கையரஞ்சித்*
*தள்ளரும் சினத்த ராகித்*
*தடக்கைதொட்; டீர்த்துப்பற்றி*
*உள்ளொடு புறம்கீழ்மேலாய்*
*உயிர்தொறும் ஒளித்துநின்ற*

*கள்வனை இவன்தான்வந்தி*
*யானெனக் காட்டிநின்றார்.*
*கண்டனன் கனன்று றுவேந்தன்*
*கையில்பொற் பிரம்பு வாங்கி*
*அண்டமும் அளவிலாத*
*உயிர்களும் ஆக மாகக்*
*கொண்டவன் முதுகில்வீசிப்*
*புடைத்தனன் கூடை யோடு*
*மண்டனை உடைப்பில் கொட்டி*
*மறைந்தனன் நிறைந்த சோதி.*

ஆகவே சைவ சமயத்தைக் கடைப் பிடிப்போர்கள் எனது யான் என்ற இரண்டையும் தள்ள வேண்டும்.

எவரும் யாவும் யான் எனக் கொள்ள வேண்டும். இதுதான் எல்லா நூல்களின் முடிந்த முடிவு. ஆன்றோரின் அனுபவ உண்மை. இந்த அனுபவம் வாய்க்கப்பெறாதவர் வானுயர் கோலம் கொள்ளினும் தேனெனும் கலைகள் கற்பினும் பயனில்லை. இதனைப் பரம அனுபவ ஞானியாகிய அருணகிரிநாதர் இரண்டு வரிகளில் உபதேசிக் கின்றனர்.

*எனதி யானும் வேறாக எவரும் யாதும் யானாகும்*
*இதைய பாவ னாதீதம் அருள்வாயே - திருப்புகழ்.*
*யான் என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்*
*குயர்ந்த உலகம் புகும்.*

எனத் திருவள்ளுவரும் திருவாய் மலர்ந் தருளுகின்றார். எனவே சைவசமயிகள் எனது யான் என்ற புறப்பற்றையும் அகப்பற்றையும் அறவே களைந்து இறைவனைத் தன்னுள் கண்டு அது அதுவாய் ஒன்றுபட்டு நின்று அவ்விறைபணியில் வழுவா நின்று மும்மலங்களும் நீங்க இறைவன் செம்மலர் நிழலில் ஓங்கிப் பேரானந்தப் பெருவாழ்வில் நிளைத்தல் வேண்டும்.

*அவனே தானே யாகிய வந்நெறி*
*ஏக னாகி யிறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை யின்றே*

என்று சிவஞானபோதம் 10-வது சூத்திரம் உபதேசிக்கின்றது.

ஆகவே சைவசமயம் அருமையும் எளிமையும் உடையது. இதில் உள்ள உண்மைகள் எல்லாரும் ஒப்ப முடிந்தது. முடிந்த முடிவு சைவ சித்தாந்தம் ஆகும்.

இப்புனிதமான மனிதப் பிறப்பெடுத்த நாம் அனைவரும் சைவசமய நெறி நின்று ஈடேறும் வண்ணம் இச்சமய உண்மைகளை உபதேசித்த குரவர்கள் நால்வர்கள்.

தாவில் சராசர மெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் திரு அவதாரம் புரிந்தார் என்ற திருவாக்கின்படி சம்பந்தர் முதலிய நால்வர்கள் சிவம் பெருக்க வந்தவர்கள். அவர்கள் பாடித்தந்த தேவார திருவாசகங்களும் ஏனைய ஆன்றோர்கள் பாடிய அருள் நூல்களும் ஆக 12 திருமுறைகள். தோத்திரங்கள், மெய்கண்டார் முதலியோர்கள் நம்பொருட்டு உணர்த்தியருளிய சாத்திரங்கள் பதினான்கு. தோத்திரங்கள் 12. சாத்திரங்கள் 14. சைவ சமயிகள் இவற்றைப் பெற்றிப் பூசித்து வாசித்து பெருநலம் பெறவேண்டும்.

எங்கும் சிவத்தைக் காணவேண்டும். தவத்தைச் செய்யவேண்டும். எம்மதத்தையும் பழிக்கக்கூடாது.

*விரிவிலா அறிவி னார்கள்*
*வேறொரு சமயஞ் செய்து*
*எரிவினாற் சொன்னா ரேனும்*
*எம்பிராற் கேற்ற தாகும்.*

என்பது அப்பர் திருவாக்கு.

எச்சமயத்தினர் எத்தேவரை வணங்கினாலும் அத்தேவராக நின்று அருள்புரியும் முழுமுதற் பரம்பொருள் சிவமேயாகும்.

யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே, மாதொரு பாகனார் தாம் வருவர் என்பது சிவஞானசித்தியார். ஆதலால் அமைதியுள்ள மனதுடன் சைவசமயிகள் வாழ வேண்டும். சைவத்திற்கே உரியபண்பு, பணிவு, தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயஞ்சாரும் ஊழ்பெறல் அரிது என்கிறார் அருணந்திதேவர்.

சிவமே பொருள் ; அவரைச் சேரும் நெறி அன்பே நமக்குப் பகை பிறவியே. அருட் கண்ணாலே சிவத்தைக் கண்டுகளிக்க வேண்டும்.

*ஓதி நூல்கோடி யுணர்ந்து உணரார்கள்*
*பாதி வெண்பாவில் பகரக்கேன் - ஆதி*
*சிவமே பொருள் அதனைச் சேரும் நெறியன்பே*
*பவமே பகை அருளாற் பார்.*

# சைவம் வளர்த்த தமிழ் இலக்கியங்கள்

-செந்தமிழ் வாரிதி முனைவர் இரா. செல்வக்கணபதி,சென்னை.



(இக்கட்டுரை ஆசிரியர், சைவ சமயம் குறித்து மாபெரும் கலைக்களஞ்சியம் தயாரிக்கும் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு செயலாற்றி வருபவர். தம்முடைய சொற்பொழிவுத்திறனால் பல்லாண்டுகள் சைவத்தமிழ் விரிவுரைப் பணிகளை ஆற்றி வரும் சிறப்புக்குரியவர்)

### தமிழ் இலக்கியப் பகுப்புகள் :

கடந்த 2500 ஆண்டுகளில் தமிழில் தோற்றம் கொண்டு வளர்ந்தமைந்த இலக்கியங்களைத் தமிழ் இலக்கியங்கள் எனக் கூறலாம். எழுந்த காலம், மற்றும் இலக்கியத்தின் யாப்பியல் மற்றும் கருப்பொருள் முதலியன தொடர்பாகத் தமிழ் இலக்கியங்களை வேறு வேறாகப் பிரித்து ஆராயும் முறை நிலவி வருகிறது. சங்க இலக்கியம் எனப் பாகுபடுத்தல் ஒருவகை. யாப்பியல் மற்றும் கட்டமைப்பு வகையில் பெருங்காப்பியம், சிறு காப்பியம் எனப் பகுத்தல் மற்றொரு வகை. தமிழ்நாட்டு மக்களால் வழிபடப் பெறும் கடவுளர்களை மையப்படுத்தி எழுந்த இலக்கியங்களைச் சமய இலக்கியங்கள் என்றல் வழக்கு. மேற்குறித்த சமய இலக்கியங்களில் ஒருவகை சிவனைக் குறித்து எழுந்த சைவ இலக்கியங்கள். இரண்டாவது திருமாலைப் பாடு பொருளாகக் கொண்ட வைணவ இலக்கியங்கள். இவற்றுள் சிவனை மையப்படுத்தி எழுந்த சைவ இலக்கியங்களே இக்கட்டுரையில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

### 16 ஆயிரம் சைவத் தமிழ் நூல்கள் :

உலக மொழிகளோடு ஒப்பிடுகையில், எண்ணிக்கை, காலப்பழமை, யாப்பியல், இசை வடிவங்கள் கொண்ட தமிழ் இலக்கியப் பரப்பே பரந்ததும், விரிந்ததும் ஆகும். தமிழில் கடைச்சங்க காலம் முதற்கொண்டு, 20ஆம் நூற்றாண்டின் இறுதி வரை தோற்றம் கொண்ட பல்வேறு வகையான இலக்கியப் பரப்பில், அறுபது விழுக்காட்டு இலக்கியங்கள் சைவ சமயம் குறித்து எழுந்தன என்பது நன்கு நினைவு கூரப்பட வேண்டியதாகும். சைவ சமயக் களஞ்சியம் ஒன்றைத் தயாரிக்கும் எனது கடந்த ஐந்தாண்டுக் கால முயற்சியில், சைவ சமய இலக்கியங்களின் தொகை பதினாறு ஆயிரத்தை நெருங்குவது வியப்பாக நின்றது. இவற்றில், எண்பது விழுக்காட்டு நூல்கள் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றுள் இடம் பெற்ற பாடல்களின் தொகை பல இலட்சங்களைத் தாண்டும்.

### தொல்காப்பியம் முதல் சிலம்பு வரை :

கால வரிசைப்படி, சைவ சமயம் தந்த தமிழ் இலக்கியங்களை இச்சிறிய பதிவில் அடையாளப் படுத்த மட்டுமே இயலும். விரிவான ஆய்வுகளுக்கு வாய்ப்பு இல்லை. 2750 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில், வெற்றி தருபவளாகக் கொற்றவை குறிக்கப் படுகிறாள். 'கொடி நிலை கந்தழி' என்று தொடங்கும் நூற்பாவில், முருகன் பற்றிய குறிப்புள்ளதாக ஒரு சிலர் கருதுகின்றனர். தனிப் பாடல்களாக எடுத்துக் கொண்டால், எட்டுத் தொகையுள் ஒன்றாகிய பரிபாடலில், இசை வடிவாக முருகன், காடுகிழாள் (காளி) குறித்தெழுந்த சைவ-தனி-இசைப் பாடல்களைக் காண முடிகிறது. சைவம் தந்த தனி நூலாக, முதல் கொடையாகக் கிடைத்துள்ள நீண்ட வரிகளால் அமைந்தது நக்கீரனாரின் திருமுருகாற்றுப்படை. சிறிய இடைவெளிக்குப் பின், கி.பி. 3ஆம் நூற்றாண்டினதாகக் கொள்ளத்தக்க இளங் கோவடிகளின் சிலப்பதிகாரத்தில், சிவ-சக்தியாகிய உமையைப் போற்றிப்பாடும் தனிக் காதையாக வேட்டுவ வரியும், முருகனைப் புகழ்ந்து பாடும் 'குன்றக்குரவை'யும் அமைந்தன.

**முதல் சிற்றிலக்கிய வடிவங்கள் :**

கி.பி.7ஆம் நூற்றாண்டுக்கு முன்னதாகச் சங்க இலக்கிய அகப்பாட்டு நெறியில், சிவனைப் பாடுபொருளாகக் கொண்டு கல்லாடம் என்ற அரிய நூல் தோன்றியது. ‘கல்லாடம் கற்றவனிடம் சொல்லாடாதே’ என்பது பழமொழி. முதல் கணபதி வாழ்த்து இந்நூலில் இடம் பெற்றது. தொடர்ந்து காரைக்கால் அம்மையாரின் மூத்த திருப்பதிகங்கள் இரண்டும், அற்புதத் திருவந்தாதியும், திரு இரட்டை மணிமாலையும் தோற்றம் கொண்டன. பதிகம் (10 பாடல்களைக் கொண்டது). அந்தாதி - (ஒரு பாடலின் நிறைவை அடுத்த பாடலின் தொடக்கமாகக் கொண்டு 100 பாடல்களில் அமைவது). இரட்டை மணிமாலை (இரண்டு வகை யாப்புகள் அமைந்த பாடல்களை மாறிமாறி அடுக்கி 20 பாடல்களில் நிறைவிப்பது) என்ற புத்திலக்கிய வடிவங்கள், அம்மையார் தமிழுக்குத் தந்த இலக்கியக் கொடைகளாகும்.

**தமிழ் ஆகமம் - திருமந்திரம் :**

‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற தொடருக்கு அடுத்துத் தமிழ் இனப்பெருமை பேசும், ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்ற சமய-சமரசத்தை முன்வைத்த திருமூலரின் திருமந்திரம் சைவம் தந்த தமிழ் இலக்கியக் கொடைகளுள் சிறப்பாகக் குறிக்கத் தக்கது. ‘என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே’ எனக் கட்டியம் கூறித் தொடங்கும் திருமூலர், சைவத்தைத்தோத்திர நெறியிலிருந்து சாத்திர நெறிக்கு எடுத்துச் சென்றார். கி.பி. 14ஆம் நூற்றாண்டுக் காலப் பகுதியில், அறிவாராய்ச்சிக்கு உட்படுத்தக் கூடிய அறிவியல் பூர்வமான, ‘சைவ சித்தாந்தம்’ என்ற பெருநெறி தோன்ற வித்திட்டவர் திருமூலர். தென்னாட்டு அறிஞர்களால் வடமொழியில் படைக்கப்பட்ட ஆகமங்களை, மொழிபெயர்ப்புச் செய்யாமல், தமிழ் ஆகமமாகத் திருமந்திரம் படைக்கப் பட்டது. அறம், யோகம், மருத்துவம், தத்துவம் எனத் தமிழில் எழுந்த ஒரு சைவக் கலைக்களஞ்சியமாகவே திருமந்திரம் நிற்கிறது. உணர்வுகளை ஒதுக்கி வைத்துவிட்டு, இந்நூலை அறிவாராய்ச்சிக்கு உட்படுத்தினால் கிடைக்கும் புதையல்கள் அன்னைத் தமிழுக்கு அளப்பரிய செல்வங்களை வழங்கும்.

**500 ஆண்டுப் பொற்காலம் :**

கி.பி.650 காலப்பகுதி தொடங்கி, 550 ஆண்டுக் காலம் தமிழ்மொழியைச் சைவ சமயமே ஆட்சி செய்தது. கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை அளப்பரிய சிறப்புடைய சைவப் பனுவல்களும், சிற்றிலக்கியங்களும், பெருங்காப்பியங்களும் தோன்றின. பிற்காலச் சோழர்களின் எழுச்சியும், நால்வர் பெருமக்களின் வருகையும், சைவம் வழித் தமிழ்மொழிக்கு விலைமதிப்பற்ற ஆபரணங்களை அணிவிக்கக் காரணமாயின. தமிழை அழிக்க முயன்ற பௌத்தர்களின் முயற்சியையும், தமிழர் உயர் கலைகளைச் சீரழிக்க முயன்ற சமணர் முயற்சிகளையும் எதிர்த்துப் பெரும் சமயப் போராட்டம் நிகழ்த்திய சைவர்கள், வெற்றிவாகை சூடி, தமிழ் அன்னைக்கு அரியணைத் தந்தனர். ‘நாளும் இன்னிசையால் தமிழ் வளர்க்கும் ஞானசம்பந்தன்’, ‘நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கு அரையன்’ என்ற சுந்தரர் பதிவுகள் அன்னார் இருவரும் சைவத்தின் பெயரால் தமிழ் வளர்த்த திறம் உரைத்தன.

**சைவத் திருமுறைகள் :**

மூவர் தேவாரம், சங்க காலத்தில் நிலவிப்பின் அழிவுற்ற தமிழ் இசை வடிவங்களாகிய 103 பண்களில் 22 பண்களை மீட்டெடுத்தது. புத்திலக்கிய வடிவங்களை ஞானசம்பந்தர் படைத்தளித்தார். தாண்டகம் நாவரசர் கொடையாக அமைந்தது. உலகச் சமய இலக்கியங்களுள் நெஞ்சத்தை உருக வைக்கும் அனுபவ வெளிப்பாடாகத் திருவாசகத்தை மாணிக்கவாசகர் தமிழுக்குக் கொடையாக வழங்கினார். ஒன்பதாம் திருமுறை இசைப் பாமாலையாய் வந்தது. 11ஆம் திருமுறையில் புத்திலக்கிய வடிவுங்களில் 40 சிற்றிலக்கியங்கள் இணைந்தன.

**சைவ சித்தாந்தம் :**

சைவம் தமிழ்மொழிக்குத் தந்த விலைமதிப்பற்ற கொடைகளுள் ஒன்று சைவ சித்தாந்தம். விவேகானந்தருக்கு அது, ஜே.எம்.நல்லசாமி பிள்ளையால் மொழிபெயர்த்துத் தரப்பட்டபோது, அவரை அது வியக்க வைத்தது.

மூவர் தேவாரம், திருமந்திரம் தந்த ஒளியில் மெய்கண்டார் படைத்த சிவஞான போதமும், அதற்கு சிவஞான யோகிகள் வரைந்த பேருரையும். அளவற்ற தமிழர்களின் நுண்மாண் நுழை புலனுக்குக் கட்டியம் கூறி நின்றன. இந்நூலுக்கு அருணந்தி சிவாசாரியார் எழுதிய செய்யுள் வடிவிலான உரை நூலே, சிவஞான சித்தியார் என்பது. தமிழின் பெருமை பேசும் ஆறு நூல்களில் இதுவும் ஒன்றாகக் குறிக்கப்பட்டது. மெய்கண்ட சாத்திரங்களும், பண்டார சாத்திரங்களும் தமிழ் மக்கள் கற்றுணர்ந்திருந்த வடமொழி மற்றும் தருக்க அறிவுக்குச் சான்று கூறுவன.

**சைவம் தந்த அறக்கொடைகள் :**

வள்ளுவத்தையும், பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள ஏனைய நூல்களையும் வழிமொழிந்து, சைவநெறி நின்ற ஔவையார், குமரகுருபரர், சிவப்பிரகாசர், உலகநாதர் போன்றோர் அரிய எளிய அறநூல்களைச் சைவத்தின் பெயரால் வடிவமைத் தனர். கச்சியப்பரின் கந்தபுராணம், பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம், சிவஞான சுவாமிகளின் காஞ்சிப் புராணம் என்பன தமிழன்னைக்குச் சூட்டப்பெற்ற விலைமதிப்பற்ற ஆபரணங்கள். சிற்றிலக்கியம், தனிப்பாடல் வரிசையில் சித்தர்கள் ஆற்றிய பங்கும் மகத்தானது. ஒட்டக்கூத்தர், புகழேந்தி, பட்டினத்தார், தாயுமானார், சிவப்பிரகாசர், குமரகுருபரர், சைவத்திருமடத்துத் தலைவர்கள், அருளாளர்கள் வழங்கிய நூல் தொகுதிகள் கணக்கில் அடங்காதன.

**பல்வகை இலக்கியச் செல்வங்கள் :**

சிவநெறி வழாது நின்று முருகனைப் பாடுபொருளாகக் கொண்டு, சந்தத் தமிழ் தந்த அருணகிரியாரின் திருப்புகழ் ஓர் தமிழ் அற்புதம். முருகனை மையப் பொருளாக்கி வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் நெஞ்சுருக்கும் கவிமழைப் பொழிந்தனர். ஈழத்து அறிஞர்களின் சைவப்பணிகள் தனியே ஆராயத்தக்கன. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பிற்காலக் கம்பராகவே திகழ்ந்தார். சீர்காழி மூவராகிய முத்துத்தாண்டவர், மாரி முத்தாப்பிள்ளை, அருணாசலக் கவிராயர் என்பார் தமிழில் சிவனை மையப்படுத்தி இனிய பதங்களையும், கீர்த்தனைகளையும் வழங்கித் தமிழ் இசைக்கு ஆக்கம் சேர்த்தனர். கோபால கிருஷ்ணபாரதி, சுத்தானந்த பாரதி முதலியோரின் சைவப் பங்களிப்பும் குறிக்கத்தக்கன.

**விருப்பு - வெறுப்பற்ற ஆய்வு :**

இன்னும் சைவத் தமிழ் இலக்கியங்கள் படைத்த நூறு நூறு கவிஞர்களும், ஆயிரக் கணக்கான நூல்களும் தமிழன்னை செம்மொழி சிம்மாசனம் ஏறத்துணை நின்றன. அவற்றை எல்லாம் விரிப்பின் பெருகும். சைவம் வளர்த்த தமிழை ஒதுக்கிவிட்டுத் தமிழ் மொழியின் சீர்மையை நிலை நாட்ட முயல்வது நிரம்பாது. விருப்பு வெறுப்புகளை ஒதுக்கி வைத்துவிட்டுத் தமிழ் அறிஞர்களும், ஆர்வலர்களும், பல்துறை அறிஞர்களும் சைவ இலக்கியங்களை ஆய்ந்தால் அவை தரும் பெருமிதம் கடல் அளவுக்கும் மேல் என்பது புலனாகும். காலமாற்றங்களால் யாவும் சரியாக மதிப்பிடப்படவே செய்யும் என்று நாம் நம்பலாம்.

*தேவர் குறளும் திருநான் மறை முடிபும்*
*மூவர் தமிழும் முனிமொழியும் - கோவைத்*
*திருவாசகமும் திருமூலர் சொல்லும்*
*ஒருவாசகம் என்று உணர்.*

**சைவத்தின் சமூகப் பெருமிதப் பதிவுகள் :**

சைவத்தமிழ் இலக்கியங்களில் காணப்படும் கீழே தரப்பட்டுள்ள அரிய தொடர்கள். இத்தகு நூல்களின் சமயங்கடந்த சமூக நாட்டத்தைப் பறைசாற்ற வல்லன.

*'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'*
*'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'*
*'யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி'*
*'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல்*
*வேறு ஒன்று அறியேன் பராபரமே'*
*'என் கடன் பணி செய்து கிடப்பதே'*
*'வான் முகில் வழாது பெய்க; மலிவளம் சுரக்க'*
*'சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்*
*கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்'*
*'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'*

இத்தகு தொடர்களும், இவை போல்வன பலவும், சமயம் சார்ந்த பண்பாட்டில் செழித்த அரிய தமிழ்க் கொடைகள்.

# திருக்குறள் உணர்த்தும் தவநெறி

- முனைவர் ச. சாம்பசிவனார், மதுரை.



**(இக்கட்டுரை ஆசிரியர், தமிழ்மாருதம் என்னும் இதழை நடத்தி வருபவர். தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் சைவ நூல்களிலும் நீண்டகாலம் பயிற்சி உடையவர்)**

**முன்னுரை :**

தமிழர்செய் தவப்பயனாய்க் கிடைத்த ஓர் அரிய நூல், திருக்குறள். உலகத்தார் உள்ளங்களை அளந்து உரைக்கும் தமிழ்க்கருவூலம். இத்தகு உயர்நூல், தவநெறி குறித்து விரிவாகக் கூறுகின்றது. இது குறித்து ஒரு சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**தவம் ஒரு விளக்கம் :**

திருக்குறளில் அறத்துப்பாலில் இல்லறவியலை அடுத்து அமைந்துள்ளது 'துறவறவியல்'. இதன் கண் முதல் அதிகாரம் அருளுடைமை; அடுத்து உள்ளது புலான் மறுத்தல்; மூன்றாவது அதிகாரம் தவம். இவ்வதிகார முன்னுரையில் பரிமேலழகர் குறிப்பிடுவது வருமாறு :

*அஃதாவது மனம் பொறிவழி போகாது*
*நிற்றற்பொருட்டு விரதங்களான்*
*உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயினிலை*
*நிற்றலும், மாரியினும்*
*பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய*
*செயல்களை மேற்கொண்டு அவற்றால்*
*தம்முயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிற*
*உயிர்களை ஓம்புதல்,*
*புலால் மறுத்து, உயிர்கள்மேல் அருள் முதிர்ந்துழிச்*
*செய்யப்படுவதாகலின்*

இது புலால்மறுத்தலின்பின் வைக்கப் பட்டது.

பல்வேறு உரைகளையெல்லாம் தொகுத்து எழுதிய ச.தண்டபாணி தேசிகர் 'இவ்வுரைகளாற் போந்த கருத்து' எனப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"தவம் - மன அடக்கம். அது நிலைக்க விரதம், உடலை ஒறுக்கும் முயற்சிகள் இவைகளை மேற்கொள்ளுதல் என்பதே. இங்ஙனம் தடுத்தலும் ஒறுத்தலுமே தவமாகாது. தெய்வ வழிபாடுகளை ஒருமனப்பட்டு ஊன்றிப் பயிறலே தவம் என்னும் மணக்குடவர் உரை சிறந்தது!"
(திருக்குறள் உரைக்களஞ்சியம். பக்.69,70)

**'தவம்' என்பதற்குத் தேவநேயப் பாவாணர் தரும் விளக்கம் வருமாறு :**

'அஃதாவது உடம்பு கொழுத்தால் மனம் ஐம்புல இன்பத்தையே நாடுமாதலாலும், மதயானைபோல் அடங்காதாதலாலும் அதை அடக்கி இறைவன்மேல் செலுத்துவதற்குத் தோதாக உண்ணா நோன்பாலும், தட்பவெப்பம் பொறுத்தல் முதலிய கடும் பயிற்சிகளாலும் உடம்பை வாட்டுதல். உடம்பை ஒடுக்கி அடக்குவதில் புலால் மறுத்தல், மென்மையானதாகவும், தவம் வன்மையானதாகவும் இருத்தலால் இஃது அதன்பின் வைக்கப்பட்டது'.

'தவம்' என்ற சொற்கே 'எரித்தல்' என்றுதான் பொருள். உடலை எரித்தல்போல் வருத்தும் துறவறப் பயிற்சி! (தமிழ்மரபுரை, ப.163)

தவம் என்பதற்கு உரைகாரர் பலரும் பலவிதமாக உரைப்பர்.

"ஊண் உறக்கம் குறைத்தல், உடல்நோயைத் தாங்குதல், தேவர் வழிபாடு என்ற மூன்றே தவம்" என்பார் மணக்குடவர். நெறியைச் சொல்வது தவம் என்பார் பரிதியார். "தவம் என்பது நோன்பு என்பார்" வ.உ.சிதம்பரனார்.

**தவநெறி :**

தவம் என்பதையே 'தவநெறி' என்று சிறப்பாகச் சொல்வது மரபு.

**'உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே'** (துறையூர் பதிகம்:1-11) என்பார். தவத்தின் மேன்மையைச் சுட்டுவது 'நெறி' எனும் சொல்!

நக்கீரரின் இறையனார் களவியலுரையில் வரும் ஒரு கருத்து இவண் குறிக்கத்தகும்.

***'காமம் நன்றாமாறும் உண்டு என்று கூறி காரணம் கூறும்பொழுது மக்கள் பாட்டினாலும் வலியாலும் வனப்பாலும் பொருளாலும் பெறலாவதன்று; தவம் செய்தால் பெறலாம். என்னை? வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப் படும் என்பதாகலான்!'***

(இறையனார் அகப்பொருளுரை, சூத்.1 உரை : ஆதாரம் திருக்குறள் உரைக் களஞ்சியம், ப.85) இவற்றால் தவநெறியின் உயர்வு ஓரளவு அறியலாகும்.

**திருக்குறள் உணர்த்தும் தவநெறி :**

திருவள்ளுவர், தவம் என்ற சொல்லைத் தவம் என்ற அதிகாரத்தில் 6 குறட்பாக்களில் கூறியுள்ளார். அன்றியும், குறள் எண்கள் 19, 27, 295, 812 ஆகியவற்றிலும் கையாண்டுள்ளார்.

திருவள்ளுவர் கூறிய தவம் அதிகாரப் பத்துப் பாக்களைப் பரிமேலழகர் பின்வருமாறு பிரிவாகப் பிரித்து உரை காண்பார் :

1. தவத்தினது இலக்கணம் : 1
2. தவத்தது சிறப்பு : 2 முதல் 5 வரை
3. தவம் செய்வாரது உயர்ச்சி : 6 முதல் 9 வரை
4. தவம் செய்யாதார்க்கு இம்மை இன்பமும் இல்லை என அவரது தாழ்வு : 10

***"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை***
***அற்றே தவத்திற் குரு" (1)***

இதற்குப் பரிமேலழகர் கூறும் உரையாவது: "தவத்தின் வடிவு உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும், தாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமையும் ஆகிய அவ்வளவிற்று, மற்றுள்ளனவெல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின் அற்றே எனத் தேற்றேகாரம் கொடுத்தார்".

இதற்குப் பரிதியார் கூறும் உரைநயம் எண்ணத்தக்கது :

***"பிறர் துன்பம் கண்டு மனம் பொறாமையும், தான் பிறர்க்குத் துன்பம் செய்யாமையுமே தவத்தின் உண்மை வடிவு!"***

ச. தண்டபாணி தேசிகர், "தன் துன்பத்தைத் தான் பொறுத்துக் கொள்வதென்பது பெரிய தவமாகாது. இவ்வகையில் பரிதியார் உரை மிகப் போற்றத்தக்கது" என்று கூறுவது ஏற்புடைத்து எனலாம்!

***"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்***
***மற்றை யவர்கள் தவம்' (3)***

***"இல்லறத்தையே பற்றிநிற்பார், துறந்தார்க்கு உண்டியும் மருந்தும்***
***உறையுளும் உதவலை விரும்பித் தாம் தவம்செய்தலை மறந்தார்போலும்!"***

என்பார் பரிமேலழகர்.

தவத்தை மேற்கொள்ளாதாரை எள்ளிந கையாடுகிறார் வள்ளுவர் என்று எண்ணத் தோன்றுகின்றது. எனினும் தண்டபாணி தேசிகர் கூறுவது இவண் எண்ணத்தகும்.

"இல்வாழ்வார் துறவிக்கு உண்வளிப் பதற்காகத் தவத்தை மேற்கொண்டாரல்லர் என்ற குறளின் கருத்து இல்வாழ்க்கையின் இன்றியமை யாமையையும் அவர்களுக்கு உரிய கடமை உணர்ச்சியையும் கருணைப் பெருக்கையும் காட்டும்" என்பார் அவர்!

***"ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்***
***எண்ணின் தவத்தான் வரும்" (4)***

'தம் அறத்திற்குப் பகையாய் அழிவுசெய்தாரைக்கெடுத்தலும், அதனை உவந்தாரை உயர்த்தலுமாகிய இவ்விரண்டையும் தவம் செய்வார் நினைப்பாராயின் அவர் தவ வலியால் அவை அவர்க்கு உளவாம்' என்பர் பரிமேலழகர்.

தவம் மிகமிக வலிமையானது என்பதைக் கூறும் குறட்பா இது. ஆனால் தவம் செய்வார் இத்தகைய கேட்டினைச் செய்யலாமா என்ற கேள்வி பிறக்கும். தேசிகர் கூறுவது வருமாறு :

"துறவில் ஒழுகுவார்க்கு உற்றாரும் மாற்றாரும் இல்லையாதலானும் வேண்டுதல் வேண்டாமை யில்லாதார்க்குப் பிறர்க்கு ஆக்கம் அளித்தலும் அழிவு தேடுதலும் இல்லை; ஆனால் தாம் மேற்கொண்ட துறவறத்திற்கு இடையூறு செய்வாராயின், இவ்வறம் வளர்தற் பொருட்டு, பகையாய் அழிவு செய்தாரைக் கெடுத்தலும் உவந்தாரை ஆக்கலும் எனும் உரைகள் சிறந்தன". (திருக்குறள் உரைக்களஞ்சியம் ப.80)

சிலப்பதிகாரத்தில் மதுரைக்கு வரும்வழியில் கோவலனையும் கண்ணகியையும் தவறாகக் குறித்துப் பேசிய வம்பப்பரத்தையர்க்கு, உடன்வந்த மூதாட்டி கவுந்தியடிகள், முள்ளுடைக் காட்டில் முதுநரி யாகு! (சிலம்பு : 1:10:232) என்று சாபமிட அவர்களும் அவ்வாறே ஆயினர் என்பதை இளங்கோவடிகள் குறிப்பிடுவது இவண் சுட்டத்தகும்.

தவம் செய்வார், இறைவன் அருளால் பேராற்றல் பெற்றோராவர்! அவர்கள் கூறுவன பலிக்கும் என்பது ஒரு புறமிருக்க அவர்கள்பால் ஏனையோர் மிகமிகக் கவனமாக இருத்தல் வேண்டும் என்பதே கருத்து.

*"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்*
*ஈண்டு முயலப் படும்"* (5)

"முயன்றால் மறுமைக்கண் தாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம். ஆதலால் செய்யப்படுவதாய தவம் இம்மைக்கண் அறிவுடையோரால் முயலப்படும்'' என்பது பரிமேலழகர் உரை.

"தவப்பயன் இம்மைக்கு ஆகும் என்பாரும் மறுமைக்கே ஆகும் என்பாரும் என இரு திறத்தினர் உரையாசிரியர்கள். இம்மை மறுமை இரண்டிற்கும் ஆம் எனல் ஏற்புடைத்து" என்பார் தேசிகர்.

*"தவம்செய்வார் தங்கருமம் செய்வார்மற் றல்லார்*
*அவம்செய்வார் ஆசையுட் பட்டு"* (6)

இதற்குப் பரிமேலழகர் கூறும் உரை : தம் கருமம் செய்வாராவார் துறந்த தவத்தைச் செய்வாராவார். அவரையொழிந்த, பொருள் இன்பங்களைச் செய்வார் அவற்றின்கண் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார்!

இதற்கு மேலும் அவர்தரும் விளக்கமாவது : "அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் (தான், பிறஉயிர், தெய்வம்) உயிரின் வேறாய உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது, தவத்தினைச் செய்ய, பிறப்பு, பிணி மூப்பு, இறப்புக்களால் அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர், ஞானம் பிறந்து வீடு பெறும் ஆகலின் தவம் செய்வாரைத் 'தம் கருமம் செய்வார்' என்றும், கணத்துள் அழிவதாய சிற்றின்பத்தின் பொருட்டுப் பல பிறவியும் துன்புறத்தக்க பாவம்செய்து கோடலின், அல்லாதாரை அவம் செய்வார் என்றும் கூறினார்!".

*"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்*
*சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"* (7)

இதற்குப் பரிமேலழகர் தரும் உரையாவது,

'தீயின்கண் ஓடும் பொன்னுக்கு அது சுடச்சுடத் தன்னொடுகலந்த குற்றம் நீங்கி ஒளி மிகுமாறுபோலத் தவம் செய்ய வல்லார்க்கு அதனால்வரும் துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாசம்நீங்கி ஞானம் மிகும்!'

இவ்வுரை சிறந்தது என்பார் தேசிகர்.

*"தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய*
*மன்னுயிர் எல்லாம் தொழும்"* (8)

பரிமேலழகர் உரையாவது :

"தன்னுயிரைத் தான் தனக்கு உரித்தாகப் பெற்றவனை, பெறாதனவாகிய மன்னுயிர்கள் எல்லாம் தொழும்!"

தனக்குரித்தாதல் = தவமாகிய தன்கருமம் செய்தல் ..... சாபமும் அருளும் ஆகிய இரண்டு ஆற்றலும் உடைமையின் தொழும் என்றார்!

இதற்கு மணக்குடவர், தன்னுயிர் தான் அறப்பெறுதல் என்பது தன் உயிரானது தான் என்று கருதும் கருத்து, அறப்பெறுதல் அதாவது அகங்காரம் ஒழிதல்.

பாவாணர் ஐம்புலன்களையும் தவத்தான் வெல்லுதல் என்பார்.

வ.உ.சிதம்பரனார், 'தனது உயிர் தான் என்பது நீங்கப் பெற்றவனை' அஃதாவது அகங்காரம் அற்றவனை என்பர்.

இவருரை சைவசித்தாந்தக் கருத்துக்கு அரண்செய்வதாக உள்ளது.

வ.உ.சி குறிப்பிடும் அகங்காரம் என்பது சைவசித்தாந்தம் கூறும் ஆணவமலம் ஆகும்!

***"செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா***
***அம்மலம் கழீஇ....."***

சிவஞானபோதம் (12)

என்பது மெய்கண்டார் அருள்வாக்கு, ஈண்டு மலம் என்பது ஆணவம்.

எனவே திருக்குறளில் வரும் 'தான் அறப் பெற்றானை' என்பதற்கு 'அகங்காரம் அதாவது ஆணவம் முழுவதுமாக நீக்கியவனை' எனல் மிகப் பொருத்தம்.

***"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்***
***ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"*** (9)

இதற்குப் பரிமேலழகர், தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப்பட்டார்க்குக் கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம் என்று உரை கூறுவர்.

புலவர் குழந்தை, 'கூற்றத்தைத் தப்புதலாவது தவத்தால் உடல் வலுப்பெற்று நீண்டநாள் உயிரோடிருத்தல்' என்பார்!

இராமலிங்கனார் 'கூற்றம் குதித்தல் என்பது எமனைப் பற்றிய அச்சம் எம வாதனைகளை அகற்றல்' என்பார்.

இவ்வுரை பொருத்தமாகத் தோன்றுகின்றது.

***"இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்***
***சிலர்பலர் நோலா தவர்"*** (10)

இதற்கு பரிமேலழகர் உரை வருமாறு : "உலகத்துச் செல்வர்கள் சிலராக, நல்கூர்ந்தார் பலராதற்குக் காரணம் யாதெனில், அது தவம் செய்வார் சிலராக இது செய்யாதார் பலராதல், செல்வம் நல்குரவு என்பன ஈண்டு அறிவினது உண்மை இன்மைகளையும் குறித்து நின்றன".

இதற்குத் தேசிகர் தரும் விளக்கம் "செல்வர் வறியர் எனப் பொருள் காண்பது முற்றிலும் தவறு! அதற்குரிய காரணங்கள்; துறவி செய்யும் தவத்திற்கும் செல்வத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அவன் தவம் செய்வது, செல்வத்தை விரும்பியன்று! செல்வமில்லாதவர் எல்லாரும் தவம் செய்யாதார்களே எனின் எல்லாரும் துறவு பூண்டு தவம் செய்தால் தான் ஏழையாகப் பிறக்காமல் பணக்காரனாக முடியும் என்றாகி இல்லறம் என்பதே வேண்டாத ஒன்றாகிவிடும்... எனவே பரிமேலழகர் கூறுவதுபோல் அறிவின்மை உண்மைகளைக் குறிப்பது பொருத்தம்!"

---

கார்முகில் போற் கொடை புரிகை வள்ள லாகிக்
காசினியெல் லாம்புரக்கு மரசர் தாமும்
ஏர்மருவு சீர்த்தி நெடு வாணா ளின்பம்
எழில் வீரம் பலகலைகள் எளிதின் மேவிப்
பேர்மருவு வானுலகும் புவியும் போற்றப்
பேரின்பம் இம்மையிற் பெற்றுய்வோர் தாமும்
சீர்மருவு மநாதி முத்தித் சேத்திரஞ் சேர்
சிவ மாசிலா மணியைத் தெரிசித்தோரே.

-துறைசைப் புராணம்

# கண்டறியாதன கண்டேன் (குருவே சிவம்)



- சிவபூஜைச் செல்வர். த.வேல்மணி, சங்கரன்கோவில்.

(இக்கட்டுரை ஆசிரியர், சங்கரன்கோவில் சைவசித்தாந்த சபை இணைச் செயலாளர். சாத்திரங்கள் திருமுறைகளில் ஈடுபாடு மிக்கவர். திருமுறைகளுக்கு ஆர்மோனியம் வாசிப்பதில் திறன்மிக்கவர். கவிதை இயற்றுவதில் வல்லவர்)

மாதாடு பாகமில்லை மதிய ணிந்த
மலர்க்கொன்றைச் சடையேறு கங்கை யில்லை
தீதோடத் தரித்தகறைக் கண்ட மில்லை
திருநுதலிற் கண்ணுமில்லை ; எல்லாம் கரந்தும்
காதாடு குண்டலங்கள் காட்டிக் கொடுக்கக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
தாதாடு தார்மார்பர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

புரந்தரனும் பூவுலகை அளந்த மாலும்
பூவேறு கோனாதித் தேவர் தாமும்
உரங்காட்ட முனைத்திருக்க ஒண்ணகை யாலே
ஒன்னார்புரம் மூன்றெரித்த அருட்டி றம்போல்
குறுநகைமுன் மும்மலங்கள் மடங்கி நிற்கக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
குருமணிஎன் குலதெய்வம் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

ஆரணங்கள் ஆகமங்கள் அனைத்தும் உணர்ந்தும்
அறிவடங்க வில்லையென்ற நால்வ ருக்கும்
காரணன்முக் கண்ணனன்று ஞான போதம்
கூறாமல் காட்டிநின்ற கோலம் போலப்
பூரணவெண் மதிமுகத்தோ டமைந்த கரத்தில்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
தாரணிந்த தடமார்பர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

தாதையைத்தா ளறவீசித் தாள்ப ணிந்த
தவப்புதல்வர் தனையெடுத்துப் பரிசத் தாலே
பாதகத்தின் பயனாகப் பதம ளித்த
பரிசினைப்போல், திருவளரும் மலர்க்க ரத்தால்
கோதாட்டி எனையெடுத்து நீறு பூசக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
போதார்புனை முடியழகர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

தாலிவிற்றுக் குங்குலியப் பணிபெ ருக்கித்
தளர்வுற்ற தொண்டருக்கு வளம்பெ ருக்கிப்
பாலடிசில் உண்பாயென் றொருவா சகத்தால்
பருவரலை ஒழித்ததுபோல், திருமட மெங்கும்
பாலகர்க்கும் முதியோர்க்கும் பாலமு தூட்டக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
கோலமணிக் குழையழகர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

திங்கள்சேர் சடையாரைக் காணா முன்னே
திருமலையில் ஓடிவந்த திண்ண னார்மேல்
அங்கணனார் அருள்நோக்கம் எய்தி னார்போல்
எங்கள்சபை ஒளிவளரும் நிலைய மாக
அங்கிருந்தே அருள்நோக்கம் எய்தி நிற்கக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
பொங்கொளிவெண் நீற்றழகர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

உவமையில்லாக் கலைஞானம் உலக முய்ய
உணர்வரிய மெய்ஞ்ஞானம் இரண்டும் குழைத்துத்
தவமுதல்வர்க் கருள்புரிந்த தன்மை போலத்
தமிழ்வழியில் கலைஞானப் பயிற்சி, மாயப்
பவமகற்றும் சித்தாந்தப் பயிற்சி யருளக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
சுவையூறும் சொல்லழகர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

திருத்தொண்டத் தொகைபாடச் சுந்த ரர்க்கும்
தொண்டர்புகழ் விரித்துரைக்கச் சேக்கி ழார்க்கும்
கருத்தாகி அடியெடுத்துக் கொடுத்த தைப்போல்
கோகழிஎன் குருமணியே நினைத்த போதே
அருத்திமிகும் அடியனுக்கும் விருத்தம் ஈயக்
கண்டறியா தனகண்டேன் துறைசை யாளும்
குருமரபின் சீர்வளர்சீர் சிவப்பிர காச
தேசிகரே சிவமென்று கண்டு கொண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாவடுதுறை
# அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்
# பூசை முறைகளும் விழாச் சிறப்புக்களும்



- புலவர், சி. மகாலிங்கம், முதுகலையாசிரியர் (பணி நிறைவு) திருவிடைமருதூர்.

(இக்கட்டுரை ஆசிரியர்,தமிழ்ப்பணிச் செம்மல், சிவநெறித்தொண்டர் முதலிய பட்டங்கள் பெற்றவர், வரலாற்றில் திருவிடைமருதூர் எனும் நூல் எழுதியுள்ளார். பல மாநாடுகளிலும், கருத்தரங்குகளிலும் பங்கேற்றும், ஆன்மீக இதழ்களுக்குச் சிவநெறிக் கட்டுரைகள் வழங்கியும் உள்ளார்கள்.)

அநாதி முத்தி க்ஷேத்திரம் என்றும் நவகோடி சித்தர்புரம் என்றும் பல்வேறு சிறப்புப் பெயர் கொண்ட திருத்தலம் திருவாவடுதுறை ஆகும்.

**ஆகமவழிபாடு ;**

இத்திருக்கோயில் பூசைமுறைகள் காமிக ஆகமமுறைப்படி நடைபெறுகின்றன. ஸ்ரீ புத்திரதியாகேசர் பெருமானுக்கு மட்டும் திருவாரூரில் நடப்பது போன்று மகுடாகம முறைப்படி நடைபெறுகின்றன.

**நித்திய பூஜைகள் :**

இத்திருக்கோயிலில் நாள்தோறும் ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன.

| | |
|---|---|
| உஷத்காலம் | - காலை 6 மணிக்கு |
| காலசந்தி | - காலை 10.30 மணிக்கு |
| உச்சிக்காலம் | - பகல் 12.00 மணிக்கு |
| சாயங்காலம் | - மாலை 5.30 மணிக்கு |
| இரண்டாம் காலம் | - மாலை 7.30 மணிக்கு |
| அர்த்த ஜாமம் | - இரவு 8.30 மணிக்கு |

இரண்டாங்கால பூசையில் இவ் வாதீனத்துத் தம்பிரான் சுவாமிகள் திருக்கோயிலுக்கு எழுந்தருளுவார்கள் இரண்டாங் காலம் தரிசனம் செய்து திருமடத்திற்குச் சென்ற பின் திருமடத்தில் ஆதீன ஆன்மார்த்தமூர்த்தி அருள்திரு ஞானமா நடராசப் பெருமானுக்கும் திருமாளிகைத் தேவருக்கும், ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகளுக்கும் இரவு பூசை நடைபெறும் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் குருவாரத்திலும் விசேஷ தினங்களிலும் திருக்கோயிலுக்கு எழுந்தருளி வழிபாடாற்று வார்கள்.

**மாதாந்திர பூஜைகள் :**

ஒவ்வொரு மாதப்பிறப்பன்றும் இத்திருக்கோயிலில் ருத்ராபிஷேகம் நடைபெறும்.

மாதந்தோறும் அசுபதி நட்சத்திரத்தன்று ஸ்ரீ நந்தியெம்பெருமானுடன் ஸ்ரீ திருமூலர் பெருமான் உள்பிரகாரம் வலம் வருவார் அப்போது திருமூலர் திருச்சன்னதியில் மூலவருக்கும் உற்சவருக்கும் ஒருசேர தீபாராதனை நடத்தப்பெறும்.

மாதந்தோறும் இருஅஷ்டமி திதிகளில் ஸ்ரீபைரவருக்கு விசேட பூஜைகள் நடைபெறும்.

மாதந்தோறும் இரு பிரதோஷபூசைகள் நடத்தப்பெறும் ஆடிமாதம் மூன்றாம் வெள்ளிக்கிழமை திருவிளக்கு பூஜை சிறப்பாக நடத்தப் பெறுகிறது.

ஆடி மாதம் பூர்வபக்ஷ சப்தமி திதியில் ஸ்ரீ அணைத்தெழுந்தநாயகர் பஞ்சமூர்த்திகளுடன் கோமுத்தி தீர்த்தத்தில் தீர்த்தவாரி அருளுவார்.

ஆவணி மாதத்தில் விநாயக சதுர்த்தி விழா அன்று திருக்கோயிலில் உள்ள விநாயகர்க்குச் சிறப்பு பூஜைகள் நடத்தப்பெறும் புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாவும் விஜயதசமியன்று அம்பு போடுதல் வைபவமும் நடைபெறும் நவராத்திரியின் போது தினந்தோறும் அம்பாளுக்கு சகஸ்ரநாம அருச்சனை நடைபெறும். ஐப்பசி மாதத்தில் சூரசம்ஹாரம் நடைபெறும். அப்போது

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி வீதிஉலா வருவார். இம்மாதத்தில் திருமூலர் திருநட்சத்திரமாகிய ஐப்பசி அசுபதியில் திருமந்திரம் முற்றோதல் நடைபெறும்.

கார்த்திகை மாதத்தில் நான்கு சோமாவரங்களிலும் விசேஷ அபிஷேக ஆராதனையும், சங்காபிஷேகமும் நடை பெறுகிறது. திருக்கார்த்திகையன்று பஞ்சமூர்த்திகள் வீதி வலம் வருவார். சொக்கபனை கொளுத்தப்படும்.

மார்கழி 10 நாட்களும் திருவெம்பாவை உற்சவம் சிறப்பாக நடைபெறும். திருவாதிரையன்று ஸ்ரீ நடராஜர் ஸ்ரீ மாணிக்கவாசகர் வீதிஉலா நிகழும். தைமாதம் பிரமோற்சவம் மாசிமாதம் மகாசிவராத்திரி மகா சிவராத்திரியன்று நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக நடைபெறும். மூன்றாம் காலத்தில் ஸ்ரீ சந்திரசேகரர் வீதிஉலா வருவார் ஸ்ரீ தியாகராஜர்க்கு சிறப்பு வழிபாடும், திருவிழாவும், ஸ்ரீ முசுகுந்த சக்கரவர்த்திக்குப் புத்திரப் பேறு வேண்டி வழிபட, புத்திரப்பேறு அருளிய ஸ்ரீதியாகராஜபெருமானுக்கு வருஷபிறப்பன்றும்,உத்தராயண புண்ய காலத்திலும்,தெட்சிணாயன புண்ய காலத்திலும், கிரகணபுண்ய காலத்திலும், ஐப்பசி மாதப் பிறப்பன்றும் விசேஷ அபிஷேக ஆராதனை நடைபெறும். புரட்டாசி மாத பௌர்ணமியில் ஸ்ரீ தியாகராஜருக்கு திருவாரூர் போல் நிறைபணி பூசைகள் நடத்தப்பெறும் ஆடிமாதம் மூன்றாம் வெள்ளிக்கிழமை திருவிளக்கு பூஜை சிறப்பாக நடத்தப் பெறுகிறது.

ஆடி மாதம் பூர்வபக்ஷ சப்தமி திதியில் ஸ்ரீ அணைத்தெழுந்தநாயகர் பஞ்சமூர்த்திகளுடன் கோமுத்தி தீர்த்தத்தில் தீர்த்தவாரி அருளுவார்.

ஆவணி மாதத்தில் விநாயக சதுர்த்தி விழா அன்று திருக்கோயிலில் உள்ள விநாயகர்க்குச் சிறப்பு பூஜைகள் நடத்தப்பெறும் புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாவும் விஜயதசமியன்று அம்பு போடுதல் வைபவமும் நடைபெறும் நவராத்திரியின் போது தினந்தோறும் அம்பாளுக்கு சகஸ்ரநாம அருச்சனை நடைபெறும். ஐப்பசி மாதத்தில் சூரசம்ஹாரம் நடைபெறும். அப்போது ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி வீதிஉலா வருவார். இம்மாதத்தில் திருமூலர் திருநட்சத்திரமாகிய ஐப்பசி அசுபதியில் திருமந்திரம் முற்றோதல் நடைபெறும்.

கார்த்திகை மாதத்தில் நான்கு சோமாவாரங்களிலும் விசேஷஅபிஷேக ஆராதனையும், சங்காபிஷேகமும் நடைபெறுகிறது. திருக்கார்த்திகையன்று பஞ்சமூர்த்திகள் வீதி வலம் வருவார். சொக்கபனை கொளுத்தப்படும்.

மார்கழி 10 நாட்களும் திருவெம்பாவை உற்சவம் சிறப்பாக நடைபெறும். திருவாதிரையன்று ஸ்ரீ நடராஜர் ஸ்ரீ மாணிக்கவாசகர் வீதி உலா நிகழும் தைமாதம் பிரமோற்சவம் மாசிமாதம் மகாசிவராத்திரி மகா சிவராத்திரியன்று நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக நடைபெறும். மூன்றாம் காலத்தில் ஸ்ரீ சந்திரசேகரர் வீதிஉலா வருவார் ஸ்ரீ தியாகராஜர்க்கு சிறப்பு வழிபாடும், திருவிழாவும், ஸ்ரீ முசுகுந்த சக்கரவர்த்திக்குப் புத்திரப் பேறு வேண்டி வழிபட, புத்திரப்பேறு அருளிய ஸ்ரீதியாகராஜ பெருமானுக்கு வருஷபிறப்பன்றும்,உத்தராயண புண்ய காலத்திலும்,தெட்சிணாயன புண்ய காலத்திலும், கிரகணபுண்ய காலத்திலும், ஐப்பசி மாதப்பிறப்பன்றும் விசேஷ அபிஷேக ஆராதனை நடைபெறும். புரட்டாசி மாத பௌர்ணமியில் ஸ்ரீ தியாகராஜருக்கு திருவாரூர் போல் நிறைபணி நாட்களிலும் மகாநந்திக்குச் சிறப்பு அபிஷேகம் நடத்தப்பெறும் (இத்தலம் நந்தி தலமாகும்) பிரதோஷ நாயகர் உட்பிரகாரம் வலம் வருவார்.

ஆடி மாதம் ஒவ்வொருவெள்ளிக் கிழமையிலும் சுவாமி அம்மாளுக்குச் சிறப்பு உற்சவம் நடைபெறும். அன்று சந்திர சேகரர் உட்பிரகாரம் வலம் வருவார். ஸ்ரீ தியாகராஜப் பெருமான் தை மாதம் நடைபெறும் பிரமோற்சவத்தில் ஐந்தாம் நாளும், ஒன்பதாம் திருநாளும் திருத்தேரில் வீதி வலம் வருவார்.

**பிரமோற்சவம் :**

இத்திருக்கோயிலில் தை மாதத்தில் ரத சப்தமி திருவிழா பத்துநாட்கள் மிகச்சிறப்பாக நடத்தப்பெறும் இத்திருவிழாவில் ஐந்தாம் திருநாள் விழாவில் சகோபுரத்திற்கும் எட்டாம் திருநாள் வசந்தமண்டபத்திற்கும் இரவு எழுந்தருளி பின் ஒன்பதாம் திருநாள் திருத்தேரில் வலம் வந்து யதாஸ்தானம் சேருவார். மற்றைநாட்களில் அணைந்தெழுந்தநாயகர், விநாயகர், முருகன், சண்டீசர் வீதிவலம் வருவார்கள். அணைத்தெழுந்த நாயகர் நாள்தோறும் பல்வேறு வாகனங்களில் எழுந்தருளுவார். ரதசப்தமியன்று தீர்த்தவாரிக்கு ரிஷபவாகனத்திலும் விநாயகர் மூஞ்சுறு வாகனத்திலும் முருகன் மயில்வாகனத்திலும், சண்டீசர் மஞ்சத்திலும் எழுந்தருளுவார்கள்.

இப்பத்து நாளில் இரண்டாம் திருநாளன்று கோபூஜை நடத்தப்பெறும் திருமூலர் வரலாறு படிக்கப்படும். பின் திருமூலர் பஞ்சமூர்த்திகளுடன் வீதிவலம் வருவார். தற்பொழுது அருளாட்சிபுரியும் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் தமிழறிஞர் ஒருவருக்குப் பொன்னாடை உருத்திராக்கம், பொற்கிழி, விருது ஆகியன வழங்கிச் சிறப்பிக்கின்றார்கள்.

ஐந்தாம் திருநாளில் திருஞானசம்பந்தர் பொற்கிழி பெற்ற ஐதீகவிழாவில் திருஞானசம்பந்தர் பஞ்சமூர்த்திகளுடன் தந்தச் சிவிகையில் வீதிவலம் வருவார். வீதி வலம் வந்து கோயிலை அடைந்தபோது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் எதிர்கொண்டு அழைப்பார்க பின்னர் பொற்கிழிபெற்ற புராணச் சிறப்பை ஓதுவாமூர்த்திகள் இசையுடன் படிப்பார்கள்.

பூதம் பொற்கிழி பலிபீடத்தில் வைக்கும் நிகழ்ச்சி நடந்தபின் தீபாராதனை நடைபெறும். ஓதுவார் ஒருவருக்கும் பொன்னாடை உருத்திராக்கம் பொற்கிழி, விருது ஆகியன சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் வழங்கிச் சிறப்பிப்பார்கள்.

***திருமாளித்தேவர் உற்சவம் :***

திருவாவடுதுறை ஆதீன மடாலயத்தில் குருபூசை கொடியேற்றத்திற்கு முதல் நாள் திருக்கோயிலிருந்து திருமாளிகைத்தேவர் திருமடத்திற்கு எழுந்தருளுவார். அப்போது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் மடாலய வடக்கு முகப்பிற்கு எழுந்தருளி திருமாளிகைத் தேவரை வரவேற்பார்கள். திருமாளிகைத் தேவர் கோணக்கட்டுவழியாக திருச்சன்னதிக்கு எழுந்தருளுவார். அப்போது தீபாராதனை நடைபெறும். பின் திருமாளிகைத்தேவர் திருக்கோயிலுக்கு எழுந்தருளும்போது சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்கள் வடக்கு முகப்பு வரை உடன் வந்து வழிபட்டுப் பின் செல்வார்கள். திருமாளிகைத் தேவர் யதாஸ்தானம் செல்லுவார்.

***திருக்கல்யாணம் :***

இத்தலத்துப் புராணம் திருக்கல்யாணம் பற்றி எடுத்துரைக்கிறது. ஆனால் இத்திருக்கோயிலில் திருக்கல்யாணம் உற்சவம் கிடையாது. ஏனெனில் திருவாரூரில் விளங்கும் தியாகேசருக்கு திருக்கல்யாணம் விழா கிடையாது. அணைத்தெழுந்த நாயகர் (ஆலிங்கன மூர்த்தியாக இருப்பதாலும் இத்திருக்கோயில் திருக்கல்யாண உற்சவம் நடத்துவதில்லை.) இத்தலத்தில் ஆலிங்கன மூர்த்தியாக உள்ள அணைத்தெழுந்தநாயகரை வழிபட, திருமணம் கைகூடும் பிரிந்த தம்பதியினர் ஒன்று கூடுவர். புத்திர தியாகரை வழிபட புத்திரப்பேறு கிட்டும். மாசிலாமணியீசரை வழிபட செல்வம் யாவும் பெற்று இன்புறுவர்.

***கலைநிகழ்ச்சிகள் ;***

விழாக்காலங்களில் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றதாக இத்தலக் கல்வெட்டு கூறுகின்றது. தஞ்சையில் இராசராசன் வரலாற்றை நாடகமாக நடித்ததுபோல் திருமூலர் வரலாறு இத்தலத்தில் நாடகமாக நடத்தப்பெற்றது. இவ்வாறு திருவாவடுதுறை அருள்மிகு மாசிலாமணியீசர் திருக்கோயிலில் அன்று முதல் இன்று வரை பூசைகளும், விழாக்களும் முறையாக நடைபெற்று வருகின்றன.



# கார்த்திகை சோமவாரச் சிறப்பும் தேவர்களின் வழிபாடும்

- தி. செந்தில் குமார், திருவிடைமருதூர்.

(இக்கட்டுரை ஆசிரியர், திருவிடைமருதூர் ஆதீனம் அம்பலவாணதேசிகர் உயர்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியர். ஆதீன சித்தாந்த நேர்முகப் பயிற்சி வகுப்பில் பயின்று, சித்தாந்த ரத்தினம் என்னும் பட்டம் பெற்றவர். கவியரங்கம், கருத்தரங்கம் முதலியவற்றில் பங்கு கொள்பவர்)

கார்த்திகைத் திங்களில் வரும் சோமவாரம் (திங்கட்கிழமை) மிகவும் சிறப்பு வாய்ந்தது. இச் சோமவாரதினத்தில் சிவன் திருக்கோயில்களில் விசேட அபிஷேகமும் ஆராதனையாவும் சிறப்பாகநடைபெறும் சில திருக்கோயில்களில் சங்காபிஷேகம் நடைபெறும். இச்சோமவார தினத்தில் திருக்கோயில் வழிபாடு செய்தல், தீக்கைபெறுதல் சிறப்புடையனவாம். இச்சோமவார தினத்தில் விரதம் மேற்கொண்டு சிவனைச் சிந்தித்துயிருப்பது பெரும் பேற்றைத்தரும் என்கிறது பிர்மோத்திரகாண்டம் கார்த்திகை சோமவாரத்தின் சிறப்பு.

திருமால், இலக்குமி தேவியோடு, பிரமன் சரசுவதியோடும், இந்திரன் இந்திராணியுடனும் மற்றும் தேவர்களும் விண்ணுலகத்தில் இருந்து பூமிக்கு வந்தார்கள் அவர்கள் துலாக்காவிரியில் நீராடி அருள்தரு அஞ்சொல் நாயகி உடனாய அருள்மிகு மாயூரநாதப்பெருமானை வழிபட்டனர். பின் துறைசையை அடைந்து அருள்தரு ஒப்பிலா முலையம்மையையும் அருள்மிகு மாசிலா மணீசரையும் வழிபட்டனர் அவர்கள் சோமாவார விரதம் சங்கற்பம் செய்து கொண்டு விடியற்காலையில் காவிரியில் நீராடி நியமங்கள் செய்து சோமாவார தினத்தன்று உபவாசத்துடன் இறைவன் திருவடிகளை நினைந்து வழிபட்டனர். மாலையில் கோமுத்தி தீர்த்தத்தில் நீராடி அருள்மிகு கோமுத்தீஸ்வரரை வழிபட்டனர். இவ்வாறு கார்த்திகை மாதத்து முதல் சோமவாரத்தில் பூசனை செய்து வழிபட்டனர். பின் மற்ற சோமவாரதினங்களில் அதிரசத்தோடு அமுத போசனத்தையும் நெல்லிவன நிழலில் சிவனடியார்களுக்கு வழங்கி உதவினார்கள்.

இவ்வண்ணம் திருமால், பிரமன் முதலானவர்கள் கார்த்திகை சோமவார விரதம் பூண்டு செய்த சிவலிங்கங்கள் இத்தலத்தில் அமைந்துள்ளன.

**தேவர்கள் பூசித்த இலிங்கங்கள் :**

நான்கு வேதங்களும் பூசித்த கோமுத்தி தீர்த்தத்தின் நான்கு திக்குகளில் உள்ளன. பத்ம தீர்த்தத்தின் பக்கத்தில் கீழ்த்திசையில் பன்னிரண்டு சூரியர்கள் பூசித்த இலிங்கங்களும் சூரிய தீர்த்தத்திற்கு அருகில் பதினொரு உருத்திரர்கள் பூசித்த இலிங்கங்களும், சப்தகன்னிகையர் பூசித்த இலிங்கங்களும் பிரமதேவர் பூசித்த இலிங்கமும், திருமால் பூசித்த இலிங்கமும் உள்ளன.

சோமவார விரதத்தால் திருமால் அருள் பெற்றது.

துறைசை அருள்மிகு கோமுத்தீசுவரப் பெருமான் திருமால் முன்தோன்றி *உனக்கு வேண்டும் வரம்யாது?* என்று கேட்க. திருமால் *சக்கரப்படை அருளவேண்டும்* என்று வேண்டினார். சிவபெருமான், *திருவீழி மிழலையில் உமக்கு வேண்டியதை அருளுவோம்* என்றருளினார்.

**சோமவார விரதத்தின் பலன்கள் :**

சோமவாரதினங்களில் பொருந்திவருகிற பிரதோஷம் தோறும் மகாமேருவை வில்லாகவுடைய பரமசிவனை உலகத்து உயிர்களை ஈன்ற கன்னியாகிய பார்வதி தேவியாருடன் ஆகம விதி தவறாமல் மணம் பொருந்திய மலர்களால் வழிபாடு செய்யும் அன்பர்கள் துன்பக்கடலிலிருந்து நீந்தி இம்மை மறுமைப்பயனை அடைவர்.

இல்வாழ்க்கையின் உரிமையைப் பூணாதவர்களும் முறையாக இல்வாழ்க்கை பூண்டவர்களும், கணவனையிழந்து துயரம் அனுபவிக்கும் மாதர்களும் சோமவாரபூசை செய்தால் துன்பங்கள் நீங்கி, மனதில் கருதிய பொருள்கள் எல்லாம் கைகூடும் என்கிறது பிர்மோத்தர காண்டம்.

# விக்கிரமசோழன் காலத்தில் திருவாவடுதுறையில் வாழ்ந்த தவசி

- சரித்திரச் செம்மல், ச. கிருஷ்ணமூர்த்தி, தொல்லியல் அலுவலர்-ஓய்வு, சென்னை.



(இக்கட்டுரை ஆசிரியர், தொல்லியல் துறையில் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். திருவாவடுதுறை ஆதீன வரலாறு குறித்து தமிழிலும் ஆங்கிலத்திலும் நூல்கள் வெளியிட்டவர். ஆதீனக் கிளை மடங்கள், திருக்கோயில் குறித்த கல்வெட்டுச் செய்திகளை அவ்வப்போது மெய்கண்டாரில் எழுதியும் வருபவர்)

திருக்கயிலாய மரபில் வந்த திருவாவடுதுறை ஆதீனம் சிவப்பிரகாசதேசிகரின் சீடராகிய அருள்திரு வைத்தியநாத தேசிகரால் கி.பி 15 - ஆம் நூற்றாண்டளவில் ஏற்படுத்தப்பட்டது. ஆதீனத்துடன் இணைந்த ஆவடுதுறை ஈசன் கோயில் என்ற கோமுத்தீசுவரர் கோயில் பாடல் பெற்ற கோயிலாகும். திருமூலர் நெடுங்காலம் தவம் செய்த தலமாகும். திருமாளிகைத் தேவரால் அற்புதம் நிகழ்த்தப்பெற்ற தலமாகும்.

பல்லவர் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட இக்கோயில் முதலாம் பராந்தகன் காலத்தில் கற்றளியாக்கப்பட்டது. இக்கோயில் திருப்பணி புரிந்தவர் உருவங்கள் கல்வெட்டுக்களுடன் இன்றும் உள்ளன. இவ்வரலாற்றைப் பின்னர் காண்போம்.

திருக்கோடிக்காவல் என்ற திருக்கோடிக்கா ஊரில் அமைந்துள்ள திருக்கோடிக்காவுடையார் கோயிலில் விக்கிரம சோழனுடைய பதிமூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உள்ளது. இது திருவாவடுதுறை கோயிலில் தங்கியிருந்த தவசியைக் குறிப்பிடுகிறது. திருக்கோடிக்கா என்ற ஊர் திருவாவடுதுறையின் அருகில் உள்ள ஓர் ஊராகும்.

இங்குள்ள பல்லவர் காலத் தலத்தைச் செம்பியன் மாதேவியார் கற்றளியாக்கினார் என்பது வரலாறு. கி.பி 1131 இல் செப்பேடாகவும் கல்வெட்டாகவும் பொறிக்கப்பட்ட விக்கிரம சோழனின் ஆணை தற்போது கல்வெட்டாக மட்டுமே காணப்படுகிறது. செப்பேடு கிடைக்கவில்லை விக்கிரம சோழன் கி.பி. 1118 முதல் 1135 வரை சோழ நாட்டையாண்டவன்.

காவிரித் தென்கரை உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவாவடுதுறை உடையார் கோயிலில் திருவெண்காடுடையார் என்ற தவசி வாழ்ந்து வந்துள்ளார். இவர் திருக்கோடிக்கா உடையாரைக் கும்பிட்டிருக்கும் ஆண்டார்களைச் சீடர்களாகக் கொண்டிருந்தார். இவர்களுக்குச் சட்டிச்சோறு பிரசாதித்து அருளுகைக்கும் சட்டி சோறுக்கு விஞ்சனம் உட்பட நெல் ஐந்து நாழியாகச் சட்டி பத்துக்கு நாள் ஒன்றுக்கு ஐம்பது நாழி நெல் வழங்க ஒரு வேலி நிலம் வழங்கப்படுகிறது. ஒருவருக்கு ஒரு சட்டி என்றால் தவசியர் பத்து பேர் இருந்துள்ளனர். இவர்களுக்கு ஒரு நாளைக்குத் தூணிபதக்கு இருநாழி நெல் வழங்கப்படுகிறது. இவர்கள் திருவாவடுதுறையில் தங்கி இறைவனை வழிபட்டு வந்துள்ளார்கள். இவர் திருக்கோடிக்கா இறைவனை நாளும் வழிபட்டாலும் திருவாவடுதுறையில் தங்கியிருந்துள்ளார்.

வயித்தியம் செய்ய வயித்திய வருத்தியாகத் திரையன் சத்துரு மானியன் ஆளப் பிறந்தானுக்கும் இவன் வர்க்கத்தாருக்கும் நாள் ஒன்றுக்கு முக்குறுணி நெல் வழங்க அரைவேலி நிலம் வழங்கப்பட்டது. ஆகத்தவசி கூட்டத்துக்கும் வைத்தியனுக்குமாக 1. 1/2 வேலி நிலம் வழங்கப்பட்டது. தவசிக்கும் தவசியின் சீடர்களாகிய தவசிகளுக்கும் கோயிலில் சோறு வழங்கப்பட்டது. வைத்தியன் குடும்பஸ்தன் என்பதால் நெல்லாக அளிக்கப்பட்டது.

திருக்கோடிக்காவுடையார் ஆதி சண்டேஸ்வர தேவர் அருளால் இந்நிலத்தை விட சபையார் முடிவெடுத்தனர். சபையில் இருந்தவர்களின் பெயர்கள் கல்வெட்டில் உள்ளன.

தவசியார் வாழ்ந்த இடம் திருவாவடுதுறை என்பதால் அருள்திரு சித்தர் சிவப்பிரகாசர்

விருப்பத்திற்கிணங்க நமசிவாய தேசிகர் இங்கு ஆதீனம் ஏற்படுத்தினார் எனலாம். எனவே இவ்வூரைத் தவசித்தி நகரம் எனலாம்.

விக்கிரம சோழன் காலத்தில் திருவாவடுதுறையில் மட்டுமின்றிப் பல கோயில்களில் தவசியார் வாழ்ந்து வந்துள்ளனர். சான்றாக திருவத்திபுரம் வேதபுரீஸ்வரர் கோவிலிலும் வாழ்ந்துள்ளனர். விக்கிரம சோழனுடைய ஆறாவது ஆட்சியாண்டில் 'திருவோத்தூருரையாரைக் கும்பிட்டு ஸிவலிங்காச்சரநம் பண்ணியிருக்கும் தவஸ்ஸி விடையின் மேல் வருவானுக்கும் இவன் வம்சத்தர்க்கும் மடப்புறமாக ஆதித்தன் உய்ய வந்தான் என்பவன் 2000 குழி நிலத்தை விலைக்கு வாங்கி விட்டுள்ளான்'. இதே மன்னரின் ஏழாவது ஆட்சியாண்டில் 'இக்கோயிலில் கும்பிட்டிருக்கும் ஸிவயோகி ஸிரஸாரம்பி ஆரணதியாகி ஆண்டார் பிச்சை புகு ஆளுடையார்க்கு' அமது செய்ய 130 காசு விலைக்கு நிலம் வாங்கி விடப்படுகிறது. பண்டைய மரபையொட்டி தற்போ துள்ள ஆதீனத் தலைவர் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிகர் அவர்கள் எத்தனை துறவியர் எங்கிருந்து வந்தாலும் அவர்களுக்கு உண்ண உணவும் தங்க இடமும் அவர்கட்கு வேண்டிய வசதிகளையும் செய்து தருகிறார்கள். சிறிய ஊராகத் திருவாவடுதுறை இருந்த போதிலும் ஏழைகள் பயன் பெறும் பொருட்டு மருத்துவமனை ஒன்றையும் நடத்திவர அருளாணை பிறப்பித்தார்கள்.

சோழர் காலத்தில் இங்கு நாடகசாலை செம்மையாக இயங்கியதற்கும் கல்வெட்டு உண்டு இதனைப் பின்பு காண்போம்

சோழர் காலத்தில் திருவோத்தூரில் தவசியர் வாழ்ந்தது போன்றே கி.பி.18 -ஆம் நூற்றாண்டில் அங்கு கேதாரிநாதர் மடம் இருந்துள்ளது. எனவே துறவியர் வாழ்ந்த இடமே மடம்; ஏற்படுத்த சிறந்த இடம் எனலாம்.

திருவாவடுதுறை கோயிலில் வாழ்ந்த தவசியைக் குறிப்பிடும் கல்வெட்டின் மூலத்தை இத்துடன் இணைத்துள்ளேன். கல்வெட்டின் தொடக்கத்தில் உள்ள மெய்க்கீர்த்தி மட்டும் பாடல் வடிவில் குறிப்பிட்டுள்ளேன்.

திருவெண்காடுடையார் என்ற தவசியின் பெயர், திருவெண்காட்டுக் கோயில் இறைவனின் பெயராகும். இதன் வடமொழிப் பெயரே மெய்கண்டாருக்குப் பெற்றோர் இட்ட பெயராகும்.

ஸ்வஸ்திஸ்ரீ
பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்[1]
பாமாலை மலிந்த[2] பருமணித்[3] திரள்புயத்[4]
திருநில மடந்தையொடு ஜயமக[5] ளிருப்பத்
தன்வரை[6] மார்பன்[7] தனதெனப் பெற்றுத்
திருமகள் ஒருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறுந்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவனமும் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிழற்றக்[8] கருங்கலி
ஒளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கல் மீமிசை[9] யேறவும்
கலிங்கர்[10] பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படை பருவத்து வெம்படை தாங்கி[11]
வேங்கை மண்டிலத்[12] தாங்கினி திருந்து
வடதிசை யடிபடுத் தருளித்[13] தென்றிசைத்
தருமமும் தவமும் தானமும் தழைப்ப
வேதமும் மெய்ம்மையும் ஆதியுகம்[14] போல
தலைத்தலை சிறப்ப வந்தருளி வெலற்கரும்
போர்ப்புலி யானை[15] பார்த்திவர் சூடி
நிறைமணி[16] மகுட முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லா மின்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பித் தனித்தனி சிறந்து[17]
மண்முழுதும் களிப்ப மனுநெறி[18] வளர்த்துத்[19]
தன்கோயிற்[20] கொற்ற வாயிற் புறத்து
மணிநா வொடுங்க[21] முரசுகள் முழங்க[22]
விசையமும் புகழும் மேன்மையில்[23] லோங்க
வாழியூழி[24] மாநிலங்[25] காத்த[26]
திருமணிப் பொற்றோட் டெழுபத் தாண்டு
வருதிறை[27] முன்னே மன்னவர் சுமந்த
திறைநிரைத்துச்[28] சொரித்த செம்பொன் குவையிற்
தன்குல நாயகன் தாண்டவம் புரியுஞ்
செம்பொன் னம்பலஞ் சூழ்திரு மாளிகையும்
கோபுர வாசற்[29] கூடசா லைகளும்

உலகுவளங் கொண்ட ஒளி விளங்கு நேமி
குலவரை உதைய குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் வேய்ந்த[30] பலிவளர் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் மேய்ந்து
இருநிலந் தழைப்ப இமையவர் களிப்ப
பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தன்
இம்பர் வாழ்வெ டுத்தருளு தற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன்வேய்ந்து
பருத்திரள் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்தெரு விதிகள்
திருவளர் பெயரால் செய்துசமைத் தருளிப்
பைம்பொன் குவித்த பரிகலம் முதலாச்
செம்பொற் கற்பகத்தொடுபரிச் சின்னமும்
அளவில் லாதன ஒளிபெற அமைத்து
பத்தா மாண்டிற் சித்திரைத் திங்கள்
அத்தம் பெற்ற ஆதித்த வாரத்து
திருவளர் மதியின் திரயோதசி பக்கத்து
இன்ன பலவும் இனிதுசமைத் தருளி
ஒருகுடை[32] நிழல்தல முழுதும் தழைப்பச்[33]
செழியர்வெஞ் சுரம்புக சேரலர் கடல்புக
அறிதகு[34] சிங்கண[35] ரஞ்சிநெஞ் சலமரக்
கலிங்கர்[36] திரைஇடக் கன்நடர் வேகிட[37]
கொங்கர் ஒதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னரும் தத்தமக் கரனெனத்
திருமலர் சேவடி உரிமையி விறைஞ்சத்[38]
தெரிவையர் திலதம் மதியாக பதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையாள் அந்நெடு[39]
மாலா கத்துத் திருமகள் இருந்தென[40]
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணியர் கற்பில் தரணிமுழு துடையா
ளிவன்திரு மார்வத் தருளொடும் மிருப்ப
செம்பொன் வீரசிங்கா சனத்து[42]
தரிபுவன முழுதுடையா ளோடும்வீற் றிருந்தருளிய
கோப்பர கேசரி பந்ம ரான
திரிபவனச் சக்கர வத்திகள் ஸ்ரீவிக்கிரமசோழ
தேவற்கு யாண்டு 13 ஆவது
பங்குனி மாஸத்து ஐஞ்சாந் தியதி
செவ்வாய்க் கிழமையும் பெற்ற பூர்வபஷித்து
ஸத்தமியும் பெற்ற உரோகிணி நாள்
வடகரை விருதராச பயங்கர வளநாட்டு நல்லாற்றூர் நாட்டு உடையார் திருக்கோடிகா உடையார் கோயிலில் ஆதிசண்டேசுவரதேவர் அருளால் இக்கோயிலில் ஸ்ரீமாயேசுர...... மாசெய்யும் கரணத்தாநும்..... ஸ்ரீகாரியஞ் செய்வானும் இவ்வனைவோம் தெங்கரை உய்யக்கொண்டோர் வளநாட்டு திரைமூர்நாட்டு உடையார் திருவாவடுதுறை உடையார் கோயிலில் தபஸி திருவெண்காடுடையார்க்கு உடையார் திருக்கோடிகா உடையாருக்கு இந்த கொல்லை நிலத்தினை திருத்தி இத்தேவரைக் கும்பிட்டிருக்கும் ஆண்டார்களுக்குச் சட்டிச் சோறு பிரஸாதித்தருளுகைக்குச் சட்டிச் சோறுக்கு விஞ்சனம் உட்பட நெல் ஐஞ்ஞாழியாக சட்டி பத்துக்கு நாள் ஒன்றுக்கு நெல்லு தூயி பதக்கு இரு நாழி.. திருத்து நிலம் வேலியும் திருமடை விளாகத்துக்கும்... இரு... காறர்க்கும் வயித்தியஞ் செய்ய வயித்திய விருத்தியாக வயித்தியத்திரையன் சத்துருமானியன் ஆளப்பிறந்தானுக்கும் இவன் வற்க்கத்தர்க்கும் நாள் ஒன்றுக்கு நெல்லு முக்குறுணியாக வந்த நெல்லுக்குத் திருத்து நிலம் அரையும் இன்னிலம் ஒன்றரையும் இத்தேவர் தேவதானம் திருக்கோடிகாவில் நிலம் அரையும் கார்.......சருப்பேதிமங்கலத்தில் நிலம் வேலியும் ஆக இந்நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உத்தமசோழன் வாய்க்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை இவ்வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பார்க்கெல்லை பவித்திர சோழன் வாயக்காலுக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை..........றிக்குறும் னிலத்துக்கு தெற்க்கும் ஆக இவ்விசைந்த பெருநான்கெல்....லம் ஒன்நரையிலும் மாத்தல் எழுகல் வரிசையான் நிலம் .........மாத்தல் அறுகல வரிசையான் நிலம் ஒன்பது மாவும் மாத்தல் முக்கல வரிசையான கொல்லை நிலம் அரை ஆக இன்னிலம் ஒன்றரையும் அந்தராயம் சென்று தேவர்க்கு நெல்லு...... யில் இன்னிலம் இவர்..... திருத்தி இ......க்கும் இச்சட்டிச் சோற்றால் நாள் ஒன்றுக்கு தூணிப்பதக்கு இரு நாழியாக வந்த நெல்லுக்கும் வயித்திய விருத்தியாக நாள் ஒன்றுக்கு நெல்லு முக்குறுணியாக வற்த நெல்லுக்கும் இன்நிலம் பயிரேற்றும் படி திருத்தி

சந்திராதித்யவரை இப்படி செலுத்துகைக்கு கல்லினும் செம்பிலம் வெட்டிக் கொள்ளக் கடவதாக உடையார் திருக்கோடிகாவுடையார் ஆதி சண்டேஸ்வர தேவர் அருளால் இன்நிலம் விட இப்பிரமாண இசைவுதீட்டு குடுத்தோம். இத்தபஸி திருவெண்காடுடையார்க்கு இவ்வனைவோம். இவை கோயிற் கணக்கு கண்ணமங்கலமுடையார் இரண கண்டப்பிச்சன் எழுத்து. இவை தேவகந்மி கவுதமன் நாராயணன் எழுத்து. பன்மாயேஸ்வரக் கண்காணி அரயதேவன் எழுத்து. இவை மாதவபட்டஸ்ய இப்படி இவை பாரத்துவாசி திருநாகேஸ்வரமுடையான் உடைய ....... எழுத்து. இவை உத்தமசோழ வாச்சிய மாராயன் எழுத்து.

அடிக்குறிப்பு பாடபேதங்கள்

1. திகழ்தர, 2. மலிந்து, 3. பன்மணி, 4.தாள்புயத்து, 5. சயமகள், 6.தன்துணை, 7. மாரப்ந், 8.நிற்பக், 9. மிசையேறவும், 10.கலிங்க, 11.தாங்கியும், 12. மண்டலம், 13. வாகைசூடி, 14. ஆதியுலகம், 15. ஆணை, 16. திருமணிமகுடம் சுடர்மணி மகுடம், 17. புரந்து, 18. அச்சிட்ட கல்வெடடில் இல்லை, 19. அச்சிட்ட கல்வெட்டில் இல்லை, 20.கோயிற், 21.அச்சிட்ட நுலில் வேறிடத்தில் இச்சொல் உள்ளது, 22.அச்சிட்ட நுலில் இல்லை, 23 மேன் மேலோங்க, 24.ஊழி ஊழி, 25. மாநிலம், 26. காக்க, 27. வருமுறை, 28.திலை நிறத்து, உள்ளிறை, 29. வாயிற், 30. மேய்ந்த, 31. வேய்ந்து, 32. தன் ஒருகுடை, 33 கவிப்ப, 34. அழிதகு, 35 சிங்களர், 36. கங்கர், 37. வெந்நிட, 38. இறைஞ்சி, 39பட்டத்தரசியின் பெயர், 40. அச்சிட்ட நுலில் இல்லை, 41. அரணியல், 42 சிம்மாசனத்து.

(இக்கட்டுரை டிசம்பர் 2000 மற்றும் ஜனவரி 2001 மெய்கண்டார் இதழில் வெளிவந்தது)

---

## திருமந்திரம் கூறும் திருக்கோயில் பூசைகள்

நாட்டில் விளங்கும் சிவன் திருக்கோயில்களில் முறையாக பூசைகளும் விழாக்களும் சிறப்பாக நடைபெறவேண்டும் அவ்வாறு நடைபெறவில்லையெனில் மன்னர்க்குத் தீங்கு நேரும், மழைவளம் குன்றும், களவுமிகும்

**"முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்**
**மன்னர்க்குத் தீங்குள வாரிவளங்குன்றும்**
**கன்னங் களவு மிகுந்திடுங் காசினி**
**என்னரு நந்தி யெடுத்துரைத் தானே"** என்றும்
**'ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றி**
**போற்றரு மன்னரும் போர் வலி குன்றுவர்**
**கூற்றுதைத் தான் திருக்கோயில்களவை**
**சாற்றிய பூசைகள் தப்பிடின் தானே'**

என்றும் திருமூலர் திருக்கோயிலில் பூசை முட்டுறாது நடைபெறவேண்டும் என்பதை அருளியுள்ளார். திருமூலர் பெருமான் மூவாயிரம் ஆண்டுகள் தவமியற்றி அருளிய திருமந்திர வாக்கின்படி திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலில் பூசைகளும் விழாக்களும் முட்டுறாது மிகச் சிறப்பாக நடத்தப்பெறுகின்றன.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இத்திருக்கோயிலில் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் 23ஆவது சீர் வளர் சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் முன்பு நடைபெற்ற விழாக்களைச் சிறப்புற நடத்துவதோடு மேலும் அவ்விழாக்களை பொலிவுற நிகழ்த்த திருவுளம் பற்றி திருமூலர் ஐதீக விழாவில் தமிழறிஞர் ஒருவர்க்கும் திருஞான சம்பந்த ஐதீக விழாவில் ஓதுவார் ஒருவர்க்கும் பொற்கிழி, விருது பொன்னாடை, உருத்திராக்கமாலை யாவும் அளித்துச் சிறப்பித்து வருகின்றார்கள். என்பது குறிப்பிடத்தக்கது.

- புலவர் சி. மகாலிங்கம்

# 27.08.1972 ல் நடைபெற்ற திருவாவடுதுறை திருக்கோயில் திருக்குடமுழுக்கு விழா அழைப்பிதழ்



உ

சிவமயம்

ஸ்ரீ துணை வந்த விநாயகர் துணை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான
திருவாவடுதுறை ஸ்ரீ அதுல்யகுசாம்பிகா சமேத ஸ்ரீ கோமுக்தீஸ்வர சுவாமிகோயில்
ஜீர்ணோத்தாரண, அஷ்டபந்தன

## மகா கும்பாபிஷேகப் பத்திரிகை

*திருஞான சம்பந்த சுவாமிகள்*

இடரினும் தளரினு ம் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநெஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே!
இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடுதுறை அரனே!

*திருநாவுக்கரசு சுவாமிகள்*

மாயிரு ஞால மெல்லாம்
மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப்
படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த
கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும்
ஆவடு துறைய னாரே!

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவே என்உறவே என்ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தின் உள்ளே நின்ற

கருவே என்கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறையுறையும் அமரரேறே!

*சுந்தரமூர்த்தி சுவாமிகள்*

ஒப்பி லாமுலை யாளொரு பாகா வுத்த மாமத்த மார்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப ஆல்நிழற் கீழிருந் தருளுஞ் செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேயெனை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்கள் ஏறே.

*மாணிக்கவாசக சுவாமிகள்*

இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
யன்பன் அமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய்.

*திருமந்திரம்*

சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியி னீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவ நாமங்க ளோதியே

*பெரியபுராணம்*

நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந் தருளிய இறைவர்இன் அருளால்
அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகன் பீடத்(து)
உச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று.

*ஸ்தல புராணம்*

பசியகல நுகர்வதுவேட் டியாவ ரேனும்
பகலிரவி லெந்நேரம் வரினு மன்ன
மிசைவுபெறு மறுசுவையோ டூட்டு வோமென்
றிலகுமன்னக் கொடிநிறுவி யசைதல் கண்டு
திசையிலுள்ளோர் குருமடத்திற் புசித்து நாளுஞ்
சித்தமகிழ்ந் திடுதலால் துறைசைக் கென்றும்
வசையறுநல் லமுதபுர மென்னும் பேராய்
மானிலத்தோர் கொண்டாடி மதிப்ப ரன்றே.

புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டத்திலே ஸ்ரீமத் அகண்ட பரிபூரண சுத்தநித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாயும், பரமாயும், மந்திராதீதமாயும், நிரஞ்சனமாயும், நிராமயமாயும், நிராதாரமாயும், நிறமிலதாயும், சர்வக்ஞமாயும், சாந்தமாயும், சர்வான்மாவாயும், சர்வதோமுகமாயும், அதீந்திரியமாயும், நிராலம்பமாயும், அதிசூக்குமமாயும், சாசுவதமாயும், துருவமாயும், ஆறுகுணமுடையதாயும், அப்பிரமேயமாயும், உவமையிலாததாயும், எள்ளில் எண்ணெய்போல உள்ளும் புறம்புமாயுமுள்ள சிவபெருமான், தம்மை ஆன்மாக்கள் தரிசித்து உய்யும்பொருட்டுத் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பல. அவற்றுள் தேவார முதலிகள் மூவரால் பதிகம் பெற்று விளங்குவன மிகச் சிறந்தன. சோழநாட்டிலே காவிரி நதியின் தென்பால் விளங்கும் திருத்தலங்களுள்ளே மிகச் சிறந்து விளங்குவதும், கோமுத்தி, கோகழி, பூகைலாசம், நந்திநகர், தியாகபுரம், போதிவனம், அரசவனம், மகாதாண்டவபுரம், வேதபுரம், சித்தபுரம், நவகோடி சித்தபுரம், முத்தி க்ஷேத்திரம், சிவபுரம் என்னும் காரணப் பெயர்கள் கொண்ட மகிமை வாய்ந்த மகாக்ஷேத்திரம் திருவாவடுதுறையாகும். இத்தலத்திலே சிவபெருமான், துணைவந்த விநாயகர், அழகிய விநாயகர் என்னும் இருவரும் விளங்க, இளையபிள்ளையாராகிய ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளும்,தேவியாராகிய ஸ்ரீ அதுல்யகுசாம்பிகையும் (ஒப்பிலாமுலையம்மை) உடன் வீற்றிருக்கத் தாம் ஸ்ரீ ஸ்வயம்வியக்தேசுவரர், பிரகாசமணிநாதர், மாசிலாமணியீசர், கோகழிநாதர், அணைத்தெழுந்தநாயகர், பூகைலாசேசுவரர், புத்திரத்தியாகர், போதிவனநாதர், போதியம்பலவாணர், மகாதாண்டவேசுரர், அர்த்தத்தியாகர், முத்தித்தியாகர், சிவலோக நாயகர் என்னும் திருநாமங்களுடன் கோமுக்தீஸ்வரர் என்னும் திருநாமம்பெற்று விளங்குகின்றார். தலவிருட்சம் : படரரசு. தீர்த்தங்கள் : கோமுத்திதீர்த்தம், கைவல்லிய தீர்த்தம், பத்மதீர்த்தம் என்பன. சபை : போதியம்பலம். நந்தி : தருமநந்திதேவர்.

மற்றும் இத்தலத்தில், (1) லீலார்த்தமாகநேர்ந்த பசு வடிவத்தை உமாதேவியாருக்கு நீக்கி அணைத்தெழுந்து நின்று இத்தலத்தைக் கைலையங்கிரியாகக் காட்டியமை, (2) தமது கட்டளைப்படி தேவர்கள் படர்ந்த அரச விருட்சங்களாகத் தோன்றி விளங்க, அவற்றின் நிழலில் எழுந்தருளியுள்ளமை, (3) மகப்பேறு கருதிவந்த முசுகுந்த சக்கரவர்த்திக்கு இத்தலத்தைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசராகவும் காட்டிப் புத்திரப்பேறும் அளித்தருளியமை, (4) தம்மைப்போற்றிய தருமதேவதையை இடபவாகனமாகக் கொண்ட தன்றிச் சந்நிதியில் அரசவிருட்சத்தின் நிழலில் கோயில் கொண்டிருக்கும்படி வரமளித்தமை, (5) தேவர்களும் முனிவர்களும் செய்த பிரார்த்தனைக்கு இரங்கி அரசவிருட்சத்தின் நிழலில் அமைந்த அம்பலத்தில் மகா தாண்டவம் புரிந்தமை, (6) திருமூலநாயனாரைத் தடுத்தாட் கொண்டு ஆகம சாரமாகிய திருமந்திரத்தை வெளிப்படுத்தத் திருவருள் புரிந்தமை, (7) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குப் பொற்கிழி அளித்தமை, (8) சில முனிவர்களுக்குச் சிவஞானோபதேசம் செய்தருளியமை, (9) சில அந்தணர்களுக்கு வேதத்தை ஓதி அருளியமை, (10) போகர் முதலிய சித்தர்களுக்கும், நவகோடி சித்தர்களுக்கும் அவர்கள் விரும்பியவண்ணம் அட்டமா சித்திகளையும் பிறவற்றையும் அருளியமை முதலிய பல அற்புத நிகழ்ச்சிகளைச் சிவபிரான் செய்தருளினார். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் 1, திருநாவுக்கரசு நாயனார் 5, சுந்தரமூர்த்திநாயனார் 2 ஆகத் தேவாரத் திருப்பதிகங்கள் 8-ம்; சேந்தனார் அருளிச்செய்த திருவிசைப்பாப் பதிகமும் பெற்றுள்ள பெருமையுடன் விளங்குவது திருவாவடுதுறை என்னும் தலமாம்.

திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்திரண்டாவது குருமகா சன்னிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாணதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் கட்டளையிட்டு அருளியபடி இத்திருக்கோயில் சிறந்த முறையில் திருப்பணிகள் பல செய்விக்கப்பெற்று, நிகழும் பரிதாபி- வருடம், ஆவணி மாதம் 11ந் தேதி (27-8-1972) ஞாயிற்றுக்கிழமை உத்திரட்டாதி நட்சத்திரம் அமிர்தயோகம் கூடிய சுபதினத்தில், உதயாதி நாழிகை 5-க்குமேல் 8-க்குள் (காலை மணி 8-க்குமேல் 9-15-க்குள்) கன்யா லக்னத்தில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறது. அன்று மாலை மகாபிஷேகமும் நடைபெறும். இரவு இடபாரூடராய்ப் புஷ்ப விமானங்களில் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளி திருவீதியுலாக்காட்சி நிகழும். சிவநேயச் செல்வர்கள் அனைவரும் வந்திருந்து மகா கும்பாபிஷேகத்தையும், வீதியுலாக்காட்சியையும் தரிசித்து, இருமை இன்பங்களும் எய்துவார்களாக.

## கும்பாபிஷேக நிகழ்ச்சிகள்

| ஆங்கிலம் | தமிழ் | கிழமை | விபரம் |
|---|---|---|---|
| 20-8-72 | 4 | ஞாயிறு | மூல நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 2.30க்குமேல் 4.30க்குள் (காலை மணி 7-க்குமேல் 7-50க்குள்) சிம்ம லக்னத்தில் ஆசார்யவரணம், தனபூஜை, அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை. மாலை கிராமசாந்தி, பிரவேசபலி. |
| 21-8-72 | 5 | திங்கள் | காலை நவக்ரக ஹோமம். மாலை ரக்ஷோக்னஹோமம், வாஸ்துசாந்தி. |
| 22-8-72 | 6 | செவ்வாய் | காலை சாந்திதிசாமூர்த்தி, ஸம்ஹிதாஹோமங்கள். ஆசார்ய தசவித மங்களக்கிரியைகள். மாலை ம்ருத்ஸங்கிரகணம். |
| 23-8-72 | 7 | புதன் | மாலை அங்குரார்ப்பணம், ஆசாரிய ரக்ஷாபந்தனம். |
| 24-8-72 | 8 | வியாழன் | மாலை உதயாதி நாழிகை 25-க்குமேல் 27-30க்குள் (மாலை மணி 4-க்குமேல் 5-க்குள்) கலாகர்ஷணம், யாகசாலைப்பிரவேசம். உடன் யாகசாலை பூஜை, பூர்ணாகுதி தீபாராதனைகள். |
| 25-8-72 | 9 | வெள்ளி | காலை மாலை யாகசாலை பூஜை, பூர்ணாகுதி, தீபாராதனைகள். |
| 26-8-72 | 10 | சனி | காலை மாலை யாகசாலை பூஜை, பூர்ணாகுதி, தீபாராதனைகள். |
| 27-8-72 | 11 | ஞாயிறு | காலை 8 மணிக்குள் யாகசாலை பூஜை, பூர்ணாகுதி, தீபாராதனை. உடன் உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 5-க்குமேல் 8-க்குள் (காலை மணி 8-க்குமேல் 9-15க்குள்) கன்யாலக்னத்தில் ஸ்ரீ அதுல்யகுசாம்பிகா சமேத ஸ்ரீ கோமுக்தீசுவரசுவாமிக்கும், திருமூலர் முதலிய சகல பரிவாரங்களுக்கும், அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம். மாலை மகாபிஷேகம். இரவு பஞ்சமூர்த்திகள் வீதியுலாக்காட்சி. |

ஸ்ரீ கோமுக்தீஸ்வரசுவாமி தேவஸ்தானம், திருவாவடுதுறை,
பரிதாபி வருடம் ஆனி மாதம் 29ஆம் தேதி (12-7-1972)

இங்ஙனம்,
திருவாவடுதுறை ஆதீனம், காறுபாறு வைத்தியநாதத் தம்பிரான்.

### திருவாவடுதுறை ஸ்ரீ மாசிலாமணிப் பெருமான்

# சகஸ்ர நாமாவளி

**(ஒவ்வொரு நாமத்திற்கும் முன்பு ஓம் என்பதையும் முடிவில் நம: என்பதையும் சேர்த்துக் கொள்ளவும்)**



ஓம் தேஜோமயாய நம:
மூலபூதாய
த்ரிணேத்ராய
விநீதாய
விநதாய
தீர்க்கதர்சிநே
வாசாமகோசராய
சதாசிவாய
நடேசாய
மாஸர்த்துபதேய 10
காவேரீ தீரசரணாய
ஆக்ரந்தயதே
ப்ரஹ்மநிச்சயாய
பக்தக்ஞானப்ரதாய
ஈச்வராய
சாரதமயாய
உத்தமாய
ப்ரகாசமணிநாதாய
அமலாசாராய
த்ரிதிவேச்வராய 20
வராமலாங்காய
அமலாத்மநே
கணஶ்ரீதாய
த்ரிதிவேட்யாய
விமர்சநாய
தயாசிந்தவே
விலாஸிநே
விராகக்ஞானதாயாகிய
ஸாக்ஷிணே
க்ருசாய 30
அநேஹஸே
தாயகாய
தயாநிதயே
தயாகராய
சாந்தாய
ப்ரபவாய
சம்பவே
க்ஷமாபராய
உமாதயாஸாராய
அத்வயாய 40
தயாமயாய
விபவே
தயாவதே
தாந்தாய
விஷ்வக்ரூபாய
சர்வாய
சிதாகாராய
ஸமாய
ஸமவர்த்திநே
கல்யாணச்ரியே 50
ஏகஸ்மை
காச்யபாய
அத்ரிகோடி நிஷேவிதாய
பவாய
அத்ரிகோடிஸ்துதாய
அசுபத்வம்ஸிநே
அபுவே
காச்யபாசார்யாய
மயோபவே
அநேகஸ்மை 60

ஸ்ரீமதே
மஹாயோகிநே
வத்ஸரகோடிவிநுதாய
கோடிநைந்ருவஸம்வேத்யாய
அத்ரிகோடிஸ்துதிக்ரீதாய
இஜ்யாரூபாய
ஓகத்ரயஜநஸ்தோமசேவிதாய
ச்ரேஷ்டரைப்யவந்திதாய
கோடிகாச்யபபூஜிதாய
கோடிநைந்ருவஸம்ஸேவ்யாய 70
கோடிநைத்ருவமார்க்கணாய
கோடிநைந்ருவபாரகாய
கோடிரைப்யசதாவ்ருதாய
மஹாரைப்யகோடிசதஸ்துதாய
கோடிரேபஸ்துதாய
மஹாரேபகோடிசதாவ்ருதாய
கோடிரைப்யைகவிநுதாய
கோடிசாண்டியல்யாத்ரே
சாண்டில்யசதசுந்தராய
மஹாயோகிநே 80
சாண்டில்யரக்ஷகாய
மஹாமாநிநே
மௌநிநே
சாண்டில்ய சதபூஜிதாய
மஹாமநஸே
மஹாகர்மிணே
ரேபநுதாய
ரேபாநேகசதாவ்ருதாய
மகாஸ்துதயே
சாண்டில்யஸ்தோமவிநுதாய 90
மஹாபூதாய
மஹாமுநயே
அநேககோடிசாண்டில்ய
சஹஸ்ரகணரக்ஷகாய
மகாவர்மணே
மகாப்ரபவே
மகாக்ரபூதாய
மகாதேஜஸே
மகாதீராய
மகாசுந்தராய
மகாதக்ஷாய 100
மகாமாயாய
மகாமந்த்ராய
மகாபாஹவே
மகாஸித்தயே
மகாதீவ்ராய
மகாகாந்தாய
மகாமந்த்ராய
மகாயந்த்ராய
மகாக்ஞாநிதே
மகாதாந்தாய 110
மகாதந்த்ராய
மகாநிதயே
மகாமஹஸே
மகாவித்யாய
மகாஸத்வவதே
மகாலயாய
மகாநாதாய
மகோச்ரயாய
மகாக்ரதவே
மகாக்ரணயே 120
மகாசார்யாய
மகாகர்மணே
அத்புதாய
மகத்பக்ஷாய
மகாச்வத்தாக்ரகாய
ஸத்ரிணே
மந்த்ரக்ராமவிபூஷணாய
கோட்யாகமநுதாய
க்ரமாய
கோட்யெளஷதாய 130
கோடீயசிவக்ரதவே
வேதஸத்ரிணே
க்ஷேத்ரசாஸ்த்ர சதாகீர்ணாய

கோடிஸ்திரீக்ருதவேதாய
கோடிகாமப்ரபூரகாய
கோடிபிஷஜே
வக்ராய
அநகாய
வ்யாக்ராய
கோடிசாஸ்த்ரசதாவ்ருதாய 140
காமக்நாய
நிகமகோடிசதாவ்ருதாய
ஸத்ரிகண்டாய
ஸத்ரிவிலோச்சநாய
கோடிவ்யாஸைகவிநுதாய
க்ருதாய
அத்யுக்ராய
கோடிகந்தர்ப்பவரதாய
ஷட்சாஸ்த்ரகோடிவிநுதாய
ஞாநிநே 150
சப்தசகாடிமகாமந்த்ரவிநுதாய
க்ஞாநவித்தமாய
ஸத்யாங்காய
நீசசைன்யகதக்ஷ பணசீர்ஷகாய
ஸஸ்த்ரீகாய
க்ஞாநயுக்தாய
சரச்சந்த்ரநிபாக்குதயே
பூதிதாய
சதஸத்ரிஸத்ராய
பூதிபூஷிதஸர்வாங்காய 160
சங்காரயே
பூதிபாவநாய
ஸ்திரீதராய
ப்ருஹ்மக்ருபாய
கங்காதராய
பாலிதாகிலகீர்வாண
பக்தவிச்வசிவத்விஜாய
காருண்யதிவ்யலாவண்ய
தாருண்யாமோதசேவதயே
சச்சிதாநந்தலக்ஷணாய
ப்ருஹ்மிபூஷிதமாநஸாய 170
ப்ருஹ்மீக்ருதாகிலாசாராய
அகெள கபயதாயகாய
மேகசுக்லகலாபாய
நராய
ககாய
மேயாய
நேயாய
வ்யாஸாய
கஸ்மை
பவநெளகாய 180
நயாய
காலாக்நிருத்ராய
அவநயாய
ஜயாய
த்யாநாய
விதாநாய
அசராய
த்யேயாய
அவநயாய
ஓஜஸ்தாராய 190
நச்வராய
விஷதராய
யஸ்மை
நவீநமகாய
க்ருபகோடி நிஷேவிதாய
பலிகோடிக்ருதஸ்தோத்ராய
கோடிகாகுஸ்தபூஜிதாய
பலிகோடிசதாவ்ருதாய
கோடிகந்தர்ப்பவாரகாய
பலிகோடிப்ரபூஜிதாய 200
கோடிகந்தர்ப்பமாரகாய
மாருத்யநேககோடீட்யாய
கோடிகந்தர்ப்பலாவண்யாய
மாருதிஸ்துதிபாத்ரகாய
கோடிகந்தர்ப்பதர்ப்பக்தாய

அச்வத்தாமதாகீர்ணாய
கோடிகந்தர்ப்பதாரகாய
காகுஸ்தசதசகோடீட்யாய
கோடிக்ருஷ்ண நிஷேவிதாய
க்ருஷ்ணகோடிசதாகீர்ணாய 210
கோடிபலராமெளகவந்திதாய
கோடீபலசதஸ்துத்யாய
யக்ஞப்ரியாய
மாருதஸ்துதிபாத்ரகாய
யமாய
யக்ஞரூபாய
யக்ஞாங்காய
விபூஷணப்ரதாய
யக்ஞவாஹாய
அநேககோடி பரசுராமைப்ரபூஜிதாய 220
யக்ஞகர்யாய
ராமவிநுதாய
யக்ஞபலாய
யக்ஞபூஷிதாய
ரதிகோடிவரப்ரதாய
யக்ஞரம்யாய
யக்ஞபூஷிதாய
ரதிகோட்யெளகவிநுதாய
யக்ஞாய
யக்ஞக்ஞேயாய 230
யக்ஞவந்த்யாய
யக்ஞபாத்ராய
யக்ஞபாலகாய
அயமாய
யக்ஞபராய
தத்ஞாய
காவேரீதீரவாஸிநே
லோபாமுத்ராகோடிவிநுதாய
காவேரிசதபூஜிதாய
லோபாமுத்ராசதாவ்ருதாய 240

கடோத்பவசதஸ்துதாய
அச்வப்ரியாய
அஸ்மை
கடோத்பவசதாகீர்ணாய
அச்வவந்திதாய
அமுஷ்மை
தைவக்ஞமாநஸ்வரூபகாய
யெளவநப்ரதாய
ஜயஸம்வேத்யாய
யமாரயே 250
ஸுபஜ்வநே
ரேபவந்த்யாய
யம்யாய
தஸ்மை
ஆதித்யாய
ஆதித்யசதபூஷிதாய
ஆதயே
ஸத்யப்ரியாய
வேதஸத்மநே
யக்நிநே 260
ஆதிமதே
ஸத்யதர்மாய
யக்ஞபுஜே
ஸத்யாய
அநாதயே
ஸத்யசங்கல்ப்பாய
கோட்யாதித்யெளகவந்திதாய
ஸத்யசம்வேத்யாய
ஆதித்யகோடிவரேட்யாய
ஸத்யகாமாய 270
ஸத்யரூபாய
ஸத்யபராய
ஸத்யசராய
அஸத்யாய
ஸநாதநாய
ஈச்வராய

ஸத்யரதாய
ஸத்யகாரகாய
ஸத்யேட்யாய
ஸத்யதந்த்ராய 280
ஸத்யகர்மணே
ஸதாச்ரயாய்
ஸர்வப்ரியாய
ஸர்வேச்வராய
ஸத்யவாசே
ஸப்ததந்தவே
ஸர்வக்ஞாய்
ஸதாசிவாய
ஸர்வஹராய
நிர்விகல்ப்பாய 290
சதாங்குராய
தக்ஷயக்ஞவிநாசகாய
நித்யாய
தக்ஷாய
ஸர்வபூதஸ்துதாய
நிராதாராய
தக்ஷகாரகாய
தக்ஷவாசே
நிராச்ரயாய
தக்ஷபாராய 300
ஸர்வபாலாய
மஹாதக்ஷாய
அதிதக்ஷாய
ஸம்சயக்நே
நிராநந்தாய
நிர்ப்பேதாய
அநேககோட்யுபநிஷத்ப்ருந்த
ஸம்ஸ்துதபதாங்குலயே
அநேககோடிருஷபநிஷாதப்ருந்த
ஹஸ்தபத்மாங்குலிசயாய
மநோந்மநாய
கோடிகாண்டார்ஷிவந்திதாய 310

அநேககோடிஸூர்யேட்யாய நம
காண்டார்ஷிகோடிவிநுதாய
பேதக்நே
நிர்த்துவந்த்வாய
நிர்ப்பவாய
நிமயே
அநேககோடிகுருக்ருதே
குருகோடிசதாவ்ருதாய
கோடிப்ரஹ்மஸ்துதாய
நாதநகுணாகராய 320
அநேககோடிபுதக்ருதே
புதகோடி நிஷேவிதாய
தர்ப்பத்வதூஷகாய
நித்யாய
நாசரகிதாய
வந்த்யவேதயாய
தர்ப்பத்வம்ஸகராய
நிர்நாசாய
மந்தாய
குருகோடிஸ்துதாய 330
மஹாகௌராய
வந்த்யவந்த்யாய
அநந்தநுதாய
மந்தகோடி நிஷேவிதாய
மந்தகோடிசதாகீர்ணாய
நிர்மதாய
மதக்நே
சந்த்ரகோடிஸமாக்ருதயே
வந்த்யாவந்த்யாய
கோடிசந்த்ரப்ரபூஜிதாய 340
குருகோடிவரப்ரதாய
சந்த்ரகோடிசதாகீர்ணாய
ராகுகோடிசதாவ்ருதாய
தாராய
இரம்மதாய
மதக்நே
வந்திதாய

கோடிசூர்யப்ரதீகாசாய
தர்ப்பத்வதூஷிதாய
கோடிசூர்யவிதூஷகாய 350
நாத்யாய
ஸ்துதாய
புத்தாய
கோடிசூர்யசதாகீர்ணாய
பௌமகோடிசதாகீர்ணாய
கோடிசூர்யப்ரபூஜிதாய
புதரக்ஷகாய
க்ருதாய
கோடிபௌமவரப்ரதாய
குருக்நே 360
மஹேசாய
குருமத்கோடிவரதாய
குருராஜே
குஹாச்ரயாய
கோடிபுதஸ்துதாய
பௌத்தக்நே
கம்புகண்டாய
காகக்நே
கோத்ரவாஸாய
கோத்ரதராய 370.
ஸாராய
ஆகமேட்யாய
ச்ரேஷ்டாய
கந்தாரூபாய
அதர்மநாசகாய
சராய
ஹராய
கண்டகக்நே
கஜகுரவே
ஈஹிதார்த்ததாய 380
பாராவாராய
சத்ராகாராய
ஜடிலாய
கண்டபரசவே
ஹராய
வக்ரேதராய
போக்த்ரே
தர்மாய
பித்ரே
ஈசேசாய 390
வியந்நேத்ராய
பாத்ரே
போக்த்ரே
விமலபீஜாய
ஜகத்ப்ரபவே
ஹோத்ரே
மந்த்ரிணே
பத்ரிணே
ஜலந்தராரயே
சிவாய 400
பூதாய
ஸமாகாரய
சதமந்யவே
கார்யாய
காரணாய
ஈட்யேட்யாய
ஸாத்யாய
க்ருபாய
நிகமநாய
உக்ராய 410
சந்த்ரபூஷணாய
யதயே
விசங்கடாய
ஸர்வக்ருதே
பவ்யாய
கோடிகேதுக்ருதஸ்தோத்ராய
கோடிகேதுப்ரபாலகாய
புதகோடிநிஷேவிதாய
அநேககோடிபுதக்ருதே
காவ்யகோடி சதாகீர்ணாய 420

காவ்யகோடி நிஷேவிதாய
நித்யோத்யதாய
அமலாய
நிர்ப்பயாய
பவிஷ்யதே
நித்ய நித்யாய
ஸாதவே
ஸாதகாய
ஸாதநாய
க்ரீடாபராய 430
சுகிநே
புருஹூதாய
மதிமதே
கணாக்ரண்யாய
ப்ரத்யக்ராய
ஸமக்ராய
புருஷ்டுதாய
ஷண்முகேச்வராய
புரந்தராய
கலாதராய
மருத்ஸகாய 440
தநஞ்ஜயஸ்துதாய
காலகாலாய
தர்விந்த்ரசதாகீர்ணாய
கோடீந்த்ரவரபூஜிதாய
இந்த்ரகோடிசதாவ்ருதாய
அக்நிகோடிசதாகீர்ணாய
அக்நிகோடி நிஷேவிதாய
ஸ்வாமிநே
மஹாஸ்வாமிநே
மஹாமருத்வகோடீட்யாய 450
கோடிமருத்வவந்திதாய
வாயுவிக்ரஹாய
வருணப்ராணரக்ஷகாய
வாயுரூபாய
வாயுகோடீட்யாய
ப்ருத்யகோடி நிஷேவிதாய
வ்யாளரூபாய
கோடிஸ்ரீதரஸ்துதாய
ஸ்ரீதாய 460
வாயுமதா பஹாய
கோடிஸ்ரீதேவிப்ரபூஜிதாய
வாயுவாயவே
குபேரமித்ராய
அருணேட்யாய
வாயுகோடி நிஷேவிதாய
மித்ரகோடிப்ரபூஜிதாய
வாயுகோடிசதாகீர்ணாய
வாயுதாய
வந்ஹிவந்ஹயே 470
மஹாவருணதாய
மித்ரச்ரியே
மஹாபயங்கராய
ஸூர்யஸூர்யாய
சந்த்ரசந்த்ராய
காமகாமாய
ஸ்வாஹாய
அபாம்பதிஸஹஸ்ரேட்யாய
ப்ரக்ருதாய
ப்ரஹர்த்ரே 480
சூர்யகோடிப்ரதீகாசாய
சந்த்ரகோடிஸுசீதளாய
சுகப்ரும்மப்ருஹ்மணே
ரேஷ்ம்யாய
வாமதேவாய
ஆருத்ரருத்ராய
ராஜராஜாய
அக்நிஅக்நயே
அநலாய
விஷ்ணுவிஷ்ணவே 490
சிஷ்யசிஷ்யாய
ஹர்யச்வாய

ப்ரியப்ரியாய
க்ரூரக்ரூராய
ஜ்யேஷ்டாய
விபுவிபவே
அலஸாய
ஸாலாய
அண்டநிலயாய
மித்ரமித்ராய 500
அநந்தாநந்தாய
அக்நிகோடிமஹத்தாம்நே
கோடிப்ரம்மாண்டசரணாய
அண்டாந்தாய
ஹிடிம்பிநிஷேவிதாய
லேசலேசாய
அண்டகாரகாய
காமகோடிப்ரகாசகாய
இஷ்டாய
அண்டச்ரியே 510
கோடிஹிடிம்பிஸம்வேத்யாய
மஹாஜாலந்தரஸ்துதாய
அந்த்யமித்ராய
ஸ்ரீசகோடிஸமாய
ஸ்ரீசகோடிகோடிசதாவ்ருதாய
அண்டரூபதராய
கோடிப்ரும்மாண்ட நாயகாய
காண்டாய
அஞ்சிதாக்குதயே
சிந்தகாய 520
வேதவேத்யாய
ருத்ரகோடிவந்திதாய
அசிச்சிதே
லவலவாய
யாமயாமாய
சிரந்தநாய
சராசராக்ருதயே
ஹ்ருதச்சிதே
சராதிபூதிதாய
விச்வவிச்வாய 530

இ[illegible]ரேட்யாய
வே[illegible]காய
நச்ய நச்யாய
மஹாப்ரபவே
ஏகைகாய
கநாகநாய
ப்ருஹத்ப்ரஹதே
ஸத்யஜிதே
ப்ரஸந்நேக்ஷணாய
ம்ருத்யும்ருத்யவே 540
ஸக்யை
ஸேநாந்யை
ச்யேநஜித்கோடிவந்திதாய
வந்த்யமித்ராய
தாத்ரே
ஸு ஷேணஜிதே
ஸு ஷேணஜித்வந்திதாய
ஸைந்யஸித்தயே
தேவாதிபதயே
வ்ருஷபத்வஜாய 550
ச்யேநசிதயே
தருணாய
ஸ்தால்யாய
வந்த்யமித்ரக்நே
தத்கோடிப்ருந்தசதஸ்துதாய
ஹிதார்யரயே
ஹிதார்யரிகோடி
கோடிசதாவ்ருதாய
சுகவிதர்த்தநேசசதாவ்ருதாய
சதகோடிஸப்யவந்திதாய 560
சதசப்யாய
ஸப்யஸமாக்ருதயே
பிக்ஷு ரூபாய
ஸப்யேசாய
அக்நிஹோத்ராய
வந்ஹிரூபவிக்ரஹாய

ஸத்பார்யாய
கபாலசதஇஷ்டச்ரியை
சூர்ப்பாக்ருதயே
சம்யாக்ருதயே 570
கபாலவிந்மாநஸாய
ஸத்ருநாதாய
உபலஸாதகாய
கபாலசதமாநஸாய
ஸேநாக்ரண்யை
முஸலாக்ருதயே
கிருஷ்ணாஜி நப்ரியாய
க்ருஷ்ணாஜிநரூபாய
சுப்ரசூர்ப்பகோடிவந்திதாய
யக்ஞபூதிமதே 580
சூர்ப்பஸ்வரூபவதே
மஹாசம்யாய
இஷ்டகாக்ருதயே
சுப்ரோலூகலஸ ுவிக்ரஹாய
உலூகலிசதாராத்யாய
ஸ்வங்குலயே
ஸ ுபதாய
சம்யாவரகோடிவந்திதாய
ப்ரதுபாஹவே
முஸலிநே 590
ஸோமஸம்வேத்யாய
உபப்ருத்கோடி சதபூஜிதாய
உபப்ருத்ஸாதநாய
உபப்ருத்விக்ரஹாய
ஸ ுபாக்ருதயே
ஸ ுபிஸ்துத்யாய
த்ரிஸர்க்காய
த்ருஷத்வேஷாய
சுக்ரியஸ்தாய
சுக்ரியரூபாய 600
த்ருஷத்வத்கோடிவந்திதாய
த்ருவாக்ருதயே
மஹாஜ ுஹ ுவத்கணவந்திதாய

ஜ ுஹ ுவாக்ருதயே
பவ்யாக்ருதயே
வேதரூபாய
தூர்வாஸஸே
வேதக்ருதே
அநந்தாக்ருதயே
ப்ரணீ திபரிரக்ஷகாய 610
த்ருவாவரகோடிவிநுதாய
பஹ்வ்ருக்ரூபாய
த்ருவாவரகோடிரக்ஷகாய
ப்ரணீதிரூபஸம்ஸ்தாய
பஹ்வ்ருஷிமதே
வேதநுதாய
பஹ்வ்ருஷிமத்கோடிபாய
த்ருவாவரகோடிசரணாய
ப்ரணீதிவிநுதபதாய
மஹாபஹ்வ்ருஷிமத்கோடிக்நாய 620
ப்ருக்வங்கிரஸவிக்ரஹாய
த்ருவாவரகோடிஸ்மாரகாய
ப்ரணீதிசதவந்திதாய
பாத்ரிபாத்ராய
பாத்திரீவதே
ப்ருக்வங்கிரஸஹஸ்ரப்ரபூஜிதாய
வேதஸாதகாய
வேதிபாய
இடாபக்ஷணஸம்ப்ரீதாய
இடாரூபாய 630
வேதிஸமாச்ரயாய
பாத்ரிவிநுதாய
இத்மாக்ருதயே
வேதீயபதவந்த்யாய
சமஸாக்ருதயே
இளாரூபாய
மஹாபஹ்வ்ருஷிமதீநுதாய
ருக்மாக்ருதயே
இடாகாயாய
இடாவரபாய 640

இடாஸ்தாநாய
இடாபக்ஷணவிசக்ஷணாய
க்ராவ்ணே
க்ராவப்ரியாய
இடாவிநுதபாதகாய
இத்மாதாராய
அநலபதாய
இடாவரகோடிவந்திதாய
ருக்மபாத்ராய
மகாதிஷ்ண்யவிக்ரஹாய 650
மகாச்மகோடிபாய
மகாதிஷ்ணயஸம்வீதாய
அக்ராசிநே
மஹாதிஷவணேச்வராய
வேதிவத்கோடிபதவந்திதாய
மகோபலவிக்ரஹாய
சமஸாக்ருதயே
க்ராவவிக்ரஹாய
மகாதிஷவண நித்யாய
ஸ்ருமகோடிவந்திதாய 660
மஹோபவீதஸம்வீதாய
வாயவ்யஸாதகாய
பூதாய
மஹாத்ரோண விராஜச்ரியே
ஸ்ருவரூபாய
க்ராவஸாதகாய
வாயவ்யஸஹஸ்ர நிஷேவிதாய
ஸ்ரீமதே
ஸுமஹாத்ரோணவிக்ரஹாய
அக்நீத்ரவிக்ரஹாய 670
ஸுமஹாதப நீயாங்காய
க்ரஹபவித்ராய
ஸுமஹாத்பநீயகாய
க்ருஹ்யாய
ஸ்வாஹாகாராய
ஸுமஹாபூதரப்ருதே
க்ராஹ்யாய
க்ரஹாக்ருதயே
ஸுமஹாவரப்ரதாகாராய
புராணாய 680
பூதபூதாய
ஸ்ரக்விநே
க்ரஹாராதயே
க்ரஹக்ரஹாய
ஸுமஹாதப நீயாங்காய
ஸதோரூபாய
ஸதஸ்தா நாய
ஸுப்ரஜேசாய
சுசயே
ஸதோமித்ராய 690
ஸத:காயாய
தேவேட்யாய
ஸத: பாத்ராய
சிராதிகாய
தக்ஷிணாக்நிரூபாய
க்ரஹராஜாய
தேவகோடிபாய
கார்ஹபத்யாக்ருதயே
பூஷ்ணே
சிபிவிஷ்டாய 700
ஸதோதிதாய
ஸதாகதயே
ஸத:காயாய
புரோடாசாச்ரயாய
பயஸே
சாத்வாலரூபாய
மந்த்ரஜிஹ்வாய
ப்ரஜாபதயே
புரோடாசமஹாபோக்த்ரே
சுகோடீட்யாய 710
சாத்வாலஸம்ஸ்தாய
சாத்வாலரூபகாய
மந்த்ரா ச்ரயாய
ராயஸ்போஷாய

சதவீர்யாய
வைச்வதேவாய
மஹாசாலாமுக்யாய
இரம்மதாய
மந்த்ரஸாராய
தாத்ரே 720
அசுராதீசாய
மத்ஸ்யாய
மத்ஸ்யாதிநே
அர்யம்ணே
வருணாய
ஸுந்தராகாராய
ஆகதாய
ஸுப்ரதிக்யாதாய
ஹவிர்ப்பூதாய
அதிபதயே
ச்ரியச்ரியே 730
விச்வப்ரியாய
கீதாய
அநுகூஷணாய
உபநிஷத்பக்ஷாய
ஆசவே
திவ்யசதச்ரியே
ஆஹூதாய
ஸோமப்ரியாய
ந்ருஷத்ஸாரோஜ்வல நாய 740
அத்புதாய
ஸூத்ரஸங்கதாய
பப்லுசாய
தீபாகாராய
ஸோமபோக்த்ரே
த்ருப்தாய
ச்வேதரூபவதே
ஸோமாக்ருதயே
ஸ்வராகாராய
ஸுமஹாசுபகாரகாய 750
ஸலிலாய
க்லிச்யமாநாய
நித்யகர்மைகபலதாய
நித்யகர்மப்ரியாய
தாத்ரே
ஸமுத்ராய
ஸௌம்யாய
க்ஷூராய
க்ரௌர்யாய
க்ரீதாய 760
ஹவிர்முகாய
ஹூயமாநாய
நீலவர்ணாய
நித்யகல்யாணசரணாய
அருணாய
அபாபப்ரியாய
நித்யகல்யாணஸம்பந்நாய
அங்கஹோமஸ்ரீகராய
நித்யகல்யாணகாரகாய
ஹ்ருத்ரோகரஹிதாய 770
கவயே
நித்யகல்யாணரூபவதே
விசங்கடாய
சித்ராய
பக்ததர் சிதலாஸ்யச்ரியெ
க்ருஷ்ணாய
ச்வேதாய
பாத்ரிஹ்ருதயாய
அதிக்ரம்யாய
க்ருஷ்ணாய 780
பக்ததர்சிதந்ருத்தச்ரியே
சிவாப்ரியாய
ஸவதந்த்ராய
பவ்யமண்டபமத்யகாய
கல்யாணாக்ருதயே
சிவரூபாய
ஸர்வாநந்தைகஜநகாய
அதிகோமளாய

ஸர்வாதாராய
ஸர்வவரதாய 790
வர்ணிரூபாய
ஸமதாண்டவராஜாய
ஸர்வதர்சிதகல்யாணாய
ஸர்வாபீஷ்டப்ரதாயகாய
ஸர்வதர்சிதமங்களாய
ஜப்தஸர்வமஹாமந்த்ராய
க்ருதபூஷாய
ஓங்காரவபுஷே
ஓங்காராய
த்ருதகௌ துகபந்தநாய 800
ஓங்காரைகபராயணாய
த்ருதகௌரீபுஜாந்தராய
மஹாஜபபலப்ரதாய
ஸௌர்யரூபாய
கல்யாணகாரகாய
இஷ்டதாய
த்ருதமாத்ருகாய
மஹாதாண்டவபண்டிதாய
தேவதர்சிததாண்டவாய
கௌரீப்ரதர்சிதமஹாதாண்டவாய 810
ஸர்வபூததாம்நே
மஹாகல்யாணநிகேதஸ்தாய
தண்டுமாநஸாய
ஸர்வதர்சிதநாட்யகாய
க்ருதப்ரம்மோ த்ஸவச்ரியே
ஸகலா பந்நிவாரகாய
க்ருததிவ்யம ஹோத்ஸவாய
ஸ்மேரா நநாய
லஸத்தாஸ்யாய
ப்ரபத்த்யாய 820
ந்ருத்தகௌரீ திவ்யலாஸ்யப்ரதாய
பலப்ரமதநாய
பவித்ரகரஸுந்தராய
தர்ப்பசயாய
புத்ரவாக்யக்ருதாசேஷ
பக்ததர்மாதிவாக்யகாய
பூதவாரிதயே
லீலாபராய
பூதவாஹநாய
தத்வாக்யஸ்தாபிதமஹாபூதவர்யாய
வாமதேவாய 830
கல்யாணாஸ நஸம்ரூடப்ரியா
தக்ஷிணபாககாய
ஸத்யோஜாதாய
தஸ்யாஸ்ரீகந்தபாக்யாய
ஸ்தாபிதாசேஷகல்யாணதைவதாய
மஹாச்ரயாய
துர்த்தராய
லக்ஷ்மீசகோச்ரயாய
நாயகாச்ரயாய
துந்துப்யாய
ஸ்தாபிதாசேஷநிதிகாய 840
மருதே
கோராதிகாய
தத்புருஷாக்ருதயே
அஷ்டச்ரியே
குஹாச்ரயாய
மஹஸே
அஷ்டச்ரீகாரகாய
கோராய
ஸ்தாபிதாசேஷகல்யாணதைவதாய
கோத்ரதராய 850
ஸமஸ்தவிபுதாசேஷதைவதாய
பவோத்பவாய
ஆவாஹிதாசேஷபவ்யநாயகாய
ச்ரேஷ்டாய
ச்ரேஷ்டதமாய
பலவிகரணாய
ஸ்வாஹ்ருதாசேஷதே
வௌகஸ்துதிக்ரீதாய
கலவிகரணாய
மநோந்மநாய
அகோராய 860

இரிண்யாய
ஜாதரூபாய
ஸதைகபுவே
பவாய
ஹ்ருதய்யாய
பதிகாசாரராய
இரிணாக்ருதயே
ஸேவ்யாய
க்ஷயணாய 870
கிங்சிலாய
ஸாராய
வாபீகாராய
புருஷாய
புலஸ்த்யாய
பூரவே
தரணாய
ரேஷ்ம்யாய
ஈசாநகாய
க்ருஹ்யாய
தல்ப்யாய 880
க்ருஹரூபாய
க்ரஹோத்பவாய
புருஸ-ூதாய
கேஹ்யாய
காட்யாய
புருஷ்டுதாய
நிவேஷ்ப்யாய
ராகரஹிதாய
ஹரித்யாய
ராஜ்யாய 890
அமரேட்யாய
உலப்யாய
அபிக்நதே
ஊர்ம்யாய
லோப்யவிக்ரஹாய
த்ரயீவர்ணாட்யாய
சைவாய
வர்ணஸத்யகாய
தராய
அபிக்நதே 900
அபிக்நாய
கூல்யாய
வர்ஷ்யாய
அபிக்நகோடி நிஷேவிதாய
வாஸ்துபாய
வாத்யாய
கீர்த்திதாய
சிவதராய
சைவாய
ஹிரண்யபாஹவே 910
பார்யாய
சிசுரூபாய
சஷ்ப்யாய
ஈத்ரியாய
ஆதார்யாய
தூராய
உத்தரணாய
ப்ரவாஹ்யாய
நிஷங்கிணே
ஸ்வாயுதாய 920
ஹந்த்ரே
வந்யரூபாய
அவார்யரூபாய
பப்லுசாய
ப்ரக்க்கிததே
ஸ-ுதந்வநே
தீக்ஷ்ணேஷவே
கூப்யாய
பப்லுசாய
ஆலாத்யாய 930
பிஷக்ராஜாய
க்ரந்தநாயகாய
ஸிகத்யாய
க்ருத்ஸ்நவீதாய

கதாதராய
ப்ராணாய
தீக்ஷ்ணாய
வாஸ்துபாய
சர்மாக்ருதயே
தூத்யகர்மவிசாரதாய 940
தூதக்ஞாய
சாந்தைர்நிரதபூஜிதாய
ஸ்வாந்தாய
அவட்யாய
நாத்யாய
ஸுச்லாக்யாய
கூப்யாய
வைசந்தாய
நாப்யாய
நிராச்ரயாய 950
ரவ்யத்ரிவாஸாய
ஆததாயிநே
ரவ்யாக்ருதயே
அவர்ஷ்யாய
அவாத்யாய
மேக்யரூபாய
விதுத்யநிக்ரஹாய
ஸுத்யாய
லாஸ்யரூபாய
பரிசுத்தாக்ருதயே 960
ஸுதாய
வாஸ்தவ்யாய
சாயிநே
ஆதப்யாய
த்ரஸ்தாய
க்ஷேத்ரபதயே
ரேஷ்ம்யவேஷாட்யாய
சகபிஞ்சராஜத்விக்ரஹாய
வில்யாதிநே
ரோஹிதாய 970
ஸத்வாய
ஹரிகேசாய
வநஸ்பதயே
ஸேநாந்யே
ஸ்தபதயே
உபவீதவதே
மந்த்ரவிக்ரஹாய
ஸத்வரூபப்தாதிக்நே
கக்ஷாச்ரிதாய
வாணிஜாய 980
ஸாரதிக்நே
கக்ஷநாதபரிஷ்டுதாய
சிகித்ஸகாய
தத்வக்ருதே
உச்சைர்க்கோஷாய
தர்க்கதூஷகாய
தர்க்கதத்வைககண்டநாய
ஹரிபஸ்துதவர்ஷ்மேட்யாய
பக்தசிந்தாமணயே
நீசகோஷாய 990
மஹாகோஷாய
பக்திகம்யாய
அத்யாபகாய
பக்திமதர்ச்சிதாய
வேதாத்யாயிநே
மஹாவேதாந்ததாத்பர்யவேதநாய
சர்யா நிலயாய
ஸுமஹாவைதிகப்ரியாய
வேதகம்யாய
சரண்யாய 1000
த்ருணரக்ஷகாய
வேதைகமாநஸாய
ஸ்வயம்ப்ரகாசதேவேசாய
பூகைலாசஹிதேச்வராய
X நிஷ்கல்மஷமணீச்வராய
(× நிஷ்கல்மஷமணி – மாசிலாமணி)
பிப்பலாரண்யநாதாய
அர்த்தத்யாகராஜாய
அதுலஸ்தநிகாநாதாய
கோமுத்திக்ஷேத்ரநாதாய
வரதகாவேரீ தடரூபாய
ஸ்ரீமத் கோமுக்தீஸ்வரஸ்வாமிநே

ஸ்ரீ மாசிலாமணிப்பெருமான் சகஸ்ரநாமாவளி முற்றிற்று.

# துறைசைப் புராணத் துதிப் பாடல்கள்



## 1. அழகிய விநாயகர் துதி (தல விநாயகர்)

சங்கர ஞான புத்திர! சயிலமா தருள்கு மார!
துங்கவேள் முன்பு வந்த சுந்தர! சூர்ப்ப கர்ண!
பொங்கர வணிந்த தோள! புங்கவ! புனித போத!
ஐங்கர நாத! சோதி அழகிய கணேச போற்றி!

மூடிக வாக னா! நல் மோதகக அத்த! வேத
பீடிக! ஏக தந்த! பிரணவா சன! சை யோக
ஓடுமும் மதவி லாச! உயர்சதா ரவிப்பிர காச!
ஆடவர் திலக! யோக அழகிய கணேச போற்றி!

இந்துசே கர! முக் கண்ண! இலகுசோ டசக ணேச!
தொந்திகொ ளுதர! நீண்ட துளைபெற துதிக்கை நாத!
சிந்துரா னைவி லாச! தேவநா யக! அ மோக!
அந்தமி லாத இன்ப அழகிய கணேச போற்றி!

கிம்புரித் தந்த! நால்வாய்க் கிளர்புகர் வதன! வீர!
நம்பினோர்க் கருள்செ யுங்கிரு பாகர! நாத கீத!
செம்பொன்மா மணிச்சி லம்பு கிண்கிணி சிறந்த பாத!
அம்பர வுருவ! மிக்க அழகிய கணேச போற்றி!

பாரத மேரு வென்னும் பருப்பத ஏட்டிற் கொம்பே
கூரெழுத் தாணியாக்கொண் டெழுதிய குழக! போரின்
நேருறுங் கசான னத்து நிசிசரன் தனையட் டியார்க்கும்
ஆரருள் புரிந்து காத்த அழகிய கணேச போற்றி!

சந்திரன் சாப நீசத் துவஞ்சதுர்த் தியில்வைத் தாண்ட
மந்திர வடிவ! காக வுருவமாய் மருவி மிக்க
செந்தமிழ் முனிக்க மண்ட லத்துநீர் சிந்திப் பொன்னி
அந்தமில் நதிய ழைத்த அழகிய கணேச போற்றி!

தகவோடு கவுரி தன்மேற் தரித்தசந் தனந்தி ரட்டு
மகவுரு வான தன்சீர் வடிவினை யழித்த முக்கட்
பகவனுக் கிணையா முக்கண் படைத்தேங் காயுடைப்போர்க்கு
அகமகிழ்ந் துதவும் இன்ப அழகிய கணேச போற்றி!

இருங்கடம் பணியுந் தம்பி எழில்மயில் மீதி லேறிப்
பெருந்திருக் கயிலை் சுற்றி வருமுனம் பிதாவைச் சுற்றித்
திருந்துள மகிழ்ச்சி கூரச் செய்தவர் திருக்கை யீந்த
அருங்கனி வாங்கி நூங்கும் அழகிய கணேச போற்றி!

முப்புரம் எரிக்கும் ஞான்றும் உன்றனை நினையா தங்கு
மெய்ப்பொடுஞ் செய்த தேரை விழவொடித் தளவி லாத
துய்ப்பொடு பூசை கொண்டு சுகித்தபின் அதற்கு வெற்றி
அப்பொழு தளித்து நின்ற அழகிய கணேச போற்றி!

செக்கர்மே னியனே! மிக்க சித்திமுத் திகட்கு வித்தாம்
விக்கின விநாய காய நமவென விளம்பிப் பூசித்து
எக்கணுள் ளோரும் ஏன்ற மாத்திரம் ஏத்து வாரேல்
அக்கணம் முன்னின் றாளும் அழகிய கணேச போற்றி!

*(23. தேவர்கள் கணபதி பூசை செய்த அத்தியாயம் பா.16 - 25)*

**2.மாசிலாமணி ஈசர் துதி**

*கங்காத ரா!காள கண்டா!திரி யம்பகா! கால காலா!*
*துங்காபு ராந்தகா! தண்துறைசை நாயகா! சுயம்ப்ர காசா!*
*சங்கார காரணா! சதாசிவா! சுராதிபா! சயில மாது*
*பங்கா!து ரந்தரா! சங்கரா! சுந்தரா! பரம நாதா!*
*(7, மூர்த்திவிசேடம் உரைத்த அத்தியாயம், பா 13)*

*சந்திர சேகர! அம்பிகை நாயக! சங்கர புங்கவவற்*
*சந்தர! இன்ப நிரந்தர! பூரண! காரண! வாரணநற்*
*சுந்தர! மங்கள கங்கை சுமந்தவ! தொண்டர்கள் கண்டுபுணர்*
*மந்திர ஞானப ரம்பரை யாதிப! வானவ! யாம் அபயம்.*
*உத்தம! அற்புத முத்தப ரப்பிரம! உற்பவ! மற்றகுண*
*வித்தக! வெட்டுரு வுற்றுள கர்த்த! விடைக்கொடி பற்றுகர*
*சத்துரு வானவ! சத்துரு வானவர் சத்திய ழித்திடுகூர்*
*முத்தலை வேல்வலன் வைத்திடு கொற்றவ! முக்கண! யாம்அபாயம்.*
*எயிலை எரித்திட முறுவல் படைத்தவ! யமனையு தைத்தவ! பொற்*
*சயிலம் வளைத்தவ! மதனை யழித்தவ! சதுர்மறை சொற்றவ! நல்*
*மயிலை உகைப்பவ னுடன்மிகு மத்தள வயிறனை உய்த்தவ! வெண்*
*கயிலை மலைத்திரு மனையுறு சிற்பரை கணவ! உனக்கபயம்.*

*(10. அம்பிகை பசுச்சாபம் ஏற்ற அத்தியாயம், பா.354 - 356)*

சன்னதி யெதிர்போய் நின்ற தலைவனே போற்றி! போற்றி!
மின்னவிர் சடையாய் போற்றி! வேதநா யகனே போற்றி!
கன்னல்வில் மதனைக் காய்ந்த கண்ணுதல் நாதா போற்றி!
என்னையாள் இறைவ போற்றி! ஈசனே போற்றி! போற்றி!

உனைப்பிரிந் திருத்த லாற்றேன் உரிமைதந் தருள்வாய் போற்றி!
தினைப்பொழு தேனும் வேண்டேன் தேகத்தின் தன்மை போற்றி!
வினைப்பிணிப் பறவே உன்னை விரும்பினோர் தமக்கும் போற்றி!
மனத்தினுக் கதீத மாமென் மாசிலா மணியே போற்றி!
(25. கோவுருவநாயகி மாசிலாமணியைத் தரிசித்த அத்தியாயம், பா. 18 -19)

கீற்றிளம் பிறையொளி கிடந்த சென்னிமேல்
ஆற்றையுஞ் சூடிய அழகன் ஆதியான்
ஏற்றின்மேல் வரும்அணைத் தெழுந்த நாயகன்
கூற்றுதை சேவடி குலாவிப் போற்றுவாம்!

பாலலோ சனன்செழும் பவள மேனியன்
ஆலகா லந்திகழ் அழகு சுந்தரன்
ஏலவோ தியைஅணைத் தெழுந்த நாயகன்
கோலமா ரெழில்நலங் கும்பிட் டேத்துவாம்!

சுந்தர நாயகன் சுடர்கொள் முக்கணன்
கந்தனை யீன்றநற் கருணைக் குன்றனான்
இந்துவே ணியன் அணைத் தெழுந்த நாயகன்
பந்தம்நீக் கிடும்புகழ் பகர்ந்து வாழ்த்துவாம்!

திரிபுர மெரிசெய்த சிலையன் காமனை
ஒருகனல் விழியினால் உருவ ழித்தவன்
இருபதந் தரும்அணைத் தெழுந்த நாயகன்
அருள்நினைந் துருகிநல் லன்பு செய்குவாம்!

ஆரண முடிமிசை அமர்ந்த சோதியான்
காரண னாயுல கீன்று காப்பவன்
ஏரணைந் திடஅணைத் திருந்த நாயகன்
பூரண வடிவினைப் புகழ்ந்தி றைஞ்சுவாம்!
(27. தேவி பசுத்துவம் நீங்கிப் பாகம் பெற்ற அத்தியாயம் பா. 52 - 56)

புண்ணியனே தென்துறைசைப் பொருளே போற்றி!
புரமெரியப் புன்னகைசெய் புனிதா போற்றி!
எண்ணுமுயிர்க் குயிராகி அறிவாய் இன்பமாய்
எங்குமாய் நிறைந்துநின்ற இறைவா போற்றி!
கண்ணொருமூன் றுடையஅருட் கனியே போற்றி!
கருதுவார் இருளகற்றும் கதிரே போற்றி!
பண்ணமர்சொல் ஒப்பிலா முலையாள் மேவும்
பங்கனே போற்றி! பரா பரனே போற்றி!

புளகமுற உளமுருகக் கண்ணீர் வாரப்
போற்றும்அடி யாரிடத்தில் புணர்வாய் போற்றி!
எழில்மதியும் சுரநதியும் பாம்பும் அக்கும்
என்பும்அணிந் திலகியசெஞ் சடையாய் போற்றி!
களபமலிந் திறுமாந்து பனைத்து விம்மிக்
கதித்த ஒப்பி லாமுலையாள் கணவ போற்றி!
வளர்புகழ்சேர் ஆவடுதண் துறையி லென்றும்
மருவியருள் மாசிலா மணியே போற்றி!

வேதநெறி தழைத்தோங்க அருள்வாய் போற்றி!
மிகுசைவத் துறைவிளங்க அருள்வாய் போற்றி!
நீதிமிகும் தருமநெறி அருள்வாய் போற்றி!
நின்னடிமைத் திறம்விளங்க நினைவாய் போற்றி!
ஏதமற நாயேனை உனக்கெந் நாளும்
இடபவா கனமாய்க்கொண் டருள்வாய் போற்றி!
மாதவர்கள் போற்றுதிருத் துறைசை மேவி
வளரும்அருள் மாசிலா மணியே போற்றி!
(28. வேதபுத்திரனாகிய தரும தேவதைக்கு இடபவாகனப் பேறு அருளிய அத்தியாயம் பா. 13 - 15)

பிணைத்த மலர்த் தொங்கலிடும் அன்பருள்ம்
பிரியாத பிரானே! முன்னாள்
இணைத்தசரா சரங்களெல்லாம் ஈன்றுகாத்
தருள்புரியும் இறைவா! மிக்க
பணைத்தெழும்பூண் அதுலதனி உமைபாகா!
தென்துறைசைப் பரனே! மானை
அணைத்தசந்திர சேகரஉன் பரிபுரத்தாள்

கமலமலர் அகத்துள் வைப்பாம்!
மருளகற்றி இருள்புரக்கும் கருணையினால்
தேவியொடும் மைந்த ரோடும்
தெருளுமருட் பூதகணச் செல்வரொடும்
சந்திரசே கரரூ பங்கொண்டு
இருள்அகல்வித் தெமையாள் மாசிலா
மணிவடிவி லிருந்திங் கெய்தி
அருள்மிகுத்த தேரழுந்தூர் வந்திருந்தோன்
இருமலர்ந்தாள் அகத்துள் வைப்பாம்!

(29. சோமுகனைச் சங்கரித்து வேதம் வரவழைத்த அத்தியாயம், பா. 36, 37)

ஆதி யந்தமி லாத சுந்தர அங்க வாரி பூரணா!
நாத விந்துவை யுங்க டந்தருள் நாத! மெய்க்கிரு பாகரா!
வேத மந்திர ரூப தந்திர வீர பூத கணாதிபா!
மாது பங்குறை போதி யமலமாசி லாமணி நாயகா!

நாக பூடண நாக கங்கண நாத கீத மனோகரா!
வேக மன்மத கோடி ரூபநல் லிடப வாகன கேதனா!
சாக ரந்தரு நீல நஞ்சு தழைத்தி ருண்டொளிர் கந்தரா!
வாகு கொண்ட பினாக மேந்துகை மாசி லாமணி நாயகா!

முப்பு ரத்தை யெரிப்ப வோர்குறு மூரல் கொண்ட புராந்தகா!
வெப்பெ ழுந்து கரிந்து மன்மதன் வேக நோக்கும் விலோசனா!
செப்பு நான்மறை யுட்பொ ருட்சன காதி பர்க்கருள் தேசிகா!
மைப்பு யற்குழல் ஒப்பி லாள்புணர் மாசி லாமணி நாயகா!

கயிலை மாமலை மேவு காவல கங்கை நாயக மங்களா!
சயில மாமரு காபு விக்குயர் சதுர்ம றைப்பொருள் தந்தவா!
அயில்கொள் நற்றிரி குல மேந்துகை யைமு கப்பர மேசுரா!
மயில்கெ டுத்தரு ளுயிர்பு ரக்கும்நன் மாசி லாமணி நாயகா!

ஐங்க ரக்கர டக்க டாம்பொழி யழகு குஞ்சரம் ஈன்றவா!
செங்கை யுற்றிடு முகிரி னாலயன் சிரம றுத்த செகாதிபா!
துங்க வுக்கிர நீள்வ ரிப்புலியின் தோலு டுத்திய உத்தமா!
மங்கை யுற்றிடு பங்க நற்சிவ மாசி லாமணி நாயகா!

சோமு காசுரன் தனைய டர்ந்தருட் சுருதி தந்திடு துயவா!
காம தேனுவி னுருவ கற்றிநற் கவுரி யைப்புணர் காதலா!
தேம லர்க்கர மாத வத்தினர் சித்த முற்றிடு பூசிதா!
மாம மூப்பொறி மான்பி டித்தகை மாசி லாமணி நாயகா!

சந்திர சேகர கங்கை சூடு சடாத ரா!கரு ணாகரா!
சிந்து ரத்துரி கொண்ட போர்வைகொள் தேவ தேவ!மகேசுரா!
கந்த னைத்தரு பால லோசன கால காலதிரி யம்பகா!
மந்த ரப்புயம் நான்கு கொண்டநல் மாசி லாமணி நாயகா!

அரியி டந்துகண் மலர்பு னைந்தடி பணிய ஆழி கொடுத்தவா!
விரத மங்கையர் துகில்ச ரிந்திட விரக மீந்த திகம்பரா!
பொருவில் மாமுனி மகவி னுக்கழி யாத மெய்யருள் புண்ணியா!
மருவும் ஆவடு துறைசை வாழ்திரு மாசிலாமணி நாயகா!
(34 போதியம்பலத்துள் மகாதாண்டவம் புரிந்த அத்தியாயம், பா. 41 - 48)

நிரந்தநாற் சுருதி தேரும் நின்மல பகவ போற்றி!
வரந்தர விருந்து வாழும் மாசில மணியே போற்றி!
பொருத்தலர் புரமூன் றட்ட புண்ணியக் கடவுள் போற்றி!
திருந்து தென் துறைசை வாழுந் திரவியத் தியாக போற்றி!

காவிவேல் விழிக ளொப்பி லாமுலை கணவ போற்றி!
தாவில்செங் கழுநீர் மாலை தரித்தருள் புயத்தாய் போற்றி!
தூவுகட் பொழில்செவ் வந்தித் தோடணி குழையாய் போற்றி!
ஆவடு துறையுள் மேவும் அழகுபொற் தியாக போற்றி!

உகம்பல புரப்பாய் போற்றி! உயிர்க்குயி ரானாய் போற்றி!
நகங்கொடு மலரோன் சென்னி நறுக்கிய நாத போற்றி!
மகம்புரி தக்கன் மீதோர் மறிமுகம் படைத்தாய் போற்றி!
சகம்புகழ் துறைசை ஊரிற் சார்செம்பொற் தியாக போற்றி!

துளங்குவெண் மதியும் கொன்றைத் தொடையலும் அணிந்தாய் போற்றி!
களங்கமி லறிவோர் நெஞ்சங் கலந்திடு தலைவ போற்றி!
இளங்கொடி உமையாட் கென்றும் இன்பனே போற்றி! நாளும்
விளங்குதென் துறைசை வீதி விடங்கனே போற்றி! போற்றி!

போதகம் புரிவாய் போற்றி! போதியம் பலத்தாய் போற்றி!
மாதவர்க் கரசே போற்றி! மாசிலா மணியே போற்றி!
கீதமோ டுறையும் நாகக் கிண்கிணிச் சரணா போற்றி!
மேதகு துறைசை வீதி விடங்கனே போற்றி! போற்றி!
(37, முசுகுந்தச் சக்கரவர்த்தி பிள்ளைவரத்துக்கு வந்த அத்தியாயம், பா 41 - 45)

சச்சிதா னந்த ரூப சதாசிவ முதலே போற்றி!
பிச்சனேன் தனையாட் கொண்டு பிழைபொறுத் தாண்டாய் போற்றி!
செச்சைமா மலர்ப்பொன் மேனிச் சிவஞான முடையாய் போற்றி!
நச்சர வணிபொற் தியாக நாதனே போற்றி! போற்றி!

செய்யனே போற்றி! செல்வத் திருவாரூர் அரசே போற்றி!
அய்யனே போற்றி! தென்ஆ வடுதுறை அமுதே போற்றி!
துய்யனே போற்றி! ஞானச் சுகமளித் தென்னை யாண்ட
மெய்யனே போற்றி! தியாக விடங்கனே போற்றி! போற்றி!
(39 முசுகுந்த சக்கரவர்த்தி சிவார்ச்சனை செய்து முத்தி பெற்ற அத்தியாயம், பா 13, 17)

அங்கண போற்றி! என்னை ஆண்டருள் அமல போற்றி!
செங்கணா போற்றி! வேதச் சிவப்பரம் பொருளே போற்றி!
கங்கண நாகச் செங்கைக் காதணி குழையாய் போற்றி!
மங்கையோர் பங்க போற்றி! மாசிலா மணியே போற்றி!
(50. அகத்தியருக்கு வெண்ணோய் அகற்றி அருள்புரிந்த அத்தியாயம், பா.12)

எனையும் பொருளாய்த் தடுத்தாட்கொண்டு
இன்பம் அருள்செய் எழில்மலையே!
பனிவெண் திங்கட் கொழுந்துதவழ்
படர்செஞ் சடைக்கா டுடையானே!
புனிதம் பெருகும் அதுலதனப்
பூவை கணவா ஏனமுமோர்
அனமுங் காணாக் குருமணியே!
அய்யா! யானுன் அடைக்கலமே!
(57. திருமூலதேவரைத் தடுத்தாட் கொண்ட அத்தியாயம், பா. 36)

தேவர்க்ள் தேவேபோற்றி! சிவபரம் பொருளே போற்றி!
மாவடு வகிர்கண் ஒப்பி லாமுலை மணாளா போற்றி!
பாவினுக் காயி ரம்பொன் பரிசருள் தியாகா போற்றி!
ஆவடு துறையுள் மேவும் அமலனே போற்றி! போற்றி!
(68. மிதுலேசன் முனிவருடன் வந்து அர்ச்சித்து முத்தி பெற்ற அத்தியாயம், பா.21)

## அருள்தரு ஒப்பிலா முலையம்மன் துதி

*தேவ தேவன் திருவருள் நாயகி! காவ லாயுல காள்கரு ணாகரி!*
*தாவில் சுந்தரி! சங்கரி! சாம்பவி! பாவ கோபி! பருப்பத வர்த்தனி!*
*சுத்த ஞான சுகோதய பூரணி! பத்த ரன்பிற் பதிந்தசிந் தாமணி!*
*முத்த மூரல் முகிழ்முலை முக்கணி!*
*(11. தேவி காசியில் பசு உரு அடைந்த அத்தியாயம். பா. 34, 35)*

*பசியகோ மளமே! சுந்தர மயிலே!*
*பாகம்விட் டுஅகன்றிடாக் குயிலே!*
*வசிகர முதலே! எமதுயிர்த் துணையே!*
*வாழ்வெமக் காகிய மருந்தே!*
*கசிவுகொண் டமுதம் கான்றிடு மதியே!*
*கயிலையி ல்இருந்தொளிர் விளக்கே!*
*உசிதமெய் உமையே! எம்மைவிட்டு*
*அகன்றெங் குற்றனை யோ*
*(13. கயிலையில் சிவன் அம்பிகையை நினைந்து மோகித்திருந்த அத்தியாயம், பா.2)*

*போத நாயகி! புராதன நாயகி! புகழ்சேர்*
*சோதி நாயகி! சுந்தர நாயகி! தொகுமான்*
*சாதி நாயகி! சதுர்மறை நாயகி! தகைசேர்*
*ஆதி நாயகி! அஞ்சினேம் யாங்கள்உன் அபயம்!*
*(17. தேவர்கள் கயிலை அடைந்த அத்தியாயம், பா. 19)*

*அப்பணி சடையினான் அணைப்ப வோர்புறம்*
*துப்பிதழ் மானெனத் துலங்கு வாள்தனை*
*இப்பவ மறஎனக் கிரங்கி ஆண்டருள்*
*ஒப்பிலா முலைபதம் உவந்து போற்றுவோம்!*
*மாவடு வகிர்விழி மயிலை ஐங்கரக்*
*கோவினைஅருளிய குயிலைக் கோதிலாச்*
*சேவினி லான்அணைத் திருக்குஞ் செல்வியை*
*ஆவடு துறைசைவாழ் அனையைப் போற்றுவாம்!*

*பகிர்நில வணிசடைப் பரமன் பங்கினிற்*
*துகிர்கொள்வாய்க் கிளியெனத் தோன்று மங்கையை*
*அகிலகா ரணியைஅம் பிகையை அன்னையை*
*நிகரிலாத் தனத்தியை நினைந்து வாழ்த்துவாம்!*

மறைபுகழ் மரகத மணியை மாதவர்க்கு
இறைவியை இமையன்ஈன் றெடுத்த கன்னியைப்
பிறையணி அரனிடம் பெறும்பி ராட்டியைத்
துறைசைவாழ் இறைவியைத் தொழுதி றைஞ்சுவாம்!

கதிமுத லாங்கயற் கருணைக் கண்ணியைப்
பதிமுத லோடுறும் பரையைப் பைந்தருப்
பொதியுரு வெழிலைஅம் புவியிற் காட்டிய
அதுலகு சாம்பிகை அடியை ஏத்துவாம்!

(27. தேவி பசுத்துவம் நீங்கிப் பாகம் பெற்ற அத்தியாயம், பா.57 - 61)

தெரிவரிய பரையாகி விமலை யாகிச்
செப்பரிய இன்பவருட் செல்வி யாகி
விரியுமுயிர்த் தனுகரண புவன போக
மேவவருட் காரணியாய் விண்ணோர் போற்ற
வருமிமைய மடமகளாய்த் தேவி யாகி
வலியஎமைக் கருணையினால் வந்தாட் கொண்டெம்
உரியமன மொருகணமும் பிரிய மாட்டா
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.

மலமகலத் தனுவாதி யுடனே யொன்றாய்
மருவுமிரு வினைப்பயனும் வழாதுகூட்டி
நிலவுசரி யாதியொரு நான்குந் தானாய்
நின்றசெய்வித் துளத்தைவெளிப் படுத்திமிக்க
பலன்மருவு பதமுன்று மருளி யொத்த
பரிபாகங் கண்டுசிவ பாதம் நல்கி
உலகவுயிர்க் குயிராயைந் தொழில்செய் தாளும்
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.

வாக்குமனா தீதகோ சரமாய்ச் சத்தாய்
மனோலயத்தி லளவிலின்ப மயமாயத் தோன்றிப்
போக்குவர வற்றுயிர்தா னாகி நிற்கும்
பூரணத்தின் திருநடங்கட் புலனாற் கண்டு
தேக்கிமகப் பிணிக்குமருந் தன்னை யுண்டு
திறள்முலைப்பால் வழியூட்டித் தீர்க்கு மாபோல்
ஊக்கமிகு மெங்கள்மல நோய்தீர்த் தாள
ஒப்பிலா முலைமயிலை யுரைத்து வாழ்வாம்.
(34. போதியம்பலத்துள் மகாதாண்டவம் புரிந்த அத்தியாயம், பா. 7 - 9)

# சிவகவசம்



॥ शिवकवचम् ॥

अस्य श्री शिवकवचस्तोत्र - महामन्त्रस्य ब्रह्मा ऋषिः । अनुष्टुप् छन्दः । श्रीसदाशिवरुद्रो देवता ॥ श्रीं ह्रीं क्लीं बीजं, ह्रीं शक्तिः, रं कीलकम् ॥ श्रीसदाशिवप्रीत्यर्थे जपे विनियोगः ॥

ओं नमो भगवते ज्वलज्ज्वालामालिने ओं ह्रीं रं सर्वशक्ति-धाम्ने ईशानात्मने अंगुष्ठाभ्यां नमः ।

ओं नमो भगवगते ज्वलज्ज्वालामालिने ओं नं रिं नित्यतृप्ति-धाम्ने तत्पुरुषात्मने तर्जनीभ्यां नमः ।

**சிவகவசம்**

*அஸ்ய ஸ்ரீ சிவகவச-ஸ்தோத்ர-மஹாமந்த்ரஸ்ய, ப்ரஹ்மா ருஷி:, அனுஷ்டுப் சந்த:, ஸ்ரீ ஸதாசிவ-ருத்ரோ தேவதா । ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் பீஜம், ஹ்ரீம் சக்தி:, ரம் கீலகம் ॥ ஸ்ரீஸதாசிவ-ப்ரீத்யர்த்தே ஜபே விநியோக: ॥*

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் ஹ்ரீம் ரம் ஸர்வசக்திதாம்னே ஈசானாத்மனே அங்குஷ்டாப்யாம் நம: ।

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் நம் ரிம் நித்யத்ருப்திதாம்னே தத்புருஷாத்மனே தர்ஜனீப்யாம் நம: ।



ओं नमो भगवते ज्वलज्ज्वालामालिने ओं मं रुं अनादिशक्ति-धाम्ने अघोरात्मने मध्यमाभ्यां नमः ।

ओं नमो भगवते ज्वलज्ज्वालामालिने ओं शिं रैं स्वतन्त्रशक्तिधाम्ने वामदेवात्मने अनामिकाभ्यां नमः ।

ओं नमो भगवते ज्वलज्ज्वालामालिने ओं वां रौं अलुप्तशक्तिधाम्ने सद्योजातात्मने कनिष्ठिकाभ्यां नमः ।

ओं नमो भगवते ज्वलज्ज्वालामालिने ओं यं रः सर्व-अद्भुत-शक्ति-धाम्ने सर्वात्मने करतलकरपृष्ठाभ्यां नमः ॥

एवं हृदयादिन्यासः ॥

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் மம் ரும் அனாதிசக்திதாம்னே அகோராத்மனே மத்யமாப்யாம் நம: ।

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் ஶிம் ரைம் ஸ்வதந்த்ரசக்திதாம்னே வாமதேவாத்மனே அநாமிகாப்யாம் நம: ।

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் வாம் ரௌம் அலுப்தசக்திதாம்னே ஸத்யோஜாதாத்மனே கனிஷ்டிகாப்யாம் நம: ।

ஓம் நமோ பகவதே ஜ்வலஜ்ஜ்வாலாமாலினே ஓம் யம் ர: ஸர்வ - அத்புதசக்தி-தாம்னே ஸர்வாத்மனே கரதல-கர-ப்ருஷ்டாப்யாம் நம: ।

ஏவம் ஹ்ருதயாதி-ந்யாஸ: ।

ध्यानम्—

वज्रदंष्ट्रं त्रिनयनं कालकण्ठ-मरिंदमम् ।
सहस्रकर-मत्युग्रं वन्दे शंभु-मुमापतिम् ॥

लं - पृथिव्यात्मने गन्धं समर्पयामि ।
हं आकाशात्मने पुष्पैः पूजयामि ।
यं - वाय्वात्मने धूपमाघ्रापयामि ॥
रं - अग्न्यात्मने दीपं दर्शयामि ।
वं - अमृतात्मने अमृतं महानैवेद्यं निवेदयामि ।
सं सर्वात्मने सर्वोपचार-पूजां समर्पयामि ॥

த்யானம்—

வஜ்ரதம்ஷ்ட்ரம் த்ரிநயனம் காலகண்ட-மரிந்தமம் ।
ஸஹஸ்ரகர-மத்யுக்ரம் வந்தே சம்பு-முமாபதிம் ॥

லம்-ப்ருதிவ்யாத்மனே கந்தம் ஸமர்ப்பயாமி ।
ஹம்-ஆகாசாத்மனே புஷ்பை: பூஜயாமி ।
யம்- வாய்வாத்மனே தூபமாக்ராபயாமி ।
ரம்-அக்ன்யாத்மனே தீபம் தர்சயாமி ।
வம் - அம்ருதாத்மனே அம்ருதம் மஹாநைவேத்யம் நிவேதயாமி ।
ஸம் - ஸர்வாத்மனே ஸர்வோபசார - பூஜாம் ஸமர்ப்பயாமி ॥

ऋषभ उवाच—

नमस्कृत्य महादेवं विश्वव्यापिन-मीश्वरम् ।
वक्ष्ये शिवमयं वर्म सर्वरक्षाकरं नृणाम् ॥ ॥ १ ॥

शुचौ देशे समासीनो यथावत्कल्पितासनः ।
जितेन्द्रियो जितप्राण-श्चिन्तयेच्छिव-मव्ययम् ॥ ॥ २ ॥

हृत्पुण्डरीकाक्षर-सन्निविष्टं स्वतेजसा व्याप्त-नभोऽवकाशम् ।
अतीन्द्रियं सूक्ष्म-मनन्त-माद्यं ध्यायेत्परानन्दमयं महेशम् ॥ ३ ॥

ध्यानावधूताखिल-कर्मबन्धश्चिरं चिदानन्द-निमग्न-चेताः ।
षडक्षरन्यास-समाहितात्मा शैवेन कुर्यात् कवचेन रक्षाम् ॥ ४ ॥

ருஷப உவாச —

நமஸ்க்ருத்ய மஹாதேவம் விச்வவ்யாபின-மீச்வரம்
வக்ஷ்யே சிவமயம் வர்ம ஸர்வரக்ஷாகரம் ந்ருணும் ॥

சுசௌ தேசே ஸமாஸீநோ யதாவத் கல்பிதாஸன: ।
ஜிதேந்த்ரியோ ஜிதப்ராணச்-சிந்தயேச்-சிவமவ்யயம் ॥

ஹ்ருத்புண்டரீகாக்ஷர - ஸந்நிவிஷ்டம் ஸ்வ தேஜஸா வ்யாப்த - நபோऽவகாசம் । அதீந்த்ரியம் ஸூக்ஷ்ம-மனந்த-மாத்யம் த்யாயேத் பரானந்தமயம் மஹேசம் ॥ 3 ॥ த்யாணு- வதூதாகில - கர்மபந்தச் - சிரம் சிதானந்த - நிமக்ந - சேதா: । ஷடக்ஷரந்யாஸ - ஸமாஹிதாத்மா சைவேன குர்யாத் கவசேன ரக்ஷாம் ॥ 4 ॥

मां पातु देवोऽखिलदेवतात्मा संसारकूपे पतितं गभीरे ।
तन्नाम दिव्यं वरमन्त्रमूलं धुनोतु मे सर्वमघं हृदिस्थम् ॥ ५ ॥

सर्वत्र मां रक्षतु विश्वमूर्ति-र्ज्योतिर्मयानन्द-घनश्चिदात्मा ।
अणोरणीया-नुरुशक्तिरेकः स ईश्वरः पातु भयादशेषात् ॥ ६ ॥

यो भूस्वरूपेण बिभर्ति विश्वं पायात् स भूमे-र्गिरिशोऽष्टमूर्तिः ।
योऽपां स्वरूपेण नृणां करोति संजीवनं सोऽवतु मां जलेभ्यः ॥

कल्पावसाने भुवनानि दग्ध्वा सर्वाणि यो नृत्यति भूरिलीलः ।
स कालरुद्रोऽवतु मां दवाग्ने-र्वात्यादि-भीते-रखिलाच्च तापात् ॥

மாம் பாது தேவோऽகில - தேவதாத்மா ஸம்ஸாரகூபே பதிதம் கபீரே । தந்நாம திவ்யம் வரமந்த்ர - மூலம் துனோது மே ஸர்வமகம் ஹ்ருதிஸ்தம் ‖ 5 ‖ ஸர்வத்ர மாம் ரக்ஷது விச்வமூர்த்திர் - ஜ்யோதிர் - மயானந்த - கனச்சிதாத்மா । அணோ ரணீயா - னுருசக்தி - ரேகः ஸ ஈச்வரः பாது பயா-தசேஷாத் ॥ 6 ॥ யோ பூஸ்வரூபேண பிபர்த்தி விச்வம் பாயாத் ஸ பூமேர் - கிரிசோऽஷ்டமூர்த்திः । யோऽ பாம் ஸ்வரூபேண ந்ருணாம் கரோதி ஸஞ்ஜீவனம் ஸோऽவது மாம் ஜலேப்யः ‖ 7 ॥ கல்பாவஸானே புவனானி தக்த்வா ஸர்வாணி யோ ந்ருத்யதி பூரிலீலः । ஸ காலருத்ரோऽவது மாம் தவாக்னேர் - வாத்யாதி பீதே - ரகிலாச்ச தாபாத் ॥ 8 ॥

प्रदीपविद्युत्कनकावभासो विद्यावराभीति-कुठार-पाणिः ।
चतुर्मुखस्तत्पुरुष-स्त्रिनेत्रः प्राच्यां स्थितो रक्षतु मामजस्रम् ॥ ९ ॥

कुठार-खेटाङ्कुश-शूल-ढक्का-कपाल-पाशाक्ष-गुणान् दधानः ।
चतुर्मुखो नीलरुचिस्त्रिनेत्रः पायादघोरो दिशि दक्षिणस्याम् ॥

कुन्देन्दु-शंख-स्फटिकावभासो वेदाक्षमाला-वरदाभयाङ्कः ।
त्र्यक्ष-श्चतुर्वक्त्र उरुप्रभावः सद्योधिजातोऽवतु मां प्रतीच्याम् ॥

वराक्षमालाभयटंकहस्तः सरोजकिंजल्क-समानवर्णः ।
त्रिलोचनश्चारु-चतुर्मुखो मां पायादुदीच्यां दिशि वामदेवः ॥

ப்ரதீபவித்யுத்-கனகாவபாஸோ வித்யா-வராபீதி-குடார - பாணிः । சதுர்முகஸ் - தத்புருஷஸ்த்ரிநேத்ரः ப்ராச்யாம் ஸ்திதோ ரக்ஷது மாமஜஸ்ரம் ‖ 9 ‖ குடார - கேடாங்குச - சூல - டக்கா - கபால - பாசா க்ஷகுணான் தததானः । சதுர்முகோ நீலருசிஸ் த்ரிநேத்ரः பாயாதகோரோ திசி தக்ஷிணஸ்யாம் ‖ 10 ‖ குந் - தேந்து - சங்க - ஸ்படிகாவபாஸோ வேதாக்ஷமாலா - வரதாபயாங்கः । த்ர்யக்ஷச் - சதுர்வக்த்ர - உருப்ரா பாவः ஸத்யோதிஜாதோऽவது மாம் ப்ரதீச்யாம் ‖ 11 ‖ வராக்ஷமாலாபய - டங்கஹஸ்தः ஸரோஜ - கிஞ்ஜல்க - ஸமானவர்ணः । த்ரிலோசனச்சாரு - சதுர் முகோ மாம் பாயா - துதீச்யாம் திசி வாமதேவः ‖ 12 ‖

वेदाभयेष्टांकुश-शंख-पाश कपाल-ढक्काक्षक-शूलपाणिः ।
सितद्युतिः पंचमुखोऽवतान्मामीशान ऊर्ध्वं परमप्रकाशः ॥ १३ ॥
मूर्धान-मव्यान्मम चन्द्रमौलिः फालं ममाव्यादथ फालनेत्रः ।
नेत्रे ममाव्याद्भगनेत्र-हारी नासां सदा रक्षतु विश्वनाथः ॥ १४॥
पायाच्छ्रुती मे श्रुतिगीत-कीर्तिः कपाल-मव्यात् सततं कपाली ।
वक्त्रं सदा रक्षतु पंचवक्त्रो जिह्वां सदा रक्षतु वेदजिह्वः ॥ १५ ॥
कण्ठं गिरीशोऽवतु नीलकण्ठः पाणिद्वयं पातु पिनाकपाणिः ।
दोर्मूल-मव्यान्मम धर्मबाहु-र्वक्षः-स्थलं दक्षमखान्तकोऽव्यात् ॥

வேதாபயேஷ்டாங்குச - சங்க - பாச - கபால - டக்காக்ஷக - சூலபாணிః । ஸிதத்யுதிః பஞ்சமுகோऽவதான்மா - மீசான ஊர்த்வம் பரமப்ரகாசః ‖ 13 ‖ மூர்த்தான் - மவ்யான் மம சந்த்ர - மௌலிః பாலம் மமா-வ்யாதத பாலநேத்ரः । நேத்ரே மமாவ்யாத் பகநேத்ர - ஹாரீ நாஸாம் ஸதா ரக்ஷது விச்வநாதః ‖ 14 ‖ பாயாச்ச்ருதீ மே ச்ருதிகீத-கீர்த்திः கபால மவ்யாத் ஸததம் கபாலீ। வக்த்ரம் ஸதா ரக்ஷது பஞ்சவக்த்ரோ ஜிஹ்வாம் ஸதா ரக்ஷது வேதஜிஹ்வः ‖ 15 ‖ கண்டம் கிரீசோவது நீலகண்டः பாணித்வயம் பாது பிநாகபாணிः। தோர் - மூலமவ்யான் மம தர்மபாஹுர் - வக்ஷः - ஸ்தலம் தக்ஷ - மகாந்தகோऽவ்யாத் ‖ 16 ‖

ममोदरं पातु गिरीन्द्रधन्वा मध्यं ममाव्यान्मदनान्तकारी ।
हेरंबतातो मम पातु नाभि पायात्कटिं धूर्जटि-रीश्वरो मे ॥ १७ ॥

ऊरुद्वयं पातु कुबेरमित्रो जानुद्वयं मे जगदीश्वरोऽव्यात् ।
जङ्घायुगं पुंगवकेतुरव्यात् पादौ ममाव्यात् सुरवन्द्यपादः ॥

महेश्वरः पातु दिनादियामे मां मध्ययामेऽवतु वामदेवः ।
त्रिलोचनः पातु तृतीय-यामे वृषध्वजः पातु दिनान्त्य-यामे ॥

पायान्निशादौ शशिशेखरो मां गंगाधरो रक्षतु मां निशीथे ।
गौरीपतिः पातु निशावसाने मृत्युंजयो रक्षतु सर्वकालम् ॥२०॥

மமோதரம் பாது கிரீந்த்ர - தன்வா மத்யம் மமாவ்யான் மதனாந்தகாரீ । ஹேரம்பதாதோ மம பாது நாபிம் பாயாத் கடிம் தூர்ஜடி - ரீச்வரோ மே ‖ 17 ‖ ஊருத்வயம் பாது குபேரமித்ரோ ஜானுத்வயம் மே ஜகதீச்வரோऽவ்யாத் । ஜங்காயுகம் புங்கவகேது - ரவ்யாத் பாதௌ மமாவ்யாத் ஸுரவந்த்ய - பாதः ‖ 18 ‖ மஹேச்வரः பாது தினாதியாமே மாம் மத்யயா-மேऽவது வாமதேவः । த்ரிலோசனः பாது த்ருதீய-யாமே வ்ருஷத்வஜ ः பாது தினாந்த்ய - யாமே ‖ 19 ‖ பாயாந்நிசாதௌ சசிசேகரோ மாம் கங்காதரோ ரக்ஷது மாம் நிசீதே ‖ கௌரீபதிः பாது நிசாவ - ஸானே ம்ருத்யுஞ்ஜயோ ரக்ஷது ஸர்வ - காலம் ‖ 20 ‖

अन्तःस्थितं रक्षतु शंकरो मां स्थाणुस्सदा पातु बहिःस्थितं माम् ।
तदन्तरे पातु पतिः पशूनां सदाशिवो रक्षतु मां समन्तात् ॥

तिष्ठन्तमव्याद्-भुवनैकनाथः पायाद्व्रजन्तं प्रमथाधिनाथः ।
वेदान्तवेद्योऽवतु मां निषण्णं मामव्ययः पातु शिवः शयानम् ॥

मार्गेषु मां रक्षतु नीलकण्ठः शैलादिदुर्गेषु पुरत्रयारिः ।
अरण्यवासादि-महाप्रवासे पायान्मृगव्याध उदार-शक्तिः ॥

कल्पान्तकालोग्र-पटु-प्रकोप-स्फुटाट्टहासोच्चलिताण्डकोशः ।
घोरारि-सेनार्णव-दुर्निवार-महाभयाद्रक्षतु वीरभद्रः ॥ २४ ॥

*அந்த-ஸ்திதம் ரக்ஷது சங்கரோ மாம் ஸ்தாணுஸ் ஸதா பாது பஹி: ஸ்திதம் மாம்। ததந்தரே பாது பதி: பசூனாம் ஸதாசிவோ ரக்ஷது மாம் ஸமந்தாத் ॥ 21 ॥ திஷ்டந்த - மவ்யாத் - புவனைக - நாத: பாயாத் - வ்ரஜந்தம் ப்ரமதாதிநாத: । வேதாந்த-வேத்யோऽவது மாம் நிஷண்ணம் மாமவ்யய: பாது சிவ: சயானம் ॥ 22 ॥ மார்கேஷு மாம் ரக்ஷது நீலகண்ட: சைலாதி-துர்கேஷு புரத்ரயாரி: । அரண்யவாஸாதி - மஹாப்ரவாஸே பாயான் ம்ருக - வ்யாத - உதாரசக்தி: ॥ 23 ॥ கல்பாந்தகாலோக்ரபடு-ப்ரகோப-ஸ்புடாட்டஹாஸோச்சலிதாண்ட - கோச: । கோராரி - ஸேனார்ணவ - துர்நிவார-மஹாபயாத் ரக்ஷது வீரபத்ர: ॥ 24 ॥*

पत्त्यश्व-मातंग-रथावरूथ-सहस्रलक्षायुतकोटि-भीषणम् ।
अक्षौहिणीनां शतमाततायिनां छिन्द्यान्मृडो घोरकुठारधारया ॥
निहन्तु दस्यून् प्रलयानलार्चिर्ज्वलत्त्रिशूलं त्रिपुरान्तकस्य ।
शार्दूल-सिंहर्क्ष-वृकादि-हिंस्रान् सन्त्रासयत्वीशधनुः पिनाकः ॥
दुःस्वप्न-दुश्शकुन-दुर्गति-दौर्मनस्य-
दुर्भिक्ष-दुर्व्यसन-दुःसह-दुर्यशांसि ।
उत्पात-ताप-विषभीति-मसद्ग्रहार्तिं
व्याधींश्च नाशयतु मे जगतामधीशः ॥ २७ ॥

ओं नमो भगवते सदाशिवाय, सकलतत्त्वात्मकाय, सर्वमन्त्रस्वरूपाय, सर्वयन्त्राधिष्ठिताय, सर्वतन्त्रस्वरूपाय, सर्व-

*பத்யச்வ - மாதங்க - ரதாவரூத - ஸஹஸ்ர - லக்ஷாயுத கோடி - பீஷணம் । அக்ஷௌஹிணீனாம் சதமாததாயினாம் சிந்த்யான் - ம்ருடோ கோர - குடாரதாரயா ॥ 25 ॥ நிஹந்து தஸ்யூன் ப்ரலயானலார்ச்சிர் - ஜ்வலத் - த்ரிசூலம் - த்ரிபுராந்தகஸ்ய । சார்தூல - ஸிம்ஹர்க்ஷ - வ்ருகாதி - ஹிம்ஸ்ரான் ஸந்த்ராஸயத்வீச தனு: பினாக: ॥ 26 ॥ து:ஸ்வப்ன - து:சகுன - துர்கதி - தௌர்மனஸ்ய - துர்ப்பிக்ஷ - துர்வ்யஸன - துஸ்ஸஹ துர்யசாம்ஸி । உத்பாத - தாப - விஷபீதி-மஸத்க்ரஹார்த்திம் வ்யாதீம்ச்ச நாசயது மே ஜகதாமதீச: ॥ 27 ॥*

*ஓம் நமோ பகவதே ஸதாசிவாய, ஸகல தத்வாத்மகாய, ஸர்வமந்த்ர - ஸ்வரூபாய, ஸர்வயந்த்ராதிஷ்டிதாய, ஸர்வ - தந்த்ர - ஸ்வரூபாய, ஸர்வ*

तत्त्वविदूराय, ब्रह्मरुद्रावतारिणे, नीलकण्ठाय, पार्वतीमनोहराय सोमसूर्याग्निलोचनाय, भस्मोद्धूलित-विग्रहाय, महामणिमुकुट-धारणाय, माणिक्यभूषणाय, सृष्टिस्थितिप्रलयकाल-रौद्राव-ताराय, दक्षाध्वरध्वंसकाय, महाकाल-भेदनाय, मूलाधारैक-निलयाय, तत्त्वातीताय, गंगाधराय, सर्वदेवाधिदेवाय, षडा श्रयाय, वेदान्तसाराय, त्रिवर्गसाधनाय, अनन्तकोटिब्रह्माण्ड-नायकाय, अनन्त-वासुकि-तक्षक-कर्कोटक- शंख- कुलिक - पद्म - महापद्मेति अष्टमहानाग-कुल-भूषणाय, प्रणवस्वरूपाय, चिदा-काशाय, आकाशदिक्स्वरूपाय, ग्रहनक्षत्रमालिने, सकलाय, कलंकरहिताय,

தத்வ - விதூராய, ப்ரஹ்ம - ருத்ராவதாரிணே, நீல கண்டாய, பார்வதீமனோஹராய, ஸோமஸூர் யாக்னிலோசனாய, பஸ்மோத்தூளித - விக்ரஹாய, மஹாமணிமுகுடதாரணாய, மாணிக்ய - பூஷணாய, ஸ்ருஷ்டி - ஸ்திதி - ப்ரளயகால-ரௌத்ராவதாராய, தக்ஷாத்வரத்வம்ஸகாய, மஹாகாலபேதனாய, மூலா தாரைகநிலயாய், தத்வாதீதாய, கங்காதராய, ஸர்வ தேவாதிதேவாய, ஷடாச்ரயாய, வேதாந்த - ஸாராய, த்ரிவர்க்கஸாதனாய, அனந்த கோடி - ப்ரஹ்மாண்ட-நாயகாய, அனந்த - வாஸுகி - தக்ஷக கர்க்கோடக-சங்க - குலிக - பத்ம - மஹாபத்மேதி - அஷ்டமஹா நாக-குலபூஷணாய, ப்ரணவ-ஸ்வரூபாய, சிதாகாசாய, ஆகாச - திக்-ஸ்வரூபாய, க்ர ஹ - நக்ஷத்ரமாலினே, ஸகலாய, களங்க-ரஹிதாய,

सकललोकैककर्त्रे, सकललोकैकभर्त्रे, सकललोकैकसंहर्त्रे, सकललोकैकगुरवे, सकललोकसाक्षिणे, सकलनिगमगुह्याय, सकलवेदान्तपारगाय, सकललोकैकवरप्रदाय, सकललोकैक-शंकराय, सकलजगदभयंकराय, सकलदुरितार्ति-भंजनाय, शशांकशेखराय, शाश्वतनिजावासाय, निराकाराय, निराभा-साय, निरामयाय, निर्मलाय, निर्मदाय, निश्चिन्ताय, निरहं-काराय, निरंकुशाय, निष्कलंकाय, निर्गुणाय, निष्कामाय, निरुपप्लवाय, निरवद्याय, निरन्तराय, निष्कारणाय, निरातङ्काय, निष्प्रपंचाय, निस्सङ्गाय, निर्द्वन्द्वाय, निराधाराय, नीरागाय, निष्क्रोधाय, निर्लोभाय, निष्पापाय, निर्भयाय, निर्विकल्पाय,

ஸகலலோகைக - கர்த்ரே, ஸகலலோகைக - பர் த்ரே, ஸகலலோகைக- ஸம்ஹர்த்ரே, ஸகலலோகைக-குரவே, ஸகலலோகைக ஸாக்ஷிணே, ஸகலநிகம-குஹ்யாய, ஸகல- வேதாந்தபாரகாய, ஸகல - லோகைக - வரப்ரதாய, ஸகல லோகைகசங்கராய, ஸகல-ஜகதப யங்கராய, ஸகல-துரி-தார்த்திபஞ்ஜனாய, சசாங்கசேக ராய, சாச்வதநிஜாவாஸாய, நிராகாராய, நிராபா ஸாய, நிராமயாய, நிர்மலாய, நிர்மதாய, நிச்சிந் தாய, நிரஹங்காராய, நிரங்குசாய, நிஷ்கலங்காய, நிர்குணாய, நிஷ்காமாய, நிருபப்லவாய, நிரவத்யாய, நிரந்தராய, நிஷ்காரணாய, நிராதங்காய, நிஷ்ப்ரபஞ் சாய, நிஸ்ஸங்காய, நிர்த்வந்த்வாய, நிராதாராய, நீராகாய, நிஷ்க்ரோதாய, நிர்லோபாய, நிஷ்பாபாய, நிர்ப்பயாய, நிர்விகல்பாய, நிர்ப்பேதாய, நிஷ்க்ரியாய,

**निर्भेदाय, निष्क्रियाय, निस्तुलाय, निःसंशयाय, निरंजनाय, निरुपमविभवाय, नित्यशुद्ध बुद्ध - परिपूर्ण - सच्चिदानन्दाद्वयाय, परमशान्तस्वरूपाय, तेजोरूपाय, तेजोमयाय, तेजोऽधिपतये । ॥ २८ ॥**

**जयजयरुद्र, महारौद्र, भद्रावतार, महाभैरव, कालभैरव, कल्पान्तभैरव, कपालमालाधर, खट्वांगखड्ग - चर्म-पाशांकुश-डमरु-त्रिशूल-चाप-बाण-गदा-शक्ति - भिन्दि - फाल-तोमर-मुसल-मुद्गर-प्रास-परिघ- भुशुण्डि - शतघ्नी - चक्राद्यायुध - भीषणकर, सहस्रमुख, दंष्ट्राकरालवदन, विकटाट्टहास - विस्फारित-ब्रह्माण्डमण्डल, नागेन्द्रकुण्डल, नागेन्द्रवलय, नागेन्द्र-**

*நிஸ்துலாய, நிஸ்ஸம்சயாய, நிரஞ்ஜனாய, நிருபம - விபவாய, நித்ய - சுத்த - புத்த-பரிபூர்ண-ஸச்சிதானந் தாத்வயாய, பரமசாந்தஸ்வரூபாய, தேஜோரூபாய, தேஜோமயாய, தேஜோऽதிபதயே, ॥ 28 ॥*

மஹா

*ஜயஜய ருத்ர, மஹாரௌத்ர, பத்ராவதார, மஹாபைரவ, காலபைரவ, கல்பாந்தபைரவ, கபால மாலாதர, கட்வாங்க - கட்க-சர்ம-பாசாங்குச-டமரு-த்ரிசூல-சாப-பாண-கதா-சக்தி-பிந்தி - பால-தோமர - முஸல-முத்கர-ப்ராஸ-பரிக-புசுண்டி-சதக்னீ - சக்ராத் யாயுத-பீஷணகர, ஸஹஸ்ரமுக, தம்ஷ்ட்ராகராலவ தன, விகடாட்டஹாஸ- விஸ்பாரித-ப்ரஹ்மாண்ட மண்டல, நாகேந்த்ர - குண்டல, நாகேந்த்ரவலய,*

**चर्मधर, मृत्युंजय, त्र्यंबक, त्रिपुरान्तक, विश्वरूप, विरूपाक्ष, विश्वेश्वर, वृषभवाहन, विश्वतोमुख, सर्वतो मां रक्ष रक्ष, ज्वल ज्वल, प्रज्वल प्रज्वल, महामृत्युभयं नाशय नाशय, रोगभय-मुत्सादयोत्सादय, विषसर्पभयं शमय शमय, चोरान् मारय मारय, मम शत्रूनुच्चाटयोच्चाटय, त्रिशूलेन विदारय विदारय, कुठारेण भिन्धि भिन्धि, खड्गेन छिन्धि छिन्धि, खट्वांगेन विपोथय विपोथय, मुसलेन निष्पेषय निष्पेषय, बाणैः संताडय संताडय, रक्षांसि भीषय भीषय, अशेष - भूतानि विद्रावय विद्रावय, कूष्माण्ड-वेताल-मारीगण - ब्रह्मराक्षसगणान् संत्रासय**

*நாகேந்த்ரசர்மதர, ம்ருத்யுஞ்ஜய, த்ர்யம்பக, த்ரி புராந்தக, விச்வரூப, விருபாக்ஷ, விச்வேச்வர, வ்ருஷ பவாஹன, விச்வதோமுக, ஸர்வதோ மாம் ரக்ஷ ரக்ஷ, ஜ்வல ஜ்வல, ப்ரஜ்வல ப்ரஜ்வல, மஹா-ம்ருத்யு பயம் நாசய நாசய, ரோகபய-முத்ஸாரயோத்ஸாரய, விஷஸர்ப்பபயம் சமய சமய, சோரான்மாரய மாரய, மம சத்ரூனுச்சாடயோச்சாடய, த்ரிசூலேன விதா ரய விதாரய, குடாரேண பிந்தி பிந்தி, கட்கேன ச்சிந்தி ச்சிந்தி, கட் வாங்கேன விபோதய விபோதய, முஸலேன நிஷ்பேஷய நிஷ்பேஷய, பாணை: ஸந்தா டய ஸந்தாடய, ரக்ஷாம்ஸி பீஷய பீஷய, அசேஷ பூதானி வித்ராவய வித்ராவய, கூஷ்மாண்ட - வேதால-மாரீகண-ப்ரஹ்ம-ராக்ஷஸகணான் ஸந்த்ரா*

संत्रासय, ममाभयं कुरु कुरु, नरकभयान्मामुद्धरोद्धर, वित्रस्तं मामाश्वासयाश्वासय, अमृत - कटाक्षवीक्षणेन मां संजीवय संजीवय, क्षुत्तृड्भ्यां मामाप्याययाप्यायय, दुःखातुरं मामानन्दयानन्दय, शिवकवचेन मामाच्छादयाच्छादय, मृत्युंजय त्र्यंबक, सदाशिव, नमस्ते नमस्ते ॥ हृदयादि-न्यासः, पंचपूजा ॥ २९ ॥

ऋषभ उवाच—

इत्येतत् कवचं शैवं वरदं व्याहृतं मया ।<br>
सर्वबाधाप्रशमनं रहस्यं सर्वदेहिनाम् ॥ ३० ॥

त्वमपि श्रद्धया वत्स शैवं कवचमुत्तमम् ।<br>
धारयस्व मया दत्तं सद्यः श्रेयो ह्यवाप्स्यसि ॥ ३१ ॥

ஸய ஸந்த்ராஸய, மமாபயம் குருகுரு, நரக-பயான் மாமுத்தரோத்தர, வித்ரஸ்தம் மாமாச்வாஸயாச் வாஸய, அம்ருதகடாக்ஷ- வீக்ஷணேன மாம் ஸஞ்ஜீ வய ஸஞ்ஜீவய, க்ஷுத்-த்ருட்ப்யாம் மாமாப்யாய யாப்யாயய, துஃக்காதுரம் மாமானந்தயானந்தய, சிவகவசேன மாமாச்சாதயாச்சாதய, ம்ருத்யுஞ்ஜய, த்ர்யம்பக, ஸதாசிவ, நமஸ்தே நமஸ்தே! ஹ்ருத யாதி ந்யாஸஃ, பஞ்ச பூஜா ‖ 29 ‖

ருஷப உவாச—

இத்யேதத் கவசம் சைவம் வரதம் வ்யாஹ்ருதம் மயா<br>
ஸர்வ-பாதா-ப்ரசமனம் ரஹஸ்யம் ஸர்வதேஹினும் ‖



# திருவாவடுதுறை கோமுத்தீஸ்வரமுடையார் கோயில் கல்வெட்டுகள் ஓர் ஆய்வு

சரித்திரச் செம்மல் ச. கிருஷ்ணமூர்த்தி, தொல்லியல் அலுவலர் (ஓய்வு) சென்னை.



தேவார முதலிகள் மூவரும் மாணிக்க வாசகரும் போற்றிய திருவாவடுதுறை உடையார் கோயில் பல்லவர் காலத்தில் செங்கல் தளியாக இருந்து சோழர்காலத்தில் கற்றளியாக மாறியது. மதுரை கொண்ட பரகேசரி என்ற பட்டம் கொண்ட முதலாம் பராந்தகனுடைய ஆட்சியின்போது கற்றளிப் பிச்சன் பலருடைய உதவியுடன் திருவாவடுதுறை உடையார் கோயிலைக் கற்றளியாக மாற்றினான்; அல்லது புதிதாகக் கட்டினான். கிழக்குக் கோபுரத்தையொட்டி ஆதிகோமுத்தீசுவரர் சன்னதி உள்ளது.

மன்னன் பராந்தகனே 500 கழஞ்சு பொன்னை இங்கே வந்து இறைவனை வழிபட்ட பின் கோயிலுக்கு வழங்கி உள்ளான். கற்றளிப் பிச்சன் மட்டுமன்றிக் கோயில் திருப்பணியில் பங்கு கொண்ட வேறுசில அடியார்களின் பெயர்களையும் அவர்கள் மேற்கொண்ட திருப்பணிகளையும் திருவுருவங்களுடன் இக்கோயிலில் காண்கிறோம். வழிபடும் திருவுருவங்கள், திருவாவடுதுறை உடையார் சிவலிங்கப் புடைப்புச் சிற்பங்களின் முன்பாக வழிபடுகின்றனர்.

பராந்தகன் தொடங்கி, பல சோழ மன்னர் கல்வெட்டுகள் கோயிலைச்சுற்றி உள்ளன. சாசனங்கள் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், திருச்சுற்று என எல்லா இடங்களிலும் உள்ளன. மத்திய அரசு தொல்லியல் துறை 1925இல் 62 கல்வெட்டுகளையும் 1926இல் 13 கல்வெட்டு களையும் படியெடுத்துள்ளது. 75 சாசனங்களைப் படியெடுத்து ஆண்டறிக்கைகளில் கல்வெட்டுக் களின் சுருக்கங்களை அத்துறையினர் வெளியிட்டனர் (101 - 162/1925 மற்றும் 59 - 72/ 1926) ஆங்கிலத்தில் சுருக்கங்கள் உள்ளன.

சுந்தரேசவாண்டையார் இங்குள்ள கல்வெட்டுகளில் சுமார் 35 கல்வெட்டுகளின் சுருக்கத்தைக் கையெழுத்துப் பிரதியாகத் திருவாவடுதுறை ஆதீனத்திடம் சமர்ப்பித்ததுடன் தருமபுர ஆதீன வெளியீடான தேவாரப் பதிப்பின் மூன்றாம் தேவாரத்தில் வரலாற்றுப் பகுதியில் இதனை இடம் பெறச் செய்தார்.

திருவாவடுதுறை ஆதீனம் 1990இல் பதிப்பித்த திருவாவடுதுறை கோமுக்தீஸ்சுவரர் கோயில் தல வரலாற்றிலும் இச்சுருக்கம் இணைக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினர் இங்குள்ள கல்வெட்டுக்களைப் படியெடுத்துச் சென்றுள்ளனர்; படித்தும் வைத்துள்ளனர். எதிர்காலத்தில் கல்வெட்டுகளின் மூலங்கள் பதிப்பிக்கப்பட்டு வெளிவரும்.

தமிழக வரலாற்றுக்கும் பண்பாட்டுக்கும் பெரிதும் உதவி புரியும் கோமுக்தீசுவரர் கோயில் கல்வெட்டுகள் சுவையான சில செய்திகளைக் கூறுகின்றன. திருமூலர் வாழ்ந்து சமாதி அடைந்த இத்தலத்தில் திருமூலர் நாடகம் நடந்துள்ளது. ஆரியக்கூத்து நடிக்கப்பட்டது. குந்தவையார் நிறுவிய மருத்துவமனை செயல்பட்டுள்ளது. அடியார்களுக்கு உணவிடும் அறச் சாலைகள் இருந்துள்ளன. திருக்கோடிக்காவல் கோயில் இறைவனை வழிபட்ட ஒரு துறவி இத்தலத்தில் இருந்துள்ளார். பத்துக்கு மேற்பட்ட மடங்களும் அறச்சாலைகளும் சோழர்காலத்தில் செயல் பட்டமையை இங்குள்ள கல்வெட்டுகள் குறிப்பிடு கின்றன. குறிப்பாக இராசேந்திர சோழனுடைய குருவான சர்வசிவன் பெயரில் ஒரு மடம் இங்கிருந்தது. சிவனடியார்களும் துறவிகளும் வாழ்ந்த இவ்விடத்தில் நமசிவாய தேசிகர் சைவமடம் தாபித்ததும் ஒரு சிறப்பு எனலாம்.

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் கோயில் மகாமண்டபத்தில் துறைசை ஆதீனகர்த்தர்கள் மற்றும் தம்பிரான்களின் சிற்பங்களைக் காணலாம்.

**திருவாவடுதுறை பரமசுவாமி :**

கோமுக்தீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் முதலாம் இராஜஇராஜனுடைய 24 ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு திருமகள்போல் என்ற மெய்க் கீர்த்தியுடன் உள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி.1008 ஆகும். இராஜேந்திரசோழ வளநாட்டு மண்ணி நாட்டு பிரமதேயம் இளச்சி குடியான விக்ரமசிங்க சதுர்வேதி மங்கலச் சபையும் சாத்தனூரையடுத்த திருவாவடுதுறை உடைய பரமசுவாமி கோயில் நிர்வாகமும் ஓர் உடன்பாடு செய்து கொண்டதை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

மன்னன் ஆணைக்கிணங்க கோயிலுக் குரிய நிலத்திற்கான வரியை ஆய்வு செய்தபோது சபையிடம் சிறிது காலத்திற்கு முன் கோயில் நிர்வாகத்திடமிருந்து முதலீடாகப் பெற்றிருந்து வட்டியுடன் தர வேண்டிய தொகையைச் சபை திரும்ப செலுத்த முடியாமல் போனது கண்டறியப் பட்டு, குறை சரி செய்யப்பட்டது.

இதைத் தொடர்ந்து இராஜராஜனுடைய 25ஆவது ஆட்சியாண்டின்போது உய்யக் கொண்டார் வளநாட்டு பேராவூர் நாட்டு இளங்காரிகுடி ஊரவை (ஊரோம்) திருவாவடுதுறை கோயிலில் ஒரு விளக்கெரிக்க வேண்டி நிலத்தினைத் தானமாக வழங்கியுள்ளது. (101/1925) இக்கல்வெட்டில் தற்போதுள்ள கோமுக்தீசுவரர் என்ற பெயர் **திருவாவடுதுறை உடைய பரமசுவாமி** என்று உள்ளது.

**உலகளந்தான் மண்டபம் :**

கோமுக்தீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனின் கல்வெட்டு ஒன்று அவனுடைய ஆறாம் ஆட்சி யாண்டில் வெட்டப்பட்டுள்ளது. (கி.பி.1018) 'திருமன்னி வளர' என்ற மெய்க் கீர்த்தியுடன் உள்ள இக்கல்வெட்டில் நில விற்பனை குறித்த விவரம் உள்ளது. உய்யக் கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டுப் பிரமதேயமான அபயாசரய சதுர்வேதி மங்கலம் என்ற சாத்தனூர் சதுர்வேதி மங்கலத்துப் பெருமக்கள் திருவாவடுதுறை உடையார் கோயில் மேற்கில் உள்ள உலகளந்தான் மாடத்தில் கூடி வரியிலியாக்கி நிலத்தினை விற்பனை செய்து ள்ளனர். நிலமளந்தகோல் மாளிகைக் கோல் ஆகும். இரண்டு வேலி எட்டு மாநிலம் விலையும் அரசிற்கு இறையுமாக மொத்தம் இருநூறு காசு பெற்றுக் கொண்டு கோயில் சண்டேஸ்வர தேவர்க்கு விலைப்பிரமானம் செய்துள்ளனர். முன்னதாக இராசேந்திர சோழனுடைய ஐந்தாம் ஆட்சி யாண்டின் போது (கி.பி.1018) பேராவூர் நாட்டுக் கீரனூர் சபை திருவாவடுதுறை கோயிலில் நந்தா விளக்கெரிக்க நிலத்தினை வழங்கியிருந்தது (102 / 1925). இக்கல்வெட்டின் காலம் 22.06.1018 ஆகும். கோமுக்தீசுவரர் கோயிலுக்கு வடக்கில் உலக ளந்தான் மண்டபம் இருந்துள்ளது. இராஜராஜன் தன் நாட்டில் உள்ள நிலங்களையெல்லாம் அளந்து வரிவிதிக்க முயன்றவன். எனவே அவன் பட்டப் பெயரில் மண்டபம் இருந்துள்ளது. சாத்தனூர் என்ற ஊருக்கு அபாயசரயச் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரும் இருந்துள்ளது. நிலம் அளந்த கோல் மாளிகைக்கோல் எனப்பட்டது. மாளிகைமடம் இருந்த ஊர்களில் திருவாவடுதுறையும் ஒன்றாகும். திருமாளிகைத் தேவர், சமாதி அடைந்ததும் இத்தலமாகும். நாள், கிழமை, திதி, நட்சத்திரம் மற்றும் மன்னன் ஆட்சியாண்டு இருப்பதால் கல்வெட்டின் காலம் சரியாக வரையறுத்துத் தொல்லியல்துறை குறிப்பிட்டுள்ளது.

**சர்வதேவன் திருமடம் :**

கோமுக்தீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய 28 ஆவது ஆட்சியாண்டு சாசனம், இராசேந்திர சோழனுடைய குருவான சர்வதேவன் பெயரில் இருந்த திருமடத்தைக் குறிப்பிடுகிறது. நாள்தோறும் மடத்தின் சார்பாக மாஹேஸ்வர

ரர்களுக்கு உணவிட 200 காசு மதிப்புடைய நிலம் வரியிலியாகக் கொடையாக வழங்கப்பட்டது.

உய்யக் கொண்டார் வளநாட்டு திருவழுந்தூர் நாட்டு மேற்கிரி மங்கலத்தில் மேற்கூறிய சபை கோயிலிடமிருந்து காசு பெற்றுக் கொண்டு மடத்திற்கு உரிமையாக்கி பதிவு செய்துள்ளது. இந்தச் சர்வ சிவபுண்டிதர் எய்தார் என்ற ஊரில் (தற்போது எசாலம் என வழங்கப்படும் ஊர்) இராமீஸ்வரம் என்ற சிவன் கோயிலைக்கட்ட அக்கோயில் வழிபாட்டுக்கும் பிறவற்றிற்கும் மன்னன் இராசேந்திரன் மிகுதியான நிலங்கள் வழங்கி, செப்பேடுத் தொகுதி ஒன்றையும் அளித்துள்ளான். (இச்செப்பேடு குறித்து இக்கட்டுரையாசிரியர் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் அறக் கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார். இச்சொற்பொழிவு நூலாகவும் 2010இல் வெளிவந்துள்ளது). கல்வெட்டில் இடம் பெறும் மேற்கிரிமங்கலம் தற்போது மேக்கிரி மங்கலம் என வழங்கப்படுகிறது. இதே கல்வெட்டில் தூதுவன் அருமொழி என்ற அரண்மனை பெரிய வேளமும் குறிப்பிடப் பட்டுள்ளார். (103/1925).

சர்வ தேவர் அல்லது சர்வசிவ பண்டிதர் எசாலம் என்ற ஊரில் (எய்தார் என்பது பழைய பெயர்) சிவன்கோயில் கட்ட மன்னனும் குருவின் சீடனுமான இராசேந்திரன் இரண்டு ஊர்களைத் தானமாக வழங்கினான். அந்தக் குருவுக்கு இங்கே திருமடம் இருந்துள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி.1040 ஆகும்.

சோழர்காலத்தில் திருவாவடுதுறையில் ஏறக்குறைய பத்து மடங்கள் இருந்துள்ளமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. பல சைவ மடங்கள் கோலோச்சிய திருவாவடுதுறை புண்ணிய பூமி என்பதாலேயே நமசிவாய மூர்த்திகள் திருவாவடுதுறை ஆதீனத்தை விஜய நகர அரசர் காலத்தின் தொடக்கத்தில் தாபித்தார் போலும்.

**திரைலோக்ய மாதேவியார் :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்த மண்டபத்தின் கிழக்குப் புறச் சுவரில் வாசலுக்கும் துவாரபாலகர்க்கும் வடபால் உள்ள கல்வெட்டு கோயிலுக்கு வழங்கிய அணிகலன்களையும் பரிகலன்களையும் குறிப்பிடுகிறது. இராசேந்திர சோழதேவர் நம்பிராட்டியார் திரைலோக்கிய மாதேவியாரின் தாயரான இராமன் அபிமான தொங்கியார், திருவாவடுதுறை உடையார்க்கு அமுது செய்தருள வெள்ளித்தளிகை ஒன்று குடினைக்கல்லால் எழுபதின் கழஞ்சு நிறை உள்ளதும், உடையார்க்குப் பொற்கொள்கை ஒன்று குடினைக்கல்லால் செம்பொன் நானூற்று ஒருபத்து முக்கழஞ்சரை நிறையுள்ளதும் ஆகிய இவ்விரண்டையும் கொடுத்திருந்தார். உடையார் இராசாதிராசதேவரின் குரு, பெரிய வேளத்து அலோயன் அணுக்கி, மேற்படி வேளத்து மற்றொரு அம்மையார் இவர்கள் கொடுத்த பொன்னால் பொற்பூ இருபத்தேழு, செங்கழுநீர் பூ முப்பத்தாறு, மாந்தளிர் ஒன்று, பிட்சதேவர் கண்டக் காறை ஒன்று, பொற்கை, ஈச்சொப்பி ஒன்று ஆகியவை வழங்கப்பட்டன. (104/1925) பல்வேறு நபர்கள் பொன்னாலும், வெள்ளியினாலும் அணி கலன்களையும் பாத்திரங்களையும் திருவாவடுதுறை உடையார் கோயிலுக்கு அளித்துள்ளனர். இராசேந்திரனுடைய ஆட்சியாண்டு சாசனத்தில் இல்லை என்பதால் கல்வெட்டின் காலம் இராசேந்திரன் ஆண்ட காலம் எனலாம்.

**இராஜராஜமகாராஜர் :**

கோமுக்தீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள இராஜராஜனுடைய 16 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. தென்கரை திருவழுந்தூர் நாட்டுப் பிரமதேயம் சிற்றானைச்சூர் சபையும் கோயிலும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது.

கோயிலுக்குரிய நிலத்தினைப் பயிரிட்டு வந்த தனி நபர் அரசுக்கான இறையைக் கட்டாமல் போனதால் மேற்படி நிலத்தினைக் கைப்பற்றிய சிற்றானைச்சூர் சபைக்கு இராஜராஜ மகாராஜர் வரி தள்ளுபடி செய்து மீண்டும் கோயிலுக்கு நிலம் வழங்க ஆணையிட்டுள்ளார். கல்வெட்டின் இறுதிப்பகுதி சிதைந்துவிட்டது. (105/1925). இக்கல்வெட்டின் காலம் கி.பி.1010 - 1011 ஆகும்.

**வாமபூசலுடையானும் பெரிய வேளத்துப் பெண்ணும் :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்த மண்டபச் சுவரின் வடபுறச் சுவரில் துர்க்கை கோஷ்டத்திற்கு கிழக்கில் ஆண் பெண் இரு உருவங்கள் சாசனங்களுடன் உள்ளன. சிவ இலிங்கத்தின் முன்புறம் நின்றபடி உள்ள இவர்களின் பெயர்கள் வருமாறு.

இக்கோயிலில் ஒருபடை செய்வித்தான் வாமபூசலுடையான் எழுவன் சந்திராத்தன்.

இவன் பின் நின்றாள் பெரிய வேளத்துப் பெண்டாட்டி நக்கன் ணாத்தடிகள்.

மதுரையும் ஈழமும் கொண்ட மதுராந்தகன் எடுப்பித்த இக்கோயிலில் அவனுடைய அதிகாரிகளும் அரண்மனை வேளத்தில் இருந்தவளும் (பணிப்பெண்) சில பகுதிகளைக் கட்ட பொருளுதவி புரிந்துள்ளனர். தஞ்சை பெரிய கோயிலைக்கட்டிய இராஜராஜன் தன் அதிகாரி களின் திருப்பணி செயல்களையும் கொடை களையும் கல்வெட்டுகளாக வெட்ட ஆணை பிறப்பிப்பதற்கு இக்கோயிலில் உள்ள சாசனங்கள் முன் மாதிரியாக இருந்திருக்க வேண்டும் போலும். (106/1925). இக்கல்வெட்டின் காலம் முதலாம் பராந்தகன் ஆட்சிக் காலம் என உறுதியாகக் கூறலாம்.

**கல்வெட்டின் வாசகம் வருமாறு :**

1. இக்கோயிலில் ஒருப
2. டை செய்விச்சு இஞ்ஞி
3. ன்றான் வாமபூசலு
4. டையான் எழுவன் சந்
5. த்ராதித்தன் இவன்பின்
6. பேநின்றாள் பெரிய வேள
7. த்து பெண்டாட்டி நக்க
8. ண்ணாத்தடிகள்.

**கரைநலூர் :**

கோமுக்தீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் கூடிய இக்கல்வெட்டு சரியாக வெட்டப் படாததோடு சிதைந்தும் உள்ளது. பரகேசரியின் மூன்றாவது ஆட்சியாண்டில் பேராவூர் நாட்டுக் கரைநலூர் ஊரவர், சிறு புலியூர் சபையிடம் நிலம் விலைக்கு வாங்கி கவையாழ்வாருக்கு வழங்கி உள்ளனர். கவையாழ்வார் என்பது இறைவனைக் குறிக்கலாம். திருவாவடுதுறை மூலவர் இன்றி வேறோர் தெய்வத்தை இச்சாசனம் சுட்டும் போலும். (107/1925) பரகேசரிவர்மன் என்று மட்டும் குறிப் பிடப் பட்டுள்ளதால் எந்தச் சோழ மன்னன் கல்வெட்டு என்று உறுதியாகக் கூறமுடியவில்லை. எனினும் முதலாம் பராந்தகனுக்குப் பின்னர் வந்த ஒருபர கேசரி என்று கூறலாம்.

**மதுராந்தக ஈஸ்வரம் :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்த மண்டப வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய நான்காவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயிலைக் குறிப்பிடுகிறது. இளங்காரிக் குடையில், பரசுராமன் சங்கரனான செம்பியன் என்பவன் இக்கோயிலைக் கட்டியுள்ளான். திருவாவடுதுறை உடையார்கோயிலில் புரட்டாசி பூரட்டாதி திருவிழா சிறப்பாக நடைபெறவும் சில ஊர்களை வழங்கிய இவனுக்கு அரச ஆணையின் சில உரிமைகள் வழங்கப்பட்டன. கோயிலில் மாஹேஸ்வரர்களுக்கு உணவிடவும் வழிபாட்டி ற்கும் ஏற்பாட்டினை இவன் செய்துள்ளான். இவனுடைய தந்தை திருவாவடுதுறை உடையார் கோயிலில் நொந்தா விளக்கெரிக்க ஏற்பாடு செய்த விவரமும் இக்கல்வெட்டில் இடம் பெறுகிறது. பரசுராமனுக்கும் அவனுடைய சந்ததியார்க்கும் கோயிலில் முன்னுரிமை வழங்க மன்னன் ஆணை வழங்க அதனைச் சபை உறுதி செய்ததை இச்சாசனம் மூலம் அறிகிறோம் (108/1925). முதலாம் இராசேந்திரனுடைய பெயர் மதுராந்தகன் என்பதால் இப்பெயரில் ஒரு சிவாலயம் கட்டப் பட்டுள்ளது. திருப்பெண்ணாகடத்திலும் மதுராந்தக ஈஸ்வர முடையார் கோயில் இடம் பெறுகிறது. கல்வெட்டின் காலம் கி.பி. 1016 ஆகும்.

**பேராவூர் பிரமதேயம் :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்த மண்டப வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய 6ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு

'திருமன்னிவளர' என்ற மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. கோயிலுக்கு வழங்கப்பட்டிருந்த ஒருவேலி நிலத்திற்கு எல்லாவித வரிகளும் 90 காசுகளைப் பெற்றுக் கொண்டு உய்யக்கொண்டார் வளநாட்டு, பேராவூர் நாட்டு பேராவூர் பிரமதேய சபையார் வரிவிலக்கு வழங்கி கல்வெட்டினைப் பொறித் துள்ளனர். முன்னதாகக் கோயிலுக்கு 40 காசுக்கு நிலம் விற்கப் பட்டுள்ளது. (109/1925). கல்வெட்டில் இடம் பெறும் ஊர் தற்போதும் உள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி. 1018 ஆகும்.

**வாய்தலை குலையரையர்கள் :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்த மண்டப வடபுறச் சுவரில் உள்ள கல்வெட்டு கரிகால சோழதேவர் நான்காம் ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டதாகும். பரகேசரி என்ற பட்டப் பெயருடன் கூடிய இம்மன்னர் திருவாவடுதுறை உடையார் கோயிலுக்கு வரி நீக்கி நிலம் வழங்கி உள்ளார். காவேரி கரைகண்ட கரிகால் சோழன் 3 வேலி நிலமும், மருதன் அன்பர்கரசு 11/2 வேலி நிலமும் நந்தா விளக்கு எரிப்பதற்காக வழங்கப்பட்டது. சிற்றானைச்சூர் வாய்தலைப்பாடி குலையரையர்கள் (ஏரிவாரியம் போன்ற குழுவினர்) இத்தானத்தினை நிறைவேற்றும் பொறுப்பில் இருந்துள்ளார்கள். முதலாம் ஆதித்த சோழன், ஆதித்த கரிகாலன் என வழங்கப் பட்டாலும் அவன் இராஜகேசரி என்ற பட்டமுடையவன். ஆதலால் ஈண்டுள்ளவர் வேறொருவர் ஆவார். இரண்டாம் இராசராசனாக இருக்கலாம் என்று கருதலாம். வீர ராஜேந்திரனுக்கு இப்பட்டப் பெயர் இருந்துள்ளதும் வரலாறாகும். இக்கல்வெட்டின் தொடக்கம் வருமாறு

***'தேவற்கு யாண்டு நாலாவது வாய்தலைப்படி குலையரைய ரோம் உடையார் திருவாவடுதுறை உடையற்க்கு நாங்கள் கைத்திட்டுஇட்டுக் குடுத்த பரிசாவது'*** என்றுள்ளது. மன்னன் மற்றும் அதிகாரி வழங்கிய நிலத்திற்கு ஊரவையும் வாய்தலைப்படி என்ற குழுவும் வரிவிலக்கு வழங்கி இக்கல்வெட்டினைவெட்டியுள்ளது. இக்கல்வெட்டின் காலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டு எனலாம்.

**ஏழு நாள் திருவிழா :**

கோமுக்தீசுவரர் கோயில் அர்த்தமண்டப வடபுறச் சுவரில் துர்க்கை கோஷ்டத்திற்கு மேற்கில் மதுரை கொண்ட பரகேசரியின் 36ஆவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு உள்ளது. (கி.பி.943). திருவாவடுதுறை உடையார் கோயிலில் மிறைக்கூற்றத்து, வீரமாங்குடி உடையான் தாயங்காடன் என்பவன் புரட்டாசி மாத விழாவிற்கு வரும் சிவ யோகிகளுக்கும் பன் மாகேசுவரர்களுக்கும் ஊட்டுட்டின் பொருட்டு சிறுபுலியூரிலும் சிற்றானைச் சூரிலும் நில நிவந்தம் அளித்துள்ளான். மேற்படி ஊர்களைச் சேர்ந்த சபையார் நிலங்களை வரியிலியாக வழங்கி யுள்ளனர்.

புரட்டாசி மாதத்தில் ஏழு நாள்கள் திருவிழா நடைபெற்று வந்தது. அக்காலம் மூல நட்சத்திரத் தன்று கொடியேறி பூரட்டாதி நட்சத்திரத்தன்று தீர்த்தமாடுவது வழக்கம். இதனை திருமா எடுத்த நாள் மூல முதல் அடக்கடவ அரிசி அரிய சிவயோகிகளுக்கும் பக்தர்களுக்கும் மாஹேஸ்வரர் களுக்கும் அரிசி தூணியும் பூராடத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி தூணிப்பதக்கும், பன்மா கேசுவரர்க்கு அடும் அரிசி முக்கலமும் திருவோணத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி இருகலமும் பன்மாஹேஸ்வரர்களுக்கு அடும் அரிசி ஆறுகலமும் அவிட்டத்தினன்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி முக்கலமும், பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி எண் கலமும் தீர்த்தமாடும் பூரட்டாதி ஞான்று சிவயோகிகளுக்கு அடும் அரிசி ஐங்கலமும் பன்மாகேசுவரர்க்கு அடும் அரிசி பன்னிரு கலமும் ஆக இவ்ஏழு நாளும் அடக் கடவ அரிசி ஐம்பத் திருகலமும் எனக் கோயிலில் நடைபெற்ற விழாவைக் குறிப்பிடுகிறது.

திருவாவடுதுறை ஆழ்வார்கோயிலில் பாடுவார் இருவர் இரண்டு சந்தியும் பாட ஆறுமாவும் நந்தவனம் பாதுகாப்பவருக்கு நாலுமாவும் பூவினைப் பறித்து மாலை தொடுக்கும் இரு பெண்களுக்கு இரண்டு மாவும் கோயில் திருவமுது செய்விப்பவனுக்கு எட்டு மாவும்

மடாதிபதிக்கு மற்றும் பலருக்கும் ஆசாரிய பூஜைக்கு 1/11 செய் நிலமும் கலசம் இடும் குசவனுக்கும் பிறவற்றிற்கும் நிலநிவந்தம் செய்யப்படுகிறது. வீரமாங்குடையான் தாயங் காடன் மேற்கண்ட செலவினத்திற்காக வாங்கி வழங்கிய நிலத்தின் எல்லைகள் விரிவாகக் கூறப்படுகின்றன. கோயில் பணியாளர்களுக்கு உணவு மட்டுமின்றி புடவைக்கும் (வேட்டி) வகை செய்யப் பட்டுள்ளது. மிகப்பெரிய கல்வெட்டின் வாசகம் வருமாறு :

1. ஸ்வஸித் ஸ்ரீ மதிரைகொண்ட கொப்பர கெசரிப நக்கியாண்டு (36) ஆவது தென்கரைத் திரைமூர் நாட்டு பிரமதெ யஞ் சாத்தனூர் ஸ்ரீ திருவாவடுதுறை ஆள்வார்க்கு இவரடி யெரன்மிறைக்கூற்றத்து விரமாங்குடையான் தாயங்காட னென்சிற்புலியூர் ஸஹை யாரிடை இறைஇலி கொண்டநிலம் சிற்றானைச்சூர்க்கொண்டு இறையிலி செய்த நிலமும் இவ்விரண்டூர் ஸஹையாரிடையும் சந்திரா தித்தவல்இறை காப்பதாகப் பொன் கொண்டு இறை இலி செய்த நிலத்துக்கு எல்லை கீழ் பாற்கெல்லை...
2. விட்டுக்கும் இத்தெவர் ஆதித்த கரத்
3. து தெவர்நிலத்துக்கு மெக்கு தென்
4. பாற்கெல்லை சிற்றானைச்சூர்ரிடை இவனெ
5. ய் இறையிலி கொண்ட நிலத்துள் கல்
6. லி இவ்.... விட்ட கடம்பன் வாய்க்கா
7. லுக்கு (தெற்)கும் ...... பால்கெல்லை
8. திருவாவடுதுறை ஆழ்வார்க்கு வெள்ளஅத்தரை
9. உத்த ... வெதம் வல்லார்பிராமணர் தெவ
10. ர்முன் .... விலைகொண்டு கல்லுவிச்ச
11. நிலத்துக்கு கிழக்கும் வடபால்க் கெல்லை பெ
12. ரும் பெரும்வழிக்கும் இவர் மணலிட்டுக் கும் சிவ
13. ..... க்கு தெற்கும் இ
14. (ன்னான்) கெல்லையிலும் நடுவுபட்ட கொ
15. ல்லை நிலமு(ம்) புஞ்சையும் தெற்கடை
16. ய இவனெ கல்லு விச்ச நீர்நிலமும்
17. கல்லியும் (இக்க)டம்பன் வாயும் இ
18. வ்வாய்க்கால் இரண்டு கரையிலும்
19. கல்லின கொல்லையும் புன்செயும்
20. இரண்டூர் நிலத்திலும் கல்லிமயக்
21. கின இறிலத்துள் தெற்கடையுமயக்
22. கின நீர்நிலமும் இரண்டெகால் இவ்வி
23. ரண்டெ காலிலும் மெக்கடைய திறருப
24. பதியம் திருவாவடுதுறை ஆள்வார்க்
25. கு பாடுவாரிருவர் இரண்டு சாதியும் பாட(அ)
26. றுமாவும் திருநந்தவானம் திருத்திஇ
27. றைப்பாரிருவர்க்கு இதன் கிழை நா(லு) மாவு
28. ம் திருப்பள்ளித்தாமம் பறிச்சு தொடுப்பார்இ
29. ருவர் நங்கைமாற்கு இதன்கீழை இரண்டுமாவு
30. ம் நிசதிப்படி நாட்ப்பொனகதக்துக்கு பத்தெ
31. ட்டுகுத்தல் பழவரிசி நானாழியும் கும்மாய
32. அமிதினுக்கு பருப்புரியும் நெய்யமிது
33. ஒரு பிடியும் தயிரமிது உரியும் பொரிக்கறிஅ
34. மிதும் அடைக்காயமிது நாலும் அமிதுசெ
35. ய்விப்பிதினுக்கு திருக்கொயில் உடையார்
36. இசைஞ்சு கொண்ட நிலம் இதன் கிழை எட்டுமாவு
37. ம் இதன் கிழை(கொண்டு அமிது செவிப்பதாக) சத்தி
38. ஜீதிவிளாகம் வெலிசெயு
39. ம் கொண்டு விரமாங்குடையான் தாயங் காடன் வ
40. ழியிலாரும் பநாஹெபவரரும் உத்திரபெருமக்க
41. ளும் இடப்பட்ட மடபதிஇச் சத்திரவிளாகம் வெரியு
42. ம் அடுத்துக் கொண்டு அடுவிதான அரிசிஅம் பத்திருக்
43. லமும் பயறு ஐங்கலமும் திருக்கொடி இழிச்சிஸந
44. மநத்துக்கு பொன்கழஞ்சும் இவ்வெழு நாளு இப்ப
45. டி ஊட்டுவிக்க மாட்டாத மடபதியை திருத்தமாபிற்றை நா
46. ன்று (உரு) கணபெருமக்களும் பநாஹெ பவரரும் தாயங்
47. காடன் வழியிலாரும் ஆக கரணமாற்றி ஆவானொர் மட
48. பதியை இடுவதாகவும் அம்பத் திருகலமும் அள
49. ப்பி ....... திரு வி(ழா)
50. எடுத்தநாள் முல முதல் அடக்கடவ அரியச் சிவயொஷி
51. களுக்கு பதக்கும் பநாஹெபவரர்க்கு அடுமரிசி தூணி

52. பூராடத்தினான்று சிவயொஹிகளுக்கு அடும்அ
53. ரிசி தூணிப்பதக்கும் பநாஹெ பவரா்க்கு அடும
54. ரிசி கலமும் உத்திர(ா)த்தி னான்று சிவயொறி களு
55. க்கு அடுமரிசிகலமும் பநாஹெ பவரா்க்கு அடும
56. ரிசிமுக்கலமும் திருவொணத்தினான்று சிவயொ
57. ஹிகளுக்கு அடுமரிசி இருகலமும் பநாஹெபவரா்
58. க்கு அடுமரிசி அறுகலமும் அவிட்டத்தினான்று
59. சிவயொஹிகளுக்கு அடுமரிசி முக்கலமும்
60. பநாஹெ பவரற்கடுமரிசி எழுகலமும்ச
61. தையத்தினான்று சிவயொஹிகளுக்கு அடும
62. ரிசி நாற்கலமும் பநாஹெபவரற்கு அடும
63. ரிசி எண்கலமும் திருத்த மாடும் புரட்டாதி
64. நான்று சிவயொஹிகளுக்கு அடுமரிசி ஐங்
65. கலமும் பநாஹெபவரற்கடும ரிசி பன்னிரு
66. கலமும் ஆக இவ்வெழுநாளுடக் கடவஅ
67. ரிசி ஐம்பத்திருகலமும் அ(னச்சு) நாளைக்
68. குமாக பயறைங்கலமும் இப்படி மடபதி
69. ஊட்டி திருத்த மாடின பிற்றை நான்று திருக்கொடி
70. இழிச்ச ஸமன ஷரவ/த்துக்கும் புடவைக்குமாக
71. ப்பொன் அரைக்கழஞ்சும் ஆசார்ய பூஜை கா
72. லும் கலசமும் (சாலு)ம் குடமும் கலமும் இ
73. டும் குசவனுக்கு பொன்காலும் கலசத்தி
74. (ற்கு கிழட்ட நெல் ...........
75. துக்கு சென்ன நெல்லு கலமும் கறியமிர் துக்கு
76. ம்நெய்யமிர்துக்கும் தயிரமிர்துக்கும் அடை
77. க்காயமிர்துக்கும்மாக நெல்லு தூணிப்பதக்கும்
78. ஆக சத்தர விளாகம் வெலியும் கொண்டு இவ்வூர்
79. இப்படி செய்வ்விக்கும் மடபதிக்கு இதன் கீழைக்க
80. ற்றெய்யுங் கொண்டு வீரமாங்குடையான் தாய
81. ங்காடன் வழியிலார் எழுநாளும் மடபதியொடெநி
82. ன்று இவ்வரிசி அளப்பிச்சுக் கொண்டு கண்காணி
83. அடுவிச்சு ஊட்டுவிப்பானுக்குநிசதிபதக்காக அரி
84. சி கலனெ பதக்கும் குடுத்து இப்படி செய்விச்சு இரா
85. ப்படி ஊட்டி (விச்சும்) வந்தப்படி சேவிச்சு நின்றபுன்
86. சய்யிலும் கொல்லையினும் கிழக்கடையந
87. றுமாநிலம் திருநந்தவனம் செய்விச்சு தெங்குமா
88. வும் மற்று மேற்படி உள்ளன எல்லாங் கொண்டுமட பதி
89. யே திருநாள் எழுநாளைக்கும் இவ் ஊட்டுக்கு வெண் டும்
90. விச்சத்துக்கு கொள்வி தாகவும் நின்ற புன்செயும் கொல்
91. லையும் அடுத்துக் கொண்டு நெய்க்கும் அட்டுவதினு
92. க்கும் கறிக்கும் பாக்கினுக்கும் வெற்றிலைக்கும் உப்பு
93. க்கும் புளிக்கும் மற்றும் பல காயத்துக்கும் எண்ணை
94. யும் விறகும் மற்றும் வெண்டும் விசத்துக்கும் இத்
95. திருநாள் ஏழு நாளைக்கும் ஊட்டுக்கு வேண்
96. டும் கலமிடும் குசவனுக்கு பொன் அரைக
97. ழஞ்சும் இவனுக்கு ஏழுநாளைக்கு நிசதிகுறு
98. ணி அரிசியாக ஏழுகுறுணி அரிசிக்குமாக நந்தவ
99. னம் போக்கி நின்ற அரைசெயும் கொல்லையும்அ
100. டுத்துக் கொண்டு இத்தனையும் குறைவறுத்து
101. க்கொண்டு மடபதி ஊட்டுவிதாகவும் இம்ம
102. டபதியே சாத்தனூர்இத்திருவிழா வாரியற்
103. கு இவ்வெழுநாளும் இக்கொயில் காவனம்
104. இடுவிச்சு இத்திருவிழா செய்விக்கும் வாரியப்
105. பெருமக்களுக்கு நிசதி ஐங்குறுணி ஒருநாழிஅ
106. ரிசியாக எழுநாளைக்கு பெறுமரிசி முக்கலமும்
107. மடபதி தான் பெறும் காற்செயிலும் அட்டுவி
108. தாகவும் இத்தனையும் குறைவறுத்து இந்
109. நீர்நிலம் இரண்டே காலும் கொல்லையும் புன்
110. சையும் கொண்டு நந்தவானத்து மேற்பயிரு
111. ங்கொண்டு செய்யக்கடவான்
112. செய்வித்து இத்தனையும் குறைவறுத்து க்கொ
113. ண்டு இவ்வெழுநாளும் இவ்வூட்டுஇப்படி யே ம
114. டபதியே வீரமாங்குடையான் தாயன் காடன் வழி
115. யிலார் கண்காணியோடும் ஊட்டி இந்நிவந்தபடி
116. செய்விப்பதாகவும் இந்நிலம் சிறுபுலியூரிலும்
117. சிற்றானைச் சூரினும் இறை இளி லி விலைகொண்டுகல்

118. வித்திருத்தின நீர்நிலமும் கொல்லையும் புன்
119. சையும் இந்நிலம் இத்தனையும் திருவாவடுது
120. றை ஹா ஷெவற்கு இந்நிலம் இப்படிகொண்டு
121. இந்நிவந்தம் செய்து குடுத்து .... (மிறை)
122. க்கூற்றத்து விரமாங் குடையான் தாயன்காடனேன்
123. இத்தந்மம் பந்மா ஹேறபவரரிஇராக்ஷெ இத்தந்மம்
124. இரக்ஷிப்பார் ஸ்ரீபாத தூளி என் தலைமேல்
125.ன தாயாங்காடன் சிறுபுலியூர் சபையோ
126. ரிடை இறைஇலி கொண்ட நிலம் இந்நில
127. த்துக்கு அட்டக்கடவ நெல்லு பதின் கலம்
128. இப்பதின் கலமும் அட்டகடவோமிரும் பொன் கொண்டோம் திருவா
129. வடுதுறை திருவாவடுதுறை திருக்கோயி லுடையோம்.

**வைத்தியக்காணி :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய நான்காம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு வைத்தியனுக்கும் அவன் பரம்பரைக்கும் வழங்கிய மனையுடன் கூடிய நிலக் கொடையைச் சுட்டுகிறது. கல்வெட்டின்காலம் கி.பி.1016 ஆகும். உய்யக் கொண்டார் வளநாட்டு சோழேந்திர சிங்க மங்கலத்து அரையன் சந்திர சேகரனான உத்தம சோழ அசலனான சவர்னனும் அவன் வம்சத்தாரும் திருவாவடுதுறையில் மருத்துவப் பணி செய்து கொண்டு வாழ்ந்து வர ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆழ்வார் ஸ்ரீ பராந்தக ஸ்ரீ குந்தவை பிராட்டியார் இராசேந்திர சிம்ம வளநாட்டு இன்னம்பர் நாட்டு பழைய வானவன் மாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சபையாரிடம் வைத்தியக் காணிக்கு 120 காசினை வழங்கி எட்டு மாக்காணி முந்திரிகை கீழ் அரையும் குழி ஒன்றும் மனை இரண்டும் வாங்கி அளித்துள்ளார். முதலாம் இராசேந்திர சோழனின் அத்தையும் இராஜராஜனின் தமக்கையுமான குந்தவை பிராட்டியார் சில கோயில்களைச் சமய வேறுபாடு கருதாது கட்டியதுடன் பலகோயில்களுக்குக் கொடைகளும் அளித்துள்ளார். கோயில் தேவராயன் பேட்டையில் மருத்துவமனை ஏற்படுத்தி அதற்கு ஒன்பதுமா நிலத்தினை இவ்வம்மையாரே அளித்துள்ளார். சவர்ணன் அரையன் மதுராந்தகன் அக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளான். இதுவும் முதலாம் இரசேந்திரனின் காலத்தில் (கி.பி.1015) ஏற்பட்ட தாகும். தஞ்சாவூரில் சுந்தர சோழ விண்ணகர் ஆதுல சாலையையும் குந்தவையே கி.பி.1019இல் நிறுவி உள்ளார். (248-249/1922).

**80 காசுகள் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய மற்றோர் கல்வெட்டும் கி.பி. 1016இல் கூடியதாகும். பழைய வானவன் சதுர்வேதி மங்கல சபை 80 காசு பெற்றுக் கொண்டு குந்தவை பிராட்டியார் தந்த நிலத்திற்கு வரிவிலக்கு அளித்துள்ளது. (113/1925) சென்ற கல்வெட்டின் (112/1925) தொடர்ச்சியாக இக்கல்வெட்டு அமைந்துள்ளது.

**காஸ்யபன் அப்பி :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள சாசனம் சோதனக்காணியாக 3 வேலி நிலத்தைத் திருக் கல் காஸ்யபன் அப்பிவேங்கடன் என்பவன் ஐவக்கன் மீகர்களிடம் அளித்துள்ளான். (114/25) கல்வெட்டின் மன்னன் பெயர் ஆட்சியாண்டு எதுவும் இதில் இல்லை. எனினும் எழுத்தமைதியை நோக்க, சோழர் காலமாகத் தோன்றுகிறது.

**கல்வெட்டின் வாசகம் வருமாறு :**

1. திருக்கல் காஸ்யவன் அப்பி
2. வேங்கடவனுக்கு சோதன
3. காணி ஆகவிட்ட நில ஆவது
4. இந்நாட்டு நெற்குப்பை மூடே
5. வலியில் கீழைப்பற்றி
6. ல் மேற்கடைய ஏழுமா
7. வும் சந்திராதித்தவல்
8. சோதன காணி ஆகசெய்து
9. குடுத்தோம் ஐவக்கன்மீகர்.

**சுத்தமல்லி சதுரவேதி மங்கலம் :**

கோமுக்தீஸ்வரர்கோயில் கருவறை வடபுறச் சுவரில் உள்ள குலோத்துங்க சோழனுடைய நான்காம் ஆட்சியாண்டுக்கல்வெட்டு ராஜேந்திர சிம்மவள நாட்டு ஈழவூர் நாட்டுச் சுத்தமல்லி சதுர்வேதி மங்கலத்தையும் அங்கிருந்த மடத்தையும் குறிப்பிடுகிறது. (115/1925) முதல் குலோத்துங்க னுடைய நான்காவது ஆட்சியாண்டு மேஷ இராசி சுக்லம் நவமி செவ்வாய்க்கிழமை என்பதால் 08.04.1074 என்று காலத்தைத் தொல்லியல் துறை வரையறுத்துள்ளது.

**காவிரி நீரால் அபிஷேகம் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை மேற்குப்புறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய மூன்றாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு காவேரி ஆற்றிலிருந்து தினமும் மூன்று குடம் அபிஷேகத்திற்கு தண்ணீர் கொண்டு வருவதற்கான நிபந்தத்தைக் குறிப்பிடுகிறது.

திருவாவடுதுறை உடையார்க்குச் சிவப்பிராமணன் மோசி துறையன் காடனும் துறையான் திருமாலிருஞ் சோலையும் மோசி ஆயிரவன் நாரணனும் ஆயிரவன் கண்டனும் ஆகிய நாங்கள் அனைவரும் திருவீழிமிழலை ஆரிதன் நீலன் வடுகனையன் மூலதனமாகக் கொடுத்த நெல் 45 கலமும் கொண்டு ஓராண்டுக்குரிய வட்டியால் வந்த நெல்லு 11 கலம் மூன்று மரக்காலும் நாள்தோறும் அறக்கட்டளை செய்து, முப்போதுக்கும் ஆறு மரக்கால் குடத்தால் மூன்று குடம் தீர்த்தம் சந்திர சூரியர் உள்ளவரையில் கொண்டுவந்து கொடுப் போம் என்று கூறுகின்றனர். (116/1925).

**சோழர்காலத்தில் வழங்கிய ஐம்பொன் சிலைகள் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை வடபுறச் சுவரில் கோயிலில் இருந்த ஐம்பொன் சிலைகளின் பட்டியல் விவரமாகக் கூறப்பட்டுள்ளன. சாத்தனூர் அபயாசர்ய சதுர்வேதி மங்கலத்துத் திருவாவடுதுறை உடையார் கோயிலில் வைக்கப் பட்ட ஐம்பொன் சிலைகளின் பெயர்களும் அளவுகளும் தஞ்சாவூரில் பெருங்கோயிலில் இராஜராஜன் வெட்டிய கல்வெட்டுகளுக்கு முன் மாதிரி என்று குறிப்பிடலாம். எனினும் மன்னன் பெயர் ஆட்சியாண்டு சாசனத்தில் இல்லை. 10ஆம் நூற்றாண்டு எனலாம்.

1. சிற்றம்பலத்திருமேனி முதல் ஆடி அருளும் உடையாரும் ஆட்டத்திற்கு வாசிக்கும் பூதமைத்த பீடமும் பிரபையும் உட்படமும் முழு உயரத்து ஒருவர் இவர் நம்பிராட்டியார் பீடமும் பிரபையுமுள்பட இருந்த ஒரு முழமும் ஆறுவிரல் உயரத்து ஒருவர்.

2. சந்திரசேகர தேவர் பீடமும் பிரபையும் உட்பட இருமுழு உயரத்து ஒருவர்.

இவர் நம்பிராட்டியார் பத்மத்தோடு ஒரு முழ உயரத்து ஒருவர்.

3. திரிபுவன சுந்தரர் பீடமும் பிரபையும் உட்பட மும்முழ உயரத்து ஒருவர்.

4. கணபதியார் பீடமும் பிரபையும் உட்பட ஒரு முழு உயரத்து ஒருவர்.

5. சந்திரசேகர தேவர் பீடமும் பிரபையும் ஒருசாணும் ஒருவிரல் உயரத்து ஒருவர்.

6. க்ஷேத்திரபால தேவர் பீடமும் பிரபையும் உட்பட ஒருமுழ உயரத்து ஒருவர்.

7. மேற்படி தேவர் பீடம் உட்பட ஒருசாணே நால் விரல் உயரத்து ஒருவர்.

8. இடப வாகன தேவரும் பிராட்டியாரும் இடபமும் பீடமும் பிரபையுமுட்பட மும்முழ உயரத்து ஒருவர்.

9. பிச்சதேவர் மானும் பூதமும் பீடமும் பிரபையும் உட்பட இருமுழ மூவிரல் உயரத்து ஒருவர்.

10. அர்த்தநாரி தேவர் பத்மத்தோடு ஒரு முழம் ஒட்டை உயரத்து ஒருவர்.

11. தட்சிணாமூர்த்தி ஒருமுழ உயரத்து ஒருவர்.

12. பள்ளிக்கட்டில் நம்பிராட்டியார் பீடமுட்பட இருமுழ உயரத்து ஒருவர் (பள்ளியறை நாச்சியார் என்க).

13. அஸ்திரதேவர் நடுவுமாகத் தண்டோடும் ஒருவர்.

*14.* இடபத்தேவர் பீடமும்படத் திருக்காம்பு அளவும் ஈரோட்டை உயரத்து ஒருவர்.

*15.* சண்டேசுவர தேவர் பீடமுட்பட இருந்த ஒரு முழ உயரத்து ஒருவர்.

*16.* திருநாவுக்கரைய தேவர் ஒரு முழமும் நான்கு விரல் உயரத்து ஒருவர்.

*17.* சிவஞான சம்பந்த அடிகள் பீடமும் பிரபையும் உட்பட ஒரு முழம் ஆறு விரல் உயரத்து ஒருவர்.

*18.* நம்பி ஆரூரனார் பத்மத்தோடு ஒரு முழமும் ஆறு விரல் உயரத்து ஒருவர்.

*19.* திருக்காளத்திப் பிச்சர் தம்மையாக வார்த்த ஒரு முழு உயரத்து ஒருவர் (117/1925).

**நல்லாற்றூர் சங்கரன் ஈசன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவரில் உள்ள இராசேந்திர சோழனுடைய 27ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு கோயிலில் விளக்கு வைப்பதைக் குறிப்பிடுகிறது. நல்லாற்றூர் நாட்டுக் கூத்தனூர் உடையார் சங்கரன் ஈசன் என்பவன் 30 காசுகளை, ஸ்ரீ கோயில் சிவப்பிராமணன் பாரதாயன் நானூற்றுவன் நாகன் உள்ளிட்ட ஐவர் வசம் வழங்கி விளக்கெரிக்க வேண்டுகிறான். வாதவூர் ஆத்ரேயன் கூத்தாடி ஸ்ரீ வாசுதேவன் ஆறு காசுகளை மேற்கண்ட சிவப்பிராமணரிடம் முதலீடாக அளித்துள்ளான். இதன் மூலம் வரும் வட்டி $1 1/2$ காசினைச் கொண்டு உச்சிக்கால அபிஷேகம் நடத்த திருமகுசனக் குடம் ஒன்றை வைக்கவும் கோயில் சிவப்பிராமணர் உடன் பட்டுள்ளனர். (118/1925) காவேரி ஆற்றிலிருந்து தினம் ஒரு குடம் அபிஷேக நீர் எடுத்து வரப் பட்டுள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி. 1039 ஆகும்.

**திருமஞ்சன நீர் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய 18ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு சிவப் பிராமணர்கள் கோயிலில் இரண்டு நுந்தா விளக்கு எரிக்கவும் உச்சிக் கால பூசையில் திருமஞ்சனத்துக் காக அரசிலாற்றில் நீர் மூன்று குடம் கொண்டுவந்து தரவும் உடன்பாடு கண்டனர். இராசேந்திர சோழனின் மெய்க்கீர்த்தியும் இக்கல்வெட்டில் உள்ளது. (119/1925). கவினியன் மகனான ஸ்ரீவன்தத்தன் என்பவனே அறக்கட்டளை ஏற்படுத்தியவன் ஆவான். கல்வெட்டின் காலம் கி.பி.1030 ஆகும்.

**சதுசாலை அம்பலம் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவரில் முதலாம் இராசராசனுடைய ஒன்பதாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டுள்ளது. திருவாவடுதுறை உடையார் கோயிலில் பூரட்டாதி நட்சத்திரத்தன்று ஏழு அங்கங்களை உடைய ஆரிய கூத்து ஆடியவர் சாக்கையர் குமரன் சீகண்டன் ஆவார். சாத்தனூர் சபையார் தங்கள் ஊரில் இருந்த சதுசாலை அம்பலத்தில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து தென்கரை சாக்கைவேலி ஆன நில அளவுப்படி அரையே இரண்டுமாவும் திருவாவடுதுறை ஆழ்வார் தேவதானம் நெற்குப்பை பதினாறு வேலியினும் கிழக்கடைய மாம்பள்ளி வாய்க்காலுக்கு வடக்கு நிலம் முக்காலும் ஆக நிலம் ஒன்றே ஏழு மாவை நிருத்தமாக அளித்தனர். (120/1925) இராஜராஜனுடைய இந்தக் கல்வெட்டின் காலம் 13.10.994 என்று தொல்லியல் துறை நாள், நட்சத்திரம், திதியைக் கொண்டு நிர்ணயித்துள்ளது. ஸ்ரீ கண்டன் குமரன் தொழில் முறைக்கலைஞன் கோயிலில் இருந்த நாடக அரங்கில் சமஸ்கிருத புராணத்தைத் தழுவிய கூத்தினை இவன் புரட்டாசி மாதம் ஒவ்வோராண்டும் நிகழ்த்தி வந்துள்ளான். இதற்காக அரிசிமாவு, வெற்றிலை, பாக்கு, மஞ்சள் ஆகியவை வழங்கப்பட்டுள்ளன. திருவாவடு துறையில் நாடக சாலை இருந்தது போல திருவிடைமருதூரிலும் தேவர் நாடக சாலை இருந்துள்ளது. (S.I.I.Vol III No 124 Page 260)

**சாத்தனூர் சபையும் சிற்றாணைச் சூர் சபையும் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை மேற்கு மற்றும் தென்புறச் சுவரில் முதலாம் இராஜராஜ னுடைய கல்வெட்டு மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. திரைமூர் நாட்டுச் சாத்தனூர் மற்றும் திருவழுந்தூர் நாட்டுச் சிற்றாணைச்சூர் சபைகள், திருவாவடுதுறை உடையார் கோயில் நிலங்களுக்கு வசூலிக்க

வேண்டிய வரிகளை நிலுவையில் வைத்திருந்தன. தஞ்சாவூர் அருகில் உள்ள திருவையாற்றுச் சதாசிவ பட்டாரகர் என்பவருடைய மடமும் இருந்துள்ளது. இவருடைய மடத்திற்குச் சில நிலங்கள் மாற்றப் பட்டு வரிவிலக்கும் வழங்கப்பட்டது. திருவை யாற்றிலிருந்த (கொன்)றை யந்தாள் கோயிலும் குறிக்கப்படுகிறது. இக்கல்வெட்டில் கீழ்பட்ட சாதிகள் என்ற ஒரு சொல்லும் வருகிறது.

**திருக்கற்றளிப் பிச்சன்பொன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் முதலாம் பராந்தகனுடைய 38 ஆம் ஆட்சியாண்டில் வெட்டப் பட்ட கல்வெட்டுள்ளது. (கி.பி.945) திருவாவடு துறை திருக்கற்றளிப் பிச்சன் பொன் வழங்கி நிலம் விலைக்கு வாங்கி, கோயிலுக்கு வழங்க, சிற்றாணைச் சூர்சபை இறையிலியாக நிலத்தைப் பதிவு செய்துள்ளது. கல்வெட்டு முழுமையில்லை. (122/1925). கல்வெட்டின் வாசகம் வருமாறு.

ஸ்வஸ்திஸ்ரீ மதிரைகொண்ட கோப்பர கேசரிபன் மற்கியாண்டு 38 ஆவது தென்கரைத் திருவழுந்தூர் நாட்டு ப்ரம்ஹதேயம் சிற்றாளைச் சூர்சபையோம் ஸ்ரீ திருவாவடுதுறை திருக்கற்றளிப் பிச்சரிடை பொன்கொண்டு திருவாவடுதுறை தேவர்க்கு விற்றுக் குடுத்த நிலத்துக்கெல்லை கீழ்பாற்கெல்லை ஸ்ரீ திருவாவடுதுறை தேவர் நிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை குமாரடி நம்பியார் காவில் தொட்டிக்கும் கிணற்றுக்கும் போந்த பெருவழிக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை சாத்தனூர் ஸபையார் நிலமே அரையே அரைக்கால் நிலம் சுடுகாடு விட்டு கிழக்கும் வடபாற்கெல்லை ஆறிடுபடுகை உட்பட்ட காவிரிக்கு தெற்கும் இவ்விசைத்த நான்கெல்லையிலும் அகப்பட்ட நிலம் உடும்போடி ஆமை தவழ்ந்ததெல்லாம் உண்ணிலம் ஒழிவின்றி பொன்கொண்டு விற்றுக் குடுத்தோம் இன்னிலம் எப்பேர்பட்ட இறையும் எச்சோறும் வெட்டி கல்வெட்டு முடியவில்லை.

**ஸ்ரீ திருவாவடுதுறை ஆழ்வார் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத்தின் தென்புறச் சுவரில் முதலாம் பராந்தக சோழனுடைய 36ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி.943) உள்ளது. நம்பன் வீரேஸ்வரன் என்பவன் விளக்கொன்று வைக்க ஆடுகளைக் கோயிலுக்கு வழங்கியுள்ளான். இக்கல்வெட்டின் வாசகம் வருமாறு.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரைகொண்ட கோப்பர
2. கேசரி பந்மர்க்கு யாண்டு 36 ஆவது
3. தென்கரை திரைமூர் நாட்டு ப்ரம்ஹ
4. தேயம் சாத்தனூர் ஸ்ரீ திருவாவ
5. டுதுறை ஆள்வார்க்கு நம்பன்
6. வீரேச்வரன் ஒரு நொந்தா விளக்
7. கினுக்கு சந்திராதித்தவற் நிற்
8. பதர்க்கு வைச்ச ஆடு தொந் நூறும்
9. இவை பந்மாஹேச்வ
10. ர ரக்ஷை (123/1923).

**கருப்பூர் வியாபாரி :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத் தென்புறச் சுவரையொட்டி உள்ள 11 வரி கல்வெட்டு இராசகேசரி என்ற பட்டப் பெயருடன் உள்ளது. எழுத்தமைதியை நோக்க கண்டராதித்தன் அல்லது சுந்தர சோழனுடையதாகத் தோன்றுகிறது. தென்கரை திரைமூர் நாட்டு பிரம்மதேயம் சாத்தனூர் அடுத்த திருவாவடுதுறை மகாதேவர்க்குத் திரைமூர் நாட்டு கருப்பூர் வியாபாரி காரிதோட்டம் என்பவன் ஒரு நந்தா விளக்கு வைக்க முதலீடாக பன்னிரு கழஞ்சு பொன்னைத் திருக்கோயிலு டையார் மோசிகாடன் துறையான் மற்றும் அவன் தம்பிமாரிடம் அளித்துள்ளான். இதிலிருந்து வரும் வட்டியைக் கொண்டு விளக்கு எரிக்க வழி செய்யப்பட்டதாகத் தெரிகிறது. கல்வெட்டு முழுமையில்லை. (124/1925).

சாத்தனூர் திருவாவடுதுறை மகாதேவர் கோயிலைச் சாத்தனூரில் உள்ள திருவாவடுதுறை மகாதேவர் கோயில் எனத் தொல்லியல் அளவீட்டுத் துறை ஆண்டறிக்கையில் குறிப்பிட்டுள்ளது. சாத்தூரையடுத்த திருவாவடுதுறை மகாதேவர் என்பதே பொருத்தமாகும். திருவோத்தூர் உடையார், திருவொற்றியூர் மகாதேவர், பெண்ணாகடமுடையார் என்பது போல் ஊரின்

பெயரையும் இறைவன் பெயரையும் ஒருங்கே இச்சொற்றொடர் குறிக்கும் எனலாம்.

**திருக்காளமும் சங்கும் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைத் தென்புற சுவரில் உள்ள முதலாம் பராந்தகனுடைய 35 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு நில விற்பனையைக் குறிப்பிடுகிறது. தஞ்சாவூர் கூற்றத்து நெற்குப்பை உடையான் காடன்சாத்தன், சிற்றாணைச்சூர்கவிசியன் நாராயணன் சங்கரன், கவிசியன் பாண்டன் சங்கரன், பாண்டன் பூதன் ஆகியோரிடமிருந்து கற்றளிப் பிச்சன் நிலம் விலைக்கு வாங்கி அதனைக் கோயிலில் பணிபுரியும் காளம் ஊதும் இரண்டு பேர் குடை பிடிக்கும் இருவருக்கும் சங்கு ஊதுபவர்க்கும் நந்தவனம் காப்பவனுக்கும் நிவந்தமாக அளித்துள்ளான். மேற்படி நிலங்களுக்கு எல்லைகளும் கூறப் பட்டுள்ளன. கோயிலைக் கட்டிய கற்றளி பிச்சனே கோயில் வழிபாட்டில் காளமும் சங்கும் ஊதவும் ஏற்பாடு செய்துள்ளான் (125/1925). கல்வெட்டின் காலம் கி.பி. 942 ஆகும். கல்வெட்டின் மூலம் வருமாறு :

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகெஸரிவநக்கி யாண்டு 35 ஆவது தென்கரை திருவழுந்தூர் நாட்டு

2. ப்ரம்ஹதேயம் சிற்றாணைச்சூர்ஸபை யோம் திரைமூ(ர்) நாட்டு ப்ரம்ஹதேயஞ் சாத்தனூர் ஸ்ரீ திருவா

3. வடுதுறைப்பெருமானடிகளுக்கு தஞ்சாவூர் கூற்றத் து நெற்குப்பை உடையான்காடன்

4. சாத்தன் சிற்றாணைச்சூர்கவிசியன் னாராயணன் சங்
கரனிடையுங் கவிசியன் பாண்ட(ன்) சங்கரனிடையு

5. ம் பாண்டம் பூதனிடையும் இவ்வூர்த்தானப்படி காத்து விலைகொண்ட நிலம் இறை இலிசெய்

6. குடுத்த நிலத்துக்கெல்லை கீழ்பாற்கெல்லை வழிவரம்புக்கு மேக்கு தென்பாற்கெல்லை வ

7. டக்கும் மெல்பால்க்கெல்லை கவிசியன் இளைய சங்கரன் மாறனும் கவிசியன் முத்தான் மாறனு

8. ம் பாரதாயன் அங்கி பாஸ்கரனும் பாரதாயன் அங்கதத்தனும் இவ்வனைவர் நிலத்துக்கு கிழக்கு

9. வடபாற்கெல்லை பாரதாயன் அங்கி பாஸ்கர்நிக்குந்
திருக்கடம்பந் (குறை திதெவர்) நிலத்து

10............ கொண்ட நிலத்துக் கெல்லை வாணியன்

11. ழிக்கு மேக்கும் பாரதாயன் துவெதி நாராயண(ன்) நிலத்துக்கு வடக்கு கவிசியன் செந்தங்குமர நிலத்துக்கும் கவிசியனின

12. லந்தராயணநிலத்துக்கும் கவிணியன்சாத்தம் பூதனி லத்துக்கு கிழக்கு கற்றளிபிச்சர்விலைகொண்ட நிலத்துக்கு

13. தெற்கும் உட்பட்ட நிலம் காலேகாணியுமாக நிலம் அரை அரைமாவுக்கு மாத்தால் கழஞ்சரையாக நெல்குப்பை உடையான்

14. காடன் சாத்தநிடை பொன்கொண்டு சந்திராதித்த வல் எப்பேர்ப்பட்ட இறையுங் காத்துக் குடுப் போமாக கல்வெட்

15. டிக் குடுத்தொம் சிற்றாணைச்சூர் ஸபையோம் இந் நிலம் அரையே அரைமாவும் நான்சிற்றாணைச் சூர் ஸபையாரிடைக்கோ

16. (யில்)விலைகொண்ட நிலமுமாக கா(ள) இரண்டுக் குஞ்சங்கரண்டுக்கும் விதானம் பிடிக்கு மாணிரண்டு க்கு ஆக சந்திராதித்தவல் கா

17. ளமுஞ்சங்கும் அடிகள்மார் ஊதிநந்தவனம் இறைத் துண் பதற்கு நிவந்தஞ்செய குடுத்தேன் கற்றளி பிச்ச னேன்

18. இது பன்மா ஹெபவரர் ரக்ஷை

**உவச்சப்புறம் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபத் தென்புறச் சுவரில் அகத்தியர் சிற்பமுள்ள கோஷ்டத்திற்கு மேற்கில் உள்ள கல்வெட்டு இக்கோயில் கட்டப்பட்ட விவரத்தைத் தெளிவாகச் சுட்டுகிறது.

முதலாம் பராந்தகனுடைய ஆட்சியின் போது கி.பி.932இல் திருவாவடுதுறை மகாதேவர் கோயிலைக் கட்டிய கற்றளிப்பிச்சன் உவச்சப் புறமாக 11 மா நிலம் விலைக்கு வாங்க அதனைத் திருவழுந்தூர் நாட்டுப் பிரமதேயம் சிற்றாணைச் சூர்

சபை வரியிலியாக வழங்கியுள்ளது. கவிசியன் இளைய சங்கரன் மாறனிடமிருந்து நிலம் விலைக்கு வாங்கப்பட்டது. 11 மாவின் விலை 16 1/2 கழஞ்சு பொன் ஆகும். உவச்சர் என்போர் கோயிலில் சங்கு காளம் ஓதும் தொழிலாளர் ஆவர். சைவக்குருக்கள் போல் உவச்சர்கள் பங்கு கோயில்களில் முக்கியமாகும் (126/1925) இறைகட்ட வேண்டிய தில்லை என்ற குறிப்பும் சாசனத்தில் உள்ளது. கல்வெட்டின் வாசகம் வருமாறு :

1. ஸ்வஸ்தி மதிரைகொண்ட கோப்பரகெஸரி வந்மக்கு யாண்டு 25 ஆ
2. வது தென்கரை திருவழுந்தூர் நாட்டு ப்ரம்ஹதேயஞ் சிற்றாணைச்
3. சூர் ஸபையோமிவ்வூர் கவிசியனிளைய சங்கரன் மாறனிடைத் தினரமூ
4. ர்நாட்டு ப்ரம்ஹதேயம் சாத்தனூர்த் திருவாவடுதுறைக் கற்றளி எடுத்தக்
5. கற்றளிப் பி(ச்சன்) ஸ்ரீ மஹாதேவர்க்கு உவச்சப்புறமாக விலைகொ
6. ண்ட நிலம் இவ்வூர் வடவாக்கா நிலத்துக் கெல்லை கவிசியனு
7. ள் சொந்த நிலத்துக்குப் பாயுமிவன் வாய்க்காலுக்கு மேக்கு
8. தென்பாற்கெல்லை கவிசியனூர் னானந்தனிலத்துக்கு திரு
9. ..............................
10. நிலத்துக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை கவிசியன் சுவாங்குமானில
11. லத்துக்கு கிழக்கு வடபாற்கெல்லை வாக்காலுக்கு தெற்குமிவ்விசைத்த
12. பெருநான்கெல்லை அகப்பட்ட நிலம் பதினோரு மாச் செயுமெ
13. ப்பேர்பட்ட இறையு மெச்சோறு வெட்டி வேதினை ஊர்வரிப்பாடு கா
14. டடப் பெறாததாக இறையிலியாக கொண்ட பொந்பதிற்று கழங்சரையு
15. ங் கொண்டு சந்த்ராதித்தவல் இறை கொள்ளாததாக இறை இழிச்சி
16. ஞ்செய்துகுடுத்தோம் சிற்றாணைச்சூர்ஸ பையோம் இதிற்றிறம்பில்நா
17. கால்முதல் இற்றண்ட மறுத்தும் இறைகாட்டாததா மானோமா கவும் சிற்றாணை
18. ச்சூர் ஸபையோம் இது பந்மாஹேச்வர ரக்ஷை.

**சங்கராந்தி விழா :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு பரகேசரி வர்மனுடைய ஏழாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு, சங்கராந்தி விழா திருவாவடுதுறை மகாதேவர் கோயிலில் கொண்டாடப்பட்டதைக் குறிப்பிடுகிறது. உத்தராயன சங்கராந்தியாகிய பெரும் பொங்கலை இக்கல்வெட்டு குறிப்பிடுவதால் இக்கல்வெட்டின் முழுவாசகத்தையும் காண்போம்.

1. ஸ்வஸ்திஸ்ரீகோப்பர கேஸரி பந்மற்கு யாண்டு 7 ஆவடு தென்கரைத் திரை மூர் நாட்டு ப்ரமதேயஞ் சாத்தூர் ஸபையோம் இவ்வூர் ஸ்ரீ திருவாவடுதுறை மஹாதேவர்க்கு உத்தராயந சங்கராந்திக்கு ஸ்நப்நம் செய்ய மூன்று காசு - நூற்றெட்டுக் கலசத்துக்குக் கிளியூர் நாட்டு தேவதான பிரமதேயம் திருவானைக்காவில் ஓமாசி ஒற்றியூரன் கூத்தன் ஆள்வார்க்குக் குடுத்த காசு 15 (பதினைஞ்சும்) கொண்டு சந்த்ராதித்தவத் விற்றுக் கொடுத்தோம் விற்றுக் குடுத்த நிலம் இவ்வூர்ப் பால் கிடக்கும் .....
2. ல்லை வாய்க் (ஸ)ரக்கு வடக்கும் மேல்பாற்கு கெல்லை கவிணியன் சங்கரன் மாறன் நிலத்துக்குக் கிழக்கும் வடபாற் கெல்லை கெல சயனத்துத் தேவர் நிலத்துக்குத் தெற்கும் இந்நான் கெல்லையிலு மகப்பட்ட நிலம் காலேயரைக் காணி அரைமுந்திரிகைக் கீழ் ஒன்பது மாக் காணியில் கிழக்கடைய இவ்வாள்வார்க்கு திருநந்தவானப்புறம் மூன்று மாநீக்கி இரண்டுமா முக்காணி அரை முந்திரிகைக்கீழ் ஒன்பது மாக்காணி விற்றுக்குடுத்த விலைப்பொருளும் இறைக்காவலுமாக இப்பதினைஞ்சுங் கொண்டு விற்றுக் குடுத்தோம் சந்த்ரசாதித்தவற் ஸ்ரீ கோயில் வாரியஞ் செய் வா .....

கல்வெட்டின் இறுதிப்பகுதி கட்டிடத்திற்குள் உள்ளது. (127/1925) கோப்பரகேசரி எனப் பொதுவாக வருவதால் எந்தச் சோழ மன்னன் கல்வெட்டு என்று உறுதியாகக் கூற முடியவில்லை. சங்கராந்தி தொடர்பாக மெய்கண்டார் 1/2011 இதழில் கட்டுரையாசிரியர் ஒரு கட்டுரை எழுதி உள்ளார்.

**காவனூர் பெருங்குறி :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய 9 ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.1121) வெட்டப்பட்ட கல்வெட்டு திருமன்னி வளர என்ற மெய்க்கீர்த்தியுடன் உள்ளது.

உய்யக் கொண்டார் வளநாட்டு திருவழுந்தூர் நாட்டு காவனூர் பிரமதேயச் சபை கோயிலுடன் செய்து கொண்ட நில விலைப் பிரமானமாக இக்கல்வெட்டு உள்ளது. 100 காசு பெற்றுக் கொண்டு கோயிலுக்கு சபை விற்றுத் தந்துள்ளது. வரிநீக்கி இறையிலியாக வழங்கியுள்ளது. (128/1925) காவனூர்ப் பெருங்குறி மக்கள் அன்றாடு நற்காசு நூற்றுக்கு ஆதிசண்டேசுவரதேவர்க்கு 1 1/2 வேலி நிலம் சந்திராதித்தவரை நிலைக்க விற்றுத் தந்துள்ளனர்.

**தில்லைவிடங்கப்பிச்சன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் உள்ள முதலாம் இராசேந்திர சோழனுடைய மற்றோர் கல்வெட்டும் ஒன்பதாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டது. மெய்க் கீர்த்தியுடன் உள்ளது. வேம்பன் சங்கரனாகிய தில்லை விடங்க பிச்சன் திருவாவடுதுறை உடையார் கோயிலில் ஒரு விளக்கு வைக்க 96 ஆடுகளைக் கொடையாக அளித்துள்ளான்.(129/1925) மன்றாடி சீகண்டசிட்டனும் சீகண்டன்எழுவனும் தினமும் உழக்கு நெய்வழங்க உடன்பட்டுள்ளனர். காலம் கி.பி.1121 ஆகும்.

**அதுலகுச நாயகி :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் உள்ள மிகவும் பிற்காலக் கல்வெட்டு கோமுக்தீஸ்வரர் சுவாமி மற்றும் அவருடைய தேவி அதுலகுசநாயகி பூசை செய்வதற்காகத் தருநேந்து சேகரபண்டி தரைநியமித்ததைக் குறிப்பிடுகிறது. திருவாவடு துறை உடையார், திருவாவடுதுறை மகாதேவர், மாசிலாமணி தேவர் என அழைக்கப்பட்ட இறைவன் பெயர் இந்தக் கல்வெட்டில்தான் முதன்முதலில் கோமுக்தீஸ்வரர் என வழங்கப் பட்டமை காண்கிறோம். அம்மையின் தமிழ்ப் பெயரான ஒப்பிலாமுலை அம்மனும் அதுலகுச நாயகி என இதில் காண்கிறோம். (130/1925) திருக்காமக் கோட்டமுடைய பெரியநாச்சியார் என்றும் பெருந்திருவாட்டி என்றும் அம்மன் சோழர் காலக் கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளார்.

**திருநாவுக்கரையதொண்டர் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் தட்சிணாமூர்த்தி கோஷ்டத் திற்குக் கிழக்கில் உள்ள கல்வெட்டில் கோயில் திருப்பணியில் ஈடுபட்ட அடியான்பெயர் உள்ளது. இப்பெயருடன் அவருடைய திருவுருவமும் உள்ளது.

**கல்வெட்டின் வாசகம் வருமாறு :**

ஸ்வஸ்திஸ்ரீ கற்றளிப்பிச்சனார்க்கிளைய திருநாவுக்கரைய தொண்டர். இந்தத் திருநாவுக்கரையர் தலைமேல் கைகுவித்த படி உள்ளார். கற்றளிப்பிச்சனுடைய தம்பி இவர் எனலாம். (131/1925) திருக்கற்றளிப் பிச்சன் திருப்பணிக்கு மாமன்னன் முதலாம் பராந்தகன் 500 கழஞ்சு தானம் தந்தது ஒரு கல்வெட்டில் இருப்பதால் இக்கல்வெட்டும் முதலாம் பராந்தகன் காலத்தது என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

**ஸ்ரீ கற்றளிப்பிச்சன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் கற்றளிப்பிச்சன் உருவத்துடன் அவனுடைய பெயர் வெட்டப்பட்டுள்ளது. பிச்சன் சிவலிங்கத்தை வழிபடும் தோற்றத்தில் உள்ளான். ஸ்ரீ கற்றளிபிச்சன் (132/1925) என்பது வாசகமாகும். முதலாம் பராந்தகன் காலத்துக் கல்வெட்டு இதுவாகும்.

**அம்பலவன் திருவிசலூரான் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் கல்வெட்டுடன் ஒரு சிற்பத்தின் உருவமும் உள்ளது. சிவலிங்கத்தை வழிபடும் இவ்வுருவம் பிற சிற்பங்கள்போல கோயில் திருப்பணியில் ஈடுபட்டவர் உருவம் எனலாம்.

ஸ்ரீ திருவாவடுதுறை உடையார் அடியான் அம்பலவன் திருவிசலூரான் திருநாவுக்கரையன் என்பது கல்வெட்டு வாசகம் ஆகும். (133/1925) முதலாம் பராந்தகன் காலத்தில் இக்கல்வெட்டப் பட்டது எனலாம்.

**கிடங்கில் நாராயணன் திருவரங்கன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் உள்ள இராசேந்திர சோழனுடைய 16ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட சாசனம் மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. ஜெயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மா நாட்டு (ஓமாநாடு என்று சாசனத்தில் உள்ளது) கிடங்கிலைச் சேர்ந்த நாராயணன் திருவரங்கன் என்பவன் திருவாவடு துறை உடையார் கோயில் பூசைக்கும் உச்சிக் காலத்தில் கோயிலுக்கு வரும் அபூர்விகளுக்கு உணவிற்குமாக 45 காசினைக் கோயில் சிவப்பிராமணர்களிடம் வழங்கியிருந்தான். இம்முதலீட்டினை வட்டிக்கு விட்டு அவ்வட்டியி லிருந்த மேற்படி கட்டளையை நடத்த உடன்பட்டு, கல்வெட்டும் சிவப்பிராணர்கள் வெட்டி வைத்துள்ளனர்.

தானம் தந்தவன் சங்ககாலம் முதல் சிறப்புடன் திகழ்ந்த ஒய்மா நாட்டுக் கிடங்கிலைச் சேர்ந்தவன் என்று சாசனத்தில் உள்ளது. இன்றைய திண்டிவனத்தை யொட்டியே கிடங்கில் உள்ளது. (134/1925) இக்கல்வெட்டு கி.பி. 1028இல் வெட்டப் பட்டது எனலாம். ஸ்ரீ கிடங்கில் மகன் புலியார் ஒட்டை கண்டது என்ற கி.பி. 7ஆம் நூற்றாண்டு வட்டெழுத்துக்கல்வெட்டு தருமபுரி மாவட்டம் பொம்மிடி அருகே உள்ள கே.என்.புதூர் ஏரிக் கரையருகே உள்ளது. ஒய்மா நாட்டு நல்லியக் கோடனைச் சங்க கால வரலாற்றில் காண்கிறோம்.

**ஆதித்திய பன்மத்தெரிந்த கைக்கோளர் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறை தென்புறச் சுவரில் உள்ள பரகேசரி என்ற பட்டப் பெயருள்ள கல்வெட்டு கி.பி. 10 ஆம் நூற்றாண்டாகத் தோன்றுகிறது. மன்னனின் இரண்டாவது ஆட்சியாண்டின்போது வெட்டப் பட்டது. நந்தவனம் ஏற்படுத்தி அதனைப் பராமரிக்கும் செயலைக்குறிப்பிடும் இக்கல் வெட்டின் வாசகம் வருமாறு :

1. ஸவஸ்திஸ்ரீ கோப்பரகேஸரி பன்மற்குயாண்டு 2 ஆவது தென்கரைத் திரைமூர்நாட்டு ப்ரமதேயம் சாத்தனூர் ஸபையோம் திருவாவடுதுறை மாகதேவற்கு ஆயிரவனாள் தெங்கு நந்தவானஞ் செய்த ஆதித்திய பன்மத் தெரிந்த கைக்கோளரில் சங்கரனொற்றிக்கு.

2. எங்களூர் மிற்றலங்குடி எங்கள் பொது நிலமான நால்மாச்செயும் சந்திராதித்தவற்றிற்க்க இறையிழிச்சி விற்றுக்குடுத்த நிலத்துக் கெல்லை உட்சிறு வாய்க்காலுக்கு மேற்க்கும் காமக்காணி குமரனநதி நிலத்துக்கு வட ....

3. ம் பாரதாயன் நாரணங்கி நிலத்துக்கு தெற்கும் இவ்விசைத்த இன்னான் கெல்லையிலு மகப்பட்ட நிலம் நந்தவானப் புறமாக விற்றுக் குடுத்தோம் ஸபையோம் தெங்காயிரமும் காச்சன் நூறு நூறு தெங்கின் போகங் கொண்டு ஒ ....

4. பின் பிச்செய் உண்டு பூ நந்தவானஞ் செய்யவும் வைச்சது பந்மாஹேஸ்வர ரக்ஷை.

5. திருவாவடுதுறை மகாதேவர் கோயிலுக்கு ஆதித்யபன்மந்தெரிஞ்ச கைக்கோளப் படையைச் சேர்ந்த சங்கயன் ஒற்றி ஆயிரம் தென்னை மரத்தை உருவாக்கி நந்தவனம் அமைத்துத் தருகிறான். மிற்றலங்குடியில் சபைக்கு பொதுவான 4 வேலி நிலத்தை இறையிழிச்சி இவனுக்குச் சாத்தனூர் சபை விற்று தந்துள்ளது. திருவாவடுதுறை மகாதேவர் கோயில் சாத்தனூர் பிரமதேயத்தில் இருந்துள்ளது. 4 மாநிலத்தின் எல்லை வருமாறு உட்சிறு வாய்க்கால் மேற்கு காமக்காணி குமரனங்கி நிலத்துக்கு வடக்கு பாரதாயன் நாரனங்கி நிலத்துக்குத் தெற்கு. தென்னைமரம் காய்க்கும் போது 100 மரங்களின் பயனைச் சங்கயன் ஒற்றி அனுபவிக்கச்சபை முடிவு செய்துள்ளது. நான்குமா நிலத்தில் பூந்தோட்டம் செய்யவும் சங்கயனைச் சபை வேண்டியுள்ளது. காமக்காணி என்பது அம்மன் காமாட்சி அல்லது ஒப்பிலா முலை அம்மன் பெயரில் கூடிய நிலம் என்று குறிப்பிடலாம். கிராமம், காமம் ஊர் என்ற பெயரில் கூடிய நிலத்தை அம்மனுக்கு உரியதாகக் குறிப்பிடலாம். (135/1925)

ஆதித்தியபன்ம என்ப சொற்றொடரின் மூலம் முதலாம் பராந்தகனின் தந்தை ஆதித்திய கரிகாலனின் பெயரில் கைக்கோளப்படை இருந்தது என்று குறிப்பிடலாம். இனி சுந்தர சோழனின் மூத்த மகன் ஆதித்த கரிகாலன் என்பதால் அவனுடைய பெயரில் கைக்கோளப் படை இருந்தது என்றும் கூறலாம். இவ்விரண்டாம் கருத்தும் பொருத்தமாகத் தோன்றுகிறது. எனினும் இக்கல் வெட்டு உத்தம சோழனுடையது என்று கருதுகிறேன். எனவே காலம் கி.பி. 972 ஆகும்.

**700 தென்னை மரம் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் தென்புறக் கருவறைச் சுவரில் தென்னை மரம் உருவாக்கிய மற்றொரு நபரை இக்கல்வெட்டு சுட்டுகிறது. இதுவும் பரகேசரிவர்மனுடைய இரண்டாவது ஆட்சியாண்டின்போது 700 தென்னை மரங்களை வைத்து நந்தவனம் உருவாக்கியவனுக்குச் சபை ஊதியத்திற்கு வழி செய்துள்ளது. அதாவது குறிப்பிட்ட அளவு தென்னை மர மகசூலை வழங்கி உள்ளது. மூன்று மாநிலம் சபை விற்றுத்தந்து ஒரு விளக்கு வைக்கவும் பூந்நந்தவனம் வைக்கவும் சபை நடவடிக்கைக மேற்கொண்டுள்ளது. மரங்களை வைத்தவன் பெயர் கல்வெட்டு சிதைந்துள்ளதால் தெரியவில்லை. எனினும் முன்னர் குறிப்பிட்ட சங்கயன் ஒற்றி அல்ல எனலாம். சபை விற்ற மூன்று மாநிலத்தின் எல்லைகளைக் குறிப்பிடும்போது, கிழக்கு மாரமங்லத்தைச் சுற்றியுள்ள பேராவூர் நிலம் முதலியவை கூறப்படுகின்றன. சபை விற்ற நிலம் கிழக்கு மாரமங்கலமாகும். மேலே குறிப்பிடப் பட்ட இரண்டு கல்வெட்டுகளிலும் ஆயிரம் நாள் தெங்கு என்று கூறப்படுவதால் சுமார் மூன்று ஆண்டு கழித்து தென்னையின் பலன் கிடைத்துள்ளது என்று கருதலாம். கோயிலுக்குரிய இடங்களில் தென்னை மரங்கள் மிகுதியாகப் பயிரிடப் பட்டமை சாசனங்களின் மூலம் அறிகிறோம்.(136/1925) உத்தம சோழனுடைய கல்வெட்டாக இது இருக்க வேண்டும். எனவே காலம் கி.பி.972 எனலாம்.

**பூழியன்பல்லவரையன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறையின் தென்புறச் சுவரில் உள்ள முதல் குலோத்துங்க னுடைய 33ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு சிதைந்துள்ளது. பூழியன் பல்லவரையன் என்ற அதிகாரியின் பெயரினைக் காண்கிறோம். ஒரு பெண் கோயிலுக்கு நில விற்பனை செய்த விவரம் இதில் உள்ளது.(137/1925) இக்கல்வெட்டின்காலம் கி.பி.1111 எனலாம்.

**கல்கட்டுவித்தல் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டத்தின் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு கோயிலின் சிகரம் கட்டுவித்தவிவரத்தைக் குறிப்பிடுகிறது. கல்வெட்டு வாசகம் வருமாறு.

ஸ்வஸ்திஸ்ரீ கல்கட்டுவித்தார் பல்லவமகா தேவியார் சிவகாமு

பல்லவ மகாராயர் கனகசிவத்தார் என்று கல்வெட்டு ஆண்டறிக்கையில் உள்ளது (138/1925) இக்கல்வெட்டு முதலாம் பராந்தக சோழன் காலத்தில் வெட்டப்பட்டது எனலாம்.

**திருப்பதியம்பாடுபவர் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத்தின் கீழைச்சுவரில் பரகேசரி வர்மனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உள்ளது. முதலாம் பராந்தகன் காலத்தில் கோயில் திருப் பணியில் ஈடுபட்ட கற்றளிப் பிச்சனுடைய கொடையை இதில் காண்கிறோம். பராந்தக சோழனுடைய இறுதிக் காலத்தில் திருவாவடுதுறை மகாதேவர் கோயில் கட்டப் பட்டுள்ளது என்பதால் உத்தம சோழனுடைய கல்வெட்டாகக் கருதலாம் தொல்லியல் அளவீட்டுத் துறையும் இதே கருத்தினைக் குறிப்பிடுகிறது.

கற்றளிப்பிச்சன் சிற்றணைச்சூரில் நிலம் விலைக்கு வாங்கி, திருப்பதியம்பாடுவார் ஒருவருக்கு ஆறுமா நிலமும் திருமஞ்சனம் அட்டுவார்க்குக் கால்செய் அல்லது 5 மாநிலமும் திருஉவச் சர்களுக்குக் கால் செய்நிலமும் நிவந்தம் செய்து வழங்கி உள்ளான். கல்வெட்டின் வாசகம் வருமாறு:

1. ஸ்வஸதிஸ்ரீ கோப்பரகேஸரி
2. பந்மற்க்குயாண்டு 3 ஆவ
3. து திருவாவடுதுறைக்கற்
4. றளிப் பிச்சநேன் சிற்றா

5. னைச்சூர் னான் விலைக்
6. க்குக்கொண்ட மேற்புல
7. (த்து) வடக்கடையத் திருப்
8. பதியம்பாடுவா ரொருவர்
9. கு அறுமாவும் இதன் தெ
10. ற்கடையக் காற் செய்திரு
11. மஞ்சன மட்டுவார்க்கு கால்செயு
12. ம் இதன் தெற்கடையத்திரு
13. உவச்சர்களுக்கு தாரணி படகத்துக்கு
14. காலும் ஆக னிவந்தஞ்செய்
15. துகுடுத்தேன் கற்றளிப்பி
16. ச்சநேஞ் இது பந்மாஹே
17. ச்வர ரகைஷ

திருவாவடுதுறை உடையார் கோயிலைக் கட்டிய கற்றளிப்பிச்சன் பதிகம் பாடுவார்க்கு நிவந்தமும் திருமஞ்சன மட்டுவார்க்கும் உவச்சர்களுக்கும் நிலம் வாங்கி நிவந்தம் ஏற்படுத்தியதை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு பரகேசரி மூன்றாம் ஆட்சியாண்டு என்பதால் முதலாம் பராந்தகனாகக் கருத முடியவில்லை. மன்னன் உத்தம சோழனாகக் கருதலாம். சோழர் கோயில்களை ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிய எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியன், சுந்தரரேச வாண்டையார் போன்றோர் முதலாம் பராந்தகனாகவே கருதுவர். தொல்லியல் அளவீட்டுத் துறையும் அத்துறையில் பணியாற்றும் முனைவர் சுவாமிநாதனும் இக்கல்வெட்டு முதலாம் பராந்தகனுக்குப் பிற்பட்டது என்பர். (139/1925).

**சங்கராந்தி விழாக்கள் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத்தின் கிழக்குச் சுவரில் உள்ள முதலாம் பராந்தகனின் 39 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு சங்கராந்தி விழாவைச் சுட்டுகிறது. வடகரை தேவதானம் கார்நாட்டுத் தனிக் கடம்பூர் உடையான் கண்ணிப் புலியூர் நக்கன் என்பவன் எட்டுக்கழஞ்சு பொன் வழங்கியதைப் பெற்று 3 மாநிலம் விலைக்கு வாங்கி திருவாவடுதுறை ஆழ்வார்க்கு வழங்கினான் கற்றளிப்பிச்சன் நிலத்தின் வருவாயிலிருந்து சங்கராந்திதோறும் மூன்று மரக்கால் நெல்லில் அரிசியாய் திருவமுது செய்விக்கவும், இரண்டு அயன சங்கராந்திக்கும் 108 கலசம் வைத்து பூசை செய்விக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. கற்றளிப்பிச்சனுடன் தேவகன்மகள் இக்கட்டளையை நிறைவேற்ற உடன்பட்டுள்ளனர்.(140/1925) இக்கல்வெட்டின் காலம் கி.பி.946 ஆகும். முதலாம் பராந்தகன் காலத்தில் திருவாவுடை உடையார் கோயிலில் தை மகர சங்கராந்தியான பெரும் பொங்கல் ஒன்றும் ஆடியில் தட்சிணாயணத்தில் ஒரு பொங்கலும் கொண்டாடப்பட்டுள்ளன. வேறு பல கோயில்களிலும் சங்கிராந்தி விழாக்கள் கோயில்களில் சிறப்பாகக் கொண்டாடப் பட்டமையைச் சாசனங்களில் காண்கிறோம்.

**அம்பலவாண நமசிவாயன் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத்தின் கிழக்குப்புறச் சுவரில் வாசலுக்கு வடபால், மார்பில் கைகளைக் குவித்துக் கொண்டு இறைவனை வழிபடும் நிலையில் ஓர் உருவமும் கல்வெட்டும் உள்ளன. கல்வெட்டின் வாசகம் வருமாறு.

ஸ்வஸ்திஸ்ரீ திரைநறையூர் நாட்டுச் சிற்றாடியான் தாமன் அம்பலவனான நமசிவாயன் (141/1925) இக்கல்வெட்டு முதலாம் பராந்தகன் காலத்தது என்று குறிப்பிடலாம்.

**திருக்கற்றளிப் பிச்சனின் கொடை :**

கோமுக்தீஸ்வரர் கோயில் கருவறைக் கிழக்குப் புறச் சுவரில் உள்ள முதலாம் பராந்தகன் கல்வெட்டு திருக்கற்றளி பிச்சன் பொன்தந்து நிலம் விலைக்கு வாங்கி இறையிலியாக வழங்கியதைக் குறிப்பிடுகிறது. சிற்றாணைச் சூர் சபை இதனைத் திருவாவடுதுறை கோயிலில் கல்வெட்டாகவும் வெட்டியுள்ளது. நிலத்தின் எல்லைகளைக் குறிப்பிடும் போது வாணியன் பெருவழி, உட்சிறு வாய்க்கால், இலுப்பைச் செய், முத்தசங்கர மாறன் நிலம், கடம்பன் வாய்க்கால் ஆகியவை சுட்டப் படுகிறது. மொத்தம் 9 மா நிலம் கோயிலுக்கு வழங்கப்பட்டது. (142/1925) இக்கல்வெட்டில் மதுரை கொண்ட பரகேசரி கூறப்படுவதால் காலம் கி.பி. 945 ஆகும். கல்வெட்டின் முழு வாசகம்

வருமாறு :

1. ஸ்வதிஸ்ரீ மதிரை காண்டகோப்பரகெசரிபன் மற்க்கு யாண்டு முப்பத் தெட்டாவ
2. து தென்கரைத் திருவழுந்தூர் நாட்டு வைரஹ ஷயம் சிற்றாணைச்சூர் ஸஉலியொம் ஸ்ரீதி
3. ருவாவடுதுறை திருக்கற்றளிப் பிச்சரிடைப்பொன் கொண்டு ஸ்ரீதிருவாவடுதுறை ஈஸ்வ
4. ர்க்கு இறைகாத்துக் குடுத்தும் ..... வ லைவாணியன் பெருவழிக்கு மெற்க்கும் தென்பா
5. ற்கெல்லை (வ)ழி வரம்புக்குவடக்கும் மேல் பாற்கெல்லை உட்சிறு வாய்க்காலுக்குக் கிழக்
6. கும் வடபாற்கெல்லை இலுப்பைச் செய்க்கு தெற்கும் (இன்னான்) கெல்லையிலும் அகப்பட்
7. டநிலம் காலும் (மு)த்த சங்கர மாறனிடை வியகொண்ட நிலத்துக்கெல்லை கீழ்பாற்
8. கெல்லை தாயன்காடன் உவர்க்கு விலை கொண்ட நிலத்துக்கு (தெ)ற்கும் (தென்பாற்) கெ
9. ல்லை உட்சிறு வாய்க்காலுக்குக் கிழக்கும் வடபாற் கெல்லை கடம்பன் வாய்க்கானுக்குத் தெ
10. ற்கும் இன்னான் கெல்லையிலும் அகப்பட்ட நிலம் மும்மாவரையும் மேற்புலத்து ஒரு
11. மாவும் ஆக ஒன்பது மாவரையும் வாகிலில் பொன்த குடிமை .......... சென்னீர்த்து
12. ட்டியும் சந்த்ராதித்தவல் இறைகாத்துக் குடும்போமாக கல்லில் வெட்டிக்குடுத்தொம் சிற்றா
13. ணைச்சூர் ஸபையோம் இன்னிலத்தில் எண்மா வரையும் பாத்தியில் அரைமாவும் இரண்
14. ........ தி அரைக்காற்செய் .... ஊம் திருத் ............ திருஉவச் சகனுக்கு சாதராத்திவற்
15. நிவந்தஞ் செய்து குடுத்தென் கற்றளிப் பி ச்சனென் இது பந்மாஹேச்வர ரகைஷ.

**பராந்தகன்தானம் :**

கோமுக்தீஸ்வரர் கோயில் அர்த்த மண்டபத்தின் கிழக்குப் புறச் சுவரில் வாசலுக்கு வடக்கில் முதலாம் பராந்தக னுடைய கல்வெட்டு உள்ளது. (கி.பி.945) தனிநபர் ஒருவர் கட்டிக் கொண்டிருக்கும் கோயிலுக்கு மாமன்னன் நேரிடையாக வருகை புரிந்து இறைவனை வழிபட்டு, கோயிலைக் கற்றளியாகக் கட்டிக் கொண்டிருக்கும் கற்றளிப் பிச்சனிடம் 500 கழஞ்சு பொன்னை வழங்கி குடப்படையே பிடித்து மேல் செய்கின்றது என்கிறார். குடப்படை என்பதைத் தொல்லியல் அளவீட்டுத்துறை மிகவும் பொருத்தமாகக் குமுதப்படை என்கிறது. விருத்தகுமுதப் படையை இச்சொல் குறிக்கும் எனலாம். கல்வெட்டறிஞரும் தமிழாசிரியருமான சுந்தரேச வாண்டையார் கோயில் கலைச் செல்வர். எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியன் போன்றோர் விமானத்தில் உள்ள கலசத்தை இச்சொல் குறிக்கும் என்கின்றனர். கலசம் அல்லது தூபியைக் குடப்படை என்று கூறுவது பொருத்தமானது. கல்வெட்டின் இறுதி இருவரியில் பராந்தகதேவர் பொன்னால் செய்கின்ற பணி என்ற தொடரைக் கொண்டு இம்முடிவுக்கு வந்தனர் போலும் சிதம்பரம் நடராசப் பெருமான் கோயில் கூரையைப் பராந்தகன் பொன்னால் வேய்ந்த வரலாறு உண்டு. ஆயின் திருவாவடுதுறையில் கூரையைப் பொன்னால் கட்டியதாக வரலாறு இல்லை. பொன்போல் போற்று என்பது போல் இது உபசார வார்த்தையே. அரிய உதவியாக 500 கழஞ்சு பொன்னை மன்னன் வழங்கியது பொன்னால் செய்கின்ற பணி என்று பொருள் கொள்ளவேண்டும். பொறுத்தரைப் பொன்போல் பொதிந்து என்று வள்ளுவரும் கூறுவார் இனி, கல்வெட்டின் வாசகன் காண்போம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேச
2. ரி வற்மக்கு யாண்டு 38 ஆவது கன்னி நா
3. யற்று திரைமூர்நாட்டு ப்ரம்ஹதேயம் சாத்தனூ
4. ர் ஸ்ரீ திருவாவடுதுறை ஆள்வாரை பெருமாள்
5. திருவடித் தொழுது திருக்கற்றளி செய்கின்றதுக
6. ண்டருளி திருக்கற்றளிசெய்ய உதக பூரவஞ்செய்த
7. ......... ஐந்நூற்றுக் கழைஞ்சு இப்பொன்
8. கொண்டு குடப்படையே பிடித்து மேல் செய்
9. கின்றது ஸ்ரீ பராந்தக தேவர் பொன்னால் செய்
10. கின்ற பணி

இக்கோயிலில் ஒருபடை செய்வித்தவர், மண்டபம் கட்டியவர் பெயர்கள் எல்லாம் திருவுருவங்களுடன் கோயிலில் இருக்கும்போது கோயில் கட்ட ஆணை வழங்கியதுடன் 500 கழஞ்சு பொன்னை வழங்கிய முதல் பராந்தகனுடைய திருவுருவம் இக்கோயிலில் இல்லாமலா இருக்கும்.

### திருநிலவிடங்கன் மடம் :

கோமுக்தீஸ்வரர் கோயில் மண்டபத்தின் வடபுறச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்க சோழனுடைய 31ஆவது ஆட்சியாண்டில் வெட்டப் பட்டது புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க் கீர்த்தியுடன் உள்ளது. கஞ்சனூரைச் சேர்ந்த சேனாபதி ஆதித்தன் திருச்சிற்றம்பல உடையானாகிய காடவராயனிடமிருந்து 10 கழஞ்சு பொன்னினைப் பெற்றுக் கொண்டு உய்யக் கொண்டார் வளநாட்டு திருநல்லம் பெரிய நாட்டார் திருநீலவிடங்கன் மடத்தில் உள்ளவர் களுக்கும் கோயிலுக்கு வரும் அபூர்விகளுக்கும் திருவமுது வழங்க ஏற்பாடு செய்துள்ளனர். திருநல்லம் என்பது கோனேரி ராஜபுரமாகும். பெரிய நாட்டார் சபை இவ்வூரில் செயல் பட்டுள்ளது. திருநீலவிடங்கன் என்பது நஞ்சுண்ட சிவனையோ திருநீலகண்ட நாயனாரையோ சுட்டக் கூடும். இனி இப்பெயரில் குலோத்துங்கன் காலத்தில் இருந்த சைவ அடியாராகவும் கருதலாம்.(144/1925) இக்கல்வெட்டின் காலம் 01.05.1101 புதன்கிழமையாகும்.

கஞ்சனூரைச் சேர்ந்த சேனாபதி ஆதித்தன் திருச்சிற்றம்பலம் உடையான் ஆகிய காடவராயனே 43, 44/1903 இல் இடம்பெறும் காடவராயர் எனலாம்.

### அறச்சாலை :

கோமுக்தீஸ்வரர் கோயில் மகா மண்டபத்தின் வடபுறச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்க சோழனுடைய 31ஆவது ஆட்சியாண்டில் வெட்டப் பட்ட கல்வெட்டு முழுமையாக வெட்டப்பட வில்லை. புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க் கீர்த்தியுடன் சாசனம் தொடங்குகிறது. திருவாவடுதுறை உடையார் கோயிலில் இருந்த அறச்சாலையில் உணவு வழங்கும் நிவந்தத்திற்காகப் பலரிடமிருந்து 1000 குழி நிலம் பெறப்பட்டு வரியிலியாகக் கோயில் நிருவாகிகள் உபயோகிக்க வகை செய்யப்பட்டது.(145/1925). இக்கல் வெட்டின் காலம் 31.08.1101 சனிக்கிழமையாகும். இந்த அறச்சாலை கோயிலின் கீழைக்கோபுர வாயிலருகே இருந்துள்ளது.

### இரசேந்திரசோழ மனமொத்த கண்டர் :

கோமுக்தீஸ்வரர் கோயில் மகாமண்டப த்தின் வடபுறச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்க சோழதேவனின் சாசனம் புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகிறது. அரசனுடைய அகப் பரிவாரத்தைச் சேர்ந்த ராசேந்திர சோழன் மனமொத்த கொண்டாராகிய நங்கைத் திருப் பிரவாகரதேவன் என்பரிடமிருந்து இரண்டு நந்தா விளக்குகள் வைக்க காசினைப் பெற்றுக் கொண்ட சிவப்பிராமணர் அதற்கான ஏற்பாட்டினைச் செய்துள்ளனர். தானம் வழங்கிய பெண்மணி கைக்கோளப் பிரிவினைச் சேர்ந்தவர் என்பது தெரிகிறது. திருப்பிரவாகரதேவன் படைப் பிரிவில் இருந்தவர். இவருடைய மகளாக நங்கை இருந்திருக்கலாம். (146/1925).

### அபய சர்ய சதுர்வேதி மங்கலம் :

கோமுக்தீஸ்வரர் கோயில் மகாமண்டப வடபுறச் சுவரில் உள்ள குலோத்துங்க சோழருடைய 14ஆவது ஆட்சியாண்டுக்கல்வெட்டு திருவீதி மடத்தில் அடியார்களுக்கு உணவிடும் நிவந்தத்தைக் குறிப்பிடுகிறது. புகழ் சூழ்ந்தபுணரி என்ற குலோத்துங்க சோழனுடைய மெய்க்கீர்த்தியுடன் சாசனம் தொடங்குகிறது. உய்யக் கொண்டார் வளநாட்டு திரைமூர் நாட்டு அபயசர்ய சதுர்வேதி மங்கலச்சபை தனி நபரிடமிருந்து கொடையாகப் பெற்ற நிலத்திற்கு வரிவிலக்கு வழங்கி, மடத்திற்கு நெல்லினை வழங்க உடன்பாடு கண்டுள்ளது. (147/1925) அபயசர்ய சதுர்வேதி மங்கலம் என்பது சாத்தனூராகும்.

### சிவலோக நாயகன் மடம் :

கோமுக்தீஸ்வரர் கோயில் வளாகத்தில் உள்ள சண்டிகேஸ்வரர் சன்னதியின் கிழக்கு மற்றும் வடக்குச் சுவரில் உள்ள முதல் குலோத்துங்க சோழனுடைய 47ஆவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்ட கல்வெட்டு கோயில் திருவிழா நாள்களில் சிவலோக நாயகன் மடத்தில் இறைவனை வழிபடவந்த அடியார்களுக்கு உணவிட வழங்கிய நிபந்தத்தைக் குறிப்பிடுகிறது. இளங்காரி குடியைச் சேர்ந்த சங்கரன் சிவலோக நாயகனாகிய

கங்கை கொண்ட சோழ அனந்த பாலர், கரிகால் சோழ சதுர்வேதி மங்கலச் சபையாரிடம் முதலீடாகக் காசினை வழங்கியுள்ளான். ராக நாராயண வளநாட்டு திருவழுந்தூர் நாட்டு மேற்கீழ் மங்கலமான கரிகால் சோழச் சதுர்வேதி மங்கல சபை வரியிலியாக நிலத்தினை மடத்திற்குப் பதிவு செய்துள்ளது. மேற்கிளி மங்கலம் இன்று மேக்கிரி மங்கலம் என்று அழைக்கப் படுகிறது. (148/1925) திருச்செங்கனித்துறை ஆழ்வார் கோயிலில் சபை கூடி முடிவெடுத்துள்ளது. இக்கல்வெட்டு 16.07.1116 அன்று வெட்டப்பட்டுள்ளது. அன்று சனிக் கிழமையாகும். சிவலோக நாயகன் மடம் முதல் குலோத்துங்கன் காலத்தில் செயல்பட்டுள்ளது.

**இருமடி வென்கொண்டசதுர்வேதி மங்கலம் :**

சண்டிகேசுவரர் சன்னதியின் வடக்கு மற்றும் மேற்குவாயிலில் உள்ள விக்ரம சோழதேவருடைய 3ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்கு கிறது. சிவலோக நாயகன் மடத்தில் புரட்டாசி மாத விழாவுக்குக் கோயிலுக்கு வரும் அடியார்களுக்கு நாள்தோறும் உணவிட நிபந்தம் ஏற்படுத்தப் பட்டது. ஆகமல்லனை இருமடிவென் கொண்ட சோழசதுர்வேதி மங்கலம் அனந்த பாலரிடமிருந்து பணம் பெற்றுக் கொண்டு நிலத்தை மடத்திற்கு இறையிலியாக விற்பனை செய்து தந்துள்ளது. ஆக மல்லனை இருமடி வென்கொண்ட சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் விருதராஜ பயங்கர வளநாட்டில் ஓர் ஊராக இருந்துள்ளது.(149/1925).

**நாற்பத்தெண்ணாயிரவன் மடம் :**

கோமுக்தீசுவரர் கோயில் அந்தராளம் (வராண்டா) தென்புறச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்கனுடைய 41ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு நாற்பத் தெண்ணாயிரவன் மடத்தினைப்பராமரிக்க அபயாசரிய சதுர்வேதி மங்கலச் சபை 6 மா நிலத்தைக் கோயிலிடமிருந்து விலைக்குப் பெற்று வரிநீக்கி மடத்திற்கு வழங்கி உள்ளது. முன்னதாக 37 காசினை ஒரு பெண்ணிடமிருந்து சபை பெற்று கோயிலுக்கு நிலவிலை விற்பனைச் செய்துள்ளது. (150/1925). இக்கல்வெட்டின் காலம் 01.05.1112 ஆகும். அன்று புதன்கிழமை.

**அரையன் ஆதி விடங்கன் :**

கோமுக்தீசுவரர் கோயில் அந்தராளத் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு புயல்வாய்த்து என்ற மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. உய்யக் கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் அருவந்தையைச் சேர்ந்த அரையன் ஆதிவிடங்கன் ராஜராஜதேவனாராகிய வில்லவரையர் புரவுவரி பிரிகரண நாயகம் என்ற அதிகாரியின் துணையுடன் கோயிலுக்குரிய நிலங்களின் விளைச்சல், கோயிலுக்குச் செலுத்த வேண்டிய தானிய அளவு, கோயிலில் மேற்கொள்ளப்படும் பல்வேறு திட்டங்கள் ஆகியவற்றை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. (151/1925).

**நானாவித நடசாலை :**

கோமுக்தீசுவரர் கோயில் அந்தராளத்தின் மேற்குச் சுவரில் குலோத்துங்க சோழருடைய 46ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டுள்ளது. புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க்கீர்த்தியுடன் இச் சாசனம் தொடங்குகிறது. நானாவித நடசாலை என்ற நாடக அரங்கு பராமரிப்பதற்காக 70 காசு கொடை வழங்கப் பட்டது. நிலம் விலைக்கு வாங்கிய ராஜாதி ராஜனாகிய ராஜேந்திர சோழ அனந்தபாலர் அறக்கட்டளை நடவடிக்கை மேற்கொண்டுள்ளார். கோட்டூராகிய ஒயதர சதுர்வேதி மங்கல சபை, எடுத்த பாதவிண்ணகர் ஆழ்வார் கோயிலில் கூடி, திருவாவடுதுறையில் கோயிலுக்கு நிலம் விலைக்கு வாங்கியதைக் கூறுகிறது.(152/1925). இக்கல்வெட்டு 22.06.1116 அன்று வெட்டப்பட்டது. அன்று வியாழக்கிழமையாகும். திருவாவடுதுறை உடையார் கோயில் வாளத்தில் உள்ள பெரிய மண்டபமே நானாவித நடசாலையாக இருந்திருக்கலாம்.

**இளங்காரி குடையான் :**

திருவாவடுதுறை உடையார் எனப்படும் கோமுக்தீசுவரர் கோயிலுக்குத் தென்புறம் தியாகராஜ சுவாமி ஐம்பொன் சிலை உள்ள

சோமோஸ்கந்தர் சன்னதியின் மகாமண்டபத் தூண்கள் சிலவற்றில் மண்டபம் கட்டியவரின் பெயர்கள் இரண்டு காணப்படுகின்றன.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இத்திரும
3. ண்டபம்
4. இளங்கா
5. ரிகுடையா
6. ன் சங்கர தே
7. தவன்.

கோமுக்தீசுவரர் கோயில் வாளகத்தில் உள்ள சண்டிகேஸ்வரர் கோயில் கருவறையின் கிழக்கு மற்றும் வடக்கில் உள்ள முதல் குலோத்துங்க னுடைய 47ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு, இளங்காரிகுடி சங்கரன் சிவலோக நாயகனாகிய கங்கை கொண்ட சோழ அனந்த பாலரைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் வரும் பெயரின் முற்பகுதி இக்கல்வெட்டிலும் வருவதால் இருவரும் ஒருவராகவோ அல்லது தந்தை மகனாகவோ இருக்கலாம். எனவே இம்மண்டபம் முதல் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டது எனலாம்.

இதே மண்டபத்தூணின் போதிகைக் கட்டையில் கீழ்க்கண்ட சாசனம் உள்ளது.
இக்கல்திருவெண்காடு உடையான் அனங்கன் திருப்பணி ஒரு தூணினை மட்டும் இவன் எழுப்ப உதவினான் போலும்.

**விக்கிரமபாண்டியன் சந்தி :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் திருவாயிலுக்கு தென்பால் உள்ள மதிலின் கீழ்ப்புறச் சுவரில் விக்ரம பாண்டியனின் கல்வெட்டு உள்ளது. விக்கிரமபாண்டியன் தான் பிறந்த அஸ்த நட்சத்திரத்தில் தன் பேரால் ஏற்படுத்திய விக்கிரம பாண்டியன் சந்திக்கு அமுதுபடி, சாத்துப்படி உள்ளிட்ட நிவந்தங்களுக்கு உடலாக விருதராச பயங்கர வளநாட்டுக் கஞ்சனூர்ப் பற்றுத் தென்கால் திரைலோக்கியான விருதராசபயங்கரச் சதுர்வேதி மங்கலத்துக் குலோத்துங்க சோழன் பெருவழிக்கு உட்பட்ட திறப்பில் இருபது வேலியும் துறைசையார் அகரமான இராசேந்திர சோழச் சதுரப் பேதிமங்கலத்துப் பிடாகை கூத்தனூர் கொடியாலத்து விட்ட நிலம் பதிற்று வேலியும் வேணவரை நல்லூரில் நான்கு வேலியும் ..... ராட்சதச் சதுர்ப்பேதி மங்கலத்துப் பிடாகையூரிலும் அனபாய சதுர்ப்பேதி மங்கலத்துப் பிடாகை கண்டியூரிலும் நிலம் இருபத்தாறு வேலியும் ஆக நிலம் அறுபதிற்று வேலியும் கொடுத்திருந்தான். இதைக் கொண்டு கோயில் வழிபாட்டுடன் ஒவ்வொரு மாத ரோகினி நட்சத்திரத்தன்று சுவாமியை பவனி வரச் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டது.(154/1925) நிவந்தம் செய்யப்பட்ட நிலத்தின் நான்கெல்லை நிர்ணயிக்கப் பட்டு, திரிசூலமும் நிறுவப்பட்டது. சுங்க வரி, செக்கு வரி, தட்டார் வரி ஆகியவை நீக்கி வரியிலியாக வழங்கப்பட்டது. துறைசை என்ற பெயர் இக்கல்வெட்டில் வருகிறது.

**அடியார்க்குத் திருவமுது :**

கோமுக்தீஸ்வரர் கோயில் இரண்டாம் பிரகாரத்தின் கிழக்குப் புறச் சுவரில் உள்ள முதலாம் குலோத்துங்கனுடைய 40ஆவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க்கீர்த்தியுடன் ஆரம்பமாகிறது. ஆளுடையான் இனியன் வரதராஜன் திருவாவடுதுறை ஆளுடையார் கோயிலில் பிரமான வாசகன் மடப்புற நிபந்தமாக காசினை வழங்கி, அமாவாசை மற்றும் சாதாரண நாள்களில் கோயிலுக்கு வரும் அடியார்களுக்கு உணவு வழங்க வகை செய்தான். கோயிலிடமிருந்து 24 காசினைப் பெற்றுக் கொண்டு கோயிலுக்குரிய நிலத்திற்குத் திருநல்லம் சபை வரிவிலக்கு அளிக்க முடிவு செய்து தீர்மானித்துள்ளது. (155/1925). இக்கல்வெட்டு 22.11.1109 திங்கட்கிழமை யன்று வெட்டப்பட்டது.

**திருவாவடுதுறை உடையான் :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் இராஜராஜ தேவனுடைய 22ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டுள்ளது. திருவாவடுதுறை உடையார் கோயிலுக்குக் கூற்றங் குடையான் திருவேகம்பன் உடையான் ஆகிய திருவாவடுதுறை உடையான் 6

மா நிலம் விலைக்கு வாங்கி வழங்கியுள்ளான். இதற்காக இவன் 3000 காசினைக் கொடுத்துள்ளான். சாத்தனூரில் நிலம் இருந்துள்ளது;. மாடபத்தியமாகக் கூற்றங் குடியான் இருந்துள்ளான் என்பதால் மடம் அவன் பொறுப்பில் இருந்தது தெரிகிறது.(156/1925). இக்கல்வெட்டு 12.08.1237 புதன்கிழமையன்று வெட்டப்பட்டுள்ளது.

**சபை கூடி முடிவெடுத்தது ;**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் விக்கிரம சோழனுடைய இரண்டாவது ஆட்சியாண்டு சாசனம் உள்ளது. பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. அய்யாசரீயச்சதுர்வேதி மங்கலத்துச் சபை மணியம்பலம் உடையார் கோயிலில் கூடி, கோயிலுக்குரிய நிலத்திற்கு வரிவிலக்குத் தருவதைத் தீர்மானித்துள்ளது.(157/1925).

**முன்னூற்று இருபத்து நால்வன் மடம் :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் விக்கிரம சோழனுடைய இரண்டாவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட மற்றோர் கல்வெட்டும் பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தியுடன் உள்ளது. உய்யக் கொண்டார் வளநாட்டு பேராவூர் நாட்டு சேனாபதி சங்கரன் இளங்காரி குடையான் என்பவன் முன்னூற்று இருபத்து நால்வன் என்ற அறச்சாலையில் பிராமணர்கள் தபசிகள் ஆதரவற்றோர்க்கு உணவிட முடிவு செய்து நிலத்தினை வழங்கியுள்ளான். விருதராஜ பயங்கர வளநாட்டு மண்ணி நாட்டு பிரமதேயமான பாண்டியனை வென்கொண்ட சோழசதுர்வேதி மங்கலத்துச் சபை வீர ராஜேந்திர விண்ணகர் ஆழ்வார் கோயிலில் கூடி வரிவிலக்கு வழங்க முடிவு செய்துள்ளது. பயிரிடும் வெள்ளாளர் சிலர் இறை கட்டி முடியாது ஊரை விட்டு நீங்க மேற்படி நிலங்களுக்கான வரியினை வசூலிக்க சபை விலைக்கு விற்க முயன்றபோது சேனாபதி விலைக்கு வாங்கியுள்ளான். சேனாபதி சங்கரன் இளங்காரி குடையான அம்பலன்கோயில் கொண்டானாகிய அனந்தபாலன் என்பது இவன் முழு பெயராகும். அறச்சாலைக் கட்டளையாக அன்றாடு நற்காசு 257 கொடுத்து அஞ்சுவேலி இரண்டு மா நிலம் வாங்கி சேனாபதி வழங்கியுள்ளான்.(158/1925).

**சேனாதிபதி வழங்கிய கொடை :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் உள்ள விக்கிரமசோழ தேவனுடைய மூன்றாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு உள்ளது. விருத ராஜபயங்கர வளநாட்டு மண்ணி நாட்டு பிரமதேயமான விருதராஜ பயங்கர சதுர்வேதி மங்கலச் சபை திருப்பாற்கடல் ஆழ்வார்கோயிலில் கூடி சேனாபதி என்பவர் ஏற்படுத்திய மடத்தில், பிராமணர், தபசிகள், அன்னாமதேயர்கள் ஆகியோர் உணவிற்கும், மருத்துவக் கல்வி மற்றும் ரூபாவாதாரம் படிக்கவும் வழங்கிய நிலத்திற்கு வரிவிலக்கு வழங்கியுள்ளனர். முன்கல்வெட்டில் இடம்பெற்ற சேனாபதி சங்கரன் இளங்காரி குடையான் அம்பலக் கோயில் கொண்டனாகிய அனந்தபாலனே இந்தக் கட்டளைக்கும் நிலம் வழங்கியவன் ஆவான். (159/1925).

**ஆளுங்கணத்தார் :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரத்தின் தென்புறச் சுவரில் உள்ள கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லை. எனினும் தான விவரத்தைக் கொண்டும் ஆட்சியாண்டு கொண்டும் விக்கிரம சோழன் சாசனமாகக் கருதலாம், விருதராஜ பயங்கர சதுர்வேதி மங்கலத்தன் ஆளுங்கணத்தின் உறுப்பினர் முன் கூறப்பட்ட சேனாபதி வழங்கிய நிலவிலை ஆவணத்தை உறுதி செய்துள்ளார். (160/1925). ஆளுங்கணத்தானே சாசனம் வெட்டவும் ஏற்பாடு செய்துள்ளான். இக்கல்வெட்டு 18.12.1120 சனிக்கிழமை யன்று வெட்டப்பட்டுள்ளது.

**விக்கிரம சோழன் சாசனம் :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய மூன்றாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு மேலே குறிப்பிட்ட

தானத்தின் தொடர்ச்சியாகவே கருதலாம். கோயில் ஆளுங் கணத்தைச் சேர்ந்த ஒருவர் சேனாபதி வழங்கிய தானத்தைக் கோயிலில் பொறிக்க ஏற்பாடு செய்துள்ளார். இக்கல்வெட்டின் காலம் மன்னனுடைய 16ஆவது ஆட்சியாண்டு மார்கழி 6 திங்கட்கிழமை உத்திரம் என்று கல்வெட்டில் இருப்பதால் காலம் 18.12.1120 ஆகும்.

**சேனாதிபதியின் மற்றோர் தானம் :**

கோமுக்தீசுவரர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென்புறச் சுவரில் உள்ள மற்றோர் கல்வெட்டும் விக்கிரம சோழனுடையதாகும். மன்னனுடைய மூன்றாவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டு முன்வெட்டிய கல்வெட்டின் தொடர்ச்சி எனலாம். சேனாதிபதி கோயிலுக்கு வழங்கிய நிலத்தினை ஆளுங்கண உறுப்பினள் கல்வெட்டாக வெட்டி வைத்துள்ளான். (162/1925). இக்கல்வெட்டின் காலம் 18.12.1120 திங்கட் கிழமையாகும்.

**திருக்கடவூர் நாயனார் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரத்தின் வடபுறச் சுவரில் கூடிய கல்வெட்டின் தொடக்கத்திலும் இறுதியிலும் சிதைந்து விட்டதால் மன்னன் பெயர் ஆட்சியாண்டு அறிய முடிய வில்லை. குறும்பூர் நாட்டு தில்லையாளி நல்லூர் தில்லையாளி ஈஸ்வரமுடையார்கோயிலில் உள்ள திருக்கடவூர் நாயனார் திருமேனி வழிபாட்டுக்கு மூன்று மா நிலம் அர்ச்சனாபோகமாக வழங்கப் பட்டது. திருக்கடவூர் பெரிய நாட்டார் சபை இக்கல்வெட்டில் இடம் பெறுகிறது. (59/1926) இக்கல்வெட்டில் இடம்பெறும் கோயில் திருவாவடுதுறை உடையார் கோயிலன்று. வேறோர் சிவன் கோயிலாகும். (60/1926) எண்ணுள்ள கல்வெட்டும் திருக்கடவூர் கால கால தேவரைக் குறிப்பிடுவதை ஈண்டுக் குறிப்பிடலாம்.

**காலகால தேவர் கோயில் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் வடபுறச் சுவரில் உள்ள விக்கிரம சோழ தேவருடைய ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு காசு கொள்ளா இறையிலியாகக் கோயிலுக்கு நிலம் வழங்கப் பட்டதைக் குறிப்பிடுகிறது. இராஜ நாராயண வளநாட்டு திருக்கடவூர் சபை 26 கழஞ்சு வழங்கி, கோயில் நிலத்தை விலைக்கு வாங்கி இறையிலியாக அளித்துள்ளது. திருக்கடவூர் (59/1926) கல்வெட்டிலும் இடம் பெற்றுள்ளது. திருக் கடவூரில் கால கால தேவர் கோயிலில் இருந்த திருச்சிற்றம்பல வேளைக்காரன் திருமண்டபத்தில் சபை கூடி தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.(60/1926) திருக்கடையூர் கால சம்ஹார மூர்த்தியே இக்கல்வெட்டில் சுட்டப் படுகிறது.

**வரி விலக்கு :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரத்து வடபுறச் சுவரில் உள்ள விக்கிரம சோழ தேவருடைய ஐந்தாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு (60/1926) கல்வெட்டின் தொடர்ச்சிபோல் உள்ளது. சில நிலங்கள் கோயிலுக்குரியவை. வரிவிலக்கு பெறப்பட்டன. முன்கல்வெட்டில் இடம் பெறும் கோயில் இதிலும் உள்ளது.(61/1926) மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு கோயில்களுக்கு வரி நீக்கித் தானமாகத் தரப்பட்டன. விலைக்கு வாங்கிய நபர் தெரியவில்லை.

**வாணகோவரையர் கொடை :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் மேற்குச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய கல்வெட்டு நான்காம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டது. பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தி தொடக்கத்தில் உள்ளது. வாணகோப்பாடியாகிய ராஜேந்திர சோழவளநாட்டு பெண்ணை வடகரை வாலையூராகிய சம்பையில் வாழ்ந்து வந்த சுத்தமல்லன் முடிகொண்டராகிய வாணகோவரையர் 9 மா நிலத்தினை விருதராஜ பயங்கர சதுர்வேதி மங்கல ஆளுங்கணத்தைச் சேர்ந்த செந்திறம் கருணாகரனிடமிருந்து விலைக்கு வாங்கியுள்ளான். சன்பை என்பது ஐம்பை என்று தற்போது வழங்கப்படுகிறது. திருக்கோயிலூர் அருகே உள்ளது. செந்திறம் என்ற ஊர் அதே பெயரில் பெரம்பலூர் மாவட்டத்தில் உள்ளது.(162/1926) மன்னனுடைய நான்காம் ஆட்சியாண்டு விருச்சிக இராசி சுக்ல, தசமி திங்கட்கிமை ரேவதி

நட்சத்திரம் என்பதால் 21.11.1121 எனத் தொல்லியல் அளவீட்டுத் துறை துல்லியமாகக் காலத்தைக் கணித்துள்ளது.

**வாசுதேவபட்டன் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் மேற்குப்புறச் சுவரில் விக்கரசோழனுடைய 4 ஆவது ஆட்சியாண்டு முன்கல்வெட்டின்(62/1926) தொடர்ச்சிபோல் உள்ளது. கோயில் ஆளுங்கணத் தானாகிய இளைய ஸ்ரீ வாசுதேவபட்டன் என்பவரிடமிருந்து வாணகோவரையன் விலைக்கு வாங்கிய நில விலை ஆவணமாக இக்கல்வெட்டும் உள்ளது.(63/1926). 21.11.1121 அன்று இச்சாசனம் வெட்டப் பட்டுள்ளது.

**கிராஞ்சிதாமோதரன் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் மேற்குச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் முன்கல்வெட்டின் தொடர்ச்சிபோல் (63/1926) உள்ளது. விருதராஜ பயங்கரச்சதுர்வேதி மங்கலத்து ஆளுங்கணத்தைச் சேர்ந்த கிராஞ்சிதாமோதரன் திருநம்பி சாசரன் என்பவரிடமிருந்து வாணகோவ ரையன் விலைக்கு பெற்ற ஆவணம் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டது.(64/1926) காலம் 21.11.1121 ஆகும்.

**ஸ்ரீராமசகஸ்ரன் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் மேற்குச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய நான்காவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு முன் கல்வெட்டை(64/1926) யொத்துள்ளது. விருதராஜ பயங்கர சதுர்வேதி மங்களத்து ஆளுங்கணத்தைச் சேர்ந்த ஓர் உறுப்பினன் ஸ்ரீராம சகஸ்ரன் என்பவரிடமிருந்து வாணகோவரையர் நிலம் வாங்கி கோயிலுக்கு வழங்கிய கொடையை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. சகஸ்ரன் நடாதூர் என்ற ஊரைச் சேர்ந்தவன் ஆவான். கல்வெட்டின் காலம் 21.11.1121 திங்கட்கிழமையாகும்.

**304 காசுகள் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் மேற்குச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய 4 ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு சிதைந்துள்ளது. பூமாலை மிடைந்து என்ற மெய்க் கீர்த்தியுடன் இக்கல்வெட்டு தொடங்குகிறது. 304 காசுகளைப் பெற்றுக் கொண்டு திருவாவடுதுறை உடையார் கோயிலுக்குச் சபை இறையிலியாக நிலத்தைப் பதிவு செய்துள்ளது. சபையின் பெயர் சிதைந்து விட்டது.(66/1926).

**பஞ்சநதிவாணன் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரத்தில் உள்ள சோழர் கல்வெட்டொன்று சிதைந்த நிலையில் உள்ளது. மன்னன் பெயர், ஆட்சியாண்டு சிதைந்து விட்டன. எனினும் பூமாலை மிடைந்து என்ற விக்கிரமசோழனன் மெய்க் கீர்த்தியின் ஒரு பகுதி உள்ளதால் இக்கல்வெட்டு அவனுடையது எனலாம். மாத்தூர் பஞ்ச நதிவாணனாகிய தேவன் என்ற குறுநிலத்தலைவன் தன் பெயரில் பஞ்ச நதிவாணன் மடம் ஒன்றை நிறுவி, தினமும் கோயிலுக்கு வரும் ஆண்டார்க்கு உணவிட நிலம் வழங்கி உள்ளான். முன்னதாகக் கோயிலிடமிருந்து பஞ்சநதிவாணன் விலைக்கு வாங்கி, கோயிலுக்கு அளித்து நாடக சாலையைப் பராமரிப்பதற்கு ஏற்பாடு செய்துள்ளான். கோயிலை யொட்டிய வீதியில் பஞ்ச நதி வாணன் மடம் இருந்துள்ளது. பஞ்ச நதி வாணர் என்ற சிற்றரசர் கல்வெட்டுகள் காஞ்சிபுரம் மாவட்டத்தில் மிகுதியாகும்.(67/1926).

**சிறுவிந்தூர் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் தென்புறச் சுவரில் உள்ள விக்கிரம சோழனுடைய கல்வெட்டு கோயிலுக்கு வழங்கிய நிலத்திற்கு வரிவிலக்கு வழங்கியதைக் குறிப்பிடுகிறது. கல்வெட்டின் சிலகற்கள் இல்லாததால் ஆட்சியாண்டு தெரியவில்லை. சிறுவந்தூரைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் நிலத்தை விலைக்கு வாங்கிக் கோயிலுக்கு வழங்க சபை காசு கொள்ளா இறையிலியாகப் பதிவு செய்துள்ளது.(68/1926). இக்கல்வெட்டு 18.07.1125 சனிக்கிழமையன்று வெட்டப்பட்டுள்ளது.

**குலோத்துங்க சோழநல்லூர் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் தென்புறச் சுவரில் உள்ள மூன்றாவது ஆட்சியாண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தியுடன் ஆரம்பிக்கிறது. 100 காசு மதிப்புள்ள இரண்டு வேலி நிலத்தைப் பவழக்குன்று பெரியாள் என்பவன் விலைக்கு வாங்கி, கோயிலுக்கு வழங்க சபை காசு கொள்ளா இறையிலியாகப் பதிவு செய்துள்ளது. முக்கோகிழானடிகளாகிய பட்டத்தரசி குலோத்துங்க சோழ நல்லூர் மங்களேஸ்வரமுடைய மகாதேவர் கோயிலுக்கு வந்திருந்தார். கங்கை கொண்ட சோழபுரத்துக் கைக்கோளரின் வீரபோக ஊராக இது வழங்கப்பட்டது. விருதராஜ பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு பிரமதேயம் உலகுய்ய கொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்தின் பிடாகையான சளுக்கிக் குலகால நல்லூரில் உள்ள திருவரையீஸ்வரமுடைய கோயிலில் சபை கூடி தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. இக்கல்வெட்டில் இரண்டு கோயில்கள் இரண்டு தானங்கள் இடம் பெற்றுள்ளன.(69/1926) இக்கல்வெட்டின் காலம் 26.03.1121 சனிக்கிழமையாகும்.

**விக்ரமசோழீஸ்வரமுடையார் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரம் தென்புறச் சுவரில் இராஜராஜனுடைய நான்காவது ஆட்சியாண்டுக்கல்வெட்டுள்ளது. கல்வெட்டின் ஒரு பகுதி கட்டப்பட்டுள்ளதால் முழுவாசகம் அறிய முடியவில்லை. திருவாவடுதுறை உடையார் மற்றும் திருக்காம கோட்டமுடைய பெரிய நாச்சியார் இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளனர். விக்ரம சோழீஸ்வரமுடையார்க்குரிய நிலமானது திருமாளிகை சுப்பிரமணிய பிள்ளையாருக்கு மாற்றப்பட்ட செய்தியும் இதில் உள்ளது. திருவாவடுதுறையில் விக்கிரம சோழ திருவீதியொட்டி இச்சுப்பிரமணியர் கோயில் இருந்துள்ளது.(70/1926) திருவாவடுதுறை உடையாராகிய கோமுக்தீசுவரர் கோயில் மட்டுமின்றி வேறு சில சிவன் கோயில்களும் விஷ்ணு கோயில்களும் இருந்தமையைக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதை ஏற்கனவே கண்டோம்.

**பெருந்திருவாட்டி :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரத்தின் தென்புறச் சுவரில் விக்கிரம சோழ தேவரின் 3ஆவது ஆண்டில் வெட்டப்பட்ட கல்வெட்டு பூமாலை மிடைந்து என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகிறது. சேனாபதி சங்கரன் அம்பலங் கோயில் கொண்டான் ஆகிய அனந்தபாலர் என்பவர் 716 1/4 காசு தந்து 13 வேலி நிலம் விலைக்கு வாங்கி பெருந்திருவாட்டி என்ற அறச்சாலையை நிறுவினான். இச்சாலையில் பிராமணர்கள், தபசிகள், ஆதரவற்றோருக்கு உணவிட ஏற்பாடு செய்யப்பட்டது. திருவாவடு துறை உடையார் கோயிலில் உள்ள சங்கர தேவன் திருமண்டபத்தில் சபை கூடி மேற்கண்ட தானத்திற்கு வரிவிலக்கு அளிக்க முடிவு செய்துள்ளது. பெருந்திருவாட்டி என்பது அம்மன் பெயரில் கூடியது. உய்யக் கொண்டார்வளநாட்டு திரைமூர் நாட்டு திருவாவடுதுறை உடையார் என இறைவன் கூறப் பட்டுள்ளான். பேராவூர் வளநாட்டு, பேராவூர் நாட்டு இளங்காரிகுடியைச் சேர்ந்தவனாகச் சேனாபதி இருந்துள்ளான். இவனுடைய தானங்களைக் குறிப்பிடும் கல்வெட்டுகளை முன்னரும் கண்டோம் (71/1926) 21.01.1121 அன்று இக்கல்வெட்டு வெட்டப் பட்டுள்ளது. அன்று வெள்ளிக்கிழமையாகும். கங்கை கொண்ட சோழபுரம் கொற்றவாசலில் பணியாற்றிய இப்படைத்தலைவன் வழங்கிய தானத்தை அடுத்து வரும் கல்வெட்டிலும் (72/1926) காணலாம்.

**வீரபோகம் :**

கோமுக்தீசுவரர் கோயில் மூன்றாம் பிரகாரத்தின் தென்புறச் சுவரில் உள்ள குலோத்துங்க சோழ தேவருடைய 27ஆவது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு உள்ளது. புகழ் சூழ்ந்த புணரி என்ற மெய்க்கீர்த்தி கல்வெட்டின் தொடக்கத்தில் உள்ளது. விருதராஜ பயங்கர வள நாட்டு மேற்கா நாட்டு ஓர் ஊரைச் சேர்ந்த அகம்படி கைக்கோளனாகிய சிறுதனத்திற்கு வீரபோக நிலமாக குலோத்துங்க சோழ நல்லூரில் நிலம் வழங்கப்

பட்டுள்ளது. கல்வெட்டு முழுமையின்றி உள்ளது. சில பகுதி கட்டிடத்திற்குள் உள்ளது. போர் வீரர்களுக்கு வழங்கும் நிலம் வீரபோகமாகும். அகம்படி கைக்கோளர், சிறுதனம் என்ற இரு சொற்கள் விரிவாக ஆய்வு செய்ய வேண்டும். முதல் குலோத்துங்கனுடைய இக்கல்வெட்டு 12.09.1099 திங்கட்கிழமையன்று வெட்டப்பட்டதாகும். போரில் வீரமரணம் அடைந்தவர் குடும்பத்திற்கு நேத்தார் பட்டியாக நிலம் வழங்குவதுபோல் போர் வீரர்களுக்கு வழங்கிய நிலத்தை வீரபோகம் என்றனர்.

**அகளங்கன்வேளைக்காரன் :**

அம்மன் ஒப்பிலாமுலை அம்மன் கோயிலுக்கும் மாசிலாமணியீசுவரர் கோயில் இரண்டையும் ஒரே நேரத்தில் வழிபடும்படி அமைந்துள்ள மகாமண்டபத்தில் உள்ள தூண்களில் ஒன்றில் இம்மண்டபம் எடுத்தவரின் பெயர் கல்வெட்டாக உள்ளது. கல்வெட்டின் வாசகம் வருமாறு.

1. ஸ்வஸ்திஸ்ரீ இத்திருமண்
2. டபம் அகளங்கன் வேளை
3. க் காறன்

சோழர் கல்வெட்டுகளில் அகளங்கன் என்ற பெயர் பல கல்வெட்டுகளில் உள்ளன. இங்கே வேளைக்காரன் என்பது போர்ப்படை பிரிவு ஒன்றுக்குத் தலைவன் என்ற பொருளைப் பயக்கும். சேவகன் என்பது போர் வீரரை முற்காலத்தில் சுட்டியதுபோல் இதுவும் சுட்டியது. எழுத்தமைதியை நோக்க இது 13 - 14 ஆம் நூற்றாண்டாகத் தோன்றுகிறது. இக்கல்வெட்டு சமீபத்தில் இக்கட்டுரையாசிரியர் கண்டறிந்த தாகும்.

திருப்பணியின் போது பூமியிலிருந்து கண்டெடுத்த சூலக்கல்லில் கல்வெட்டொன் றிருப்பதை ஆசிரியர் நாராயணசாமி மெய்கண்டார் இதழில் படத்துடன் வெளியிட்டுள்ளார். மாசிலாமணியார் திரு என்ற பெயர் அதில் உள்ளது.

1. மா சி திரு.
2. லா ம
3. ணி யா
4. ர்

திரு என்பது திருவாவடுதுறை ஊரைச் சுட்டும். மாசிலாமணியார் - சுவாமியின் பெயராகும்.

**பயன்பட்ட நூல்கள் :**

1. A.R.E. 1925/101 முதல் / 162 வரை
2. A.R.E. 1926/59 முதல் / 72 வரை
3. சுந்தரேச வாண்டையார் படித்தளித்த கல்வெட்டுகளின் அடிப்படையில் மெய்கண்டார் இதழ்கள் மலர் 8 - ஆகஸ்ட் 1990, மலர் 8 - செப்டம்பர் 1990.
4. தேவாரப் பதிகங்கள் மூன்றாம் திருமுறை, தருமபுர ஆதீன வெளியீடு, தலங்களின் வரலாற்றுக் குறிப்பு.
5. Early chola Temples. S.R. Balasubramanyam. (Pages 50-55)
6. Thiruvavaduthurai Adheenam S. Krishna moorthy, Unnamalai Pathippagam. 43/20, Sri Mayvie Flats, Kelekshetra Road, Tiruvanmiyur Chennai - 91.
7. திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயில் தலவரலாறு 1990 ஆதீன வெளியீடு.

# திருவாவடுதுறையில் உள்ள பிறகோயில்கள்

தியாக. கனகசபை, எம்.ஏ., எம்.எட்.,



(இக்கட்டுரை ஆசிரியர் திருவிடைமருதூர் ஆதீனத் தொடக்கப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். திருவிடைமருதூர் கவிராயர் பரம்பரையில் வந்த இவர் திருக்கோயில்களிலும், ஆன்மீக அமைப்புகளிலும், சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துபவர். கவிதைகளும், கட்டுரைகளும் படைப்பதில் வல்லவர். இசையறிவு மிக்கவர்)

திருவாவடுதுறை ஊரின் நடுவில் 'ஆவடுதுறை அரனாரின்' பெரிய கோயில் உள்ளது. 'ஆஅடுதுறை' என்ற கோயிலின் பெயரே பிற்காலத்தில் 'திருவாவடுதுறை' என்று ஊர்ப் பெயராக அமைந்தது. இத்திருக்கோயிலைச் சுற்றிலும் நான்குபுறமும் மடவிளாகமும், நான்கு திசைகளிலும் நான்கு பெரிய வீதிகளிளும் உண்டு. நான்கு மூலைகளிலும் ஆதீனத்திற்குச் சொந்தமான நான்கு விநாயகர் கோயில்கள் உள்ளன.

**அருள்மிகு ஈசான்ய விநாயகர் :**

வடக்கு வீதியும் கீழவீதியும் கூடுமிடத்தில் - ஈசானத் திசையில் (வடகிழக்கு) அருள்மிகு ஈசான விநாயகர் கோயில் உள்ளது. அருள்மிகு ஈசான விநாயகர் மேற்குநோக்கி அருள்பாலிக்கிறார். கருவறையும் சுற்று மதில்களுடன் கூடிய பிரகாரமும் அழகிய சிறிய விமானமும் அமைந்த இத்திருக் கோயிலில் சங்கடஹர சதுர்த்தியில் சிறப்பு வழிபாடும், ஆவணி மாத விநாயகர் சதுர்த்தியில் பத்து நாட்கள் திருவிழாவும் வடக்கு வீதி மற்றும் உள்ளூர் வெளியூர் அன்பர்களாலும் சிறப்பாக நடத்தப்பெறுகின்றன.

இத்திருக்கோயிலுக்கு சீர்வளர்சீர் இருபத்து மூன்றாவது குருமகா சன்னிதானம் அவர்களால் 2002 ஆம் ஆண்டு நவம்பர் பதினோராம் நாளில் (சித்ரபானு - ஐப்பசி - 24) மெய்கண்டார் ஆண்டு 780, திருவள்ளுவர் ஆண்டு 2033ல் விருச்சிக லக்னம், சஷ்டி திதி, உத்திராட நட்சத்திரம் கூடிய நன்னாளில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நிகழ்த்தியருளப் பெற்றுள்ளது.

**அருள்மிகு அன்னைக்கு வழிகாட்டிய விநாயகர்:**

கீழவீதியும் தெற்குவீதியும் கூடுமிடமாகிய அக்னி மூலையில் (தென்கிழக்கு) அருள்மிகு அன்னைக்கு வழிகாட்டிய விநாயகர் திருக்கோயில் அமைந்துள்ளது. பசுவடிவில் வந்த பார்வதி தேவி திருக்கோழம்பம் திருத்தலத்தில் இறைவனை வழிபட்டு இத்தலத்து இறைவனை நாடி வரும் போது இவ்விடத்தில் இருந்து கோரூபாம்பிகையாகிய அன்னைக்கு (கோயில்) வழிகாட்டிய விநாயகர் இவர்தான் என்று உள்ளூர் கர்ண பரம்பரைச் செய்திகளால் அறியலாம். தற்காலத்தில் திருவாவடுதுறை மஞ்சளாற்றில் வடகரையில் தாமாகத்தோன்றியருளும் அருள்தரு வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில் மாரியன்னைக்குச் செல்லும் பக்தர்களுக்கு வழிகாட்டும் விநாயகராகவும் அருள்பாலிக்கிறார்.

இவ்விநாயகர் திருக்கோயிலில், ஆதீனத்துக்கு 23ஆவது குருமகாசன்னிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் திருப்பணிகள் செய்யப்பெற்று திருவள்ளுவர் ஆண்டு 2037 விய ஆண்டு ஆனித்திங்கள் 28ஆம் நாள் (12.07.2006) புதன் கிழமை காலை 9 மணிக்குமேல் 10.30க்குள் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது. சங்கடஹர சதுர்த்தியிலும் ஆவணிமாத விநாயகர் சதுர்த்தியிலும் சிறப்பு வழிபாடுகள் தெற்குவீதி சைவப்பெருமக்களாலும் பிற உள்ளூர் வெளியூர் அன்பர்களாலும் செய்யப்பெறுகின்றன. இவைதவிர ஆண்டுதோறும் இரண்டாவது ஞாயிற்றுக்கிழமையில் நடைபெறும் அருள்தரு வெள்ளைவேம்பு மாரியம்மன் திருக்கோயில் காவடி உற்சவமும் இவ்விநாயகர் திருக்கோயிலிலிருந்து தான் தொடங்குகிறது. அன்றையதினம் தெற்குவீதியும் கீழவீதியும் திருவிழாக்கோலம் பூண்டு கோலாகலமாக திருவிழா நடைபெறுவது கண்கொள்ளாக்காட்சியாகும். அன்னைக்கு (அன்றைக்கு) வழிகாட்டிய விநாயகர் இன்றைக்கும் மக்களுக்கு நல்வழிகாட்டி நலம் பல அருளுகிறார். தொடர்ந்து இக்கோயிலில் துண்டாவிளக்கு ஒளிதருகிறது. விநாயகர் அருள் தருகிறார் ; மக்கள் நலம் பெறுகிறார்கள்.

**அருள்மிகு மெய் ண் விநாயகர் :**

தெற்குவீதியும் கீழவீதியும் கூடுமிடத்தில் நிருத்தி மூலையில் (தென்கிழக்கு) அருள்மிகு மெய்க்கண் விநாயகர் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார். இவ்விநாயகருக்கு ஆரம்ப

காலத்தில் 'மெய்க்கும் விநாயகர்' என்றே பெயர் வழங்கிற்று. இவரிடம் மக்கள் வேண்டியவையாயும் மெய்க்கும்; பொய்க்காது என்ற பொருளில் இத்திருப்பெயர் அமைந்திருந்தது. மெய்க்கும் விநாயகர் என்ற திருநாமமே காலப்போக்கில் மெய்க்கண் விநாயகர் எனத் திரிந்துவிட்டது என்பர் உள்ளூர் பெரியோர்கள். பொதுவாக சிவன் திருக்கோயிலிலும் பிற இடங்களிலும் கன்னி மூலையில் விநாயகர் வைத்து வழிபடுவது என்பது பழங்கால வழக்கம். மற்றைய விநாயகர்களை விட நிருதிமூலை விநாயகர் விசேஷம். வீட்டிலும் இந்நிருதிமூலை குபேர மூலையாக போற்றப் படுகிறது. இம்மூலையில் பணம், காசு வைக்கும் பீரோக்களை வைத்தால் குபேரசம்பத்துப் பெருகும் என்பது வாஸ்து சாஸ்த்திர நூல் கூறும் தகவல். அந்த வகையில் இம்மூலையில் (கன்னிமூலை) அருளும் கன்னிவிநாயகரை வழிபட்டால் குபேரச் செல்வம் பெருகும் என்பது ஐதீகம். இந்த மெய்க்கண் (மெய்க்கும்) விநாயகரை வழிபட்டு செல்வவளம் பெற்று சிறப்பான வாழ்வில் இன்புறும் மக்களின் பிரியமான விநாயகராக இவர் அருள்பாலிக்கிறார். இவ்விநாயகர் திருக்கோயிலிலும் தொடர்ந்.து திருவிளக்கு ஒளிதருகிறது; மக்களின் வாழ்வொளி பெருகுகிறது.

**அருள்மிகு ஞானசம்பந்த விநாயகர் திருக்கோயில் :**

மேலவீதியும், வடக்குவீதியும் சந்திக்கும் அக்னிமூலையில் அருள்மிகு ஞானசம்பந்த விநாயகர் திருக்கோயில் பொலிவுற அமைந்துள்ளது. ஆதீனத்திற்குச் சொந்தமானது. கிழக்கு பார்த்த சன்னிதி. நான்கு திருக்கரங்களுடன் அழகுற காட்சியருளும் இவ்விநாயகருக்கு சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாணையின் வழி நாள்வழிபாடும், சங்கடஹர சதுர்த்தி, ஆவணி மாத விநாயகர் சதுர்த்தி, சித்ராப்பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகளும் மேலவீதி மற்றும் வடக்குவீதி அன்பர்களாலும் உள்ளூர் மக்களாலும் மிகவும் சிறப்பாக நடத்தப் பெறுகின்றன.

கருவறைக்கு வெளியே முன்மண்டபமும், மதில்களுடன் கூடிய சுற்றுப்பிரகாரமும் உள்ள இத்திருக்கோயிலில் ஒருநிலை கொண்டதாகவும் ஐந்து கலசங்களுடன் கூடிய கோபுரம் அமைந்திருப்பது தனிச்சிறப்பு. மேலும் நுழைவாயில் மேற்புறம் தேவியருடன் கூடிய விநாயகர் மற்றும் முருகனின் திருவுருவங்கள் சுதைச் சிற்பங்களாய் உள்ளன.

தென்புற மேல்தலத்தில் திருக்கயிலையில் ஞானப்பழம் பெறும் திருவிளையாடலைக் குறிக்கும் விதமாக மாம்பழத்துடன் கூடிய திருகரம் கொண்டு சிவபெருமானும் அருகே உமையம்மையும் வீற்றிருக்க எதிரில் விநாயகப் பெருமானும் முருகப்பெருமானும் அம்மையப்பரை நோக்கி, நின்ற திருக்கோலங்களுடன் அமைந்திருக்க அருகே நாரத முனிவரும் அமைந்திருக்கும் காட்சி அற்புதமானது. மேலும் வடக்கு புற மேல்தளத்தில் வெளிப்பக்கம் நோக்கி கிழக்கிலிருந்து மேற்காக முறையே திருமுருகனும், விநாயகப்பெருமானும் அருகே கமண்டலத்தின் காவிரி நீரைக் கவிழ்த்து விடும் விநாயகரின் காகத் திருவுருவமும் லிங்கத்தின் மீது பால்சொரிந்து நாவால் வருடும் கோரூபாம்பிகைத் திருவுருவமும், ஆநிரைகளைக் கோல்கொண்டு மேய்க்கும் மூலரின் நின்ற கோலமும், யோக நிலையில்அமர்ந்த திருக் கோலமும் வரிசையாக தத்ரூபமாக அமைந்துள்ள சுதைச் சிற்பங்கள் கண்களுக்கும் கருத்திற்கும் ஒருங்கே விருந்தளிக்கின்றன. விநாயகரின் விமானத்திலும் சுதைச் சிற்பங்கள் உள்ளன. மேலும் இக்கோயிலின் முன்மண்டபத்து விதானத்தில் மகாலெட்சுமி, கணபதி, சரஸ்வதி, முருகன் ஆகியோரின் திருவுருவங்கள் வண்ண ஓவியங்களாக அழகுற அமைந்துள்ளன. இந்த அளவிற்கு சுதைச் சிற்பங்களும் வண்ண ஓவியங்களும் நிறைந்துள்ள விநாயகர் தனித் திருக்கோயில் இவ்வூரில் வேறெங்கும் இல்லை எனலாம்.

மேற்படி இத்திருக்கோயிலில் விய ஆண்டு ஐப்பசி பன்னிரண்டாம் நாள் (29.10.2006) ஞாயிற்றுக் கிழமை சுக்கிலபட்சம், சப்தமிதிதி, உத்திராட நட்சத்திரம், அமிர்தயோகம், துலா லக்னம் கூடிய சுபயோக சுபதினத்தில் திருவாவடுதுறை ஆதீனம் 23ஆவது குருமகா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணையின் வண்ணம் அவர்களின் திருமுன்னர் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்புடன் நடைபெற்றது. இதற்கான கல்வெட்டு இத்திருக்கோயிலில் தென்புற வெளிப்பக்க மதில் சுவரில் உள்ளது.

இத்திருக்கோயிலில் ஆதீன அருளாணைவழி ஆவணி மாத விநாயகர் சதுர்த்திப் பெருவிழா பத்து நாட்கள் சிறப்புடன் நடைபெறுகிறது. ஆண்டு தோறும் சித்திராப் பௌர்ணமியில் சிறப்பு அபிடேக அலங்கார, தீபாராதனைகள் நடை பெறுவதுடன் அன்றைய தினம் அன்னதானமும் நடைபெறுகிறது.

**அருள்தரு தில்லை மகாகாளியம்மன் (மேலக்கடை)**

திருவாவடுதுறை திருத்தலத்தின் மேற்கு எல்லையில் மேலக்கடைத் தெருவில் அருள்தரு தில்லை மகாகாளியம்மன் திருக்கோயில் உள்ளது. இதுவும் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானதாகும். வடக்கு பார்த்த இக்கோயிலில் மகாகாளியம்மன் எட்டு கரங்களோடு பக்தர்களுக்குத் திருக்காட்சியும் நடன உற்சவத்தில் தெருக் காட்சியும் கொடுத்து அருளுகின்றார்.

கருவறைக்கு முன்னுள்ள அர்த்த மண்டபத்தில் கிழக்கு நோக்கி மகாகாளியம்மனின் உற்சவமூர்த்தி நான்கு திருக்கரங்களுடன் அருளுகின்றாள். இடப்பக்க மேல்கரத்தில் உடுக்கையும், கீழ்க்கரத்தில் கிளியும், வலப்பக்க மேல்கரத்தில் பாசமும் (கயிறு) கீழ்க்கரத்தில் கிண்ணமும் கொண்டு விளங்குகிறார். திருவீதியுலா வரும் சமயத்தில் சர்வ அலங்காரங்களுடன் புறப்பாடு நிகழ்ந்து அருகில் உள்ள ஐந்து தெருக்களும் திருவீதியுலா வருவதுண்டு. இவ் உற்சவமூர்த்திக்கு அருகே வீதியுலாவிற்கான நடனத் திருக்கோலத்திற்குரிய அம்மன் சிரசும் எட்டுக் கரங்களும் உள்ளன. இத்திரு நடன உற்சவம் சீர்வளர்சீர் குரு மகா சன்னிதானம் அவர்களின் அருளாசியுடன் கடந்த முப்பத்தோரு ஆண்டுகளாக மேலக்கடைத் தெரு வாசிகள் மற்றும் உள்ளூர் வாசிகளால் சிறப்புற நிகழ்த்தப் பெற்று வருகிறது. ஆண்டுதோறும் வைகாசி வளர்பிறையில் இத்திருநடனத்திருவிழா நடைபெறுகிறது.

இக்கோயிலின் அர்த்த மண்டபத்திற்கு வெளியே மகா மண்டபமும் உள்ளது. இம்மண்டபத்தின் சன்னிதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. மேற்கு புறத்தில் கிழக்குப் பார்த்த நிலையில் அருள்மிகு ஞானப்பிரகாச விநாயகர் சிறு தனிக்கோயில் உள்ளது. இவ்விநாயகர் பாசம், அங்குசம், தந்தம் கொழுக்கட்டையுடன் கூடிய நான்கு திருக்கரங்களுடன் அருள் பாலிக்கிறார். இத்தனிச் சன்னிதி 1989ஆம் ஆண்டு எழுப்பப் பெற்று திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்ற தற்கான கல்வெட்டு இச்சன்னிதியில் காணப்படுகிறது.

கோயில் கருவறையின் ஏகதளவிமானத்தில் ஒரு கலசமும் நாற்புறமும் மகாகாளியம்மனின் திருவுருவச் சிலைகளும் காணப்படுகின்றன. நான்கு கோணத் திசைகளில் பூதகிகளும் சிங்கங்களும் சுதைச் சிற்பங்களாக உள்ளன. கோயிலின் நுழைவாயிலில் ஒருவளைவும் அதில் தில்லை மகா காளியம்மனின் சுதைச் சிற்பங்களும் அழகுற காட்சியளிக்கின்றன. 2004 ஆண்டு ஆவணி 26ஆம் நாளில் திருக்குட நன்னீராட்டு நிகழ்ந்துள்ளது. ஆண்டுக்கொண்டு இத்தில்லை மகாகாளியம்மன் அதிக சக்தி படைத்தவளாக உள்ளூர் தெருவாசிகள் கூறுகின்றனர். ஒரு காலத்தில் திருவாவடுதுறை நான்கு வீதிகளிலும் திருவீயுலா வரும் சமயம், தமக்கு முன்னே ஒளிகாட்டி வழிசெல்லும் தீவர்த்தியின் (தீவட்டி) வெளிச்சம் எண்ணெய் தீர்ந்துபோய் நின்றுவிட, இம்மகாகாளியம்மன் அருள்வாக்கின் படி பக்கத்திலுள்ள குளத்துநீரை முகந்து தீவர்த்தியில் ஊற்றிட அத்தீவர்த்தியின் மேலும் ஒளிவிட்டுப் பிரகாசமாக எரிந்தது என்பது உள்ளூர் மக்களின் செவிவழிச் செய்தி.

**அருள்தரு காமாட்சியம்மன் திருக்கோயில் :**

திருவாவடுதுறை திருக்கோயிலின் புறத்தே வடமேற்கு மூலையிலுள்ள தெருவில் அருள்தரு காமாட்சியம்மன் திருக்கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கிழக்குப் பார்த்த சன்னிதி, நான்கு திருக்கரங்களுடன் கிழக்குப் பார்த்த சன்னிதி. நான்கு திருக்கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் அம்மன் அருள்புரிகிறாள். கருவறைக்கு முன்னுள்ள அர்த்த மண்டபத்தின் தென்புறத்தில் விநாயகரும் திருமேனியும் வடபுறத்தில் அருள்தரு காமாட்சியம்மனின் பழைய கல்திருமேனியும் உள்ளன. முன் மண்படத்தின் சன்னிதியின் நேர் எதிரே நந்தியும் பலிபீடமும் உள்ளன. மூன்று கலசங்களுடன் கூடி விமானமும் சுற்றுமதில்களுடன் கூடிய உட்சுற்றுப்பிரகாரமும் இரும்புகம்பிகளுடன் கூடிய நுழைவாயிலும் உள்ளன. இத்திருக்கோயிலில் 1988 ஆண்டு ஜூன்மாதம் 27ஆம் நாள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றதற்கான கல்வெட்டு உள்ளது. இத்திருக்கோயிலில் தினந்தோறும் ஒருகால பூசை நடைபெறுகிறது. நவராத்திரியில் ஒன்பது நாட்கள் தெருவாசிகள் மற்றும் உள்ளூர் பக்தர்களின் துணையோடு சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**அருள்மிகு ஐயனார் திருக்கோயில் :**

திருவாவடுதுறை கீழவீதியின் வடக்குப் புறத்து முதன்மைச் சாலையில் ஐயனார் திருக் கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கருவறையில் ஐயனார் வலக்கையில் சாட்டையுடனு[illegible] மேடைமேல் குத்திட்டு வைத்துள்ள இடமுழந்தாளின் மேல் இடக்கரத்தை வைத்தும் வலக்காலைத் தொங்கவிட்டும் கிழக்கு

நோக்கி அருளுகிறார். சன்னிதியில் கருங் கற்களாலான குதிரை, யானைச் சிலைகளும் பலிபீடமும் உள்ளன. கோயிலைச் சுற்றி நாற்புறமும் மதில்களுடன் கூடிய பிரகாரம் உள்ளது. ஏகதள விமானம். கோயிலின் நுழைவாயிலின் மேற்புறமும் கருவறையின் மேற்புறமும் கிழக்கு நோக்கி ஐயனாரின் சுதைச் சிற்பங்களும் உள்ளன.

கோயிலுக்கு வெளியே சாலையின் எதிரே ஐயனார் கோயிலை நோக்கிய வண்ணம் குதிரை, யானையின் சுதை உருவங்கள் (சுமார் 8 அடி உயரம்) உள்ளன. அருள்மிகு ஐயனார் திருக்கோயில் ஆதீனத்துக்கு 23ஆவது சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்களின் அருளாணை வண்ணம் சித்திரபானு ஆண்டு ஐப்பசித் திங்கள் இருபத்து நான்காம் நாள் (10.11.2002) ஞாயிற்றுக்கிழமை விருச்சிக லக்கினம், சஷ்டி திதி, உத்திராட நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 7.15க்குமேல் 8.30க்குள் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றது. இதற்கான கல்வெட்டு இத்திருக்கோயிலின் கீழ்ப்புற மதில்சுவரின் வெளிப்பக்கத்தில் உள்ளது. தினந்தோறும் பூசை நடைபெறுகிறது.

**அருள்தரு வடபத்ர காளியம்மன் :**

திருவாவடுதுறை இந்தியன் ஓவர்சீஸ் வங்கித் தெருவில் (திருவாலங்காட்டிற்குச் செல்லும் வழியில்) அருள்தரு வடபத்ரகாளியம்மன் திருக் கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது. கருவறையில் சிலாரூபமாக வடக்குத்திசை நோக்கி அருள் பாலிக்கும் இப்பத்திரகாளியம்மன் எட்டுக் கரங்களுடன் மகிஷாசுரமர்த்தினி திருக்கோலத்தில் காட்சி யளிக்கிறாள். வலப்பக்கக் கரங்களில் (மேலிருந்து கீழ்) சூலம் மழு, கத்தி, நாகம் ஆகியவைகளையும், இடக்கரங்களில் தீச்சுடர், கேடயம், மணி, ரத்தக் கிண்ணம் ஆகியவைகளையும் கொண்டுள்ளாள். சூலாயுதத்தால் தன் காலடியில் கிடக்கும் மகிஷாசுரனைக் கொல்லும் பாவனையில் காட்சியளிக்கிறாள். இவ்வம்மனின் இடது திருப்பாதம் மகிஷாசுரன் மீதும் வலதுத்திருப்பாதம் மடித்து சற்று உயர்த்தியபடியும் உள்ளன.

கருவறைக்கு வெளியே அம்மனுக்கு வலப்புறத்தில் சிறிய விநாயகரும் அருளுகிறார். சன்னிதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. கருவறைக்கு மேலே மூன்று கலசங்களைக் கொண்ட ஏகதள விமானம் உள்ளது. விமானத்தில் கிழக்குப்புறத்தில் அங்குசம், பாசம், மலர், கரும்பு ஆகியவைகளை நாற்கரங்களிலும் கொண்ட இராஜராஜேஸ்வரியின் சுதைசிற்பம் உள்ளது. இருகால்களையும் சமமாக கீழே தொங்கவிட்டு பீடத்தில் அமர்ந்த நிலையில் உள்ளது. தெற்குப் புறத்தில் சூலம், பாசம் ஆகியவைகளை மேற்கரங்களிலும் வலக்கரத்தில் அபயமும் இடக்கரத்தில் வரதமும் கொண்டு இடக்காலை மடித்து வலக்காலை தொங்கவிட்டு அமர்ந்த திருக்கோலத்திலுள்ள அம்மன் சிலையும், மேற்குப் புறத்தில் சக்கரம், சங்கு, அபயம், வரதம் ஆகியன கொண்டு நாற்கரங்களுடன் அமர்ந்த கோலத்தி லுள்ள அம்மன் சிலையும் சுதைச் சிற்பங்களாக அமைந்துள்ளன. கிழக்குப்புற முன்மண்டப மேல்தளத்தில் மகிஷாசுரமர்த்தினியின் சுதைச் சிற்பம் அற்புதமான நிலையில் உள்ளது.

இத்திருக்கோயில் விபவ ஆண்டு ஆவணித்திங்கள் முப்பத்தோராம் நாள் (16.09.1988) ஆதீனத்து 23ஆவது சீர்வளர்சீர் குரு மகாசன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. இன்றும் இத்திருக் கோயிலுக்கு தோஷப் பரிகாரம் செய்பவர்களும் குடும்ப ஒற்றுமை வேண்டியும் பலரும் வந்து சிறப்பு அபிடேக ஆராதனைகள் செய்து பயன் பெறுகின்றார்கள்.

**அருள்தரு (செக்கடி) நினைத்ததை முடிக்கும் மகாமாரியம்மன் திருக்கோயில் :**

திருவாவடுதுறை வடக்குப்புற எல்லையில் அருள்தரு நினைத்ததை முடிக்கும் மகா மாரியம்மன் திருக்கோயில் உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. உடுக்கை, பாசம், கத்தி, கிண்ணம் ஆகியவைகளை நாற்கரங்களில் கொண்ட இம்மகா மாரியம்மன் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறாள்.

கருவறைக்கு வெளியே உள்ள அர்த்த மண்டபத்தின் தெற்குப்புறத்தில் விநாயகப் பெருமானும் வடக்குப் புறத்தில் இக்கோயிலின் பழைய மாரியம்மனும் உள்ளனர். சன்னிதியில் சூலமும் பலிபீடமும் உள்ளன. கருவறைக்கு மேலுள்ள ஏகதள விமானத்தில் நான்கு புறமும் மாரியம்மன் சுதை சிற்பங்களும் நான்கு மூலைகளில் விமான தேவதைகளும் எட்டு சிங்கச் சிற்பங்களும் பூதகிகளும் உள்ளன.

இத்திருக்கோயிலிலுள்ள மகா மாரியம்மன் ஏற்கனவே தெற்கு வீதி திரௌபதியம்மன் கோயில் அருகே இருந்ததாகவும், பின்னர் ஆதீனத்து 17ஆவது குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாட்சி காலத்தில் இவ்விடத்தில் கொண்டு வந்து வைத்து வழிபட்டதாகவும் செவிவழிச் செய்தி ஒன்றுண்டு. இத்திருக்கோயிலில் 23ஆவது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் சுக்கில ஆண்டு ஆவணித்திங்கள் இருபத்தோராம் நாள் (06.09.1989)ல் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற்றது. தினமும் பூசை நடைபெறுகிறது. வருடாந்திர விழாக்களில் சித்ராப்பௌர்ணமியில் நடைபெறும் குத்துவிளக்கு வழிபாடு குறிப்பிடத் த்க்கது. மாதந்தோறும் பௌர்ணமி பூசையும் நடைபெறுகின்றன.

**அருள்மிகு சித்திவிநாயகர் திருக்கோயில் :**

திருவாவடுதுறை வடக்குப்புற எல்லையில் திருவாலங்காட்டிற்குச் செல்லும் தார்ச் சாலையோரம் கிழக்குப்பார்த்த இவ்விநாயகர் திருக்கோயிலில் பாசாங்குச அபய கரங்களுடன் சித்தி விநாயகர் அருள்பாலிக்கிறார். கருவறை மேலுள்ள ஏகதள விமானத்தில் நாற்புறங்களிலும் விநாயகர் திருவுருவங்கள் சுதைச் சிற்பங்களாக உள்ளன. கருவறைக்கு வெளியே முன் மண்டபம் உள்ளது. சிறிய மதில்களோடு கூடிய சுற்றுப் பிரகாரம் உள்ளது. நித்திய பூசை நடைபெறுகிறது.

**அருள்தரு வெள்ளைவேம்பு மாரியம்மன் திருக்கோயில் :**

திருவாவடுதுறைக்கு தெற்கே உள்ள மஞ்சளாற்றின் வடகரையில் தெற்கு நோக்கி வெள்ளை வேம்பு மாரியம்மன் திருக்கோயில் உள்ளது. மூலத்தானத்திலுள்ள வேப்பமரத்தின் நடுவிலுள்ள கிளைகளின் வேப்பிள்ளைகள் வெள்ளை வெளேர் என்று உள்ளன. இதுபோல் இப்பகுதியில் வேறெங்கும் கிடையாது. இங்கு சிலாரூபமாகவும் மாரியம்மன் காட்சியளிக்கிறாள். முதலில் (02.06.1992லும் இரண்டாவதாக 24.06.2005லும் திருக்குடமுழக்கு விழாக்கள் நடைபெற்றன. இத்திருக்கோயிலில் விநாயகர் பெருமானும், பாலமுருகனும், பேச்சியம்மனும் அருளுகின்றார்கள்.

**திருவாலங்காடு வடாரண்யேசுவரர் திருக் கோயில் :**

திருவாவடுதுறை திருக்கோயிலின் வடகிழக்கே 1 1/2 கி.மீ. தொலைவில் அருள்மிகு வடாரண்யேசுவரர் திருக்கோயில் உள்ளது. மேற்கு நோக்கிய திருச்சன்னிதி. அம்மன் வண்டார் குழலியார். தலவிருட்சம் - ஆலமரம். தீர்த்தம் - புத்திரகாமேசுவரத் தீர்த்தம். இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமானது.

மூன்றாம் குலோத்துங்கச் சோழனால் கற்றளியாக்கம் பெற்ற இத்திருக்கோயில் புராணச்சிறப்பும், வரலாற்றுப் பெருமையும் கொண்டது. உமாதேவியார், பிரமன், இந்திரன் பரத மன்னன் இந்தின் முதலானவர்களுக்குப் புத்திரப்பாக்கியம் அளித்தருளிய புத்திர காமேசுவரர் தனிச்சன்னிதி இக்கோயிலில் தனிச்சிறப்புகளில் ஒன்று.

இக்கோயிலிலுள்ள நடராசப் பெருமானின் திருவுருவத்தின் வலப்பக்கத்தில் திருமால் பஞ்சமுக வாத்தியம் வாசிக்கும் சிலை உள்ளது. தெற்கு பிரகாரத்திலுள்ள அறுபத்து மூவர் நாயன்மார்களின் சிலைகளுக்கு இடையில் யமனும் அவன் மனைவி சுதர்மதாவும், சித்ரகுப்தனும் உள்ளனர். நீங்காத சுரநோயைத் தீர்த்தருளும் சுரவரதேசுவரர் தனிச் சன்னிதியும் இங்குண்டு. இக்கோயிலை எழுப்பிய சோழமன்னனின் சிலை ஒன்று இங்குள்ளது. இம்மன்னனது தலையில் சிவன் திருவடி அமைந்துள்ளது. பத்மாசனத்தில் திருஞான சம்பந்தரும், பரவையார்., சங்கிலியார் உடனாய சுந்தரமூர்த்தி நாயனாரும் சிலாரூபங்களாக இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ளார்.

10.06.1987ல் இத்திருக்கோயிலிலுள்ள விநாயகர், முருகன், அம்மன் கோயில்களில் குடமுழக்குவிழா நடைபெற்றுள்ளன. அதன்பிறகு திருக்கோயில் முழுவதும் திருப்பணிகள் செய்யப் பெற்று திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சீர்வளர்சீர் குரு மகா சன்னிதானம் அவர்களின் அருளாணை வழி மிகு சிறப்புடன் நடைபெற்றது.

திருச்சிற்றம்பலம்

# திருவாவடுதுறை திருக்கோயில் தரை வரைபடம் - விளக்கம்

1. அருள்மிகு கோமுத்தீஸ்வரர்(மூலவர்)
2. அர்த்தமண்டபம்.
3. நந்தி மண்டபம்
4. உற்சவத் திருமேனிகள்
5. மகாமண்டபம்
6. அருள்மிகு தியாகேசர்.
7. சந்தானக் குரவர்கள் நால்வர்
8. தியாகராசர் முன் மண்டபம்
9. மூன்று சூரியர்கள்.
10. சுந்தரமூர்த்தி நாயனார் (உற்சவர்)
11. திருமுறை கண்ட விநாயகர்
12. அறுபத்துமூவர் (சிலாரூபங்கள்)
13. சேக்கிழார் (புதிய பிரதிட்டை)
14. கன்னி விநாயகர்
15. ஞானாம்பிகை.
16. காளத்தீசுவரர் (லிங்கம்)
17. பாண்டியலிங்கம்.
18. கொங்கணேசுவரர் (லிங்கம்)
19. கொங்கணேசுவரியம்மன்
20. அருள்மிகு தட்சிணாமூர்த்தி
21. அகத்திய மா முனிவர்
22. தல ( அழகிய) விநாயகர்
23. இலிங்கோத்பவர்
24. அருள்மிகு சுப்பிரமணியர்
25. சரசுவதி
26. மீனாட்சி
27. சொக்கலிங்கம்
28. விசுவநாதர் (லிங்கம்)
29. சேரலிங்கம்
30. மகாலெட்சுமி.
31. அணைத்தெழுந்தநாயகர்.
32. பிரமன்.
33. அருள்தரு துர்க்கையம்மன்
34. சண்டிகேசுவரர்
35. வாகன மண்டபம்
36. அருள்மிகு நடராசப் பெருமான்
37. கோரூபாம்பிகை.
38. சோழலிங்கம்.
39. சனீசுவரர்.
40. பைரவர்.
41. பஞ்சலிங்கம் (5 லிங்கங்கள்)
42. சந்திரன்.
43. 3ஆவது கோபுர நுழைவாயில்.
44. அருள்தரு ஒப்பிலாமுலையம்மை
45. ஆடிப்பூர அம்மன்
46. பள்ளியறை.
47. அம்மன்சன்னிதி அர்த்தமண்டபம்.
49. மடைப்பள்ளி
50. உக்கிராணம் (களஞ்சியம்)
51. திருமூலர் திருக்கோயில்
52. அம்மன்கோயில் யாகசாலை.
53. சண்டிகேசுவரி.
54. இரண்டாம் கோபுர நுழைவாயில்
55. கொடிமரம்
56. மகாநந்தி (கல்லாலான பெரியநந்தி)
57. பலிபீடம் (பொற்கிழி அருளிய இடம்)
58. வசந்த மண்டபம்.
59. திருக்கோயில் அலுவலகம்.
60. வன்னிமரத்து வரசித்தி விநாயகர்
61. யானைக் கொட்டகை.
62. பெரிய பிரகாரம்.
63. வடக்கு நுழைவாயில்.
64. தெற்கு நுழைவாயில்.
65. பசுமடம்.
66. சுவாமிகோயில் யாகசாலை
67. தலவிருட்சம் (அரசமரம்)
68. ஆதிகோமுத்தீசுவரர் திருக்கோயில்.
69. நால்வர் கோயில்.
70. கிழக்கு ராஜகோபுர நுழைவாயில்
71. துணைவந்த விநாயகர்.
72. சுப்பிரமணியர் (இரு தேவியருடன்)
73. கோமுத்தி தீர்த்தம் (திருக்குளம்).

# திருவாவடுதுறை திருக்கோயில் தரை வரைபடம்



உ
சிவமயம்

**திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்**

**திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை**

**அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்**

# திருக்குடப்புனித நன்னீராட்டுப் பெருவிழாச் செய்திகள்

## (23.01.2011 முதல் 26.01.2011முடிய)



திருவருள் சிறப்பும் குருவருள் சிறப்பும் நிறைந்த திருவாவடுதுறை திருத்தலத்தில் எழுந்தருள் பாலிக்கும் ஆதீனத்திற்குச் சொந்தமான அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா 26.01.2011ல் சீர்வளர்சீர் 23ஆவது குருமகாசன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

19.01.2011 எஜமான அனுக்ஞையுடன் தொடங்கிய திருக்குட நன்னீராட்டுப்பெருவிழாவிற்கு காவிரியிலிருந்து புனித நீர் சிவாசாரியர்களால் கொண்டுவரப்பட்டது. யாகசாலையின் ஆறுகாலபூசைக்கும் சீர்வளர் குருமகாசன்னிதானம் அவர்கள் தம்பிரான் சுவாமிகள் அடியார்பெருமக்கள், ஓதுவார் மூர்த்திகள் புடைசூழ எழுந்தருளி தெரிசித்தருளினார்கள்.

23.01.2011ல் மாலை நடைபெற்ற முதல்கால யாகசாலை வழிபாட்டுநிகழ்ச்சியில் பெருங்குளம், செங்கோல் ஆதீன குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தர சத்தியஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து பன்னிரு திருமுறை நூல்கள் (மயூராப்பதிப்பகம்) அடங்கிய திருமுறைப் பேழையையும் வழங்கியருளினார்கள்.

24.01.2011 காலை ஆசாரிய விசேஷ சந்தி, பாவனாபிடேகம், காலசந்தி பூசையுடன் இரண்டாம் கால யாகசாலை வழிபாடு பூரணாகுதி, தீபாராதனை நடைபெற்றது. காலை 10 மணிக்கு மீனலக்னத்தில் விமான கலச ஸ்தாபனம் நடைபெற்றது.

இரவு நடைபெற்ற மூன்றாம் கால யாகசாலை பூசையில் வேளாக்குறிச்சி ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ அஜபாநடேஸ்வர பண்டாரசந்நதிகள் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து திருமுறைப் பேழையை வழங்கியருளினார்கள். முன்னதாக திருக்கோயிலில் சிம்மலக்னத்தில் இரவு 8மணிக்குமேல் சுவாமி அம்மனுக்கு அட்டபந்தன மருந்தும் சொர்ணபந்தனமும் சாத்தியருளினார்கள்.

25.01.2011ல் காலை யாகசாலை நான்காம் கால பூசை சிறப்பாக நடைபெற்றது. இரவு நடைபெற்ற ஐந்தாம் கால யாகசாலை வழிபாட்டில் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள், திருவிடைமருதூர், பிரம்ம ஸ்ரீவி. முத்துகிருஷ்ணசர்மா அவர்களுக்குப் பொன் னாடை போர்த்தி உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூ5000/-மும் வேதகலாரத்னம் எனும் விருதும், திருக்கோயில் பூசகர் சிவத்திரு. கே.தண்டபாணி சிவாசாரியர் அவர்களுக்குப் பொன்னாடை, உருத்திராக்கமாலை, பொற்கிழி ரூ5000/- ஆகியவற்றுடன் ''சிவாகமத் திருத்தொண்டர்'' எனும் விருதும், திருவாவடுதுறை சிவத்திரு சி.அப்புலிங்க ஓதுவார் மூர்த்திகளுக்குப் பொன்னாடை, உருத்திராக்க மாலை, ரூ.5000/- பொற்கிழியுடன் ''தெய்வத்தமிழிசைச் செல்வர்'' எனும் விருதும் , நாதசுர இசைக்கலைஞர் திருவாவடுதுறை சைவத்திரு டி.என்.கே.நமசிவாயமூர்த்தி அவர்களுக்குப் பொன்னாடை, உருத்திராக்க மாலையுடன் பொற்கிழி ரூ5000/-மும் ''ஆதீன நாதசுர வித்துவான்'' எனும் சிறப்பு விருதும், திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்க சுவாமி திருக்கோயிலில் புதிய திருத்தேர் சிறப்பாக வடிவமைத்து செய்த காரைக்குடி சைவத்திரு ஜி.இராதாகிருஷ்ணன் அவர்களுக்குப் பொன்னாடை, உருத்திராக்க மாலையுடன் ரூ.5000/- பொற்கிழியும், ''தேர் நிர்மாணக் கலைமணி'' எனும் விருதும், அன்றையதினம் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்திய தேவகோட்டை திருமதி சரசுவதி ராமநாதன்

அவர்களுக்குப் பொன்னாடை, உருத்திராக்க மாலையுடன் பொற்கிழி ரூ.5000/-மும் "இசைத்தமிழ் விரித்துரை இன்மொழியார்" எனும் விருதும் வழங்கி வாழ்த்தியருளினார்கள்.

**26.01.2011**ல் யாகசாலை ஆறாம் கால பூசைக்குத் தம்பிரான்கள், ஓதுவார்மூர்த்திகள், அடியார் பெருமக்கள், ஆதீன அன்பர்கள் புடைசூழ எழுந்தருளினார்கள். 6ஆம் கால பூரணாகுதி தீபாரதனைக்குப் பிறகு கடம்புறப்பாடு நடைபெற்றது. அவ்வமயம் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், திருப்பனந்தாள் காசித் திருமடத்து திருப்பெருந்திரு முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் மற்றும் அம்மடத்து இணை அதிபர் அவர்கள், சிதம்பரம் மௌனசுவாமி மடஅதிபர் தவத்திரு சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்கள் ஆகியோருக்கு சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் பொன்னாடை அணிவித்து திருமுறைப் பேழையும், திருக்குடமுழக்குவிழா மலராகிய 'ஆவடுதுறை அரனார்' என்ற ஆதீன வெளியீட்டு நூலையும் வழங்கினார்கள்.

கடம் புறப்பாடு சுவாமி விமானம் மேல்தளத்திற்கு மங்கல இசையுடன் வர குருமகா சன்னிதானங்கள் திருமுன்னர் வேத கோஷங்கள் முழங்க, பல்லியம் ஓசை விண்ணைப்பிளக்க, மங்கல இன்னிசை ஒலிக்க, திருமுறைப் பாடல்கள் ஓத அடியார் பெருமக்களின் "அர அர" எனும் சிவநாமம் எங்கும் பரவ சுவாமி, அம்மன், பரிவாரத் தெய்வவிமானங்கள் மற்றும் கோபுர கலசங்களுக்கும் திருக்குடப்புனித நன்னீராட்டும் தீபாராதனைகளும் மிகச்சிறப்பாக நடைபெற்றன.

விமான, கோபுர கலச திருக்குட நன்னீராட்டிற்குப் பிறகு சுவாமி அம்பாளுக்கு தங்கக்குடங்களால் மகா அபிடேகங்களும் பரிவாரத் தெய்வங்களுக்கு வெள்ளிக்குடங்களால் மகாஅபிடேகங்களும் சிறப்பாக நடைபெற்று சர்வ அலங்கார ஆராதனைகள் முறையாக நடைபெற்றன.

மாலையில் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் திருமுன்னர் பஞ்சமூர்த்திகளுக்குத் தீபாராதனை நடைபெற்றது. பின்னர் பஞ்சமூர்த்திகள் திருவீதியுலா மங்கல இன்னிசை திருமுறைப்பாராயணத்துடன் நிகழ்ந்தது.

இத்திருக்குட முழக்குவிழாவில் திருமுறை இன்னிசை நிகழ்த்திய மூத்த ஓதுவார் மூர்த்திகளுக்குப் பட்டாடையும் தலா ரூ2000/- அருட்கொடையும், இளைய ஓதுவார் மூர்த்திகளுக்குப் பட்டாடைகளுடன் ரூ.1000/- அருட்கொடையும் வழங்கி வாழ்த்தியளினார்கள்.

திருக்கோயில் குடமுழக்குவிழா திருப்பணியில் பங்குகொண்ட திருவன்பர்களான வடக்கு கோபுரம் திருப்பணி ஏற்ற கோவை மாரிமுத்து அவர்கள் மேல்தளம் தட்டோடுகள் அளித்த கோவை வசந்தகுமார் அவர்கள், திருக்கோயில் முழுவதும் மின்வசதி சீர்செய்தளித்த சென்னை ராஜவேல் அவர்கள், மற்றும் திருப்பணியில் முக்கிய பங்கு வகித்தவர்களான குடந்தை ராயா கோவிந்தராஜ் அவர்கள், சென்னை ஜெய்சங்கர் அவர்கள், சிதம்பரம் ரமேஷ் அவர்கள், மணிவாசகம் அவர்கள், ஆன்மீக எழுத்தாளர் மயன் அவர்கள், திருவாவடுதுறை டி.எஸ்.மாசிலாமணி அவர்கள், புதுச்சேரி வைத்தியலிங்கம் அவர்கள் மற்றும் முக்கியஸ்தர்கள் ஆகியோர் மகாசன்னிதானம் அவர்களால் பொன்னாடை அணிவிக்கப்பெற்று நினைவுப் பரிசிலும் வாங்கியருளப் பெற்றனர். சர்வசாதகர் சிவத்திரு.ஏ.வி.சாமிநாத சிவாச்சாரியர் அவர்கள் திருக்கோயில் கண்காணிப்பாளர் இரா. சண்முகம் அவர்கள், கௌரவ ஆலோசகர் எஸ்.சுப்பையா பிள்ளை அவர்கள், ஆலய பூஜகர்கள் மூவர்உபசாதகர் திருவிடைமருதூர் கே.தண்டபாணி சிவாச்சாரியர் அவர்கள், ஸ்தபதி இராம்குமார் அவர்கள், ஆகியோருக்குப் பொன்னாடை போர்த்தி தங்க மோதிரமும் அணிவித்தருளினார்கள்.

திருக்குடவிழா நாட்களில் சொற்பொழிவுகளாற்றிய மதுரை சொ.சொ.மீ.சுந்தரம் அவர்கள், சென்னை திருமதி.சரசுவதி ராமனாதன் அவர்கள், இன்னிசை நிகழ்த்திய புதுவசந்தம் இன்னிசை குழுவினர், ஆதீன (கிளாரினெட்) வித்வான் ஏ.கே.சி.நடராசன் அவர்கள், ஆதீன இசைப்புலவர் சீர்காழி சிவ சிதம்பரம் அவர்கள், ஆகியோருக்கும் தக்க மரியாதைகள் செய்தருளப் பெற்றனர். திருவாவடுதுறை திருப்பதிகங்கள் அடங்கிய இரு இசைக்குருந்தகடுகளும் வெளியிட்டருளப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்
திருச் சிற்றம்பலம்
**திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்**
**திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.**
**- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -**

# திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



திருநெல்வேலி மாவட்டம், காருகுறிச்சி சிவத்திரு. வி.வெங்கடாசலம் அவர்களின் மகனாரும், அம்பாசமுத்திரம் கலைக் கல்லூரியில் இளம் வணிகவியல் பயின்று வென்றாரும், பின்னர் குலமரபின்படி கும்பகோணம் ஸ்ரீ சங்கர மட வேத பாடசாலையில் ப்ரம்மஸ்ரீ எஸ்.அனந்த நாராயண கனபாடிகளிடம் 1994ஆம் ஆண்டு முதல் 8 ஆண்டுகள் கிருஷ்ண யஜுர் வேதம் கற்றுச் சிறந்தாரும், ஆதீனப்புலவர் சிவத்திரு. சு.குஞ்சித பாதம் அவர்களிடம் சிவப்பிரகாசம் எனும் சித்தாந்த நூல் பயின்றாரும், திருவிடைமருதூர், கும்பகோணம், மயிலாடுதுறை, காஞ்சிபுரம், திருப்பதி போன்ற திருத்தலத்துத் திருக்குடமுழுக்கு விழாக்களிலும் பெருவிழாக்களிலும் வேத பாராயணம் செய்து வருபவரும், கும்பகோணம் பாணாதுறை ஆகமபாடசாலையில் 2004 முதல் 5 ஆண்டுகள் பணியாற்றிய பண்பாளரும், காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கர மடத்தில் 2002ல் கிருஷ்ணயஜுர் வேதம் பரிட்சை கொடுத்து சான்றிதழும் சன்மானமும் பெற்றவரும், திருவிடைமருதூர் ஸ்ரீ சங்கரமடத்தில் காலை, மாலை என இருவேளைகளிலும் நாள்தோறும் வேதபாராயணம் செய்து வருவதுடன் அவ் வேதபாடசாலையில் கிருஷ்ண யஜுர்வேதம் கற்பித்து வருபவரும், தமிழ் மறையாம் திருமுறைகளிலும் அதிக ஈடுபாடு கொண்டவரும், நித்ய நைட்டிக பிரமசாரியாக இருப்பத்துடன் இயம நியமங்களை முறையாக கடைப்பிடித்து வருபவரும், தமிழ், ஆங்கில மொழிகளுடன் சமஸ்கிருதமும் கற்று அறிந்தாருமாகிய திருவிடைமருதூர். பிரம்மஸ்ரீ. **வி. முத்துகிருஷ்ண சர்மா** அவர்களின் கிருஷ்ண யஜுர் வேத ஞானத்தைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/-மும் **வேத கலாரத்னம்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042 | விக்ருதி ஆண்டு, தை 12
மெய்கண்டார் ஆண்டு 788 | 26-01-2011 புதன் கிழமை

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

**திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்**

**திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.**

**- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -**

# திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



விலையுடை அருந்தமிழ் மாலை வல்ல நலமிகு ஞானசம்பந்தப் பெருமான் அவதரித் தருளிய சீகாழி திருத்தலத்தின் கிழக்கிலுள்ள கடைவாசல் எனும் சிற்றூரிலே சிவத்திரு கல்யாண சுந்தர சிவாசாரியர் – திருமதி கிருபாகர அம்மையார் தம்பதியரின் திருமகனாகப் பிறந்தவரும், சீகாழி சபாபதி முதலியார் உயர்நிலைப் பள்ளியில் நான்காம் ஃபாரம் வரை கல்வி பயின்று ஆச்சாள் புரம் தேவகோட்டை செட்டியார் வேதாகம பாட சாலையில் மாயவரம் சிவத்திரு வைத்தியநாத சிவாசாரியரிடம் முறையாக வேதாகமங்களைக் கற்றுச் சிறந்தாரும், திருவாவடுதுறை சிவத்திரு சாமிநாத சிவாசாரியரிடம் சிவதீக்கையும் ஆச்சார்யா பிடேகமும் பெற்றுச் சிறந்தாரும், 1952ஆம் ஆண்டு ஆனி 24ஆம் நாள் முதலாக திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயிலில் தொடர்ந்து 58 ஆண்டுகளாக ஆவடுதுறை அரனார்க்கு உழுவலன்புடன் தொடர்ந்து அர்ச்சகராகப் பணியாற்றிவருபவரும் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் ஆதீனத் திருக் கோயில்களுக்கும் பிற சிவாலயங்களுக்கும் திருக்குடமுழுக்கு விழாக்களில் முக்கிய பொறுப்பேற்று சிறப்புற பணிசெய்து வருபவருமாகிய திருவாவடுதுறை திருக்கோயில் சிவாசாரியர் சிவத்திரு. **க. தண்டபாணி சிவாசாரியர்** அவர்களின் அர்ச்சகர்ப் பணிகளைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/-மும் **சிவாகமத் திருத்தொண்டர்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042 | விக்ருதி ஆண்டு, தை 12

மெய்கண்டார் ஆண்டு 788 | 26-01-2011 புதன் கிழமை

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்

திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.

- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -

## திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் ஆவடுதுறை அரனாரின் அருள்விளங்கும் திருத்தலத்தில் ஏழு தலை முறையாக ஆதீனத்தில் திருமுறைவாணராகப் பணியாற்றிவரும் மரபில் வந்தவரும், சிவத்திரு ஆ.சிங்காரம் ஓதுவார் மூர்த்திகள், தனலெட்சுமி அம்மையார் தம்பதியருக்கு மூத்தத் திருமகனாகப் பிறந்தவரும், ஆதீனத்து 20ஆவது குருமகா சன்னிதானம் அவர்கள் அருளாட்சி காலத்தில் எட்டுவயதிலேயே ஆதீனத்தில் திருமுறைப் பணியாற்றி பாராட்டப் பெற்றாரும், பின்னர் முறையாக விருத்தாசலம் இரத்தினசபாபதி செட்டியார் பாடசாலையில் திருவாரூர் ஞானப்பிரகாச ஓதுவார் மூர்த்திகளிடம் ஐந்து ஆண்டுகள் திருமுறைப் பயிற்சிப் பெற்றுச் சிறந்தாரும், ஆதீன ஆன்மா மூர்த்தி அருள்மிகு ஞானமாநடராசப் பெருமான், ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் திருச் சன்னதிகளில் 50 ஆண்டுகளுக்கும் மேலாக நாள்தோறும் காலை, மாலை பூசைகாலங்களில் திருமுறைப் பணிசெய்து தொண்டாற்றியவரும், குருமகா சன்னி தானங்களின் காசி இராமேசுவரம் முதலான திருத்தலப் பயணத்தின் போது உடன் சென்று திருமுறைப் பணி செய்தாரும், தமிழக அரசு நடத்திய தஞ்சை பெருவுடையார் திருக்கோயில் 1000ஆவது ஆண்டுவிழாவில் திருமுறைகள் ஓதி நற்சான்றிதழும் பரிசிலும் பெற்றாரும், திருக்குடமுழுக்கு விழாக்களிலும் பிற திருக்கோயில் பெருவிழாக்களிலும் திருமுறை இன்னிசை நிகழ்ச்சிகள் பல நடாத்தி புகழ் பெற்றாரும், சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாசியுடன் 2004ஆம் ஆண்டு முதலாக திருமணஞ்சேரி அருள்தரு கோகிலாம்பிகை உடனாய அருள்மிகு உத்வேகநாதர் திருக்கோயிலில் திருமுறைவாணராகப் பணியாற்றி வருபவருமாகிய திருவாவடுதுறை சிவத்திரு. **சி. அப்புலிங்க ஓதுவார் மூர்த்திகள்** அவர்களின் திருமுறைப் பணிகளைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/- மும் **தெய்வத் தமிழிசைச் செல்வர்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042 விக்ருதி ஆண்டு, தை 12

மெய்கண்டார் ஆண்டு 788 26-01-2011 புதன் கிழமை

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

**திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்**

**திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.**

**- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -**

## திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



குழலும் கொன்றையும் கூவிள மத்தமும் தழலும் தாங்கிய அழகனாம் மாசிலாமணிப் பெருமான் அருள்பாலிக்கும் திருவாவடுதுறை திருத் தலத்தில் டி.என். கலியபெருமாள் -இரமாமணி தம்பதியரின் ஒரே மகனாகப் பிறந்தவரும், அகில உலக நாதசுர சக்கரவர்த்தி, ஆதீனப் பிரதமநாதசுர வித்துவானுமாகிய டி.என்.இராஜரெத்தினம் பிள்ளை மற்றும் கக்காயி என்கிற டி.என். நடராஜசுந்தரம் பிள்ளை ஆகியோரின் பேரனும், ஆதீன (கிளாரினெட்) வித்வான் ஏ.கே.சி. நடராஜன் அவர்களிடம் 1982ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து 5 ஆண்டுகள் குருகுலவாசம் செய்து முறையாக நாதசுரம் பயின்றாரும், சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம் 1990 ஆம் ஆண்டு முதல் ஆதீன ஆன்மார்த்தமூர்த்தி அருள்மிகு ஞானமா நடராசப் பெருமான் மற்றும் ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் சன்னதிகளில் நாதசுரம் வாசித்து வருபவரும், 1991ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இலண்டனில் உள்ள இந்தியக் கலாசார பாரத வித்யாபவன் அகாடெமியில் ஒருவாரகாலம் நாதசுரம் இசைத்து புகழ்ப் பெற்றாரும், நாதசுவர இளையராஜா, நாதசுர இசைச் செல்வன் போன்ற பட்டங்களைப் பெற்றவரும், திருவையாறு தியாகபிரம்மப் பெருவிழா, சென்னை பிரம்ம கானசபா, வானொலி மற்றும் தொலைக் காட்சிகளிலும் நாதசுர இன்னிசை நிகழ்ச்சிகள் நடத்தி பெருமை பெற்றாருமாகிய திருவாவடுதுறை சைவத்திரு. **T.N.K. நமசிவாய மூர்த்தி** அவர்களின் நாதசுர இன்னிசைப் பணிகளைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/- மும் **ஆதீன நாதசுர வித்துவான்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042
மெய்கண்டார் ஆண்டு 788

விக்ருதி ஆண்டு, தை 12
26-01-2011 புதன் கிழமை

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

**திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்**

**திருவாவடுதுறை ஆதீனம்**

**திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.**

**- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -**

## திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



சிவகங்கைச் சீமையிலே மருதுபாண்டியர் காலத்தில் காளையார் கோவில் தேரினைச் சிறப்புறச் செய்து புகழ்பெற்ற திரு.குப்பமுத்து அவர்களின் வழிவழி வந்தவரும், காரைக்குடி மாவட்டம் சாக்கோட்டை திரு.கே.டி.கணபதி அவர்களின் மகனாரும், கடந்த 21 ஆண்டுகளாக தேர்த் திருப்பணியைத் தொடர்ந்து செய்து வருபவரும், திருநாகேசுவரம் அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில், குடந்தை அருள்மிகு நாகேசுவரன் திருக்கோயில், திருநள்ளாறு தர்பாரண்யேசுவரர் திருக்கோயில் முதலான 13 திருத்தலங்களில் திருத்தேர்கள் செய்தளித்தவரும், எட்டுக்குடி அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலில் வெள்ளிரதம் அமைத்தளித்தவரும், ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கப் பெருமான் திருக்கோயிலில் திருத்தேர் புதிதாக வடிவமைத்து செய்து புகழ் பெற்றவரும், தமிழக அரசால் அங்கீகாரம் பெற்ற தேர் ஸ்தபதியாருமாகிய காரைக்குடி சைவத்திரு. **G. இராதாகிருஷ்ணன்** அவர்களின் திருத்தேர், வெள்ளிரதம், வாகன வேலை ஆகிய கலைத்திறனைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/-மும் **தேர் நிர்மாணக் கலைமணி** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042 விக்ருதி ஆண்டு, தை 12

மெய்கண்டார் ஆண்டு 788 26-01-2011 புதன் கிழமை

உ

சிவமயம்

திருச் சிற்றம்பலம்

திருக் கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்

திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, நாகை மாவட்டம், தமிழ்நாடு.

- தோற்றம் 14 ஆம் நூற்றாண்டு -

## திருவாவடுதுறை அருள்தரு ஒப்பிலா முலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு விருது

சைவ சித்தாந்தச் செந்நெறியும், திருமுறைச் செல்வமும், செந்தமிழ் மொழியும், அரன் திருக்கோயில்கள், அறநிலையங்கள், அருங்கலை பலவும் புரந்தருளிவரும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் **சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்



சைவத்தையும் முத்தமிழையும் சேர்த்தே வளர்த்த நகரத்தார் பெருமக்களின் பெருங் கோட்டையாகிய தேவகோட்டையில் திருமிகு நாராயணன்-கோமதியம்மாள் தம்பதியரின் அருந்தவப்புதல்வியாய் பிறந்தாரும், 1962ல் வித்துவான் பட்டமும், 1980ல் முனைவர் பட்டமும் பெற்று கல்வியில் மேம்பட்டாரும் ஹிந்தி பிரச்சார சபாவில் பிரவீண் பட்டமும் இசைத் துறையில் இசைச் செல்வம் பட்டமும் பெற்றுச் சிறந்தாரும், 11 ஆண்டுகள் தமிழாசிரியராகவும் 29 ஆண்டுகள் கல்லூரியில் பேராசிரியராகவும் பணிபுரிந்து அறிஞர்கள் பலரை உருவாக்கித் தந்தவரும், 9 வயது முதலாகவே மேடைகளில் இன்னிசை நிகழ்ச்சிகளையும் 27 வயது முதல் மேடைகளில் தனியுரை, தொடர் சொற்பொழிவு, கவியரங்கம், பட்டிமன்றம் என 47 ஆண்டுகளாக புகழ்ப்பெற்றாரும், தேமதுரத் தமிழோசை திக்கெட்டும் புகழ் பரவ 39 முறை கிழக்கு மற்றும் மேற்கத்திய நாடுகளுக்குச் சென்று சொற்பொழி வாற்றிய சாதனையாளரும், காவியக் கலை மாமணி, செந்தமிழ்த் திலகம், நற்றமிழ் சொல்லரசி, இசைஞான இலக்கியப் பேரொளி என்பன போன்ற 32 பட்டங்களைப் பெற்றுச் சிறந்தாரும், ஔவையார், திருவெம்பாவை, கம்பனும் கவிராயரும் என 15க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவரும், சென்னை தமிழிசைச் சங்கம், திருவாரூர் இசைப்பிரியா முதலான அமைப்புகளின்தலைவராகத் தொண்டாற்றுபவரும், சேக்கிழார் விருது, ஔவையார் விருது, தமிழ்ச் சான்றோர் விருது என 14க்கும் மேற்பட்ட விருதுகளைப் பெற்றாருமாகிய தேவகோட்டை. **டாக்டர். சரசுவதி இராமனாதன்** அவர்களின் முத்தமிழ் கலந்த சைவப் பணிகளைப் பாராட்டி, அருள்மிகு மாசிலாமணிப் பெருமான் அருட்கவசமாகப் பொன்னாடை போர்த்தி, உருத்திராக்க மாலை அணிவித்து பொற்கிழி ரூபாய் 5000/- மும் **இசைத்தமிழ் விரித்துரை இன்மொழியார்** எனும் சிறப்பு விருதும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு 2042 | விக்ருதி ஆண்டு, தை 12

மெய்கண்டார் ஆண்டு 788 | 26-01-2011 புதன் கிழமை

# திருக்குடமுழுக்கு விழா பற்றிய நாளிதழ்ச் செய்திகள்

**ஆவடுதுறையில் அணைத்தெழுந்தான்!**

பரமேஸ்வரனை பிரிந்திருந்த காலத்தில் அதுவும் பசு வடிவில் பூவுலகில் இருந்த காலத்தில் எத்துணை துயருற்றிப்பாள் அன்னை பராசக்தி? பின்னர் பசு வடிவம் நீங்கப் பெற்ற உமாதேவியார் எம்பெருமானோடு சேர்ந்தபோது, அவளைத் தாவியணைத்தெழுந்த கோலத்தை அடியார்களுக்கும் சிவபெருமான் காட்டியுள்ள சிறப்பு திருவாவடுதுறை திருத்தலத்திற்கே உரியது.

அணைத்தெழுந்த பிரான் என்ற அந்த அற்புதத் திருக்கோலம் வேறு எந்தத் திருத் தலத்திலும் நாம் காணக் கூடியது அல்ல. இந்த சந்தோஷ ஆலிங்கன மூர்த்தியை வழிபட்டால் **தடைபட்டு நிற்கும் திருமணம் விரைந்து கைகூடும். குறிப்பாக பிணக்குகளால் பிரிந்து வாழும் தம்பதியர் மீண்டும் விரைவில் இணைந்து வாழ்ந்திட இறையருட் கிட்டிடும்.**

38 ஆண்டுகளுக்குப் பிறகு திருவாவடுதுறை அருள்மிகு கோமுத்தீசுவரர் ஆலயத்தில் திருப் பணிகள் செய்விக்கப்பட்டு, கும்பாபிஷேகம் நடைபெற இருக்கின்றது. இந்தருணத்தில் கோகழி நாதரின் சிறப்புக்களைச் சிறிது அறிந்து கொள்வோமே!

கோகழி, கோமுத்தி நகர், நந்தி நகர், நவகோடி சித்தபுரம், அரசவனம், முத்தி க்ஷேத்திரம், அகத்திய புரம், சிவபுரம், பிரமபுரம், துறைசை, கஜாரண்யம், தரும நகர் என்று வேறு பல காரணப் பெயர்களையும் கொண்டுள்ள தலம்தான் திருஆவடுதுறை. இதன் தல புராணம் துறைசைப் புராணம் என்றழைக்கப்படுகிறது.

மயிலாடுதுறை - கும்பகோணம் சாலையில் நரசிங்கம் பேட்டைக்கு முன் இடதுபுறம் சாலையில் உள்ள ஆதீன வளைவின் வழியேயும் (கும்பகோணம் தடத்தில் உள்ள) திருவாலங்காடு எனும் தலத்தில் இறங்கி (1 கி.மீ.) குறுக்குச் சாலை வழியேயும் கோமுக்தீசுவரர் ஆலயத்தைச் சென்றடையலாம். காவரியாற்றின் தென்பகுதியில் அமைந்த தேவாரத் திருத்தலம் இது. மயிலாடுதுறையிலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் பதிகம் பெற்றது. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் பெற்றது. திருமந்திரம், திருவிசைப்பா, திருவாசகம், பெரியபுராணம் ஆகிய நூல்கள் இத்தலத்தின் சிறப்பைப் போற்றுகின்றன. திருமூலர், திருமந்திரம் என்னும் திருமுறையை இத்தலத்தில் தான் படைத்தருளினார்.

**ஆதீனத் திருமடம் :**

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இத்திருக்கோயிலையொட்டியே திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத் தலைமை திருமடமும் அமைந்துள்ளது. திருமடத்தின் நூலகம் பல அரிய நூல்களையும், ஏட்டுச் சுவடிகளையும் கொண்டுள்ள கருவூலம் ஆகும். ஆதீனத்து சரசுவதி மகால் நூலகத்தின் மூலம் பல எண்ணற்ற அரிய நூல்களை வெளியிட்டுள்ள பெருமை திருமடத்தையே சாரும்.

அதுமட்டுமல்ல... திருவாவடுதுறை ஆதீனம், இருபத்து மூன்றாவது குரு மகா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளின் அருளாட்சிக் காலத்தில் ஆதீனத்திற்குச் சொந்தமான அத்தனைத் திருக்கோயில்களிலும் திருப்பணிகள் செவ்வனே நிறைவேற்றப்பட்டு குடமுழுக்கு விழாக்கள் நடைபெற்று வருகின்றன. இது ஆன்மீக அன்பர்களை மகிழ வைக்கும் செய்தியாகும்.

**பசுவாய் வந்தனள்!**

தேவர் உலகில் பரமனுக்கும் பரந்தாமனுக்குமிடையே சொக்கட்டான் ஆட்டம் நடைபெறுகிறது. நடுவராக அமர்ந்தது அன்னை பராசக்தியே! விறுவிறுப்பான ஆட்டம்! ஒரு புறம் மணாளன் மகேசன்! மறுபுறம் சோதரன் மாலவன்! பகடைகள் உருளுகின்றன. எண்ணிக்கையில் பிரச்சனை உருவாக, அன்னை பகடையைச் சிறிதே நகர்த்தினாள். அண்ணனுக்காக நெறி தவறியதால் பசுவாக மாறி பூவுலகில் திரியும்படி அன்னையிடம் ஆணையிடுகிறார் ஈசன். உடனே தெய்வப்பசுவாக

பூமிக்கு வந்தாள் அன்னை. பல தலங்களை வலம் வந்தாள். மாதவனும் இடையனாக மாறி, சோதரிக்கு துணையாகத் திரிந்தான். இந்த நெடிய பயணம் தேரழுந்தூரில் துவங்கியது. தொழுதாயங்குடி எனும் தலத்தில் பசு மந்தையோடு சில காலம். அடுத்து அசிக்காடு எனும் தலம்! பொன்னே வடிவாக அமைந்திருந்த ஈசனின் திருமேனியில் தனது ஆபரணங்களை சார்த்தினாள் அன்னை. கோமல் எனும் தலத்தைக் கடந்து நச்சினார் குடியை அடைந்தார். மாதவன் மாட்டுமந்தையை மேய்த்தது மாந்தை எனும் தலத்தில் அடுத்து திருக்கோழம்பம் எனும் தலத்தைக் கடந்து நந்தி புரத்தை அடைந்தாள்.

திருக்குளத்தில் நீராடியபின் கரையேறி, அங்கிருந்த அரச மரத்தடிக்குச் செல்கையில் ஈசனை துதிக்கிறாள் பசுவடிவிலான அன்னை! அங்கே தானே முளைத்தெழுந்த ஈசனின் திருமேனி மீது பாலைப் பொழிந்தாள். இதனால் மகிழ்ந்த சிவபெருமான் உடனே காட்சி தந்தருளினார்.

**அணைத்தெழுந்தபிரான் :**

பசு வடிவில் பல தலங்களை வலம் வந்து பெருமானுடன் இணையாது பிரிந்திருந்த அன்னைக்கு ஈசனோடு இணைகின்ற முத்தி இங்கே கிட்டுகின்றது. பசுவிற்கு முத்தி தந்த ஈசனாக கோமுக்தீசுவரராக எம்பெருமான் திருவாவடு துறையில் காட்சி தந்து அன்னையை ஆரத் தழுவி கொண்டார். அப்போது அன்னையை தழுவிக் கொண்ட மகாதேவரே, அணைத்தெழுந்த பிரான் என்று அழைக்கப்படுகிறார்.

அம்பிகை ஒயிலாக நிற்க, அவளது தோளில் கரத்தை வைத்து அணைத்துக் கொள்வதற்கேற்ப இடுப்பை வளைத்துள்ள கோலம் அற்புதமானது! ரத சப்தமியன்று குளத்தருகே எழுந்தருளி தீர்த்தம் வழங்குகிறார் அணைத்தெழுந்த பிரான். தான் ஜீவகோடிகளாகிய பசுக்களுக்குப் பதி என்பது அப்புறம்! அம்பிகைக்குதான் முதல் பதி. அதாவது உயிர்த் துணைவன் என்று உலகிற்குக் காட்ட நினைத்த பசுபதியாகிய பரமேஸ்வரன், ஆடிய திருவிளையாடல் இது.

**திருக்கோயில் அழகு :**

திருவாவடுதுறை கோமுக்தீசுவரர் திருக் கோயில், ஏறக்குறைய பத்து ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ள பெரிய கோயில் ஆகும். ஐந்து நிலை ராஜ கோபுரமும், மூன்று பிரகாரங்களும் கொண்டது. வடக்குப் புற நுழைவாயிலில், புதிதாக 3 நிலை ராஜகோபுரமும் எழுப்பப்பட்டுள்ளது.

கோமுத்தி தீர்த்தம், திருக்கோயிலுக்கு முன்பு உள்ளது. அருகிலேயே தல விருட்சமான அரச மரம் உள்ளது. நடராஜர் சபை, போதியம்பலம் எனும் அரசம்பலம் ஆகியனவும் உள்ளன. தேவர்கள் வேண்டியதற்கேற்ப இறைவன் அரசமரத்தின் நிழலில் அம்பலத்தில் தாண்டவம் ஆடியதால் அரசம்பலம் என்று இவ்விடம் பெயர் பெற்றது.

**புத்திரத் தியாகேசர் :**

முசுகுந்த சக்கரவர்த்திக்கு புத்திரப்பாக்கியம் அருளி, சுந்தர நடனம் ஆடியருள் செய்த கோலமே புத்திரத்தியாகேசர் கோலம் ஆகும். போகர் முதலான நவகோடி சித்தர்களுக்கு அட்டமா சித்திகளை அருளிய பெருமையுடைய தலம் இதுவே!

**நந்தித்தலம் :**

திருவிடைமருதூர் மகாலிங்கப் பெருமான் திருக்கோயில்களின் பரிவாரத் தலங்களில் நந்தித் திருத்தலமாக விளங்குகிறது. இது நந்தியெம் பெருமானின் உடலமைப்புக்கேற்ப வடிமைக்கப் பட்ட கற்களை அடுக்கி உருவாக்கப்பட்ட மிக வித்தியாசமான நந்தியாகும். இதனை விஸ்வரூப நந்தி என்பர். (உயரம் 14 அடி 9 அங்குலம்)1

இத்தலத்தில் வாழ்ந்திருந்த திருமாளிகைத் தேவர் மீது படையெடுத்து வந்த நரசிங்க மன்னனின் படைகளை அழித்திட அதுல்ய குஜாம்பிகை மதில்களிலிருந்த நந்திகளையெல்லாம் சேர்த்து ஏகநந்தியாக்கி அனுப்பினாள் என்கிறது தல புராணம். அதனால் திருமதிலில் நந்திகள் இல்லை.

**கோகழி நகர் :**

கருவறையில் அணைத்தெழுந்தபிரான் கோகழிநாதர் சுயம்புமூர்த்தியாக எழுந்தருளி யுள்ளார். ஆவின் வடு திருமேனி மீது காணப்

படுவதால், திரு ஆவடு துறை எனப் பெயர் கொண்டது இத்தலம். போதியம்பலவாணர், மகாதாண்டவேசுவரர், கோமுக்தீசுவரர், பூஜைவாசேசுவரர், வையம்வியக் தேசுவரர் (தானே முளைத்தெழுந்தவர்) என்று வேறு திருநாமங்களும் கொண்டவர். கம்பீரமான திருமேனியை பட்டாடை கொண்டு அலங்கரித்து ஐந்து வகை மலர்மாலை கொண்டு அழகூட்டி நாகாபரணமும் அணிவித்து அலங்கார தீபம் ஒளியில் தரிசித்திட கோடி புண்ணியம் செய்திட வேண்டும்.

**ஒப்பிலா முலையம்மை :**

தெற்கு நோக்கி தனி சந்நிதி கொண்டுள்ளாள் அதுல்ய குஜாம்பிகை. ஒப்பிலாமுலையம்மை என்று இத்தேவியை அழைக்கின்றனர். நான்கு கரங்களோடு அபய வரதம் தாங்கி, நின்ற கோலத்தில் காட்சி தரும் கருணையே வடிவானவள். திருமாளிகைத் தேவர் வாழ்ந்த இடமே ஆதீனம் ஆகும். அங்கு நமசிவாயமூர்த்திகள் திருக் கோயிலும் திருமாளிகைத்தேவர் ஆலயமும் உள்ளன.

**திருமூலர் :**

திருக்கோயிலின் மேற்குத் திருச்சுற்றில் திருமூலர் சந்நிதி உள்ளது. ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல்களைத் திருமந்திரமாகத் தொகுத்து இப்பூவுலகிற்கு வழங்கிய திருமூலர் சந்நிதி நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. ஐப்பசி மாதம் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**துணை வந்த விநாயகர் :**

பசு வடிவில் இருந்த உமையம்மைக்கு துணையாக வந்ததால் இத்தலத்தில் துணைவந்த விநாயகராகக் காட்சி தருகிறார் கணபதி.

**படிக்காசு :**

நந்தியெம்பெருமானுக்கு பின்னால் உள்ள பலிபீடமே திருஞான சம்பந்தர் பொற்கிழி பெற்ற பலிபீடம். தனது தந்தையார் நடத்திய வேள்விக்காக பூதம் வாயிலாக 1000 பொற்காசுகளைப் பெற்ற அதிசயம் இத்தலத்தில் நிகழ்ந்தது.

**நால்வர் சந்நிதி :**

புத்திரத் தியாசேகர் முன்னே இரு கரங் கூப்பியபடி சுந்தரர் எழுந்தருளியுள்ளதும் நால்வர் பெருமக்களுக்கும், சந்தானக் குரவர்களுக்கும் தனித்தனி சந்நிதிகள் உள்ளதும் இக்கோயிலின் தனிச் சிறப்பு ஆகும். பெரிய புராணத்தை நமக்கருளிய சேக்கிழார் பெருமானுக்கும் தனிச் சந்நிதி உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**குடமுழுக்கு விழாக்கோலம் :**

நாளது 26-ஆம் தேதி புதன்கிழமை காலை 9.00 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் இவ்வாலயத்தில் திருக்குட நன்னீராட்டுப் பெரு விழா மிகச் சிறப்பாக நடைபெற உள்ளது. வாய்ப் புள்ளவர்கள் பங்கேற்று அணைத்தெழுந்த பிரானின் அருளைப் பெறுக.

- மயன்.

***- தினமணி, 21 ஜனவரி 2011, பக்.5.***

---

**திருவாவடுதுறை கோமுக்தீஸ்வரர்கோயில் கும்பாபிசேகம் : ஆயிரக்கணக்கான பக்தர்கள் கலந்து கொண்டனர்.**

நாகை மாவட்டம், குத்தாலம் வட்டம், திருவாவடுதுறை கோமுக்தீஸ்வரர் கோயிலில் நேற்று கும்பாபிசேக விழா நடந்தது. இதையொட்டி காலை 9.00 மணியளவில் 6-ஆம் கால யாகசாலை பூஜை நிறைவடைந்து கடம் புறப்பாடு நடந்தது. 10 மணிக்கு விமானங்கள், ராஜகோபுரங்கள் மற்றும் பிரதான மூர்த்திகளின் கோபுர கலசங்களில் புனித நீர் ஊற்றி கும்பாபிசேகம் நடந்தது.

கும்பாபிசேகத்தில் திருவாவடுதுறை ஆதீனம் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள், தருமபுரம் ஆதீனம் சண்முக தேசிக பரமாச்சாரியார் சுவாமிகள், மதுரை ஆதீனம் அருணகிரிநாத ஞான சம்பந்த தேசிக பரமாச்சாரியார் சுவாமிகள், திருப்பனந்தாள் முத்துக்குமார சுவாமிகள், தம்பிரான் சுவாமிகள், துறையூர் குமரக்கட்டளை ஆதீன சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரியா சுவாமிகள், சிதம்பரம் மவுனமட சுந்தரமூர்த்தி சுவாமிகள் மற்றும் கட்டளை தம்பிரான் சுவ1ாமிகள் கலந்து கொண்டு பக்தர்களுக்கு அருளாசி வழங்கினர்.

***- தினத்தந்தி (தஞ்சாவூர்) 27-1-2011, பக்.16.***

**திருவாவடுதுறை கோமுத்தீஸ்வரர் கோயில் கும்பாபிசேகம் :**

குத்தாலம், திருவாவடுதுறை கோமுத்தீஸ்வரர் கோவில் கும்பாபிசேகம் புதன்கிழமை நடைபெறுகிறது.

நாகப்பட்டினம் மாவட்டம் திருவாவடுதுறையில் உள்ள திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான கோமுத்தீஸ்வரர் கோயில் உள்ளது. தேவார ஆசிரியர்கள் திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரால் பாடல் பெற்ற பெருமை இக்கோயிலுக்கு உண்டு.

மயிலாடுதுறை - கும்பகோணம் சாலையில் நரசிங்கன் பேட்டை ரெயில் நிலையத்திற்கு கிழக்கே 2 கி.மீட்டர் தூரத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. இறைவன் பெயர் கோமுத்தீஸ்வரர். இறைவியின் பெயர் ஒப்பிலாமுலையம்மை.

ஒரு சமயம் திருஞான சம்பந்தரின் தந்தை வேள்வி ஒன்று நடத்தினார். அந்த வேள்விக்கு பொன் வேண்டி திருஞானசம்பந்தர் திருவாவடுதுறை கோமுத்தீஸ்வரர் கோவியிக்கு வந்து பதிகங்களை பாடினார்.

இப்பதிகங்களைப் பாடி முடித்ததும் சிவபெருமான் பூதகணத்தின் மூலம் ஆயிரம் பொற்காசுகள் அடங்கிய பொற்கிழியைத் திருஞான சம்பந்தருக்கு வழங்கி அருளாசி புரிந்தார் என்று தலப் புராணம் கூறுகிறது.

**தலபுராணம் :**

திருவிளையாடல் செய்வதில் சிவபெருமானுக்கு அலாதியான பிரியம் உண்டு. ஒரு சமயம் கயிலாயத்தில் இறைவன் உமாதேவியுடன் சொக்கட்டான் விளையாடினார். அப்போது உமாதேவி விளையாட்டிற்குச் சாட்சியாக தனது சகோதரர் திருமாலை இருக்க வைத்தார். அதில் உமாதேவி வெற்றி பெற்றார். அதனால் அவருக்கு அலட்சியம் ஏற்பட்டது. இதற்குத் தண்டனையாக சிவபெருமான் பார்வதியைப் பசுவாக பிறக்கும் படி சாபமிட்டார். உடனே பார்வதி தேவி பெருமானிடம் பணிந்து சாபவிமோசனம் அளிக்கும்படி கேட்டார். திருவாவடுதுறை என்னும் தலத்தில் சென்று வழிபட்டால் உனது பசு வடிவம் நீங்கும் என்று சிவபெருமான் சாபவிமோசனம் அளித்தார்.

அதன்படி பசு உருவில் ஒவ்வொரு சிவத் தலமாக சென்று தரிசித்து வந்த உமையம்மை திருவாவடுதுறை வந்து இத்தலத்தில் வீற்றிருக்கும் மாசிலாமணி பெருமானை மனமுருகி வழிபட்டார்.

அவரது வழிபாட்டில் மகிழ்ந்த இறைவன் உமையின் பசு உருவை நீக்கிப் பழைய உருவில் அவரை அணைத்து எழுந்தார். இதனால் இத்தலத்தில் அணைத்தெழுந்த நாயகர் என்னும் திருப்பெயருடன் உமாதேவியுடன் இணைந்திருந்து தம்பதி சமேதராக அருள் பாலிக்கின்றார்.

இன்றும் இத்திருக்கோயிலுக்கு வந்து ***தம்மை வழிபடும் கணவன் மனைவிக்கு இடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகளையும், பிரிந்து வாழும் தம்பதியரின் மனக் கவலைகளையும் அவர்கள் ஜாதகத்தில் உள்ள தோஷங்களையும் நீக்கி இல்லற வாழ்வை இன்பமயமாக்கி அருள்பாலித்து வருகின்றார் அணைத்தெழுந்த நாயகர்.***

**குழந்தை வரம் :**

மேலும் இக்கோயிலில் அதிசய சம்பவங்கள் பலவும் நடந்துள்ளன. குழந்தை வரம் கேட்டு வழிபட்ட முசுகுந்த மன்னனுக்குச் சிவபெருமான் தம்மைத் தியாகேசராக காட்சி கொடுத்து புத்திரப்பேறு அளித்த புனிதத்தலம் இதுவாகும். இதனால் இறைவன் புத்திரத் தியாகர் எனவும் பெயர் பெற்றார். மேலும் தம்மை வழிபட்ட தருமதேவதையைப் பெருமான் வாகனமாகக் கொண்டதோடு [illegible]றும் தம் சன்னிதியில் உள்ள அரசமர நிழலில் இருக்கும்படி வரமும் அளித்தார். மாணிக்கவாசகருக்கு குரு வடிவில் இங்கு காட்சி கொடுத்து அருளினார்.

திருமூலர் அரச மரத்தின் கீழ் 3 ஆயிரம் ஆண்டுகள் யோக நிலையில் இருந்து 3 ஆயிரம் பாடல்களைக் கொண்ட திருமந்திரம் என்ற நூலை இக்கோயிலில் இருந்து தான் எழுதியதாக தலபுராணம் கூறுகிறது.

**சர்வதோஷ நிவாரணர் :**

இத்திருத்தலத்தில் வாழ்ந்த திருமாளிகைத் தேவர் மீது படை எடுத்து வந்த நரசிங்க மன்னனின் படைகளை அழித்தருள இத்தலத்து இறைவி கோயில் மதில் சுவரில் இருந்த நந்திகளை எல்லாம் ஏக நந்தியாக்கி அனுப்பினாள் என்பதால் இன்றும் இக்கோயிலில் மதில்கள் மீது நந்திகள் இல்லை. சர்வதோஷ நிவாரணராக கோமுத்தீஸ்வரர் அருள் புரிவதால் இக்கோயிலில் நவக்கிரக தனிச் சன்னதி கிடையாது.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இத்திருக்கோயிலில் கடந்த 1972-ஆம் ஆண்டு 22 -ஆவது குருமகா சன்னிதானம் காலத்தில் கும்பாபிசேகம் நடைபெற்றுள்ளது. அதன்பிறகு 39 ஆண்டுகளுக்குப் பிறகு 26-ந் தேதி (புதன்கிழமை) காலை 9 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் கும்பாபிசேகம் நடைபெறுகிறது. விழாவில் ஆதீனகர்த்தர்கள், முக்கிய பிரமுகர்கள் கலந்து கொள்கிறார்கள்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் தற்போது 23-ஆவது குருமகா சன்னிதானமாக சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் உள்ளார். சிறந்த மனிதநேயப் பண்பாளராகவும், தமிழ்மொழி ஆர்வலருமாகத் திகழும் இவர் கோயில் வெளிப்புறப் பிரகாரத்தில் புதிதாக திருவள்ளுவருக்குச் சிலை வைத்து வழிபாடு நடத்த ஏற்பாடு செய்து உள்ளார். தாழ்த்தப்பட்ட மக்கள் மீது மிகுந்த அன்பு கொண்ட இவர்கள், அவர்கள் வசிக்கும் பகுதிக்குச் சென்று அருளாசி புரிந்து வருகிறார்கள். பல்வேறு விழாக்கள் மூலம் தமிழறிஞர்கள் மற்றும் பல்துறையில் சாதனைப் படைத்தவர்களுக்கு விருதுகள் வழங்கி கௌரவித்து வருகிறார்கள்.

கும்பாபிசேகத் தினத்தையொட்டி சுவாமிகளது நேரடிப் பார்வையில் திருப்பணிகள் நடைபெற்றன. வடக்குப்புற நுழைவு வாயிலில் புதிதாக மூன்று நிலை கோபுரம் எழுப்பப்பட்டு உள்ளது. வசந்த மண்டபம் உள்பட கோயிலின் மேல்தளம் முழுவதும் தட்டோடுகள் பதிக்கப் பெற்றும், மூன்றாவது கோபுரத்தில் சுதைகளாலான கலசங்கள் செப்பு கலசங்களாக மாற்றப்பட்டும் திருப்பணிகள் நடைபெற்றுள்ளன. கோயில் சிறப்பு பற்றி குருமகா சன்னிதானம் அவர்கள் கூறும்போது, திருஞான சம்பந்தருக்கு இறைவன் தங்கத்தை வழங்கிய தலம் இதுவாகும். எனவே **செல்வம் வேண்டும் என்று விரும்புபவர்கள் இக்கோயிலுக்கு வந்து வழிபட்டால் அவர்கள் வாழ்க்கையில் வளம் பெருகும்.** பிரிந்து இருக்கும் கணவன், மனைவியர் இக்கோயிலுக்கு வந்து அர்ச்சனை செய்து வழிபட்டால் இல்லறம் இனிதே நடைபெறும். செவ்வாய் தோஷம் உள்ளவர்கள் மாசிலாமணீசுவரரை வழிபட்டு அன்னதானம் செய்தால் தோஷம் நிவர்த்தியாகும் என்று குறிப்பிட்டார்கள்.

**பூஜை நேரம் :**

| | |
|---|---|
| உஷாக்காலம் | - 6 மணி |
| காலசந்தி | - 10.30 மணி |
| உச்சிக்காலம் | - 12 மணி |
| சாயங்காலம் | - 5.30 மணி |
| இரண்டாங்காலம் | - 7.30 மணி |
| அர்த்தஜாமம் | - 8.30 மணி |

***- தினத்தந்தி (தஞ்சாவூர்) 25-1-2011, பக்.11.***

**நாகை மாவட்டம், குத்தாலம் வட்டம், திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில் மஹா கும்பாபிஷேக சிறப்பு மலர் :**
***நாள் : 26.01.2011 புதன்கிழமை***
***நேரம் : காலை 9 - 10.30 மணி***

உலகெல்லாம் உணர்ந்து ஓதற்கரியவனாகிய சிவபெருமான், வானநாடனாய் வழித்துணை மருந்தாய் மாசிலாமணி எனும் திருநாமம் கொண்டு திருஆவடுதுறை இத்தலத்தில் எழுந்தருளுகின்றார். மூர்த்தி, தலம், தீர்த்தம் என மூன்றாலும் புகழ்பெற்று விளங்கும் இத்தலம் கும்பகோணம், மயிலாடுதுறை பிரதான சாலையில் உள்ள திருவாலங்காட்டிற்குத் தெற்கே ஒரு கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

கோ உருவினளாகிய உமையன்னைக்கு முத்தி கொடுத்தருளியதால் கோமுத்தீசுவரர் எனும் திருப் பெயரும் கொண்டருளுகின்றார். இத்தலத்து இறைவனுக்கு அணைத்தெழுந்த நாயகர், புத்திரத் தியாகேசர், போதியம்பலவாணர், கோகழிநாதர், ஸ்வயம் வியக்தேசுவரர், பூகைலாசேஸ்வரர், மகா தாண்டவேஸ்வரர் போன்ற வேறு திருப்பெயர்களும் உண்டு.

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான இக்கோயிலில் பல்வேறு காலங்களில் திருப்பணிகள் நடந்துள்ளன. ஆதீன 22-ஆவது குருமகா சன்னிதானம் அருளாட்சி காலத்தில் 27-08-1972ல் மகா கும்பாபிஷேகம் நடந்துள்ளது. தற்போது ஆதீன 23-ஆவது குருமகா சன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணையின் வண்ணம் தற்போது கோயிலில் பெரும் பொருட் செலவில் திருப்பணிகள் நடத்தப்பட்டுள்ளது. வடக்குப்புற வாசல் பகுதியில் புதிதாக மூன்று நிலை கோபுரம் அமைக்கப் பட்டுள்ளது. கோயிலின் மேல் தளம் முழுவதும் தட்டோடுகள் பதிக்கப்பட்டும், மூன்றாவது கோபுரத்தில் சுதைகளாலான கலசங்களுக்கு பதில் செப்பு கலசங்கள் அமைக்கப் பட்டுள்ளது. திருவள்ளுவர் சிலை பிரதிஷ்டை செய்யப் பட்டுள்ளது. இன்று (26-01-2011) காலை 9 மணிக்கு மேல் 10.30 மணிக்குள் மீன லக்னத்தில் விமானங்கள், ராஜகோபுரங்கள் மற்றும் பிரதான மூர்த்திகளுக்கு மகாகும்பாபிஷேகம் நடக்கிறது. மாலை மகா அபிஷேகமும், இரவு 9 மணிக்கு பஞ்ச மூர்த்திகள் திருவீதியுலா காட்சியும் நடக்கிறது.

முன்னதாக கடந்த 19ஆம் தேதி விக்னேஸ்வர பூஜையுடன் யாக பூஜைகள் தொடங்கியது. ஆறு கால யாகசாலை பூஜைகளுக்காக பிரமாண்டமாய் யாகசாலை மண்டபங்கள் அமைக்கப்பட்டது. இதில் சுவாமி, அம்பாள், புத்திரத் தியாகேஸ்வரர், ஞானமா நடராஜ பெருமான் ஆகியோருக்கு தனித் தனியாக நவகுண்டபக்ஷமும், மகாநந்திக்கு பஞ்சகுண்ட பக்ஷமும், பரிவார மூர்த்திகளுக்கு 16 குண்டங்களும் 100க்கு மேற்பட்ட சிவாச் சாரியார்கள் கொண்டு பூஜைகள் நடந்தன. 50 திருமுறை வாணர்களைக் கொண்டு திருமுறை பாராயணமும், சமயச் சொற்பொழிவுகளும் நடந்தன. இந்த வழிபாடுகளில் தருமபுரம் ஆதீனம், மதுரை ஆதீனம், சூரியனார் கோயில் ஆதீனம், திருப்பனந்தாள் காசிமடம் அதிபர், பேரூர் ஆதீனம், வேளாக்குறிச்சி ஆதீனம், செங்கோல் ஆதீனம் போன்ற ஆதீன குருமகா சன்னிதானங்கள், தம்பிரான் சுவாமிகள் மற்றும் ஆஸ்ரம சாதுக்கள் உட்பட பலர் கலந்து கொண்டனர்.

கோயிலில் தை ரதசப்தமிப் பெருவிழா ஆண்டு தோறும் கொடியேற்றத்துடன் பத்து நாட்கள் உற்சவமாக கொண்டாடப்படுவது வழக்கம். இரண்டாம் நாள் திருமூலர் ஐதீக விழாவில் திருமந்திரத்தில் சிறந்த அறிஞர்களுக்கு விருதும், பொற்கிழியும் வழங்கும் நிகழ்ச்சியும், ஐந்தாம் நாள் நிகழ்ச்சியில் பலிபீடத்தில் பூதம் வாயிலாக திருஞான சம்பந்தர் பொற்கிழி பெற்ற ஐதீக விழாவும் நடத்தப் படுகிறது. தமிழ் மாதப் பிறப்பு நாட்களில் ருத்திராபிஷேகமும், அமாவாசை நாட்களில் அகத்தியர் தேவாரத் திரட்டு பாராயணமும், அகத்தியருக்குச் சிறப்பு வழிபாடும் கோயிலில் நடைபெறும் விசேஷ நிகழ்ச்சிகளாகும்.

**கோயில் சிறப்புகள் :**

மகப்பேறு வேண்டி வந்த முசுகுந்த மாமன்னனுக்குத் தம்மைத் தியாகேசராகவும், இத்தலத்தைத் திருவாரூராகவும் காட்டி புத்திரப் பேறு அளித்தருளிய புனிதத் திருத்தலம்.

***இல்லறத்தார் இடர்களைக்களைய அணைத் தெழுந்த நாயகராய் தனிச் சன்னிதி கொண்டு அருள்பாலிக்கும் திருத்தலம்.***

தேவர்கள் படர் அரசமரமாக விளங்க அதன் கீழ் இறைவன் திருநடனம் செய்தருளிய தலம்.

தருமதேவதை இறைவனை வழிபட்டு அவருக்கு வாகனமாகும் பேறு பெற்று பெரு நந்தியாக எழுந்தருளிய நந்தி திருத்தலம்.

இறைவன் பெருமாளுக்கு துளசி மாலை அளித்து பிருந்திமயல் தீர்த்தருளிய புராணத் திருத்தலம்.

அழகிய விநாயகர் அகத்திய மாமுனிவருக்கு ஞான உபதேசம் செய்தருளிய ஞானத் திருத்தலம்.

குருத்துரோகம் புரிந்த அக்னிதேவனுக்கும், வெண்குட்ட நோய் பற்றிய அகத்தியருக்கும் சாப விமோசனம் அளித்தருளிய பரிகாரத் திருத்தலம்.

செவ்வாய், கிரகப்பதம் பெற்று செவ்வாய் கிழமைகளில் அன்னதானம் செய்து பேறுபெற்ற அன்னதானத் திருத்தலம்.

***திருமூலர் அரச மரத்தின் கீழ் 3 ஆயிரம் ஆண்டுகள் யோகிருந்து 3 ஆயிரம் பாடல்களைக் கொண்ட திருமந்திர ஞானப் பெருநூலை அருளிய திருமந்திரத் திருத்தலம்.***

திருமாளிகைத்தேவர், போகர், கருவூர்த் தேவர், கொங்கணச் சித்தர் முதலான நவகோடி சித்தர்கள் இத்தலத்து இறைவனை வழிபட்டு அட்டமா சித்திகளைப் பெற்று வந்த சித்தர் வாழ் திருத்தலம்.

கோச்செங்கட்சோழன், சேரமான் பெருமாள் நாயனார், வரகுண பாண்டியன் என மூவேந்தர்களாலும் தனித்தனி லிங்கங்கள் பிரதிஷ்டை செய்து வழிபட்டு பேறு பெற்ற தலம்.

***திருஞானசம்பந்தர் தம் தந்தையின் வேள்விக்காக இத்தலத்து இறைவனிடமிருந்து பூதம் வாயிலாக ஆயிரம் பொற்காசுகள் பலிபீடத்தில் பெற்று மகிழ்ந்த தங்கத் திருத்தலம்.***

திருநாவுக்கரசராலும் சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் மாணிக்கவாசகராலும் பாடல் பெற்ற திருத்தலம்.

சித்தர் சிவப்பிரகாசர் கோமுத்தீசுவரர் அருளாளல் நமசிவாய மூர்த்திகளைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீனத்தைத் தோற்றுவித்த பெருமை உடைய தலம்.

***திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்க பெருமான் திருக்கோயிலுக்கு உள்ள பரிவாரத் தலங்களில் நந்தித் திருத்தலமாக இக்கோயில் விளங்குகிறது.***

திருமாளிகை தேவர் மீது படையெடுத்து வந்த நரசிங்க மன்னனின் படைகளை அழிந்தருள, இத்தலத்து இறைவி ஒப்பிலாமுலையம்மை கோயிலின் மதில்களில் இருந்த நந்திகளை எல்லாம் ஏகநந்தியாக்கி அனுப்பினாள் என்பதால் இன்றும் கோயிலின் மதில்களின் மீது நந்திகள் இல்லாமல் இருப்பதை காணலாம்.

சர்வதோஷ நிவாரணமாக இக்கோயில் இருப்பதால் நவக்கிரக தனிச் சன்னிதி கிடையாது.

*- தினமலர் மஹா கும்பாபிஷேக சிறப்புமலர்.*



# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா – யாகசாலை நிகழ்வுகள்



யாகசாலையின் பொலிவுமிகு தோற்றம்



யாகசாலையில் சுவாமிக்கு தீபாராதனை





செங்கோல் ஆதீனம், வேளாக்குறிச்சி ஆதீனம் - குருமகாசன்னிதானங்களுக்கு பொன்னாடை, திருமுறைப்பேழை வழங்கியருளல்





அருள்மிகு கோமுத்தீசுவரருக்கும், அருள்தரு ஒப்பிலாமுலையம்மைக்கும் சொர்ணபந்தனம் சார்த்தியருளல்



சிவாச்சாரியர், கலைஞர்கள், தமிழறிஞர், ஓதுவார் மூர்த்திகளுக்கு பொற்கிழி ரூ.5000/- மும் விருதுகளும் வழங்கியருளல்



25.1.2011 - திருமுறைத் தமிழ் இன்னிசை நிகழ்த்திய சீர்காழி சிவசிதம்பரம் அவர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளல்

# திருக்குடப் புனித நன்னீராட்டுப் பெருவிழா நிகழ்வுகள் – 26.01.11



சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் திருக்கோயிலுக்கு எழுந்தருளல்



குருமகாசன்னிதானங்களின் திருமுன்னர் – கடம் புறப்பாடு



குடமுழுக்கு விழாவைத் தரிசித்தருளும் குருமகாசன்னிதானங்கள்



சுவாமி, அம்பாள், நடராசர் விமானங்களுக்குத் திருக்குடமுழுக்கு



விழா மலரைத் தருமை ஆதீன மகாசன்னிதானம் அவர்கள் பெற்றருளல்



திருக்குட முழுக்கு தரிசித்து வணங்கும் மெய்யன்பர்களின் திருக்கூட்டம்




திருக்குடமுழுக்கு விழா கல்வெட்டைத் திறந்தருளல்



ஆதீன வித்வான் ஏ.கே.சி.நடராசன் அவர்களின் கிளாரினட் இன்னிசை

